நாட்டுப்புறக் கதைக்காவியம் (A Folk Epic)

# அயோத்திகதை

## (இராமாயணம்)

பதிப்பாசிரியர்
டாக்டர் வை. தி. நடராசன்
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை-625 021.

இராஜேஸ்வரி வெளியீடு,
ராயல் கவுஸ்,
வைத்தியநாதபுரம், கோட்டாறு,
நாகர்கோவில்-2.

First Edition January, 1987

| | | |
|---|---|---|
| Title | : | 'Ayothi Kathai' (A Folk Ramayanam) |
| Editor | : | Dr. V. T. NATARAJAN, M. A; Ph.D. |
| Paper | : | 14.0 Kg. White Printing |
| Size | : | Demy 1×8 |
| Binding | : | Box Board |
| Letters | : | 10 point |
| Publisher | : | Rajeswari |
| Printers | : | Senthilvelan Achagam, Madurai-625 016 |
| Pages | : | 76+376=452 |
| Price | : | 40/- |

This book was published with the financial assistance of Thirumalai Thirupathi Devasthanam's TIRUPATHY AID TO AUTHORS SCHEME.

இப்புத்தகம் திருமலை திருப்பதி அறநிலையம் அளிக்கும் நூலாசிரியர் ஊக்குவிப்புத் திட்டத்தின் பொருளுதவியுடன் வெளியிடப்பட்டுள்ளது.

# நன்றியுரை

அயோத்தி கதை எழுதப்பட்டுள்ள ஓலைச்சுவடிகளை மனமுவந்து அளித்த என் தாய் மாமன் திரு சு. பள்ளிகொண்ட பெருமாள், என் சகோதரியின் கணவர் திரு. சி. தங்கவேல், B.Sc., B.T, என் மாணவர் திரு. பொன்கோவிந்தசாமி, என் நண்பரின் தந்தை திரு. சூரியமுத்து-நாடார் ஆகியோருக்கு என் நன்றி

சுவடிகளைப் பெயர்த் தெழுதும் பொழுது என்னுடன் இருந்து உதவி புரிந்த என் மைத்துனர் திரு. R. சுப்பாராம், B.Sc., C.Lib. Science அவர்களுக்கு என் நன்றி.

நூலுக்கு அணிந்துரை வழங்கியும் நூல் வெளியீட்டுக்கு ஊக்க மளித்தும் உதவிய தமிழியல்துறைத் தலைவர் திரு. இராம. பெரிய-கருப்பனார் அவர்களுக்கு என் நன்றி.

நூலின் தன்மையினை மதிப்பிட்டு மதிப்புரை வழங்கிய அஞ்சல் வழிக்கல்வி, தமிழ்த்துறைத்தலைவர் திரு. இராம. சண்முகனார்க்கு என் நன்றி.

நூலின் மொழியமைப்பினை ஆராய்ந்து மொழியுரை வழங்கிய மொழியியல்துறைப் பேராசிரியர் திரு ஜெ. நீதிவாணனார்க்கு என் நன்றி.

சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதப்பட்டும் பத்தாண்டுகளாக அச்சு வடிவம் பெறாமல் இருந்த நூலினை, அச்சேற திருமலை திருப்பதி அறநிலைய ஆசிரியர் ஊக்குவிப்பு நிதியினைப் பெறுவதற்குத் தோன்றாத் துணையாய் நின்று உதவிபுரிந்த, திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத்தலைவர் திரு. பொன். சவுரிராசனார்க்கு என் நன்றி.

நூல் வெளியீட்டு நிதியினைப் பெறுவதற்கு உதவிய திருமலை, திருப்பதி அறநிலைய செயல்அலுவலர்க்கும், சப்தகிரி இதழாசிரியர் K. சுப்பாராவ் அவர்களுக்கும் என் நன்றி.

திருமலை திருப்பதி அறநிலையத்திற்கு என்னை ஆற்றுப் படுத்திய என்னுடன் பணிபுரியும் நண்பர் திரு. சு. வேங்கடராமனார்க்கு என் நன்றி.

நூலுக்கு முன்னுரை எழுதுகின்ற காலத்து சில தகவல்கள் கொடுத்துதவிய மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தெலுங்கு, கன்னடம், மலையாளம் மொழித்துறைத்தலைவர்களாகிய திரு C. R. சர்மா,

திரு. P. S. சீனிவான், திரு. C. J. ராய் ஆகியோருக்கும், சைவ சித்தாந்தத் துறைத் தலைவர் திரு. T.B. சித்தலிங்கய்யா அவர்களுக்கும் என் நன்றி.

நூல் அச்சுக்குக் கொடுத்த நாளிலிருந்து முடிவது வரையிலும் என்னுடன் இருந்து அயராது பலநிலைகளில் உதவி புரிந்த நண்பர், தியாகரராசர் கல்லூரிப் பேராசிரியர் திரு. உ. மீனாட்சி சுந்தரனார்க்கு என் நன்றி.

அச்சுப்பிழை திருத்துவதற்கு உதவிய நண்பர் வெள்ளைச்சாமி நாடார் கல்லூரிப் பேராசிரியர் திரு. இரா. சோதிமணியனார்க்கும் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை ஆய்வாளர் திரு. R. மீனாட்சிசுந்தரம் அவர்களுக்கும் என் நன்றி.

மேலட்டைப் படம் தயாரிப்பதற்காக அழகர்கோயில் ஓவியப் புகைப் படத்தினை அன்புடன் வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழக வரலாற்றுத்துறைப் பேராசிரியர் திரு. இரா. வெங்கட்ராமனார்க்கும் அட்டைப்படம் வரைந்துதவிய நண்பர் திரு சீனிதாசனுக்கும் என் நன்றி.

நூலினைச் செவ்வனே அச்சிட்டாக்கிய செந்தில்வேலன் அச்சக உரிமையாளர் திரு. இரா. ஆறுமுகம் அவர்களுக்கும் மற்றும் அச்சகத் தொழிலாளர் அனைவோருக்கும் என் நன்றி.

மதுரை,
23—1—87.

இவை
*வை.தி. நடராசன்*

டாக்டர்
இராம. பெரியகருப்பன்,
பேராசிரியர் & தலைவர்,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்.



பல்கலை நகர்
மதுரை-21

## அணிந்துரை

தமிழில் நாட்டுப்புற ஆய்வியலும் அதன் உள் வகைகளுள் ஒன்றாகிய நாட்டுப்புறப் பாடல் தொகுப்பும் மேன்மேலும் வளர்ந்து வருகின்றன முனைவர் தி நடராசன் அவர்கள் நாட்டுப்புற இலக்கியத் தொகுப்புகள் பலவற்றை வெளியிட்டும் அவை பற்றிய ஆய்வுரைகளை எழுதியும் தமிழுக்கு அணி சேர்த்து வருகின்றார். அயோத்தி கதை, எனப்படும் இராமாயணக்கதை தமிழில் வழங்கும் நாட்டுப்புறக் கதை வடிவங்களில் ஒன்றாகும். மக்களிடையே பேச்சு மொழியாக வழங்கிய வாறே ஏட்டில் எழுதி வைக்கப்பட்டிருந்தது. அதனை ஏட்டிலுள்ளவாறே இந்நூல் பதிப்பித்துத் தருகின்றது. இடையிடையே வருகின்ற உட் தலைப்புகள் கதைப்போக்கை விளக்குவனவாய் உள்ளன.

கம்ப இராமாயணக் கதைப்போக்கிலிருந்து இக்கதை பல இடங்களில் வேறுபடுகிறது. தமிழிலேயே உரைநடை வடிவத்திலும் பாடல் வடிவத்திலும் இங்ஙனம் கதை வேறுபடும் பாங்கு பல நிலைகளில் காணப்படுகிறது. 'லவகுச' என்னும் பெயர் தொன்மை மிக்க காலத்தில் பாணர்களைக் குறித்தது என்றும் அங்ஙனம் தாம் கேட்க நேர்ந்த வாய் மொழிப் பாடல்களை அடிப்படையாக வைத்தே வால்மீகி முனிவர் தம் காப்பியத்தை எழுதினார் என்றும் கூறப்படுவதுண்டு. எனவே இத்தகைய நூல்கள் வாய்மொழி இலக்கிய ஆராய்ச்சிக்கு மிகவும் உதவும் என்பதுறுதி. முனைவர் தி. நடராசன் அவர்களின் நாட்டுப்புறவியல் ஆய்வுப்பணி மேலும் தொடர்வது தமிழில் இவ்வகைமை தனித்துறை யாகும் காலத்துப் பெரிதும் போற்றுதற்குரியதாகும்.

12—1—87

தமிழண்ணல்

டாக்டர் இராம. சண்முகம்
தமிழ்ப்பேராசிரியர்,
அஞ்சல்வழி தொடர்கல்வித்துறை,
ம கா.ப.

மதுரை-625 021
17—1—87

# மதிப்புரை

வாய்மொழியாக வழிவழியாக வழங்கி வந்த கதைக்கு வரை மொழி வடிவம் வழங்கப்பட்டபோது அதில் செவ்வியல் இலக்கியக் கூறுகள் (classical Literary Features) பல இடம் பெற்றதால் அயோத்தி கதை என்னும் இந்நூல் நாட்டுப்புற மக்கள் வாய் மொழி இலக்கியத்தினின்றும் சற்று வேறுபாடுடையதாக உள்ளது. இத்தகைய இலக்கியங்கள் இந்த நூற்றுண்டின் பிற்பகுதியில் நாட்டுப்புற இயலில் ஈடுபாடு கொண்ட ஆய்வாளர்கள் கவனத்தை ஈர்த்தது என்றாலும், இந்நூல் நாட்டுப் புற இயல் உணர்வோடும் பதிப்புக்கலை அனுபவத்தோடும் பதிப்பிக்கப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

இந்த நூல் தமிழ் நிலத்தை மொழி வட்டாரங்களாகக் (dialect-areas) காணுகின்ற போக்கிலிருந்து பண்பாட்டு வட்டாரங்களாகப் (folk-cultural areas) பிரித்துக் காண்பதற்குரிய ஒரு புதிய உத்தியைப் புலப்படுத்துகின்றது. வட்டாரப்பண்பாட்டு சிறப்பு மையங்களை (the cultural focal points) இந்நூல் இடையிடையே வெளிப்படுத்தி நிற்கின்றது.

செவ்வியல் இலக்கியங்களையே பெருமளவு அறிந்து போற்றி வந்த தமிழ் உலகம், அயோத்திகதை போன்ற இலக்கியங்கள் தமிழ் மொழிக்கும் பண்பாட்டுக்கும் ஊறு நேரும் போது தமிழ் உணர் வையும் பண்பாட்டையும் நாட்டுப்புறமக்களிடையே பாதுகாத்தும் வளர்த்தும் வந்துள்ளன என்பதை இன்று உணரத் தொடங்கியிருப்பதை இந்நூல் வெளியீடு உணர்த்துகின்றது.

மேலும் 'அயோத்தி கதை' போன்ற இலக்கியங்களை நாடு முழு தும் சுற்றித் தேடிக்கண்டு முறையாகப் பதிப்பித்து ஆய்வு செய்து மக்கள் மத்தியிலே உலவ விடுவதற்கு உரிய பணிக்கு இப்போது நாம் முதலிடம் தந்தாக வேண்டும். இத்தகைய பணிகளிலே ஈடுபாட்டை இளைய தலைமுறையிடத்தில் உருவாக்க வேண்டிய பொறுப்பு

இன்றைய தமிழ் உலகுக்கு உண்டு. பல்கலைக்கழகங்கள், ஆராய்ச்சி நிறுவனங்கள், அரசுப் பண்பாட்டுத்துறைகள் இத்தகைய பணிக்குச் சிறப்பாக நிதி ஒதுக்கீடு செய்து இந்தப்பணியை வளர்க்க வேண்டும்.

இனிவரும் தமிழகம் அனைத்துத் தமிழர்களையும் அணைத்தும் இணைத்தும் செல்கின்ற உணர்வை வளர்க்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறது. இந்த நிலையில் அனைத்து மக்களின் வட்டார மொழிகள் வட்டார இலக்கியங்கள், வட்டாரக் கலைகள், வட்டாரப்பண்பாடுகள் ஆகியவற்றைப் போற்றி வளர்க்கின்ற வழிமுறைகளைத் தேர்ந்து காண வேண்டும். அத்தகைய வழிமுறைகளில் ஒன்றுகவே இந்த அயோத்தி கதை வெளியீடும் அதற்கு நாம் வழங்குகின்ற வரவேற்பும் அமைய வேண்டும்.

இராம. சண்முகம்

## சுருக்க விளக்கம்

பே.வ.மா : பேச்சு வழக்கில் மாற்றம்

( ) : இக்குறியீட்டின் உள்ளிருக்கும் எழுத்து பதிப்பாசிரியரால் வேண்டப்படுவது

[ ] : இக்குறியீட்டின் உள்ளிருக்கும் எழுத்து பதிப்பாசிரியரால் வேண்டப்படாதது

# சுவடியின் வரலாறு

அயோத்திகதை எழுதப்பெற்ற காவிய ஓலைச்சுவடிகள் குமரி மாவட்டத்தில் மூன்றும் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒன்றுமாகக் கிடைக்கப்பெற்றன, குமரி மாவட்டத்தில் கிடைக்கப்பெற்ற மூன்று சுவடிகளுள், முதற்சுவடி, குமரிமாவட்டத்து அகத்தீஸ்வர வட்டத்துப் பட்டசாலியன்விளை என்னும் ஊரில் வாழ்கின்ற என் தாய்மாமன் திரு. சு. பள்ளிகொண்ட பெருமாள் அவர்கள் இல்லத்திலிருந்து கிடைக்கப்பெற்றது. இச்சுவடியில் கதை இரண்டு பகுதிகளாக முழு- மையாக அமைந்துள்ளது. இரண்டாம் சுவடி குமரி மாவட்டத்து அகத்தீஸ்வர வட்டத்து தொல்லவிளை என்னும் ஊரைச்சேர்ந்த என் மாணவநண்பர் திரு. பொ. கோவிந்தசாமி அவர்கள் மூலமாகக் கிடைக்கப்பெற்றது. இச்சுவடியில் கதையின் முற்பகுதி மட்டுமே அமைந்துள்ளது.

மூன்றாம் சுவடி, குமரிமாவட்டத்து அகத்தீஸ்வர வட்டத்துக் கலசமிறக்கிக் குடியிருப்பு (கலைநகர்) என்னும் ஊரில் வாழ்கின்ற என் சகோதரியின் கணவர் திரு சி. தங்கவேல், B.Sc., B.T; அவர்கள் இல்லத்திலிருந்து கிடைக்கப் பெற்றது இச்சுவடியில் கதையின் பிற்பகுதி மட்டுமே அமைந்துள்ளது.

திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து கிடைத்த சுவடி, இம்மாவட்டத்து நான்குநேரி வட்டத்து மேலத் துவரைக்குளம் என்னும் ஊரைச்சேர்ந்த திரு. சூரிய முத்துநாடார் அவர்களிடமிருந்து கிடைக்கப் பெற்றது. இச்சுவடியில் கதையின் முழுப்பகுதியும் அமைந்துள்ளது. ஆனால் இச்சுவடியில் உள்ள ஓலைகள் பல சிதைந்துள்ளன. கிடைத்த சுவடிகளுள் குமரிமாவட்டத்துச் சுவடிகள் இரண்டும் மூன்றுமே பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப் பெற்றன. இச்சுவடிகள் தோற்றத்திலும் சற்றுக்காலத்தால் முந்திய தன்மை உடையனவாகக் காணப்பெற்றன.

பதிப்புக்கு எடுத்துக் கொண்ட சுவடிகளில் ஒரு சில இடங்களில் ஏட்டில் பொடிவுகளும் அமைந்திருந்தன. ஏட்டில் பொடிவுற்ற பகுதிகள் பதிப்பில் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

மற்றும் சுவடிகளில் ஒரு சில இடங்களில் சொற்கள் தெளி- வின்மையனவாகவும் அமைந்திருந்தன என்பதும் குறிக்கத்தக்கது.

எழுத்துக்களில் 'ழகர' 'ளகர' மாற்றம் நூல் முழுமையும் பரவலாகக் காணப்படுகிறது. மேலும் வடவெழுத்துக்களாகிய 'க்ஷ', 'ஷ' என்பனவும் சிலவிடங்களில் பயின்று வந்துள்ளன.

கதைப்போக்கு முதல் மூன்று சுவடிகளிலும் பெரிதும் ஒத்திருந்தாலும் ஒவ்வொரு பிரதியிலும் மொழியமைப்பில் சொற்கள், வரிகள் ஆகியன வேறுபாடுடையனவாக அமைந்திருந்தன.

நாட்டுப்புறக் கதையாக வழங்கிய அயோத்தி கதைக்குத் தமிழகத்தின் தென்மாவட்டங்களில் வாழ்ந்த பலர்வடிவம் கொடுத்துள்ளனர் என்பதனைக் கிடைத்துள்ள சுவடிகளிலிருந்து முடிவுகட்ட இயலுகின்றது. மற்றும் மூன்று சுவடிகளிலும் கதைச்செய்திகள் ஒத்து வருவன போலவே மொழியமைப்பும் பலஇடங்களில் ஒத்துக் காணப்பெறுகின்றது என்பதுவும் குறிக்கத்தக்க ஒன்றாகும்.

இந்நூலின் பதிப்புமுறை பதிப்பாசிரியரால் முன்னூல்கள் பதிப்பிக்கப் பெற்றமுறைப்படி அமைந்துள்ளது. சுவடியினைப் பெயர்த்தெழுதிநூலாக்கும் பொழுது எவ்விதமாற்றமும் பதிப்பாசிரியரால் செய்யப்பெறவில்லை. நூலுள் அமைக்கப்பெற்றுள்ள உட்தலைப்புகள் பதிப்பாசிரியரின் ஆக்கங்களே.

அயோத்திகதை என்னும் இக்கதைப்பாடல் பத்து ஆண்டுகளுக்கு முன்னால் சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதப்பெற்றது இப்பொழுதுதான் இதுநூலாக வெளிவருகின்றது.

*வில்லுப்பாட்டு :* அயோத்திகதை தென்மாவட்டங்களில் வில்லுப்பாட்டுக்காரர்களால் பாடப்பெற்று வந்தது. இன்றும் பாடப்பெற்று வருகின்றது. வில்லுப்பாட்டுக்காரர்கள் நாட்டுப்புறத் தெய்வங்களாகிய முத்தாரம்மன், பத்திரகாளியம்மன், இசக்கியம்மன், சுடலைமாடன், ஆகியவற்றிற்குரிய கொடை(விழா)நாட்களில் அந்தந்த தெய்வங்களின் கதைகளைப் பாடுவது வழக்கமாக உள்ளது. விழாநாட்கள் கூடுதலாக இருந்தால் வில்லுப்பாட்டுக் கலைஞர்கள் நாட்டுப்புறத் தெய்வங்களுக்கு அவை அவைகளின் கதைகளைப் பாடுவதோடு மட்டுமல்லாமல் *பிறகதைகளையும் பாடுகின்றனர். பிறகதைகளுள் முதன்மையாக அமைவது 'அயோத்திகதை' எனலாம்.

மதுரை
15—12—86

இவை
வை. தி. ந.

---

*முத்துப்பட்டன்கதை, கர்ணன்போர், பாரதக்கதை போன்றன.

# நூன்முகம்

நாட்டுப்புறக் கதைக்காவியம் (Folk Epic) என்பது நாட்டுப்புற இலக்கியங்களுக்கே உரிய சில குறிப்பிட்ட அமைப்புகளுடன் அசாதாரண மாந்தரின் வீரதீரச் செயல்களை விளக்குவனவாயும் மரபுப்படி வாய்வழி வழங்கி வருவனவாயும், ஒரு தனிப்பட்ட ஆசிரியரால் எழுதப்பெற்ற செவ்வியல் இலக்கியத்தினின்றும் வேறுபட்டனவாயும் அமைந்து வருவது ஆகும்.[1] மேற்கூறப் பட்ட செய்திகள் அனைத்தும் பொருந்தப் பெற்றனவாய் 'அயோத்திகதை' காணப்படுவதால் இதனை ஒரு நாட்டுப்புறக் கதைக்காவியம் எனலாம். அயோத்தி கதை தமிழகத்தின் தென்பகுதியில் (குமரி நெல்லை ,மாவட்டங்கள்) மக்கள் மத்தியில் வழிவழியாக வழங்கி வந்த கதைக்குக் கொடுக்கப் பெற்ற எழுத்து வடிவமாகும். மற்றும் தமிழகத்தின் தென்பகுதியில் பரவலாகவும் பிரசித்தியுடனும் (popular) வழங்கி வந்தது, வருவது அயோத்திகதை எனில் மிகையில்லை.

**நூற்பெயர் :**

இக்காவியம் எழுதப்பெற்றுள்ள முதல் ஓலையில் நூலின் பெயர் **'அயோத்தி கதை'** என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. மற்றும் நூலின் தொடக்கத்தில் **'அய்யோத்தி கதை'** என்ற குறிப்பும் காணப்படுகிறது. மேலும் நூலுள் காப்புச் செய்யுளில் ராமன் சொல்கதை, ராமர்கதை கோலநெடுமாலே உன்கதை, கார்மேகன் அரிராமர் பேரில் கதை, பண்டான ராமர்கதை, போன்ற தொடர்களும் காணப்பெறுகின்றன. எவ்வாறாயினும் குமரிமாவட்ட மக்கள் வழக்கில் இக்கதை அயோத்தி கதை என்றே குறிப்பிடப் பெறுகின்றது. மக்கள் வழக்கினையும் முதல் ஓலைக்குறிப்பினையுங் கொண்டு இந்நூலுக்கு 'அயோத்திகதை' என்று பெயர் இடப் பெற்றுள்ளது.

---

1 Folk (oral) epic songs are narrative poems in formulaic and ornamental style dealing with the adventures of extrordinary people. Thery are traditional that is handed down by word of mouth as distinsguished from literary epics attributed to definite authors.

— Felise J. Oinas, 'Folk Epic' P.90.
Folklore and Folk Life.
Ed. Richard M. Dorson, 1979.

'அயோத்தி' என்னும் பெயர் ராமனின் தந்தை திசதரன் ஆண்டுவந்த நாட்டைக்குறிப்பதாகும். இடப்பெயரே கதைப்பெயராக அமைந்துள்ளது. இவ்வாறு இடப்பெயர் அடிப்படையில் பெயர்பெற்ற நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், சிவகெங்கைச் சரித்திரக்கும்மி, பாஞ்சாலங்குறிச்சிச் சரித்திரம் போன்றன உள்ளன. கம்பராமாயணத்தில் இரண்டாவது காண்டத்தின் பெயர் 'அயோத்தியாகாண்டம்' என்பதும் குறிப்பிடத்தக்கது.

அயோத்தி என்ற சொல் 'வெற்றிகொள்ள இயலாதது' (unconquerable) எனப்பொருள் உணர்த்தும்.

*நூலாசிரியர் :*

ஓலைச்சுவடியிலிருந்து இக்கதைக்காவிய ஆசிரியரை அறியுமாறில்லை. பொதுவாக நாட்டுப்புறக் கதைப்பாடல்களுக்கு ஆசிரியர் பெயரை அறிந்துகொள்வது என்பது இயலாத ஒன்றுதான். எனவே அம்முறையில் இந்நூலின் ஆசிரியர் பெயரையும் அறிய முடியவில்லை.

மற்றும் இக்கதைக் காவியத்தின் அவையடக்கப் பகுதியில் இக்கதையை வில்லுப்பாட்டாகப் பாடியவர் (எழுதியவரல்லர்) பற்றிய சிலகுறிப்புக்கள் காணப்பெறுகின்றன.

'யேளையடியேன் ராமர்கதைபடிக்க' (37)
'கற்ருேர் பெரியோர்முன் பாடுகிறேன்' (42)
'பிச்சையாண்டி என்ற வடிவளகன்
பாடுகிறேனுன் ராமர் கதை' (60-61)
'பண்டான ராமர் தன் கதையை
பளகப் படிக்கிறேன் சந்தமதாய்
பாட விரும்பினேன் பெரியோரே' (73-75)

மேற்காட்டிய வரிகளிலிருந்து இக்கதைப்பாடலை வில்லுப்பாட்டாக மக்கள் மத்தியில் பாடியவர் பிச்சையாண்டியாவார் என்பதனை அறியமுடிகிறது. பாடியவர் பிச்சையாண்டியாக இருந்தாலும் இக்கதைப் பாடலின் வடிவத்தினை அமைத்தவர் யாரென்று அறியுமாறில்லை. ஆசிரியர் பெயர் அறிய முடியாமல் இருப்பதே நாட்டுப்புறக் கதைப் பாடல் அல்லது கதைக் காவியத்தின் சிறப்பாகும்.

நூலின் காலம் :

இக்கதைக் காவியம், ராமர் பெருமானின் வீரவரலாற்றை உணர்த்துகின்றது. ராமர் கதை வடநாட்டில் தோன்றி வளர்ந்த கதை. வடநாட்டிலும் இக்கதை தோற்றம் பெற்ற காலத்தில் வாய்மொழியாக வழங்கி வந்து பின்னர் வான்மீகிமுனிவரால் எழுத்து வடிவம் பெற்றது என்பர். வான்மீகிக்கு முன்போ பின்போ இக்கதை வட இந்தியாவிலிருந்து தென்னிந்தியாவிற்கும் பரவியிருக்க வேண்டும். அதி புராதன காலத்துத்தானே பாரத தேசம் முழுமையும், அதாவது இமயம் முதல் குமரி வரையும் இச்சரிதம் வழங்கி வந்துள்ளது என்பார் எஸ். வையாபுரிபிள்ளை.[2] மேலும் இராமாயணம் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் காணப்படுகின்றன.

*புறநானூற்றில் :*

'கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வவ்விய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப் பொலிந்தா அங்கு
அருஅ வருநகை யினிது பெற்றிகுமே' (புறம். 378)
என்று காணப்படுகிறது.

*அகநானூற்றில்*

'வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கு முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந்தன்றால் இவ் அழுங்கலூரே' (அகம், 70)

என்ற செய்தி அமைந்துள்ளது.

*மதுரைக்காஞ்சியில்*

'தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றென்முது கடவுட் பின்மேய' (ம.கா, 40—41)

(தென்னவன்—இராவணன்; கடவுள்—அகத்திய முனிவர்—உரை) என்ற வரிகளில் இராவணன் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

---

2. எஸ். வையாபுரிப்பிள்ளை 'இராம சரிதமும் தமிழ் நாடும்' பக். 58 தமிழர் பண்பாடு, 1968.

*கலித்தொகையில்*

'இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உடையமர்ந் துயர்மலை இருந்தனனாக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற்கீழ்புகுந் தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன் போல' (கலி, 38)

என்ற வரிகளில் இராவணன் செயல் குறிக்கப்பட்டுள்ளது.

*பரிபாடலில்*

'இந்திரன் பூசை இவள் அகலிகை இவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிது என்றுரை செய்வோரும்'

(பரி. 19)

என்ற வரிகளில் அகலிகை சாபம் பற்றிய சித்திரம் திருப்பரங்குன்றத்துச் சித்திர மண்டபத்தில் வரையப்பட்டிருந்தது எனக்குறிக்கப்பட்டு உள்ளது.

*சிலப்பதிகாரத்தில்*

'பெருமகன் ஏவலல்லது யாங்கணும்
அரசே தஞ்சமென்று அருங்கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும் பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்'

(சிலப்: 13, 63—66)

என்ற வரிகளில் இராமனைப் பிரிந்த அய்யோத்தி நகர் வருத்தமுற்ற செய்திக்குறிக்கப்பட்டுள்ளது.

'தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயருழந்தோன்'

(சிலப், 14:46-47)

என்றவரிகளில் கவுந்திவாக்காக இராமன் செயல் குறிக்கப்பட்டுள்ளது.

*பெருங்கதையில்*

'இறைமீக் கூறிய இராமன் தம்பி
மறுவொடு பெயரிய மதலைக்கு இயைந்த
ஆனுப் பெரும்புகழ் யாமும் எய்தத்
தேனுர் தாமரைத் திருந்து மலர்ச் சேவடி
வழிபாடாற்றுதும்' (111.24 : 90—94)

என்ற வரிகளில் இலெட்சுமணன் செய்தசேவை பற்றிய குறிப்பு உள்ளது.

மேற்கூறப் பெற்ற இலக்கியச் செய்திகளிலிருந்து தமிழகத்தில் இராமாயணக்கதை சங்ககாலத்திற்கு முன்னரே இடம் பெற்று வழங்கி வந்துள்ளமையினை உணரலாம்.

மற்றும் தமிழில் கம்பனுக்கு முன்னரே இராமாயணக்கதை இலக்கிய வடிவம் பெற்றிருந்தது என்பதனைத் தமிழ் இலக்கண உரை நூல்கள்வழி உணரமுடிகிறது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கான நச்சினார்க்கினியர் உரையில் (அகத். 54; புறத். 12, 21) இராமாயண நிகழ்ச்சி இடம் பெற்ற பாடல்கள் சில காட்டப்பட்டுள்ளன.

'ஆள்வினை முடித்த வருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய விராமன வனொடு
மிதிலை மூதூரெய்திய ஞான்றை
மதியுடம்பட்ட மடக்கட் சீதை
கடுவிசை வின்ஞா ணரிடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்ட மெய்தித்
துயிலெழுந்து மயங்கின ளதாஅன்று மயிலென'

(அகத், 54 ; உரை மேற்கோள்பாடல்)

யாப்பருங்கலச் சூத்திர விருத்தியில் பஃறொடை வெண்பா என்பதற்குச் சான்றாகக் கூறுகின்ற பொழுது பல அடியான் வந்த பஃறொடை வெண்பா ராமாயணமும்' என்ற குறிப்புக் காணப்படுகிறது. (யா. விருத்தியுரை, நூற்பா. 62).

எவ்வாறாயினும் தமிழில் இராமாயணக் கதை தொன்று தொட்டு வழங்கி வந்துள்ளது. [3] என அறிய முடிகிறது.

தமிழில் காணப்பெறும் நாட்டுப்புறக் கதைக் காவியம் அல்லது கதைப்பாடல்களின் காலம் பொதுவாகக் கி.பி. 17 ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 20 ஆம் நூற்றாண்டு வரை கொள்ளப்படும். பொதுவாக நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் நாட்டுப்புறக் கலைக்குழுவினரால் (Folk Artists) ஆக்கப்பட்டும் பேணப்பட்டும் வந்ததாகத் தெரிகிறது. கலைக் குழுவினர் தொடக்க காலத்தில் மக்கள் மத்தியில் செல்வாக்குடன் விளங்கி வந்த இதிகாசப் புராணக் கதைகளையே (இராமாயணம் பாரதம் போன்றன) தேர்ந்தெடுத்தனர், காலப்போக்கில் வரலாற்று நிகழ்வுகளும் கதைப் பாடல்களின் கருப்பொருளாயின. இதனையடுத்து மக்கள் மனவளர்ச்சிக்கு ஏற்ப சமுதாய நிகழ்வுகளும் கதைப்பாடல்களில் இடம் பெறலாயின.

கதைப்பாடல் வரலாற்றில் இதிகாசங்களை அடியொற்றிய கதைகள், தொடக்க காலத்தில் உருவானவை என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அயோத்திகதையினைக் கி.பி. 17 ஆம் நூற்றாண்டைச்

---

3. காண்க, மு. இராகவயங்கார், ஆராய்ச்சித்தொகுதி, 1985.

சார்ந்தது என்று கூறலாம். மற்றும், இக்கதைப்பாடல் எழுதப்பட்ட சுவடியின் இறுதியில் ஏடு எழுதிய ஆண்டாகக்கொல்லம் ஆண்டு 1114 என்று குறிப்பிடப் பெற்றுள்ளது, இப்பொழுது கொல்லம் ஆண்டு 1161 ஆகையால் இவ்ஏடு நாற்பத்தேழு ஆண்டுகளுக்கு முன் எழுதப்-பெற்றது என உணர முடிகிறது,

பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற ஏடுதான் நாற்பத்தேழு ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப் பெற்றதாகக் கருத வேண்டுமே யொழிய இதனை அயோத்தி கதையின் காலமாகக் கருத இயலாது.

## கதைச் சுருக்கம்

கயிலையில் வீற்றிருக்கும் சிவனை நோக்கி வசிட்ட முனிவர் நாட்டு வளங்களைக் கண்டு வருவதற்கு, வரம்வேண்டி அருந்தவம் செய்தார் சிவனும் வசிட்டருக்கு அந்தப்படி வரமளித்தார். வரம்பெற்ற வசிட்ட முனிவர் திசதரன் ஆட்சி புரியும் அயோத்தியாபுரி வந்தடைந்தார். திசதரன் வசிட்ட முனிவரைச் சிறப்பாக வரவேற்று உபசரித்தான்

வசிட்ட முனிவர் திசதரனிடம், 'நீ பட்டத்து இராணி இல்லாமல் வாழ்ந்து வருகின்றாய்; இது உனக்குப் பெருமை தராது; உடனடி திருமணம் செயதுகொள்' என எடுத்துரைத்தார்.

திசதரன், வசிட்டரிடம் 'நான் எந்த நாட்டுப்பெண்ணை மணம் முடிக்கலாம், தயவுசெய்து எடுத்துச்சொல்லுங்கள்' எனக்கேட்டான்.

வசிட்டர் அவனிடம், 'நீ கோசலை நாட்டு மன்னன் மகளை மணம் புரிவாயாக'. என எடுத்துக் கூறினார்-

வசிட்ட முனிவர் சொல்படி திசதரன் கோசலை நாட்டு மன்னனுக்.குத் தூது அனுப்பி பெண் கேட்டு கோசலையைத் திருமணம் செய்து கொண்டான், திருமணம் ஆகி நெடுநாள் ஆகியும் திசதரனுக்குக் குழந்தைப்பேறு வாய்க்கவில்லை. இதனால் வருத்தமுற்ற திசதரன் மீண்டும் வசிட்டரை அணுகி 'திருமணம் ஆகி நெடுநாள் ஆகியும் எனக்குக் குழந்தைப்பேறு வாய்க்கவில்லையே; என்ன செய்யலாம்-மாமுனியே' என வினவி நின்றான்.

வசிட்டர் திசதரனிடம், 'நீ மீண்டும் கைகேசி ராசன் திருமகளான கைகேசியை மணம்புரிவாயாக' என எடுத்துச் சொன்னார்.

வசிட்டர் சொல்படி திசதரன் கைகேசி ராசன் திருமகளான கைகேசியை மணம் புரிந்தான். திருமணம் ஆகி நெடுநாள் ஆகியும் கைகேசிக்கும் குழந்தைப்பேறு கிடைக்கவில்லை.

மீண்டும் திசதரன் வசிட்டரிடம் வந்து முறையிட்டான். வசிட்டர் திசதரனிடம், 'நீ சிமித்திரை ராசன் திருமகளான சிமித்திரையை மணம் புரிவாயாக' என எடுத்துச் சொன்னார்

வசிட்டர் சொல்படி திசதரன் சிமித்திரை ராசன் திருமகளான சிமித்திரையை மணம் புரிந்தான். திருமணம் ஆகி நெடுநாள் ஆகியும் சிமித்திரைக்கும் குழந்தைப்பேறு வாய்க்கவில்லை.

திசதரனும் மூன்று தேவியரும் குழந்தைப் பேறில்லாமையால் மிக்க வருத்தத்துடன் வாழ்ந்து வந்தனர்.

மீண்டும் திசதரன் வசிட்டரை அணுகி; 'எனக்குப் பின்னர் அரசாள எனக்குக் குழந்தைப்பேறு கிடைக்கவில்லையே, அதற்கான காரணம் என்னவோ மாமுனியே' என வினவினான்'.

வசிட்டர், திசதரனிடம் அவன் முற்பிறப்பு வரலாற்றினை எடுத்துக் கூறினார்.

'திசதரா, நீ உன் முன் பிறவியில் வேடனாகப் பிறந்திருந்தாய். உனக்குத் தினைப்புனம் இருந்தது. உன் தினைப்புனத்தினைத் தேவலோகத்திலிருந்து எழுபது வெள்ளானைகள் வந்து அழித்துக் கொண்டிருந்தன. நீ அந்த யானைகளை மறைந்திருந்து தாக்கினாய். அறுபத்தொன்பது யானைகள் மடிந்து விழுந்தன. ஒரு யானை மட்டும் தப்பிச்சென்று விட்டது. தப்பிச் சென்ற யானையையும் கொல்வதற்கு நீ ஒளிந்து காத்திருந்தாய்.

அக்காலத்தில் அக்காட்டில் கண்பார்வை இல்லாத ஐந்துகண் முனிவனும் அவன் மனைவியும் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்குக் குழந்தைப் பேறு இல்லை; எனவே அவர்கள் சிவனை வேண்டி நின்றனர். சிவன் அருளினால் அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. கண் இல்லாத அவர்களுக்குப் பிறந்த குழந்தையினை அவர்கள் வளர்க்க இயலாமல் வருந்தினர். எனவே அவர்கள் அக்குழந்தையினைச் சிவன் கோயில் பூசாரி ஆரியப் பட்டனிடம் ஒப்படைத்தனர். ஆரியப்பட்டன் அக்குழந்தையினை வளர்த்து வந்தான். குழந்தை வளர்ந்து பெரியவனாகிய பின்னர் ஒரு நாள் ஆரியப்பட்டன் செய்து வந்த கோயில் பூசையினைச் செய்யச் சென்றான். பூசை செய்யச் சென்ற கோயிலில்ஐந்துகண் முனிவனும் அவன் மனைவியும் தூங்கிக் கொண்டிருந்தனர். அதனைக் கண்ட ஆரியப்பட்டனின் வளர்ப்பு மகன், தூங்கிக்கொண்டிருப்பவர்

தன் பெற்றோர் என அறியாததால் அவர்கள் கோயிலின் தூய்மையினைக் கெடுத்துவிட்டதாகக் கருதி கண்பார்வை இல்லாத இருவரையும் அடித்து வெளியே தள்ளிவிட்டான். முனிவனும் அவன் மனைவியும் அபயக்குரலிட்டு அழுதனர். அழுகுரலோசை கேட்ட ஆரியப்பட்டன் ஓடி வந்து வளர்ப்பு மகனிடம் அவன செய்த தவறினைச் சுட்டிக் காட்டி முனிவனும் அவன்மனைவியும் தான் அவனைப் பெற்ற தாய் தந்தையர் என்பதையும் எடுத்துக் கூறினான். அதோடு வளர்ப்பு மகனிடம் ஆரியப்பட்டன், உன் பெற்றோர் மலைக்காட்டில் தாகத்தால் வருந்துகின்றனர். ஆகவே நீ சென்று அவர்களின் தாகந் தீர்த்து தெளிவு சொல்லி வருவாயாக என்று அனுப்பி வைத்தான். ஆரியப்பட்டனின் சொல்படி வளர்ப்பு மகன் அவனைப் பெற்ற தாய் தந்தையரை அணுகி பரிவான வார்த்தைகள் கூறினான். முனிவனும் அவன் மனைவியும் மன அமைதியடைந்தனர். பின்னர் பாலகன் பெற்றோரிடம் தண்ணீர் கொண்டு வருவதற்கு உத்தரவு வேண்டினான். பெற்றோரும் பாலகனைத் தண்ணீர் கொண்டு வருமாறு ஏவினர். பாலகன் கமண்டலத்துடன் நடந்து வந்து ஒரு நீர்ச்சுனையில் நீரினை முகர்ந்தான். கமண்டலத்தில் நீர் நிறைந்த ஓசை யானை நீர் அருந்தும் ஓசை போல் இருந்தது. யானைக்காக காத்திருந்த நீ யானைதான் வந்து நீரருந்துகிறது என எண்ணி அம்பினைத் தொடுத்தாய். அம்பு பட்டு பாலகன் அலறினான். அம்பு பட்ட பாலகன் இறப்பதற்கு முன்னர், 'தன் பெற்றோர் கண் இல்லாதவர் என்றும் அவர்கள் தண்ணீர் தாகத்துடன் இருக்கின்றனர்; என்னை யெய்த ராச்சதர்கள் அவர்கள் தாகத்தினைத்தீர்க்கவேண்டும்' என்றும் தரையில் எழுதி வைத்துவிட்டு உயிர் பிரிந்தான். அம்பு எய்த நீ யானை அலறி விழும் சத்தம் கேட்காததால் சுனையருகே வந்து பார்க்கலுற்றாய்; பாலகன் இறந்து கிடப்பதனையும் தரையில் எழுதி வைத்திருந்த வாசகத்தினையும் கண்டாய். வாசகத்தில் உள்ளபடி பாலகனின் பெற்றோர்க்கு நீ தண்ணீர் கொண்டு சென்று, நடந்த செய்திகளையும் எடுத்துச் சொன்னாய். செய்தியறிந்த பாலகனின் பெற்றோர் வருந்தி மனஞ்சடைந்து உனை நோக்கி 'ஏவேடா! உனக்குச் சந்ததி கிடைக்காது அப்படியே கிடைத்தாலும் நீ இறக்கின்ற வேளையில் சந்ததியாகியவன் உனக்கு இறுதிக்கடன் செய்யாமல் கானகம் சென்று விடுவான்' எனக் கூறிச் சாபமிட்டனர்.

சாபமிட்டு விட்டு முனிவன் கலைமானாகமாறி ஓடிவிட்டான். முனிவனின் மனைவி தன்னைத்தானே உயிரை மாய்த்துக் கொண்டாள்.

'ஐந்துகண் முனிவன் இட்ட சாபத்தினால் தான் உனக்குக் குழந்தைப் பேறு இல்லை'' என்று திசதரனிடம் வசிட்ட முனிவர் எடுத்துரைதார்.

உடனே திசதரன், வசிட்டரிடம் 'சாபம் தீர வழி முறை யாது'? எனக்கேட்டான்.

வசிட்டர், அவனிடம் 'நீ எந்த முனிவரால் சாபம் பெற்ருயோ அவரையே அழைத்து வந்தால் உன் சாபம் நீங்கப் பெறும்' என்று கூறினூர். திசதரனும் சாபந் தீர்ந்து பிள்ளைப் பேறடைய கலைக்கோட்டு முனிவரை அழைத்து வருவதற்கான ஏற்பாடுகளைச் செய்தான்.

இது இவ்வாருக, சிவன் பச்சைமாலை வரவழைத்து திசதரனுக்கு மகனுகப் பிறக்குமாறு வேண்டினூர்.

அப்பொழுது பச்சைமால் சிவனிடம், 'நான் இரணியனைக் கொல்ல நரசிம்ம வடிவுடன் சென்றேன். அச்செயலை இரணியன் இழிவாகப் பேசினுன். ஆகையால் அவ்விரணியனைப் பத்துத் தலையுடன் பிறவி செய்ய வேண்டும்' என வேண்டினூர்.

சிவனும் உடனடியாக ராவணன், கும்பகர்ணன், சூர்ப்பனகை, வீபூஷணன் ஆகியோரின் உருக்களைப் பிடிக்கலுற்ருர். இலங்கை நகரை ஆண்டு வந்த குருபாகரனும் அவன் மனைவி கைகேசியும் நெடுநாள் பிள்ளைப்பேறில்லாமல் வருந்தியிருந்தனர். குருபாகரனின் மனைவி தன் குறையினை விச்சிரவாகு முனிவரிடம் கூறினுள். விச்சிரவாகு முனிவர் அவளுக்கு இரங்கி அவளைக்கூட சிவன் உருப்பிடித்து வைத்திருந்த ராவணன், கும்பகர்ணன், சூர்ப்பனகை, விபூஷணன் என்ற நால்வரையும் அவள் குழந்தையாகப் பெற்றெடுத்தாள்.

விச்சிரவாகு முனிவர் ராவணனுக்கும் சகோதரர்களுக்கும் பலவித வித்தைகளைக் கற்றுக் கொடுத்தார். பின்னர் ராவணனும் சகோதரர்களும் பிரமனை வேண்டித்தவமிருந்தனர். தவத்தின் போது ராவணன் ஒவ்வோர் ஆண்டும் தன் ஒவ்வொரு தலையினை வெட்டி எறிந்தான். பத்தாவது ஆண்டு தலையை ராவணன் வெட்டுவதற்கு முன்னர் பிரமன் மனமிரங்கி ராவணனுக்கும் சகோதரர்களுக்கும் வேண்டிய வரத்தினைக் கொடுத்துவிட்டார். ராவணன் மீண்டும் பிரமதேவனிடம் சில வரங்களைக் கேட்டான். பிரமன் அவ்வரங்களைக் கொடுக்க மறுத்து விட்டார். எனவே ராவணன் பிரமனிடம் வம்பு பண்ணி சிலவரங்களைப் பெற்று விட்டான். பிரமன் கோபமுற்றுக் கொடுத்த வரங்களை மீண்டும் ராவணனிடமிருந்து பறித்துக் கொண்டார். எனவே ராவணன் பிரமனோடு மோதினுன். பிரமன் அப்பொழுது வாயு, வருணன் என்பவரின் உதவிகளை வேண்டினூர். எனவே வாயுவும் வருணனும் ராவணனுடன் போரிட்டனர். ராவணன் வாயுவையும். வருணனையும் தன் கைகளில் இடுக்கிக் கொண்டுபின் அவர்களை விட்டு விட்டு சிவனிடம் வந்து, சில வரங்களை வேண்டினுன். அதோடு அவன் வெள்ளைப் பிள்ளையாரையும் தனக்குத்தந்தருள வேண்டும் எனக் கேட்டான்.

சிவனும் சிலவரங்களை அளித்து விட்டு வெள்ளைப்பிள்ளையாரை ராவணனிடம் கொடுக்கும் முன்னர் ராவணனை அழைத்து, 'வெள்ளைப் பிள்ளையாரை உனக்குத் தருகிறேன். நீ நிலத்தில் இதனை இறக்கி வைத்தால் இது பாதாளம் வரை வேர் விட்டுக் கொள்ளும்' எனக் கூறினர்.

ராவணன் அப்போது மீண்டும் சிவனிடம் லெச்சுமி என்ற பெண்ணையும் தனக்குத்தர வேண்டும் எனக் கேட்டான். சிவனும் கொடுத்து விட்டார்.

ராவணன் வரம் வாங்கி வரும் வழியில் பச்சைமால் ராவணனின் வரத்தினைக் குறைக்கக் கருதி கத்தரிச் செடியொன்றினைத் தலைகீழாக நாட்டி ஓட்டையுள்ள மண்பானையால் தண்ணீர் முகர்ந்து ஊற்றிக் கொண்டிருந்தார். பச்சைமாலின் செயலைக் கண்ட ராவணன் அவரைக் கேலி செய்தான். உடனே பச்சை மால் ராவணனிடம் 'உன் செயல் அறிவுள்ள செயலா? நீ வாங்கிய மூன்றரைக் கோடி வரத்திலே அரை கோடி வரம் வாங்கிய வண்டோதரி என்ற பெண் சிவனுடைய கொண்டையிலேயே இருக்க உன்னால் எப்படி மூன்றரைக்கோடி வரம் வாங்க இயலும்; அவளையும் நீ பெற்றாலன்றோ அந்த அரைக்கோடி வரம் உனக்குக் கிடைக்கும்; மேலும் இந்த லெச்சுமியால் உனக்குஎன்ன பயன்?' எனக் கூறினர்.

பச்சைமாலின் தந்திரம் உணராத ராவணன் மீண்டும் சிவனிடம் வந்து, 'எனக்கு லச்சுமியும் வேண்டாம் மூன்றரைக் கோடி வரமும் வேண்டாம்; உங்கள் கொண்டைக்குள் இருக்கும் வண்டோதரி என்ற பெண்ணே வேண்டும்' என்றான்.

சிவனும் அவன் வேண்டியபடி வரம் கொடுத்து விட்டார். ராவணன் வரத்தினைக் கெடுக்கக் கருதிய பச்சைமால், வாயுவினை அழைத்து ராவணனுக்குத் தொல்லை கொடுக்கும்படி ஏவினர். வாயு, ராவணன் வெள்ளைப்பிள்ளையாருடன் வரும் வழியில் ராவணன் வயிற்றில் புகுந்து அவன் வயிற்றினைக் கலக்கினான். ராவணன் நிலை தடுமாறினன். ராவணனுக்குக் கழிப்பிடத்திற்குச் செல்ல வேண்டிய நிலை வந்தது. வெள்ளைப்பிள்ளையாரையும் கீழே வைக்க முடியாது. இத்தருணத்தில் மாயவனார் கிழவன் வடிவெடுத்து ராவணன் அருகில் வந்தார். ராவணன் தன் வயிற்றின் நிலையினைக் கிழவனிடம்எடுத்துக் கூறினன். கழிப்பிடத்திற்குச் சென்று வருவது வரையிலும் வெள்ளைப் பிள்ளையாரை கீழே வைக்காமல் அவர் கையில் வைத்துக்கொள்ளும்படி

வேண்டினுன். கிழவனும் சம்மதித்து பிள்ளையாரைக் கையில் வாங்கிக் கொண்டு ராவணனிடம் ஒரு நிபந்தனையையும் கூறினுர்; அதாவது நீ சென்றபின்னர் நான் உன்னை மூன்றுமுறை கூப்பிடுவேன்; மூன்று முறை கூப்பிடுவதற்குள் நீ வராவிட்டால் பிள்ளையாரை நான் கீழே வைத்து விடுவேன் என்ருர். ராவணனும் ஒத்துக்கொண்டு கழிப்பிடத்திற்குச் சென்ருன்.

ராவணன் சென்று சற்று நேரத்திற்குள் கிழவன் மூன்று முறை ராவணனைக்கூப்பிட்டு விட்டுபிள்ளையாரைக்கீழே வைத்துவிட்டு மறைந்து விட்டார். பிள்ளையார் நன்கு வேர்போட்டுக் கொண்டார். பின்னர் ராவணன் திரும்பி வந்து பார்க்கும் பொழுது பிள்ளையார் தரையில் இருப்பதைக் கண்டான்; ஓடிச்சென்று எடுத்துப் பார்த்தான்; அசைக்க முடியவில்லை. ராவணன் வெறுங்கையனுக இலங்கையினை அடைந்-தான். பின்னர் பிள்ளையார் கயிலைக்கு மீண்டு வந்தார்.

ராவணன் இலங்கையில் செய்யும் கொடுமைகளைக் கண்ட நாரதர் அச்செய்திகளை ராமேசுர ராசனிடம் எடுத்துரைத்தார். ராமேசுர ராசா நாரதரிடம், 'ராவணன்திக்கு விசயங்கள் செய்துள்ளானு? செய்திருந்-தால் நாம் அவனை மதிப்போம்' என்ருர்.

நாரதர் ராமேசுர ராசா கூறியதனை ராவணனிடத்தில் கூற ராவண-னுக்குத் திக்குவிசயம் செய்யவேண்டும் என எண்ணமுண்டாயிற்று.

இது இவ்வாருக, எமதர்மராசா கல்வி பலகலைகளைக் கற்று ணர்ந்த ஒருவரை தன் மந்திரியாக்க வேண்டும் என எண்ணினுர். எனவே மாகாளியால் வளர்க்கப் பெற்ற வலங்கைச் சான்ருேர் குலத்து-தித்த மந்திர மூர்த்தி நாடாரின் மகனுகிய மகோதரநாடார் தகுதியுடைய வர் என அறிந்து அவரை மந்திரியாக்கிக் கொண்டார்.

திக்குவிசயம் செய்யக் கருதிய ராவணன் தன் படைகளை எழுப்பிக் கொண்டு முதலாவது எமதர்மராசனுடன் போருக்கு வந்தான். எமதர்ம ராசன் படைகளும் போருக்குத் தயாராகின. பின்னர் இருபடைகளும் மோதின. இரு தரப்பிலும் வெற்றி தோல்வி அறியுமாறில்லை. எனவே இரு படையினரும் கூடி சமாதானம் செய்து கொண்டனர்.

பின்னர், எமதர்மராசா ராவணனுக்கு விருந்தளித்தார். விருந்து முடிந்து ராவணன் எமதர்மப் பட்டணத்தை மந்திரி மகோதரன் துணை-யுடன் சுற்றிப் பார்த்தான். ஓரிடத்தில் ஒரு குழியில் தீ எரிந்து கொண் டிருந்தது. ராவணன் மகோதரனிடத்தில் இது எதற்கான தீக்குழி? எனக்

கேட்க, மகோதரன் இரகசியமாக, இது உனக்காக வளர்க்கும் தீக்குழி உன்வரம் முடிந்ததும் உன்னை இக்குழியில் தள்ளிவிடுவர்' என எடுத்துரைத்தான்.

செய்தியறிந்த ராவணன் உடல் நடுங்கினான். உண்மையுரைத்த மகோதரனை ராவணன் தன் மந்திரியாக ஆக்கிக் கொள்ள எண்ணினான். எனவே எமதர்ம ராசாவிடமிருந்து விடை பெறும் போது ராவணன் மகோதரனைத் தனக்குத் தந்தருள வேண்டும் என வேண்டினான். எமதர்மனும் மனதுகந்து மகோதரனை ராவணனுடன் அனுப்பி விட்டார்.

திசதரன் கலைக்கோட்டு முனிவரை அழைத்து வருவதற்கு தவம் மேற்கொள்ள, இரண்டு தேவகன்னியர் திசதரன் முன் தோன்றி தாங்கள் கலைக்கோட்டு முனிவரை அழைத்து வருவதாகக் கூறிச் சென்றனர்.

கன்னியர் இருவரும் கானகமெல்லாம் தேடி முனிவரை கண்டு கொண்டனர். கன்னியர் இருவரும் தந்திரமாக முனிவரை மயக்கி திசதரனிடம் அழைத்து வந்தனர். திசதரன் முனிவரை வரவேற்று உபசரித்துப் பின் தன் குறையினை அவரிடம் எடுத்துச் சொன்னான். முனிவர் புத்திரன் பிறப்பதற்கான வேள்வி செய்ய வேண்டும் என்று திசதரனிடம் கூறினார். திசதரனும் வேள்விக்குரிய ஏற்பாடுகளைச் செய்தான். வேள்வியில் பூதம் ஒன்று தோன்றி வந்து மூன்றுமுத்துகளை முனிவரிடம் கொடுத்தது. முனிவர் மூன்று முத்துக்களையும் ஒவ்வொன்றாக திசதரனின் மூன்று தேவியர்க்கும் கொடுத்தார்.

முத்தினைப் பெற்ற மூன்று தேவியரும் கருத்தரித்து கோசலை தேவி ராமரையும், சிமித்திரை தேவி லெச்சுமணனையும் சத்துருக்கனையும், கைகேசி தேவி பரதனையும் பெற்றெடுத்தனர்.

புத்திரர் நால்வரும் சீரும் சிறப்புமாய் வளர்ந்து வசிட்ட முனிவரிடம் பல்கலைகளைக் கற்றுத்தேர்ந்தனர்.

ராமரும் அவர் தம்பியரும் ஒருநாள் வேட்டையாடி விளையாடி வருகையில் கைகேசி தேவியின் வேலைக்காரியாகிய கூனி வழியிடையில் வந்தாள். ராமர் விளையாட்டாக கூனிமீது அம்பினைத்தொடுத்தார். அம்பு பட்ட கூனிகோபமுற்று உடனே ராமரை நோக்கி, என்னை நீ இப்படி செய்ததினால் என் தலைவி கைகேசியிடம் கூறி உன்னைப்பதினான்கு ஆண்டுகள் நான் காட்டுக்கு விரட்டவில்லை யென்றால் என்பெயர் கூனியில்லை எனச் சபதமிட்டாள். பின்னர் ராமரும் தம்பியரும் அயோத்தி அரண்மனை வந்தடைந்தனர்.

இது இவ்வாருக, சிவன் ராவணனைத் திருமாலின் வாளுக்கிரையாக்க எண்ணி மாறுவேடமிட்டு ராவணனிடம் வந்து பிச்சை வேண்டி நின்ருர். ராவணன் வந்தவரைச் சற்றும் கவனிக்கவில்லை. எனவே கோபமுற்ற சிவன், 'ராவணு! சீதை இங்கு வந்து பிறக்க வேண்டும். உன் இலங்கை அழிய வேண்டும். உன்தலை பத்தும் ராமபாணத்தால் அற்று விழவேண்டும்' எனச் சாபமிட்டு ராவணனின் வாயில் படியில் தன் கையிலுள்ள வெள்ளிப் பிரம்பால் ஓங்கி அடித்தார். அடித்த உடன் கல்படியில் சீதை வந்து பிறந்தாள். உடனே சிவன் மறைந்து விட்டார்.

படியில் பிறந்த குழந்தையை ராவணன் கண்டு கோபங்கொண்டு ஏவலர்களிடம் குழந்தை சீதையைக் காட்டில் கொண்டு போய்க் கொன்று புதைக்கச் சொன்ஞன். ஏவலர்கள் சீதையை ஒரு பெட்டியில் அடைத்துக் கொண்டுபோய்ப் புதைத்து விட்டனர்.

சீதை காட்டில் பெட்டியில் வளர்ந்து வந்தாள். மிதிலாபுரிப் பட்டணம் அரசாளும் தினகரராசன் அப்பொழுது குழந்தை இல்லாமையால் மனம் வருந்தி இருந்தான். ஒருநாள் காட்டில் உழவர்கள் காட்டினை அழித்து உழும்பொழுது பெட்டி ஒன்று கிடைத்தது. உழவர்கள் அப்பெட்டியினைத் தினகரராசனிடம் கொண்டுவந்து கொடுத்தனர். தினகரராசன் பெட்டியினைத் திறந்து பார்த்தான்; பெட்டியில் சீதையாகிய குழந்தையும் ஒரு வில்லும் இருப்பதைக் கண்டு மகிழ்ந்தான். பின் தினகரராசன் அன்புடன் அக்குழந்தையினை வளர்த்து வந்தான். சீதை வளரவளர சீதையுடன் இருந்த வில்லும் வளர்ந்து வந்தது.

இது இவ்வாருக, விசுவாமித்திர முனிவர் கயிலையிலிருந்து புறப்பட்டு வேள்வி ஒன்று செய்ய இடம் தேடி வந்தார். அவர் பல இடங்களையும் கடந்துவந்து தாடகை வாழும் மலையில் வேள்விக்குரிய இடத்தினைத் தேர்ந்து வேள்வி செய்ய ஆரம்பித்தார். வேள்வி வளர்ந்து வந்தது. முனிவர் வேள்வி செய்வதை அறிந்த ராவணன் அச்செய்தியினை அவன் தங்கை தாடகையிடம் அறிவித்தான். செய்தியறிந்து தாடகை சீற்றமுற்று முனிவரின் வேள்வியினை அழிக்கத் திட்டமிட்டாள். எனவே வேள்வி வளரும் இடத்திற்கு வந்தாள்; முனிவரை நோக்கிக் கடுமொழிகளைக் கூறிஞள். முனிவர் அஞ்சி நடுங்கி ஓடி ஓரிடத்தில் மறைந்து கொண்டார். தாடகை அப்பொழுது சிறுநீர் பெய்து வேள்வியினை அழித்து விட்டாள்.

விசுவாமித்திரர் வருத்தத்துடன் திரும்பி வந்து கயிலேயில் சிவனிடம் நடந்த செய்தியினை எடுத்துக்கூறினர். மேலும் விசுவாமித்திரர் வேள்வி வளர்ப்பதற்குத் துணேயாக மாயவரை அழைத்துச் செல்ல எண்ணினர். ஆனல் முனிவருக்கு மாயவர் இருக்குமிடம் தெரியவில்லே. அப்பொழுது வசிட்ட முனிவர், விசுவாமித்திரரிடம் மாயவர் திசதரன் மகனுப் பிறந்து. அயோத்தியில் இருப்பதனேஎடுத்துக் கூறினர்.

செய்தியறிந்த விசுவாமித்திரர் அயோத்திக்கு வந்து திசதரனிடம் ராமரைத் தனக்குத்துணேயாக அனுப்புமாறு வேண்டினர். திசதரன் ராமரை விசுவாமித்திரருடன் அனுப்புவதற்குத் தயங்கினர் அப்பொழுது ராமனின் பெருமைகளேத் திசதரனிடம் விசுவாமித்திரர் எடுத்துக் கூறத் தொடங்கினர்.

திசதரா ! ராமரை உன் மகன் என எண்ணுதே; உலகளந்த பெருமாளும் அவரே; கண்ணனுகப் பிறந்து பல செயல்கள் புரிந்தவரும் அவரே. மேலும் நான் அவரைப் பற்றிக் கூறுகிறேன் கேள்.

சிவன்கோயிலில் ஆரியப்பட்டன் என்ற பூசாரி பூசையினே முடித்து விளக்கினே ஏற்றி வைத்து கதவைப் பூட்டிச்சென்றுவிட்டான். அப்பொழுது ஒரு வீட்டெலி வந்து ஏற்றி வைத்த விளக்கு அணேயாத படி தன் முகத்தினுல் விளக்குத்திரியினேத் தூண்டிக் கொண்டிருந்தது. எலியின் செயலேக் கண்ட சிவன் வியந்து, 'நீ இப்பிறப்பில் மா எலியாக விளங்கியதால் அடுத்த பிறவியில் மாவேலி மன்னனுகப் பிறந்து உலகினே அரசாள்வாய்' என வரமளித்தார்.

அடுத்த பிறவியில் மாவேலி மனனன் பிறந்து உலகினே ஆண்டு வரும் பொழுது அல்லும் பகலும் சிவனே நினேத்தானேயன்றி திருமாலேச் சற்றும் எண்ணவில்லே. எனவே திருமால் கோபமுற்றுப் பார்ப்பானேப் போல் வடிவெடுத்து மாவேலியிடம் வந்து தனக்கு மூன்றடி மண் தர வேண்டுமெனக் கேட்டார். மாவேலியும் உடனே மூன்றடி மண் தானே எடுத்துக் கொள்ளும் என்று கூறினுன். பார்ப்பான் மாவேலியிடம், 'வாயினுல் சொன்னுல் போதாது. நீர் வார்த்துத் தர வேண்டும்' என வேண்டினர்.

மறுநாள் மாவேலி, பார்ப்பானுக்கு நீர் வார்த்துக் கொடுக்கத் தயாரானுன். செய்தியறிந்த மாவேலியின் குலகுருவான சுக்கிறீபன் மாவேலியிடம், 'மன்னு வந்திருப்பவர் சாதாரண பார்ப்பான் இல்லே;

திருமாலே மாறு வேடத்துடன் வந்திருக்கிறார்; மூன்றடி மண் கொடுக்காதே நீ; அவர் உன்னை அழித்து விடுவார்' என்று கூறினார்.

குலகுருவின் கூற்றினை மாவேலி ஏற்றுக் கொள்ளவில்லை. மாவேலி காவேரிக் கரையிலமர்ந்து பார்ப்பானுக்குக் கெண்டியில் நீரைத், தாரை வார்த்துக் கொடுத்தான். அப்பொழுது சுக்கிரீபன் ஒரு வண்டு வடிவெடுத்துக் கெண்டியிலிருந்து நீர் ஒழுகும் வழியினை அடைத்துக் கொண்டார். கெண்டியிலிருந்து நீர் ஒழுகாமல் இருப்பதை உணர்ந்த பார்ப்பான், தன்னுடைய ஞானக்கண்ணால் அது சுக்கிரீபன் வேலை என அறிந்து கொண்டார். உடனே பார்ப்பான் ஒரு தெர்ப்பப் புல்லினை எடுத்துக் கெண்டித் துவாரத்தில் குத்திவிட்டார். புல்பட்டு சுக்கிரீபன் கண் குருடாகி விட்டது.

பின்னர் பார்ப்பானாக வந்த திருமால் மூன்றடி மண் அளக்கத் தொடங்கினார். திருமால் மாவேலி ராசனின் நாடு முழுவதையும் ஓரடியால் அளந்து விட்டார். பின்னர் திருமால் மாவேலி ராசனிடம் வந்து' 'மீதம் ஈரடிக்கு மண் எங்கே?' எனக் கேட்டார்.

உண்மையுணர்ந்த மாவேலி நடுநடுங்கி, 'ஈரடி மண் தரும் வரையில் என் சிரசில் உம் திருவடியை வைத்துக்கொள்ளும்' எனக் கூறினான்.

திருமால் உடனே தன் திருவடியைத் தூக்கி மாவேலியின் சிரசில் வைத்து, 'இன்னும் ஓரடிக்கு இடம் எங்கே? எனக் கேட்டார்.

மாவேலி அவரிடம், 'மூன்றாவது அடி மண் தரும் வரையில் என்னைச் சிறைச் சாலையில் வைத்துக் கொள்ளும்' எனக் கூறினான்.

திருமால், மாவேலியைச் சிறையில் வைக்கச் செல்லும் பொழுது மாவேலி திருமாலிடம், 'கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரத்தன்றுநான் என் குடிமக்களைப் பார்வையிட்டுவருவதற்கு வரமருள வேண்டும்' எனக் கேட்டான். திருமாலும் அந்தப்படி வரமளித்தார்.

மேற்கூறிய செயலினைப் புரிந்த திருமாலல்லவா உன் மகனாக வந்து பிறந்துள்ளார். நீ ஏன் ராமரை என்னுடன் அனுப்பத் தயங்குகிறாய் என்று விசுவாமித்திரர் கூறினார்.

மீண்டும் திசதரனின் தயக்கம் மாறவில்லை. அப்போது விசுவாமித்திரர், 'திசதரா! ராமர் பெருமையினை இன்னும் கூறுகிறேன் கேள்' என்றார்.

இரனியன் என்பவன், தன் பாலனுக்கு ஏழுவயதானதும், வாத்தியாரை வரவழைத்து எழுத்தோதிக் கொடுக்கும் படிச்செய்தான்.

வாத்தியாரும் பாலனை அழைத்து இருத்தி எழுத்தோதத் தொடங்கி 'இரணிய நம' என்று சொல்லச் சொன்னார். ஆனால் பாலன் வாத்தியாரிடம் 'அரிராம நம' எனச் சொல்லித் தாருங்கள் என்றான். வாத்தியார் பாலன் சொன்னதை இரணியனிடம் கூறினார். செய்தியறிந்த இரணியன் கோபமுற்றுப்பாலனை அக்கினிக்குள் போட்டான். அக்கினி பாலனை எதுவும் செய்யவில்லை. மீண்டும் வாத்தியார் பாலனிடம், 'இரணிய நம' எனக் கூறச் சொன்னார். இப்பொழுதும் பாலன், 'அரிராம நம' என்று சொன்னான். உடனே இரணியன், பாலனை மத யானையின் காலின் கீழ் போடச் சொல்லி ஏவலரிடம் ஆணையிட்டான். ஏவலரும் அதன்படி செய்தனர். மதயானை பாலனை எதுவும் செய்ய வில்லை. மாறாக, யானை பாலனைத் தூக்கிச் சுமந்து கொண்டு, தெரு வீதியில் உலா வந்தது. பின்னரும் வாத்தியார் பாலனை அழைத்து 'இரணிய நம' என்று சொல்லச் சொன்னார். அப்பொழுதும் பாலன், 'அரிராம நம' என்றே கூறினான். கடுங்கோபமுற்ற இரணியன், பாலனைக் கல்லில் கட்டி கடலுள் போடச் செய்தான். பாலனுடன் கட்டப்பட்ட கல்லே தெப்பமாக மிதந்து அவனைக் கரை சேர்த்தது.

பின்னர் இரணியன் பாலனிடம், 'நீ சொல்லும் அரி எங்குள்ளார்' எனக் கேட்டான். பாலன் உடனே, 'அரிராமர் தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார்' எனச் சொன்னான். சீற்றமுற்ற இரணியன். தன் கைவாளால் பக்கத்தில் நின்ற தூணை ஓங்கி வெட்டி இரு கூறாக்கினான். அரிராமர் அத்தூணிலிருந்து நரசிம்ம வடிவில் வெளியே வந்தார். இரணியன் பெற்றிருந்த வரங்களை நரசிம்மர் மனதில் அறிந்து கொண்டு, வரங்கள் அவனைக் காக்க முடியாதபடி, இரணியனை அரண்மனை வெளிவாசல் நடையில் கிடத்தித் தன் கை நகத்தாலேயே கிழித்துக் கொன்றார்.

இரணியனைக் கொன்ற ராமருக்கு இத்தாடகை எம்மாத்திரம். எனவே திசதரா! 'எந்தக் கலக்கமும் இல்லாமல் ராமரை என்னுடன் அனுப்பி வைப்பாயாக' என விசுவாமித்திரர் கூறினார்.

திசதரனும் ஒருவாறு மனந்தெளிந்து விசுவாமித்திரருடன் ராமரை அனுப்பஇசைந்தான். ராமருடன் லெச்சுமணனும் புறப்பட்டான். விசுவாமித்திரரும் ராமலெச்சுமணரைக் கூட்டிக் கொண்டு தாடகைமலையை வந்தடைந்தார்.

விசுவாமித்திரர் மீண்டும் வேள்வி வளர்த்துத் தவத்தில் அமர்ந்-தார். வேள்வி வளர்வதைக் கண்ட தாடகை அங்கு வந்தாள்; கடு-மொழிகளைக் கூறினுள். ராமலெச்சுமணருக்கும் தாடகைக்கும் போர் நிகழ்ந்தது. கடும்போரின் பின்னர் ராமபாணம் தாடகை மீது பட்டுத் தாடகை மடிந்தாள். தாடகை உயிர் பிரியும் பொழுது ராமரிடம் தன்-பிழை பொறுத்தருள வேண்டினுள். ராமரும் பொறுத்தருளி, 'தாடகை வெள்ளியாக நிலைபெறுவாய்' என வாழ்த்தினுர்.

விசுவாமித்திரர் ராமரின் வீரத்தினைப் பாராட்டி, பல சிறப்புக்கள் செய்துவேள்வியில் தோன்றிய பாசுபதக்கணையையும் அவரிடம் கொடுத்-தார். ராமர், முனிவரிடம் 'பாசுபதக்கணை எதற்குத் தந்தீர்' எனக் கேட்டார். விசுவாமித்திரர், 'ராவணன் மகனுகிய இந்திரசெயித்து பெருந்தவம் செய்து வருகிறுன். அவன் உன்னுடன் போருக்கு வரும் பொழுதுஇந்தக்கணையால் மடிவான்' என்று கூறினுர்.

ராமர் அப்பொழுது முனிவரிடம், இனிநாம் அயோத்தி போகலாம் அல்லவா?' எனக் கேட்டார். அதற்கு முனிவர் நாம் அழகுமிக்க மிதி-லாபுரிப் பட்டணம் பார்த்து விட்டுச் செல்லலாம் எனக்கூறினுர்.

விசுவாமித்திரரும் ராமலெச்சுமணரும் புறப்பட்டு கானகத்தில் வந்து கொண்டிருக்கும் பொழுது ராமர் காலபட்டதும் கல்லாகக் கிடந்த அகலிகை என்ற பெண் எழுந்திருந்தாள். அப்பொழுது ராமர் முனிவரிடம் 'இது என்ன செயல்' எனக் கேட்டார். உடனே விசுவா-மித்திரர், ராம லெச்சுமணரிடம், 'முன்பொரு சமயம் தெய்வேந்திரனும் கவுதம முனியும் பாற் கடலைக் கடைந்தார்கள். தெய்வேந்திரன் கடைந்த பொழுது கழுதை வந்து பிறந்தது. கவுதம முனிவர் கடைந்த பொழுது அகலியர் என்ற பெண் வந்து தோன்றினுள். தெய்வேந்திரன் தான் கடைந்த போது தோன்றிய கழுதையை வண்ணுனுக் காவதாக என விரட்டி விட்டு முனிவர் கடையும் போது தோன்றிய அகலியரைத் தனக்குச் சொந்தம் எனக்கூறி முனிவருடன் வாதிட்டான். முனிவர் கொடுக்க மறுத்தார். பின்னர் வழக்கு, தேவர்சபைக்குக் கொண்டு வரப்பட்டது. தேவர்கள் ஒருங்கு கூடி ஒரு முடிவு எடுத்தனர். அதாவது 'உங்கள் இருவருள் எவர் ஒருவர் ஆழமான நீருள் ஆயிரம் ஆண்டுகள் மூழ்கியிருக்கிறுர்களோ அவருக்கே அகலியர் சொந்தம்' எனக் கூறிவிட்டனர்.

முனிவரும் தெய்வேந்திரனும் நீருள் மூழ்கினர். இந்திரன் ஐநூறு ஆண்டு கள் நீருள் இருந்துவிட்டு மேலும் முடியாமல் வெளியில் வந்து விட்டான். முனிவரோ ஆயிரம் ஆண்டுகள் முடிந்து ஆயிரத்துஒன்றும் ஆண்டில்

வெளியே வந்தார். இதனுல் முறைப்படி அகலியர் முனிவருக்குச் சொந்தமாகி விட்டாள். அப்பொழுது இந்திரன் முனிவரிடம் நானும் ஐநூறு ஆண்டுகள் மூழ்கி இருந்ததனுல் அகலியர் எனக்கும் பாதிச்சொந்தம் எனக் கூறினுன். முனிவர் மறுத்துவிட்டார்.

பின்னர் கவுதம முனிவரும் அகலியரும் மணம்முடித்து வனத்தில் வாழ்ந்து வந்தனர். ஒருநாள் இந்திரன் அகலியரைக் கெடுக்கத் திட்டமிட்டு நடுஇரவில் முனிவரின் வீட்டின் பக்கத்தில் வந்துநின்று சேவலாகக் கூவினுன். சேவல் கூவுவதனைக் கேட்ட முனிவர் நேரம் விடிந்து விட்டது எனக்கருதி பூசை செய்யப் புறப்படலானுர். அகலியரிடம் முனிவர் 'தான் வரும் வரை கதவைப் பூட்டியவாறு இரு' எனக்கூறி வெளியில் சென்ருர்.

முனிவர் சென்றதும் இந்திரன் முனிவரின் வடிவெடுத்து 'அகலியப் பெண்ணே கதவைத்திற' எனக் கூறிக் கதவைத் தட்டினுன். அகலியரும் முனிவர் என மயங்கி கதவைத் திறந்து விட்டாள். இந்திரன் உள்புகுந்து அகலியரை இசைய வைத்து அவளுடன் கூடினுன். இதற்குள் பூசை செய்யச் சென்ற முனிவர் நேரம் விடியவில்லை என்பதை உணர்ந்து, நடந்தது சூழ்ச்சி என்பதையும் அறிந்து கொண்டு விரைந்து வீடு வந்தார். முனிவர் 'அகலியரை என் பெண்ணே கதவைத்திற' என்று கூறிக் கதவைத் தட்டினுர். முனிவர் குரல் கேட்டு அகலியர் நடுநடுங்கி வந்து கதவைத் திறந்தாள்.

முனிவர் வாசலில் இருந்துகொண்டு அகலியரிடம் 'நான் வெளியில் சென்ற பின்னர் இங்கு யாரேனும் வந்தார்களா?' எனக்கேட்டார்.

அகலியர், 'யாரும் வரவில்லை' எனக்கூறிவிட்டாள்.

முனிவர் அவள் மீது சந்தேகங்கொண்டு விளக்கினை ஏற்றும்படிக் கூறினுர். அவளும் விளக்கேற்ற இந்திரன் பூனைவடிவெடுத்து வெளியில் பாய்ந்தோடினுன். நடையில் இருந்த முனிவர் பூனையை எட்டிப் பிடித்து நன்ருக அடித்தார். அடி தாங்க முடியாமல் இந்திரன் அலறினுன், அப்பொழுது இந்திரன் முனிவரிடம், 'நான் பாதி ஆண்டுகள் நீரில் மூழ்கி இருந்ததால் அகலியரை அனுபவிக்க எனக்குப் பாதி உரிமை உண்டல்லவா?' என்ருன்.

முனிவர் உடனே, 'நீ ஒரு யோனிக்கு ஆசைப்பட்டு வந்ததனுல் உன் உடலெல்லாம் யோனியாகட்டும்' எனச் சபித்து விட்டார்.

இந்திரன் உடலெல்லாம் யோனியாயிற்று. இந்திரன் உடனே சாபவிமோசனம் வேண்டி, முனிவரின் அடி தொழுதான். முனிவர் இரங்கி 'உன் உடலிலுள்ள யோனிகள் உன் கண்ணுக்கு

யோனிகளாகவும், மற்றவர் கண்ணுக்கு அவை கண்களாகவும் தெரியும்'எனச் சாப விமோசனமளித்தார்.

பின்னர் முனிவர் அகலியரை நோக்கி, 'கல்லாகக் கடவை' எனச் சாபமிட்டார். அகலியர் உடனே முனிவரிடம் 'இச்சாபம் எனக்கு எப்பொழுது தீரும்' எனக் கேட்டாள்.

முனிவர் அவளிடம், 'ராமரின் பாதம் பட்டதும் நீ பெண் உரு அடைவாய்' எனக் கூறினார்.

எனவே அந்த அகலியர் தான் இப்பொழுது உன்பாதம் பட்டுப் பெண்ணாக மாறியுள்ளாள் என்றார்.

விசுவாமித்திரரும் ராமலெச்சுமணரும், பெண்ணாக மாறிய அகலியரை அழைத்துவந்து கவுதமமுனிவரிடம் ஒப்படைத்து விட்டு அவ்வனத்தை விட்டு அடுத்த வனத்திற்குச் சென்றனர்.

கந்தர்வராசன் மக்கள் நூறுபெண்கள் நீராடிக் கொண்டிருந்தனர். அவ்வழியாக வந்த கார்த்தவீரியன் என்ற அருச்சுனன் அவர்கள் மீது இச்சை கொண்டு அவர்களைக் கூடஅழைத்தான். பெண்கள் மறுத்துவிட்டனர். எனவே கார்த்தவீரியன் அவர்களைக்கூன், குருடு, நொண்டி, சப்பாணியாகப் போவீர்கள் எனச் சாபமிட்டான். பெண்கள் அவனிடம் இந்தச்சாபம் எங்களுக்கு எப்பொழுது தீரும் எனக் கேட்டனர். கார்த்தவீரியன் அவர்களிடம், ராமர் தாடகையை அழித்து அகலியரைப் பெண்ணாக்கி இவ்வழியில் வரும் பொழுது, அவர் பார்வைபட்டதும் நீங்கள் பழைய உருவினைப் பெறுவீர்' என்றான். கார்த்தவீரியனால் சாபம் பெற்ற பெண்களை ராமர் பார்த்தார், அவர்கள் எல்லோரும் நல்லுருவம் அடைந்தனர்.

பின்னர் விசுவாமித்திரரும் ராமலெச்சுமணரும் வழி நடந்து இடை இடையே இளைப்பாறி மிதிலை நகர் வந்தடைந்தனர். மிதிலை நகரைத் தினகரராசன் ஆண்டு வந்தான். தினகரராசனின்'வளர்ப்புமகள் சீதை, தோழியருடன் பந்தாடிக் கொண்டிருந்தாள். சீதை அடித்த பந்தினை அவ்வழியே வந்த ராமர் பிடித்துக் கொண்டார். சீதை நான் அடித்த பந்தினை பிடித்தவரே என் மணவாளராவார்' எனக்கூறி ராமர் மீது மயக்கம் கொண்டு நின்றாள். இந்தச் செய்தியினைத் தோழியர் தினகரராசனுக்கு அறிவித்தனர். தினகரராசன் மனமகிழ்ந்து சீதையுடன் இருந்த கோதண்ட வில்லைவளைத்தவர்க்குச் சீதையை மணம் செய்து கொடுப்பதாகக் கூறி பலதேச ராசாக்களுக்கு ஓலை அனுப்பினான். பலதேசத்து ராசாக்களும் வில்வளைக்க வந்தனர். ராமரும் முனிவர் லெச்சுமணனுடன்

மிதிலை நகர் அரண்மனைக்கு வந்தார். வில் வளைப்பு நிகழ்ச்சி தொடங்கியது. பலராலும் சேர்ந்து தூக்க முடியாத வில்லினை லெச்சுமணன் கையால் எடுத்து ராமரிடம் கொடுத்தான். ராமர் வில்லினைத் தூக்கி நாண் ஏற்றும் பொழுது வில் இரு துண்டுகளாக முறிந்து விட்டது. முறிந்த வில்லில் ஒரு பாதியை ராமர் தன் கதையைப் பாடிப்படிப்பவர்க்கு அளித்தார்.

உடனே தினகரராசன் தன்மகளை மணம் சூடும்படி ராமரிடம் வேண்டினன். ராமர் தினகரனிடம் திருமணத்திற்குத் தன்பெற்றோர்களை அழைத்து வரும்படி வேண்ட தினகரன் அயோத்திக்குச் செய்தியினை எழுதி ஓலை மூலம் அனுப்பினான்.

செய்தியறிந்த திசதரனும் தேவிமாரும், பரிவாரங்களும் ராமரின் மணவிழாவுக்குப் புறப்பட்டு மிதிலை வந்தடைந்தனர். தினகரன் ஒரு சோதிடனை வரவழைத்து முகூர்த்த நாள் பார்த்தறிந்தான். சோதிடன் முகூர்த்த நாளினையும், பின்னர் ராமர் வாழ்வில் நடைபெறவிருக்கும் செய்திகளையும் எடுத்துக் கூறினான்.

ஒரு நல்லநாளில் ராமர் சீதை திருமணம் முடிந்தது. தினகரன் தன் மகளுக்குப் பல்வகைச் சீதனங்களை வழங்கினான். பின்னர் ராமர் சீதையை அழைத்துக் கொண்டு தன் சுற்றத்தாருடன் அ யோ த் தி நோக்கி வரலாயினர். வழியில் பரசூரன் என்பவன் அவர்களை வழி மறித்தான். பரசூரன் என்பவனின் தந்தையார் சமதக்கினி முனிவர். தாயார் ரேணுகை. பரசூரனின் தாயாகிய ரேணுகை, ஒருநாள் தண்ணீர் எடுத்துவர நீர்நிலைக்கு வந்தாள். அப்பொழுது வானில் பறந்து 'சென்ற கார்த்தவீரியனின் நிழல் நீரில் தெரியவே ரேணுகை கற்புநிலை குலைய அவள் அணிந்திருந்த ஆடையெல்லாம் நீரில் நனைந்தது. பின்னர் ரேணுகை நீரை முகர்ந்துவிட்டு வீடுவந்து சேர்ந்தாள். அப்போது ரேணுகையிடம் சமதக்கினி முனிவர் 'ஆடை நனைவதற்கான காரணம் என்ன?' எனக் கேட்டார். ரேணுகை முனிவரிடம் கார்த்தவீரியன் வந்த செய்தியினைக் கூறினாள். முனிவர் அவளை நோக்கி, 'ரேணுகா நீ கற்பழிந்து விட்டாய், என் கண்முன் நில்லாதே' என்று கூறிவிட்டுத் தன் மகன் பரசூரனை அழைத்து, 'இவளைக்காட்டில் கொண்டு போய் வெட்டி விடு' என்றார்.

பரசூரனும் அந்தப்படி அவளை வெட்டும் முன் ரேணுகை தன் கையாலே இருபத்தொரு குத்துக் குத்தி இறந்து விட்டாள். தாயார்

இருபத்தொரு குத்துக் குத்தி இறந்ததால் அந்த இருபத்தொரு குத்தும் இருபத்தொரு பலியாகத் தாய்க்குத் தருவதாகப் பரசூரன் சபதமிட்டான். எனவே பரசூரன் அன்று முதல் தன் கண்ணில் கண்ட அரசர்களைக் கொல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தான். இச் சமயத்தில் தான் ராமலெச்சுமணர் சுற்றத்தினரையும் அவன் பலிகொள்வதற்காக வழி மறித்தான். வழிமறித்த பரசூரன் ராமருடன் வாதமிட்டுப் பின் ராமரிடம், 'நான் உன்னைக்கொல்லாமல் விட வேண்டுமென்றால் பலர் சேர்ந்து அசைக்க முடியாத இந்தவில்லை நீ வளைக்க வேண்டும்' என்றான்.

ராமர் ஒத்துக் கொண்டு வில்லினைத் தூக்கி வளைக்கவே அப்பொழுது ஏற்பட்ட ஓசையில் பரசூரன் பயந்து நடுங்கி காட்டுக்குள் ஓட முயன்றான்.

ஓட முயன்ற பரசூரனை லெச்சுமணன் தடுக்கவே, அவன் ராமர் பாதத்தில் வீழ்ந்து வணங்கினான். ராமர் பரசூரனை அழைத்து அவனுக்குப் பரசுராமன் எனப்பெயர் மாற்றிகேரள தேசத்தில் சென்று நீ ஆண்டு வருவாய் எனக்கூறி வாழ்த்தி அனுப்பினார்.

ராமரும் சுற்றமும் காடு மலையுங்கடந்து அயோத்தி வந்தடைந்தனர். ராமர் அயோத்தியில் வீற்றிருக்கும் நாளில் திசதரன் ராமருக்கு மகுடமுடி சூட்ட எண்ணி, பலதேசத்து ராசாக்களுக்கு ஓலை அனுப்பினான். அயோத்திநகர் அலங்கரிக்கப்பட்டது.

ராமர் முடிசூடப் போகும் செய்தியினைக் கூனி அறிந்தாள். ராமர் மீதுள்ள கோபத்தினை மனதிலெண்ணி கூனி விரைந்து வந்து கைகேசியிடம் செய்தியினைக் கூறினாள். கைகேசி கூனியிடம், 'ராமருக்கு முடிசூட்டுவது முறைதானே' என்றாள், சூழ்ச்சிக்காரி கூனி பல செய்திகளை எடுத்துக் கூறி கைகேசியின் மனதினை மாற்றினாள். எனவே கைகேசி உடல் நலமில்லாதவள் போல் பாவனை செய்தாள். திசதரன் செய்தியறிந்து கைகேசியைக் காண்பதற்கு வந்தான்,

கைகேசி திசதரனிடம்கோபமுடன், ராமர் பதினான்கு ஆண்டுகள் வனம் ஏக வேண்டும் என்றும் தன் மகன் பரதன் நாடாள வேண்டும் என்றும் இருவரங்களை வேண்டினாள்.

திசதரன் கைகேசி மொழி கேட்டுத் திடுக்குற்றான்; பல நல்மொழிகளைக் கைகேசியிடம் எடுத்துக் கூறினான். கைகேசி சிறிதும் மனம் மாறவில்லை.

திசதரனுக்கும் கைகேசிக்கும் நடந்த விவாதத்தினை ராமர் அறிந்து அவராகவே கானகம் செல்ல முடிவெடுத்தார். ராமர் தன் தாயார் கோசலையிடம் வந்து செய்தி கூறி விடை பெற்றார்.

ராமர் கானகம் செல்லும் செய்தியினை அறிந்த சீதையும் லெச்சுமணனும் அவருடன் கானகம் செல்லப் புறப்பட்டனர். மூவருமாக காடு பல வனங்கடந்து கங்கைக் கரையினை வந்தடைந்தனர். குக வேடன் அவர்களை வரவேற்று கங்கையாற்றினை ஓடத்தின் மூலம் கடத்தி விட்டான்.

ராமர் கானகம் சென்ற செய்தியினை அறிந்த திசதரன் மனம் கலங்கினான். ஐந்து கண் முனிவனின் சாபப்படி திசதரன் மகன் பிரிந்த துயரம் தாங்காமல் இறந்து விட்டான். தந்தைஇறந்ததை அறிந்த பரதன் புலம்பினான். இச்செய்தியினை ராமருக்குத் தெரிவிக்க பரதன் கானகத்திற்கு வந்தான், குகன் உதவியால் கங்கையினைக் கடந்து பரதன் மீண்டும் வழிநடந்து ராமரைக் கண்டு செய்தியினைக் கூறினான்.

ராமர் பரதனைத் தேற்றி தந்தைக்கு நல்லடக்கம் செய்யும் படியும் தான் வருவது வரையிலும் நாட்டை ஆளும் படியும் கூறிப் பரதனை அனுப்பினார்.

பரதன் ராமரிடம் அவருடைய பாதரட்சைகளைக் கேட்டு வாங்கினான். மீண்டும் பரதன் ராமரிடம், அரியணையில் இந்த பாதரட்சைகளை வைத்தே நான் ஆண்டு வருவேன். பதினான்கு ஆண்டு முடிந்த மறுநாள் நீங்கள் அயோத்திக்கு வராதிருந்தால் நான் உயிரை மாய்த்து விடுவேன் எனக் கூறிப் புறப்பட்டு அயோத்தி வந்தடைந்தான்.

கானகத்தில் ராமர், தங்கியிருப்பதற்கு லெச்சுமணனிடம் பர்ணக சாலை அமைக்கச் சொன்னார். லெச்சுமணனும் பர்ணக சாலை அமைத்து கொடுத்தான். பின்னர் லெச்சுமணன் ராமரும் சீதையும் உண்பதற்கு பல் வகைக் கனிகளைப் பறித்து வந்து கொடுத்தான். வாழ்க்கை ஒரு வாறு ஓடிக் கொண்டிருந்தது

இலங்கையில், ராவணனின் தங்கை சூர்ப்பனகையின் கணவன் விக்கிறசிங்கன் என்பவன் சூர்ப்பனகையை அழைத்து ராவணன் வீட்டில் சென்று கறி வாங்கி வரும்படிக் கூறினான். சூர்ப்பனகை ராவணன் வீட்டுக்கு வந்து ராவணன் மனைவி வண்டோதரியிடம் கறி தரும்படி வேண்டினாள். வண்டோதரியும் சூர்ப்பனகைக்குக் கறி கொடுத்து அனுப்பினாள்.

சூர்ப்பனகை இவ்வாறு அடிக்கடி வண்டோதரியிடம் வந்து கறி கேட்டாள். வண்டோதரி கோபமுற்று சூர்ப்பனகையிடம் 'உன் கணவனை வேட்டைக்குப் போகச் சொல்லி கறி கொண்டு வரச் சொல்' எனக் கூறி கறி கொடுக்க மறுத்து விட்டாள். சூர்ப்பனகை தனக்கு ஏற்பட்ட அவமானத்தைக் கணவனிடம் வந்து கூறினாள்.

சூர்ப்பனகையின் கணவன் செய்தியறிந்து சினமுற்றுக் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். காட்டில் அவன் ஒரு மலையில் ஒரு காலும் மறுமலையில் ஒருகாலும் வைத்து வாயைப் பிளந்தவாறு தலைகீழாக நின்றான். அப்பொழுது ராவணன் தன் பரிவாரத்துடன் வேட்டையாடி அவ்வழியில் வரும் பொழுது விக்கிறசிங்கன் வாயினுள் செல்லவே அவன் வாயினை இறுக மூடிக் கொண்டான். பின்னர் விக்கிறசிங்கன் வாயினால் ஊதவே ராவணனும் பரிவாரமும் வெளியில் வந்து விழுந்தனர். ராவணன் விக்கிறசிங்கன் செயலை உணர்ந்து கொண்டு வீடு வந்து சேர்ந்தான். விக்கிறசிங்கனும் அவன் வீடு சென்றடைந்தான்.

மீண்டும் விக்கிறசிங்கன் சூர்ப்பனகையிடம் ராவணன் வீட்டில் சென்று கறிவாங்கி வரும் படிக் கூறினான். சூர்ப்பனகை ராவணனிடம் வந்து கறி கேட்டாள். ராவணன் சூர்ப்பனகையிடம் விக்கிறசிங்கன் அவனைத் துன்பப்படுத்தியதனை எடுத்துக் கூறி 'அவன் தலையை நீ அறுத்துக் கொண்டு வந்தால் என் நாட்டினை உன் மகன் குலைவாளரக்கனுக்கு முடிசூட்டி வைப்பேன்'. எனக் கூறினான். சூர்ப்பனகையும் மனமயங்கி கணவன் தலையறுத்து வருவதாகக் கூறி வந்தாள்.

சூர்ப்பனகை தன் கணவனிடம் தான் விரதம் இருக்கப் போவதாகக் கூறினாள். கணவனும் ஒத்துக் கொண்டான். விரதம் முடிந்த மறுநாள் சூர்ப்பனகை தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு விக்கிறசிங்கன் அருகில் வந்து வஞ்சகமாக அன்பு மொழி பேசி அவன் உயிர் நிலை எது என்பதை அறிந்து கொண்டு, விக்கிறசிங்கனை மயக்கி அவன் கழுத்தை அறுத்துக் கொன்று விட்டாள்.

சூர்ப்பனகை அறுபட்ட கணவனின் தலையோடு ராவணனிடம் வந்து நின்றாள். ராவணன் அவளைக் 'கணவனைக் கொன்றவளே என் முகத்தில் விழிக்காதே ஓடிவிடு' என விரட்டி விட்டான்.

அண்ணன் சூழ்ச்சி செய்து விட்டான் என உணர்ந்து சூர்ப்பனகை தன் செயலுக்கு வருந்தி தன் மகன் குலேவாளரக்கனே அழைத்து, 'நீ தவமிருந்து சிவனிடம் வரம் வாங்கி ராவணன் தலையறுக்க வேண்டும்' எனக் கூறினுள்.

குலேவாளரக்கனும் அதன்படி கடுந்தவம் புரிந்தான். சிவன் அவனுக்கு இரங்கி ஒரு மந்திர வாளினே அனுப்பினுர். மந்திரவாள் குலேவாளரக்கனே நோக்கி வரும் பொழுது லெச்சுமணன் குறிக்கிட்டு வாளினேப் பிடிக்கமுற்பட்டான். எனவே வாள் சிவனிடமே திரும்பிச் சென்று விட்டது.

வாள், சிவனிடம் 'இருவர் கை நீட்டியதால் நான் திரும்பி வந்து விட்டேன்' என்று கூறியது. மீண்டும் சிவன் வாளிடம். 'யார் கை முதலில் நீட்டுகிறுர்களோ அவர் கையில் சேர்க' எனக் கூறி வாளினே அனுப்பினுர். வாள் வருவதனேக் கண்ட லெச்சுமணன் முதலில் கை நீட்டி வாளேப் பெற்றுக் கொண்டான்,

வாளேப் பெற்ற லெச்சுமணன் வாளின் கூர்மை பார்க்க வேண்டி பக்கத்தில் நின்ற ஆலமரத்தில் வாளினுல் வெட்ட மரத்தில் இருந்த குலேவாளரக்கன் இரண்டு துண்டாகி வீழ்ந்தான்.

சூர்ப்பனகை தவமிருக்கும் மகனேக் காணவந்து மகன் மடிந்து கிடப்பதைக் கண்டாள். உடனே அவள் தன் மகனேக் கொன்றவனே எப்படியாகிலும் கொல்வேன் எனச் சூழுரைத்தாள். சூர்ப்பனகை மகனே இழந்த நிலேயில் காடு வனங்களெல்லாம் கடந்து வரும் வழியில் பர்ணக சாலேயினேக் கண்டாள். அவள் பர்ணக சாலேயின் பக்கத்தில் வந்து ராமரைக் கண்டாள். சூர்ப்பனகைராமரிடம் தன்னே மணந்து கொள்ளும் படி வேண்டினுள். ராமர் அவளிடம் 'தனக்குத் திருமணம் ஆகிவிட்டது என்றும், தம்பி லெச்சுமணன் பக்கத்தில் உள்ளான். அவனிடம் சென்றுல் உன்னே மணந்து கொள்வான்' எனச் சொல்லி அனுப்பினுர்.

சூர்ப்பனகை வழி நடந்து வந்து லெச்சுமணனேக் கண்டு ராமர் கூறிய செய்தியினேக் கூறி தன்னே மணம் செய்து கொள்ளும்படி வேண்டினுள். உடனே லெச்சுமணன்; 'என் அண்ணரின் சம்மதத்தினே நீ எழுத்து வடிவில் வாங்கி வருக' எனக்கூறி அனுப்பினுன்.

சூர்ப்பனகை திரும்பி ராமரிடம் வந்து லெச்சுமணன் கூறியதனேக் கூறினுள். உடனே ராமர் தன் அம்பினுல் சூர்ப்பனகையின் முதுகில்

'அரக்கியின் மூக்கையும் தனங்களையும் அரிவாயாக' என எழுதி அனுப்பினார். சூர்ப்பனகை அவ்வெழுத்தின் லெச்சுமணனிடம் வந்து காட்டினாள். லெச்சுமணன் உடனே தன் மந்திரவாளால் சூர்ப்பனகையின் மூக்கையும் தனங்களையும் அரிந்து விட்டான். அறுபட்ட சூர்ப்பனகை அழுது புலம்பினாள்

சூர்ப்பனகை பின்னர் தன் உறுப்புக்களை அறுத்து நாணப்படுத்திய ராமலெச்சுமணரைப் பழிவாங்கக் கருதி நடந்த நிகழ்ச்சியினைத் தன் தமையன் கரதூஷணனிடம் எடுத்துரைத்தாள். கரதூஷணன் செய்தி கேட்டுச் சினமுற்று ராமலெச்சுமணரிடம் வந்து 'என் தங்கையை ஏன் இவ்வாறு மானபங்கப் படுத்தினீர்' எனக் கேட்டுவிட்டுத் திரும்பி வந்து கரதூஷணன் தங்கைக்குஏற்பட்ட துன்பத்தினை அண்ணன் ராவணனிடம் எடுத்துரைத்தான்.

ராவணன் செய்தியறிந்து சினமுற்று ராமலெச்சுமணருடன் வாழ்ந்து வரும் சீதையினைச் சிறையெடுத்து வரமுடிவுசெய்தான் எனவே ராவணன் சூழ்ச்சியால் சீதையைச் சிறையெடுக்க எண்ணித் தன் மாமன் மாரீசனை மான் வடிவெடுத்து பர்ணகசாலை பக்கம் போகச் சொன்னான். மாரீசன் ராவணனிடம் அறிவுரை கூறினான். ராவணன் அவ்வறிவுரையினை ஏற்கவில்லை. எனவே மாரீசன் மான்வடி வெடுத்து சீதை இருக்கும் இடத்தில் வந்து துள்ளி விளையாடினான்.

சீதை மானைக்கண்டாள். ராமரிடம் அவள் மானைப் பிடித்துத் தரும்படி வேண்டினாள். ராமர் இது மாயமான், அரக்கர் சூழ்ச்சியால் வந்த மான் இது வேண்டாம் எனக்கூறினார். சீதை கேட்ட பாடில்லை. எனவே ராமர் லெச்சுமணனைச் சீதைக்குக் காவல் வைத்து விட்டு மானைப் பிடிக்கச் சென்றார். மான் நெடுந்தூரம் கடந்து ஓடியது. எனவே ராமர் பாணத்தைத் தொடுத்தார். பாணம் பட்டு மான் 'ராமர்க்கபயம்' எனக் கூறி கீழே விழுந்தது.

மான் இட்ட அபயக் குரலைச் சீதை கேட்டு ராமருக்கு ஏதோ ஆபத்து எனக் கருதி லெச்சுமணனைப் போய்ப் பார்க்கச் சொன்னாள். லெச்சுமணன் சீதையிடம், 'அண்ணனுக்கு எந்த ஆபத்தும் வராது' என்று கூறினான். சீதை கேட்கவில்லை. லெச்சுமணன் சீதையின் தொந்தரவு தாங்காமல், பர்ணகசாலையின் முன் ஏழு கோடுகள் கீறி எக்காரணத்தினாலும் இக்கோடுகளைக் கடந்து நீங்கள் வெளியில் வரவேண்டாம். இங்கே நீங்கள் தையரிமாக இருங்கள்' என ஆறுதல் கூறிவிட்டு ராமரைத் தேடி வனத்திற்குச் சென்றான். லெச்சுமணன் பல இடம் கடந்து வந்து ராமரைக் கண்டான். ராமர் லெச்சுமணனிடம், 'சீதையைத் தனியாக விட்டு விட்டு ஏன் வந்தாய்' எனக் கடுமையாகத் திட்டினார்.

சீதை தனியாக இருப்பதை அறிந்த ராவணன் சன்னியாசி வேடம் பூண்டு பர்ணக சாலையில் வந்து சீதையிடம் 'பிச்சை போடு தாயே' என வேண்டினன். சீதை லெச்சுமணன் இட்ட கோடுகளுக்கு உள்ளே நின்று ராவணனுக்குப் பிச்சைபோட வந்தாள். ராவணன் கோடுகளுக்கு வெளியில் வந்து பிச்சை இடுமாறு சீதையிடம் கூறினன். சீதையும் தன்னை மறந்து வந்து பிச்சையிட்டாள்.

ராவணன் உடனே சீதையை அவள் நின்றிருந்த பூமியோடு சேர்த்தெடுத்து தேரில் வைத்துவிட்டு, சீதையிடம் ராவணன், தன் வலக்கையில் இருப்பது என்ன? என்று கேட்டான். சீதை அது இசங்கு(இயங்கு) என்ருள். அடுத்து ராவணன் தன்கையிலிருந்த ஒட்டினக்காட்டி இது என்ன? என்ருன். சீதை 'ஓடு' என்ருள். சீதை, இயங்கு ஓடு என்றவுடன் தேர் இயங்கி ஆகாயத்தில் ஓடத்தொடங்கியது.

தேர் ஓடியதை அறிந்த சீதை அப்பொழுது தான் வஞ்சிக்கப்பட்டதாக உணர்ந்தாள். வழியிடைக்கண்ட விலங்குகளிடம் தன்னைப் பற்றி ரகுராமரிடம் கூறும் படி வேண்டினுள். மேலும் சீதை தான் அணிந்திருந்த அணிகலன்களைக் கழற்றி தன் முந்திச் சேலையைக் கிழித்துக் கட்டிச் சிறுசிறு பொட்டலங்களாக இட்டுக் கொண்டே போனுள்.

ராவணன் தேர் சடாயு வனத்தில் வரும்பொழுது சடாயு வந்து தேரை மறித்தது. ராவணன் சடாயுவை வெட்டி வீழ்த்தி விட்டான். சீதை சடாயுவை நோக்கி 'ராமலெச்சுமணர் இங்கு வருவது வரையிலும் நீ வதைத்து வதைத்து கிடக்க வேண்டும்'. என வேண்டிக் கொண்டாள்.

ராவணன் சீதையை இலங்கையில் செண்பகப் பூங்காவில் சிறை வைத்து பல அரக்கியர்களைக் காவலாக வைத்தான்.

ராமலெச்சுமணர் சீதையைக் காணுமல் உயிர் பரதவித்து வனமெல்லாம் தேடி வந்தனர். ராமரும் லெச்சுமணனும் சடாயு வனத்தில் வர சடாயு ராமரிடம் ராவணன் சீதையைத் தூக்கிச் சென்ற விபரத்தினைக் கூறித் தான் தடுத்து நின்றதையும் தனக்கு ஏற்பட்டதையும் எடுத்துக் கூறியது.

பின்னர் சடாயு ராமரிடம் 'வடுப்பட்டு எங்கள் குலம் வாழ்வதில்லை; ஆகவே ராமரே நீர் என்னை மயானம் இல்லாத இடமாகத் தேர்ந்து அடக்கம் செய்து விடும்' என வேண்டியது.

ராமர் உலகெங்கும் நோக்கி மயானம் இல்லாத இடமே இல்லை எனத் தெரிந்து சடாயுவினைத் தன் வலது தொடையைக் கீறி அதனுள் அடக்கம் செய்தார்.

ராமர் மீண்டும் லெச்சுமணனிடம் மனம் வருந்தி 'நீ எப்படிச் சீதையை விட்டு விட்டு வந்தாய்' எனக் கேட்டார். லெச்சுமணனும் நடந்தது அனைத்தையும் எடுத்துக் கூறினன். மேலும் ராமர் அவனிடம் 'எப்படித்தான் இருந்தாலும் நீ சீதையை விட்டு வந்திருக்கக் கூடாது. பெரும் பிழை செய்து விட்டாய் என் முன் நில்லாதே' என்றார்.

லெச்சுமணன் மனம் வருந்தி தன் வாளால் உயிரை மாய்த்துக் கொள்ள எண்ணினன். தம்பி மனநிலை யறிந்து ராமர் லெச்சுமணனைத் தேற்றினர்.

காட்டில் ராமரும் லெச்சுமணனும் ஓர் ஆலமரத்தடியில் இருந்தனர். அப்பொழுது மரத்திலிருந்த அனுமன் ராமர் மீது இலைகளைப் பறித்து எறிந்தான். லெச்சுமணன் கோபமுற்று அனுமன் மீது அம்பினைத் தொடுக்க எண்ணவே ராமர் தடுத்து நிறுத்திவிட்டு அனுமனைத் தன் பிள்ளையாக ஏற்றுக் கொண்டார். ராமர் தனக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தினை அனுமனிடம் கூற, அனுமன், தான் சீதையை மீட்பதற்குத் துணை நிற்பதாகக் கூறினன். மேலும் அனுமன் ராமரிடம், 'வாலி சுக்கிறீபன் சண்டையினையும் எடுத்துக் கூறி சுக்கிறீபனுக்கு உதவினல் வானரப் படை முழுமையும் தங்களுக்குப் பணிபுரியும் என்பதையும் எடுத்துரைத்தான். ராமரும் ஒத்துக் கொண்டார்.

அடுத்து, அனுமன் சுக்கிறீபனிடம், வந்து 'உனக்கு உதவிக்கு ராமர் இருக்கிறார்' என எடுத்துக்கூறினன். சுக்கிறீபனும் செய்தியறிந்து ராமரை வந்தடி தொழுதான்.

ராமர் உதவியுடன் சுக்கிறீபன் வாலியுடன் சண்டை செய்தான். சண்டை நடக்கும் பொழுது ராமர் தன் நாமம் பொறித்த அம்பினை வாலி மீது தொடுத்து விட்டார். வாலி இறந்து விட்டான். பின்னர் வாலி மகன் அங்கதனுக்கு ராமர் முடிசூட்டி வைத்தார்.

சுக்கிறீபன் [வெற்றி பெற்று தாரகை என்பவளோடு வாழ்ந்து வந்தான்.

ராமர் அனுமனை அழைத்து தென்னிலங்கைக்குப் போய் சீதை இருக்கும் நிலையினை அறிந்து வரச் சொன்னர். அனுமன் இலங்கைக்கு

வந்து சீதை இருக்குமிடமறிந்து அவளிடம் ராமர் கணையாழியைக் கொடுத்தான். சீதை, பதிலாக அனுமனிடம் தன் சூடாமணியினைக் கொடுத்தனுப்பினுன்

அனுமன் அங்கிருந்து புறப்படும் போது அரக்கர் வந்து தடுக்க அனுமன் அவர்களுடன் போரிட்டான். ராவணன் மகன் இலக்கண குமாரன் அனுமனுடன் போரிட்டுத் தோற்ருன். பின்னர் ராவணன் மகன் இந்திர செயித்து வந்து போரிட்டு அனுமன்ச் சங்கிலியால் பிணைத்து இழுத்துச் சென்ருன்.

ராவண சபையில் அனுமன் வந்து உட்கார்ந்தான். ராவணன் அனுமனிடம் 'நீ யார்?' எனக் கேட்க, அனுமன் 'நான் ராம தூதன்' எனக் கூறினுன்.

ராவணன் கோபமுற்று அனுமன் வாலில் துணிகளைச் சுற்றித் தீயைக் கொழுத்துமாறு ஏவினுன். தீ கொழுத்தப் பட்டதும் அனுமன் இலங்கை நகரைத் தீக்கிரையாக்கி விட்டு விரைந்து ராமரிடம் வந்து சீதையின் நிலையின் எடுத்துக் கூறினுன்.

ராமர் உடனே இலங்கைக்குச் செல்ல வானரப் படைகளை ஏவி கடலில் பாலம் அமைக்கச் சொன்னுர். பாலமும் அமைக்கப்பட்டது. ராமர் வானரப்படையுடன் இலங்கை வந்து சேர்ந்தார்.

ராமர் படையுடன் வந்திருப்பதை ஒற்றர் ராவணனுக்கு அறிவித்-தனர் ராவணன் உடனே போருக்குப் புறப்பட்டு வந்தான். ராவணன் லெச்சுமணனுடன் போர்புரிந்து தோற்று வெறுங்கையனுக திரும்பிச் சென்ருன்.

ராவணனிடம் அவன் தம்பி விபூசணன் குறுக்கிட்டு போருக்குச் செல்லாதே, அழிந்து போவாய் எனப்பல அறிவுரைகளை எடுத்துரைத்தான். ராவணன் கேட்கவில்லை. எனவே விபூஷணன் ராமரிடம் அடைக்கலம் வேண்ட, ராமரும் ஏற்றுக் கொண்டார்.

ராவணனின் மந்திரி, ராவணனிடம் அவன் மக்களாகிய அதிகா-யனையும், இந்திர செயத்தையும் போருக்கு அனுப்பி வைக்குமாறு கூறினுன்.

ராவணன் தன் மகன் இந்திர செயித்தை அழைத்துப் போருக்குப் போகுமாறு ஏவினுன். இந்திர செயித்தும் தந்தையிடம் நல்மொழிகளைக் கூறிப் போர் வேண்டாம் எனக் கூறினுன். ராவணன் கோபமுறவே இந்திர செயித்து விருப்பற்ற நிலையில் போருக்கு வந்தான். போரில்

இந்திர செயித்துக்கும் லெச்சுமணனுக்கும் சண்டை நடந்தது. கடும் போரில் இந்திர செயித்தின் கணையால் லெச்சுமணன் மயங்கி வீழ்ந்து விட்டான். இந்திர செயித்து இச்செய்தியினைத் தந்தையிடம் கூறி மகிழ்ந்தான்.

ராமர் போருக்குச் சென்ற லெச்சுமணன் திரும்பி வராததைப் பார்த்து வர ஆள் அனுப்பினார். லெச்சுமணன் மயக்க முண்டிருப்பதை ஏவலர் ராமரிடம் கூறவே ராமர், விபூஷணனுடன் களத்திற்கு வந்து லெச்சுமணனை மயக்கம் தெளிவிக்க செந்தலைக் கருடனை வரும்படி வேண்டினார். செந்தலைக் கருடன் வந்து வட்ட மிட்டதும் லெச்சுமணன் எழுந்து விட்டான்.

அடுத்து ராமர் அனுமனை அனுப்பி இலங்கையை அழிக்கும் படிக் கூறினார். அனுமன் போருக்கு வரவே அவனுடன் பலர் வந்து மோதி மாண்டனர் ராவணனின் மகன் அதிகாயனும் மாண்டான். பின்னர் ராவணன் மகன் இந்திர செயித்து போருக்கு வந்தான். உடனே லெச்சுமணனும் களத்திற்கு வந்தான். கடும் போர் நடந்தது. இறுதியில் இந்திரசெயித்தும் அழிந்தான். அடுத்து ராவணன் தூங்கிக் கொண்டிருந்த தன் தம்பி கும்பகர்ணனை எழுப்பி போருக்கனுப்பினான். போரில் கும்பகர்ணனும் இறந்து விட்டான். கும்பகர்ணனும் மடியவே ராவணன் ஏக்கமுற்றுத் தடுமாறினான். அப்பொழுது தளபதி வச்சிரதந்தன் என்பவன் ராவணனிடம், 'உன் சித்தி மகன் மயில் ராவணனை அழைத்து வந்து போர் செய்தால் ராமலெச்சுமணரை வென்றிடலாம்' என எடுத்துரைத்தான்.

T. 4698

ராவணனும் ஒருவாறு மனந்தேறி உடனே போருக்கு வரும்படி மயில்ராவணனுக்கு ஒரு கடிதம் எழுதி வச்சிர தந்தனிடம் கொடுத்து அனுப்பினான். வச்சிரதந்தன் மயில்ராவணன் கோட்டையில் உள்ள சில காவலர்களையும் தாண்டி வந்து மயில்ராவணனிடம் கடிதத்தினைக் கொடுத்தான். மயில்ராவணன் கடிதத்தினைப் படித்து செய்தி அறிந்து கொண்டு வேகமாகப் புறப்பட்டு இலங்கையில் வந்து ராவணனைக் கண்டான். ராவணன் நடந்த போர் செய்தியெல்லாம் மயில் ராவணனிடம் எடுத்துக்கூறி தன் நிலைமையினை விளக்கினான்.

ராவணனும் மயில்ராவணனும் இவ்வாறு கூடிப்பேசி கொண்டிருக்கையில் ராவணன், மயில்ராவணனிடம், 'நீ எப்படியாகிலும் ராம லெச்சுமணரைத் தூக்கிக்கொண்டு பாதாள தேசத்துக்குப் போய்விடு' என்றான்.

ராவணன் இவ்வாறு கூறிக் கொண்டிருந்ததை மந்திரி மகோதரன் கேட்டு அச்செய்தியினைத் தந்திரமாக ஒரு தூதன் மூலம் விபூஷணனக்கு அறிவித்தான். விபூஷணன் உடனே ராம லெச்சுமணரைப் பாதுகாப்பாக இருக்கும்படி வேண்டினன்.

ராமலெச்சுமணர் பாதுகாப்பாக இருக்கவேண்டி அனுமன் தன் வாலினல் ஒரு கோட்டை அமைத்தான். அனுமன் தன வாலினல் ஒரு கோட்டை அமைக்கும் போதே மயில் ராவணன் தந்திரமாக அவன் வாலுக்குள் உட்கார்ந்து கொண்டான். நடுச்சாம வேளையில் எல்லோ-ரும் தூங்க ஆரம்பித்தனர். மயில் ராவணன் மெதுவாக விபூஷணன் வேடம் பூண்டு வந்து ராமரையும் லெச்சுமணனையும் தூக்கிக் கொண்டு அனுமனை ஏமாற்றி விட்டு வெளியில் வந்தான். பின் மயில் ராவணன் ராமலெச்சுமணரைப் பத்திரகாளி கோயில் அறையின் உள்ளே வைத்துப் பூட்டினன்.

மயில் ராவணன் மனைவி மயில் ராவணனிடம் அவன் தங்கைக்கு அவன் செய்த தீங்கினையும், மேலும் ராவணன் செய்த கொடுமை-களையும், மயில் ராவணன் ராமலெச்சுமணரைத் தூக்கி வந்த செயலையும் தவறுகள் எனச்சுட்டிக் காட்டினள். மயில் ராவணன் அவளைச் சீறிப் பழித்தான்.

இது இவ்வாறுக, ராவணன் இலங்கையில் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தான். எனவே விபூஷணனும் அனுமனும், ராவணனின் மகிழ்ச்சிக்கு காரணம் யாதென ஆராய்ந்து ராமலெச்சுமணரை மயில் ராவணன் தூக்கிச் சென்று விட்டான் என்பதனை அறிந்தனர். விபூஷணன் அனுமனிடம் பாதாள இலங்கைக்குப் போய் ராமலெச்சுமணரை மீட்டி வரும்படிக் கூறினன்.

அனுமன் உடனே புறப்பட்டு மயில் ராவணன் கோட்டைக்கு வந்து முதலில் காவலர்களோடு போரிட்டு வென்றுன். அடுத்து அனுமன் தவளை வடிவெடுத்து செந்தாமரைத் தண்டு வழி பாதாள லோகம் சென்று துலா யந்திரத்தை கடக்க முற்படும் பொழுது அரக்கர் வந்து தடுத்து அவனைப் பிடிக்க முயன்றனர். அப்பொழுது மச்ச வல்லபன் என்பவன் அனுமனேடு வந்து போரிடவே அனுமன் சற்றுத் தளர்ச்சி யடைந்தான். அனுமன் மச்ச வல்லபனிடம், 'உன் பெற்றேர் யார்?' என விபரம் கேட்டான். மச்ச வல்லபன் முதலில் சற்றுத் தயங்கி பின் 'என் தந்தை அனுமார்; என் தாய் திமிதி என்ற மச்சமர்; என் தகப்பனைப் பெற்றவர் வாயு பகவான்; என் பெயர் மச்ச வல்லபன்' என்று கூறினன்.

அனுமன் மச்சவல்லபனிடம் தானே அவனுடைய தந்தை என்பதை உணர்த்தினன். அப்படியிருந்தும் மச்சவல்லபன் அனுமன் உள்ளே விட மறுத்தான். பின் மச்சவல்லபன் அனுமனிடம் 'நான் உயிரோடு இருப்பது வரையிலும் நீர் என்னைக் கடந்து செல்ல முடியாது. ஆகவே நீர் என் நடுமார்பில் குத்திவிடும் நான் மூர்ச்சையற்று விழுந்தபின்னர் உள்ளே செல்லும்' எனக் கூறினன்.

அனுமன் மச்சவல்லபனைக் குத்தி மயக்கமடையச் செய்து விட்டு பாதாள இலங்கைக்குள் வந்தான். அடுத்து அனுமன் செங்கல் கோட்டை பித்தளைக் கோட்டை, வெங்கலக் கோட்டை பொன்கோட்டை, பவளக் கோட்டை எல்லாம் கடந்து வந்தான். அரக்கர்கள் வந்து தடுத்தவர்களை அனுமன் அடித்து வீழ்த்தினன். பின் அனுமன் உள்ளே இருந்த மணி மண்டபத்தில் வந்து வீற்றிருந்தான். அப்பொழுது மயில்ராவணன், தான் தூக்கி வந்த ராம லெச்சுமணரைக் காளிக்குப் பலி கொடுக்க நல்ல சமயம் எனப் புறப்பட்டான்; அப்பொழுது அவன் தெய்வத்திற்கு அபிஷேகம் செய்ய தன் தங்கை தூரதண்டிகையிடம் தண்ணீர் எடுத்து வரும்படிக் கூறினன். தூரதண்டிகை வருந்திப் புலம்பிக் கொண்டு அந்த இரவில் தண்ணீர் எடுக்கச் சென்ருள். தூரதண்டிகையின் புலம்பல் மொழிகளைக் கேட்ட அனுமன் அவளிடம் 'பெண்ணே உன் துன்பங்கள் யாவை? உன் துன்பங்களை நான் களைந்து விடுவேன்; ராமலெச்சுமணர் எங்கிருக்கிருர்? எல்லா விபரமும் சொல்?' என வேண்டினன்.

தூரதண்டிகை அனுமனிடம், குரங்காகிய நீ எப்படி மனிதன் போல் பேசுகிருய்? என்ருள்.

அனுமன் அவளிடம், 'நான் பலகலை அறிந்தவன் என்பெயர் அனுமன்' என்ருன்.

தூரதண்டிகை அவனிடம், 'அனுமன் என்ருல் விசுவரூபம் காட்டும்' என்ருள்.

அனுமன் உடனே அவளிடம் விசுவரூபம் காட்டி நின்ருன். தூரதண்டிகை பயந்து நடுங்கிப் போதும் போதும் என்ருள்.

அனுமன் மேலும் தூரதண்டிகையிடம் அவள் குடும்ப நிலையினைக் கேட்டறிந்தான். தூரதண்டிகைக்குத்தான் எப்படியும் உதவி செய்வ-தாகக்கூறி அனுமன் அவள்மூலம் ராமலெச்சுமணர் இருக்குமிடத்தினை அறிந்து அவர்கள் இருக்கும் இடத்திற்குச் செல்வதற்குரிய வழிகளின் தன்மைகளையும் அறிந்துகொண்டான்.

அடுத்து அனுமன் ராமலெச்சுமணர் இருக்கும் இடத்திற்குச் செல்ல வேண்டி ஈ வடிவமெடுத்துத் தூரதண்டிகையின் தண்ணீர் குடத்திற்குள் உட்கார்ந்து கொண்டான். தூரதண்டிகை குடத்துடன் கோட்டை வாயிலின் அருகில் உள்ள தராசின் பக்கத்தில் வந்தாள். தராசு ஒரு புறம் அதிகமாகச் சாயவே காவலர்கள் தூரதண்டிகையைத் தடுத்து நிறுத்தினர். உடனே குடத்திலிருந்த அனுமன் வெளியில் வந்து விசுவ-ரூபம் எடுத்துத் தடுத்தவர்களை அடித்துக் கொன்ருன். பின்னர் அனுமன் அங்கு நின்று கொண்டிருந்த தூரதண்டிகையின் மகன் நீலமேகனின் கால்விலங்குகளையும் அகற்றினுன்.

அனுமன் நீலமேகன் உதவியால் ராமலெச்சுமணர் இருக்கின்ற பத்திரகாளி கோயிலுக்கு ஓடி வந்தான். கோயிலில் இருந்த ராம லெச்சுமணரை வைக்கப்பட்டுள்ள பெட்டியினை அனுமன் தூக்கிக் கொண்டு வெளியில் வந்தான். ராமலெச்சுமணரை வைக்கப்பட்டுள்ள பெட்டியினை அனுமன் பின்னர் பூமாதேவியிடம் பாதுகாப்பாக ஒப்-படைத்து விட்டுத் திரும்பி வந்து நீலமேகன் தூரதண்டிகையிடம் பேசிக் கொண்டிருந்தான்.

மயில் ராவணன், வேவுகாரர் மூலம் நீலமேகனும் தூரதண்டி-கையும் அனுமனுடன் பேசிக் கொண்டிருப்பதை அறிந்தான். ஏவலர்களை அழைத்து மயில் ராவணன், தூரதண்டிகையையும் நீலமேகனையும் பிடித்துக் கட்டிக் கொண்டு வரும்படி உத்தரவிட்டான்.

ஏவலர்கள் தூரதண்டிகை, நீலமேகனைப் பிடிக்கவா அனுமன் அவர்களை அடித்துக் கொன்ருன். இச்செய்தி மயில் ராவணனுக்கு எட்டியது. உடனே மயில் ராவணன் கடகன் என்பவனை அழைத்து படை திரட்டச் சொன்ஞன். படைகளைத்திரட்டி மயில் ராவணன் போருக்கு வந்தான். போர் தொடங்கியது. அனுமன் எல்லோரையும் அடித்துக் சிதறும் படி ஆக்கினுன். அப்பொழுது மயில் ராவணன் தன் மாய்கையால் ஓடி ஒளிந்து கொண்டான்.

அனுமன், ஒளிந்து கொண்ட மயில் ராவணனைத் தேடும் பொழுது அவன் ஓர் ஆலமரத்தின் கீழ் உள்ள ஒருவழியில் இருப்பதைக் கண்டான். எனவே அனுமன் ஈவடிவமெடுத்து வந்து தன்னுடைய விரலில் மயில் ராவணனைக் கட்டி யிறுக்கி அடித்தான். மயில் ராவணன் மண்டையில் அடிபட்டு மூளை சிதறியது. மயில் ராவணன் சிதறுண்ட உடலை மீண்டும் ஒன்று சேர்த்து ஓடி ஒளிந்தான். அனுமன் செய்-வதறியாது திகைத்தான். அனுமன் தூரதண்டிகையிடம் மயில்ராவண-னின் மாய்கை பற்றிய விபரத்தினைக் கேட்டறிந்தான். அப்பொழுது

மயில் ராவணன் மாய்கையால் பூதம் ஒன்று அனுமன் முன் தோன்றி அக்கினியைக் கக்கியது. அனுமன் உடனே மனதில் சீதையைத் தியானித்தான். உடனே அனுமன் அசரீரி வாக்காக மயில் ராவணன் வேள்வி செய்வதையும், பூதம் வேள்வியிலிருந்து தோன்றி வந்ததையும், ஆலமரத்தினைப் பிடுங்கினால் மயில் ராவணன் இருக்குமிடம் போகலாம் என்பதையும் அறிந்து கொண்டான்.

அனுமன் பின்னர் ஆல மரத்தினைப் பிடுங்கி மயில் ராவணன் இருப்பதைக் கண்டு அவன் மீது போட்டான். மயில் ராவணன் மீண்டும் ஓடி ஒளித்துக் கொண்டான். உடனே அனுமன் வாயு பகவானை வேண்டினான்; வாயுபகவான் அருளினால் மயில் ராவணனைத் தாக்கினான். மயில் ராவணன் உடல் தவிடு பொடியாகியது. சிறிது நேரத்திற்குள் மயில் ராவணன் சிதைந்த உடலெல்லாம் ஒன்று சேர்த்து ஓடி ஒளிந்தான். பின் மயில் ராவணன் மதயானை வடிவமெடுத்தான். அனுமன் கடுங்கோபத்துடன் அவனைத் தாக்கினான். கடும் போர் நடந்தது. அனுமன் வேலவரை வேண்டி அவரின் வேலினைப் பெற்று மயில் ராவணன் மீது எறிந்தான். மயில் ராவணன் வேல்பட்டு மாய வேல் அனுமனிடம் திரும்பியது. வேல் திரும்பியவுடன் மயில் ராவணன் மீண்டும் உயிர் பெற்று நின்றான்.

அனுமன் தூரதண்டிகையிடம், நான் இவ்வாறு மயில்ராவணனைப் பலமுறை கொன்றும் அவன் உயிர்பெற்று விடுகிறானே, அந்த மாய்கை வரலாறு நீ அறிவாயா? எனக்கேட்டான்.

தூரதண்டிகை தன்கணவன் கனவில் வந்து மயில் ராவணன் பெற்றிருக்கும் வரம்பற்றிக் கூறியதனை அனுமனிடம் எடுத்து கூறினாள். அதவாது மயில்ராவணன் சிவனிடம் யாரும் வெல்ல முடியாத வரம் வேண்ட சிவனாரும் வரமளித்தார். அந்தவரமாவது,' விந்தியாசில மலையில் ஐந்து குகைகள் உள்ளன. குகைகளின் நடுவில் துவாரங்கள் உள்ளன. துவாரங்களில் ஐந்து வண்டுகள் உள்ளன. அந்த வண்டுகள் உயிரோடு உள்ளவரை உன்னையாரும் அழிக்க முடியாது' என்பதாகும்.

மயில்ராவணன் வரத்தினைப் பற்றி அறிந்த அனுமன் மீண்டும் அவனைக் கொல்வதற்குப் புறப்பட்டான். அனுமன் மயில் ராவணன் பக்கத்தில் வந்து தன்னுடைய வாலினால் அவனை இறுகக் கட்டி ராமர் சீதையைத்துதித்துக்கொண்டு விந்தியாசில மலையில் தன் வலது காலையும் மயில்ராவணன் மார்பில் தன் இடது காலையும் வைத்து ஓங்கி

மிதித்தான். அப்பொழுது அனுமன் மலைக்குகைகளில் உள்ள துவாரங்களைக் கண்டான்; துவாரங்களைக் கையினால் அடைத்து கொண்டு வண்டுகளை வெளியே வரவிடாமல் பிடித்துக்கொன்றான். பின் அனுமன் மயில் ராவணனைத் தாக்கவே மயில் ராவணன் மெதுவாக அனுமனின் உடலில் பிரவேசித்தான். இதனை உணர்ந்த அனுமன் மயில்ராவணன் தலையை அறுத்துவிட்டான். மயில்ராவணன் உயிர் பிரிந்து விட்டது.

நீலமேகன் மயில்ராவணனுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்தான். அப்பொழுது அனுமன் மயில் ராவணன் மகளை நீல மேகனுக்கு மணம் முடித்து வைத்து அவன் பாதாள லோகம் ஆளும்படி மணி முடியும் சூட்டி வைத்தான். மச்சவல்லபனை அழைத்து அனுமன், நீலமேகனுக்கு அமைச்சனாக இருக்கும்படிக் கூறினான்.

அனுமன் பின்னர் ராம லெச்சுமணர் இருக்கும் பெட்டியினைப் பூமா தேவியிடம் கேட்டுப் பெற்றுக் கொண்டு மயில் ராவணன் கோட்டை விட்டு வெளியேறி வந்தான் விபூஷணன், அங்கதன் சுக்கிறீபன் முதலிய யாவரும் அனுமனை வரவேற்றனர். அனுமன் கொண்டு வந்த பெட்டியினை யாவரும் சுற்றி நின்று வணங்கினர். சிறிது நேரத்தில் ராமலெச்சுமணர் மயக்கந் தெளிந்து எழுந்தனர். நடந்த செய்தியெல்லாம் ராமலெச்சுமணருக்கு எடுத்துரைக்கப்பட்டது. அடுத்து யாவரும் கூடி ராவண சம்காரம் செய்ய ஆலோசனை நடத்தினர்.

இது இவ்வாறாக, ராவணனும் ராமர் பாசறையில் உள்ள ஆரவார மகிழ்ச்சியினையும் மயில்ராவணன் இறந்து பட்டதனையும் வேவுகாரர் மூலம் அறிந்து மனந்தடுமாறினான் மந்திரி மகோதரன் அவனுக்கு ஆறுதல் கூறினான் பின் ராவணன் போருக்குப் புறப்படலாயினான்.

ராமலெச்சுமணருக்கும் ராவணனுக்கும் கடும் போர் நடந்தது. போரில் ராவணனின் பத்துத் தலைகளையும் அறும்படும்படிச் செய்து ராமர் அவனைக் கொன்றுவிட்டார். ராவணனும் அழிந்தான். பின்னர் ராமர் சீதையை அழைத்துக் கொண்டு, இலங்கையில் விபூஷணனுக்கு மணி முடி சூட்டி வைத்தார்.

பின்னர் ராமர் சீதை லெச்சுமணனுடன அயோத்தி வந்தடைந்தார். அயோத்தி நகர் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியது. ராமர் பரதனிடம் அவர் வரும் வரை பரதன் தேசத்தை அரசாண்ட விதங்களையும் கேட்டறிந்தார். திசதரன் இறந்த நினைவு நாளும் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது.

ராமர் அரசுரிமை ஏற்றவுடன் தன் நாட்டிலுள்ள சமுசாரிகளை அழைத்து ஆளுக்கொரு பூசணி விதை கொடுத்தார். அனுமனும் ஒரு விதை வாங்கினன். எல்லோரும் பூசணி விதையினைத்தரையில் ஊன்றினர். பூசணி முளைத்துக்கொடி வீசிப் படர்ந்தது. சமுசாரிகளின் பூசணி ஒன்று கூட காய்க்கவில்லை, ஆனல் அனுமனின் பூசணி மட்டும் காய்த்தது.

ராமர் அனுமன் விளைவித்த பூசணிக்காயினைக் கொண்டு வரச் சொல்லி ஆசாரிகளை வரவழைத்து விலை மதிக்கச் சொன்னர். ஆசாரி-களும் விலைமதித்தனர். ராமர் சமுசாரிகளிடம் ஆசாரி மதித்த விலை-யினைக் கொடுத்து பூசணிக்காயினை எடுத்துப்போகச் சொன்னர். சமுசாரிகள் தாங்கள் சேர்த்து வைத்திருந்த செல்வம் அனைத்தையும் பூசணிக்காய்க்காக கொடுக்க நேர்ந்தது. சமுசாரிகள் யாவரும் வெறுப் படைந்து ராமரைத் தூற்றினர்.

பின்பு ராமர் ஒரு நாள் நகர்ச் சோதனை செய்து வரப்புறப்பட்டார். அப்பொழுது அவர் பல சாதியர் வாழும் ஒவ்வொரு தெருக்களை-யும் கடந்து வந்தார். ராமர் வண்ணர் தெருவில் வரும் பொழுது, மகிளம்பூ என்ற வண்ணத்தி ஒழுக்கம் தவறி நடக்க அதைக் கண்ட அவள் கணவன் அவளைப் பிடித்து அடித்தான். அடிபொறுக்க முடி-யாமல் அவள் அழுது ராமரிடம் முறையிடுவேன் என்ருள். உடனே வண்ணன் அவளிடம் சீதையையும் ராமரையும் பழித்துப் பேசினன். இவ்வசைச் சொல்லினை ராமர் கேட்டுக் கொண்டார்.

அரண்மனையில் கைகேசி சீதையிடம் ராவணன் பற்றிய செய்தி களைக் கூறுமாறு வற்புறுத்தினள் சீதை கைகேசியிடம் அவன் வாயால் கூறுவதற்குத் தகுதி படைத்தவனில்லை எனக்கூறி அவன் படத்தினை வரைந்து காட்டினள். அப்பொழுது நகர்ச் சோதனை முடித்து ராமர் வீட்டிற்கு வந்தார். ராமர் வந்ததைக் கண்ட சீதை ராவணன் படத்தை படுக்கையின் கீழ் மறைத்து வைத்தாள். ராமர் மனச் சோர்வுற்று படுக்கையில் வந்து படுத்தார். அப்பொழுது அவர் உடலிலுள்ள வியர்வை ராவணன் படத்தில் பட்டு ராவணன் மீண்டும் உயிர் பெற்று படுக்கையினை அசைத்தான். ராமர் படுக்கை அசைவதைக் கவனிக்க ராவணன் உயிர் பெற்றிருப்பதைக் கண்டு அவனை மீண்டும் கொன்று விட்டார். பின்னர் ராமர் சீதையிடம் ராவணன் படம் வந்தது எவ்வாறு எனக்கேட்டார். சீதை கைகேசி வற்புறுத்தியதால் தான்

அப்படத்தினை வரைந்ததாகக் கூறினாள். ராமர் கோபமுற்றுதுடன் சீதை மீது சந்தேகங் கொண்டார். கைகேசி வந்து சமாதானம் கூறிப் பார்த்தாள். ராமர் மனம் தெளியவில்லை.

உடனே ராமர் லெச்சுமணனை அழைத்து, 'கற்பொழுக்கம் தவறிய சீதையை நாட்டில் வைக்ககூடாது; காட்டிம் கொண்டு போய் வெட்டிக் விடு' என்றார். லெச்சுமணன் பல நன்மொழிகளைக் கூறித் தடுத்துப் பார்த்தான். ராமர் கேட்கவில்லை. எனவே லெச்சுமணன் சீதையை அழைத்துக் கொண்டு காட்டிற்கு வந்தான். சீதை அழுது புலம்பினாள்; வழிநடக்க முடியாமல் தடுமாறினாள். சீதை அப்பொழுது கருப்பிணியாக இருந்தாள்.

லெச்சுமணனும் சீதையும் பல இடங்களைக் கடந்து சேர்ந்து ஓரிடத்தில் அமர்ந்தனர். அப்பொழுது சீதை தன்னை மறந்து தூங்கினாள் அப்பொழுது லெச்சுமணன் சீதையின் கற்பு நிலையைச் சோதனை பார்த்தான். கற்புடைய தேவியை வனவிலங்குகளெல்லாம் வந்து வணங்கின. எனவே லெச்சுமணன் சீதை கற்பு அழியவில்லை என்பதை உணர்ந்து கொண்டான் சீதை தூங்கும் பொழுது அவள் அறியாமல் லெச்சுமணன் அவளை விட்டு விட்டு வாளில் தன் காலை அறுத்து இரத்தத்தை தோய்த்துக் கொண்டு ராமரிடம் வந்து சேர்ந்து விட்டான். ராமரிடம் லெச்சுமணன் சீதையை வெட்டி விட்டேன் எனக் கூறி விட்டான்.

சீதை எழுந்து பார்க்கும் பொழுது லெச்சுமணனைக் காணாமல் அழுது புலம்பினாள். சீதையின் அழுகுரலைக் கேட்ட வான்மீக முனிவர் அங்கு வந்து அவளை அழைத்துச் சென்று தன் ஆசிரமத்தில் சேர்த்தார். சீதைக்குக் குழந்தைப் பேற்றிற்கான காலம் வந்தது. சீதைக்குப் பிள்ளைப்பேறு மருத்துவம் பத்திரகாளி வந்து பார்த்தாள். சீதை ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். பத்திரகாளி குழந்தைக்கு அசலவன் எனப் பெயரும் சூட்டினாள்.

பின்னர் சீதை ஒருநாள் ஆசிரமத்திலிருந்து தண்ணீர் எடுத்து வர வெளியில் வந்தாள். வழியில் அவள் ஒரு குரங்கு தன் பிள்ளையின் அணைத்து வைத்துக் கொண்டு போவதைக் கண்டாள். எனவே அவள் வழி திரும்பி வந்து தொட்டிலில் படுத்திருந்த பாலனைத் தூக்கிக் கொண்டு மீண்டும் தண்ணீர் எடுத்துவரச் சென்றாள். இது வான்மீக முனிவருக்குத் தெரியாது. வான்மீக முனிவர் சிறிது நேரம் கழித்து

தொட்டிலை வந்து பார்த்தார். தொட்டிலில் குழந்தை இல்லை. முனிவர் உடனே சீதைக்கு என்ன பதில் சொல்வேன் எனக் கூறிக் கொண்டு தெற்பப் புல்லைப் பிடிங்கி வந்து தொட்டிலில் போட்டுத் தாலாட்டினர். தெற்பப் புல் குழந்தையாக உருவெடுத்தது. வான்மீகர் மகிழ்ந்து கொண்டார். அப்பொழுது சீதை பாலனுடன், தண்ணீர் எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள். தொட்டிலில் மற்றெரு குழந்தை இருப்பதைக் கண்டு சீதை வான்மீகரிடம் என்ன செய்தி எனக் கேட்டாள் வான்மீகர் நடந்த செய்தியினை எடுத்துரைத்தார்.

முனிவர் சீதையிடம் இரண்டு குழந்தையையும் வளர்க்கச் சொனஞர். சீதை தன் கணவனுக்கு இக்குழந்தை பற்றிய விவரம் எவ்வாறுநான் கூறுவேன் என வருத்தமுற்ருள். அப்பொழுது பத்திரகாளி சீதையிடம் உருவாக்கிய குழந்தை பற்றிய விவரத்தினை நான் என் அண்ணன் ராமரிடம் கூறிக் கொள்வேன்; நீ அஞ்ச வேண்டாம் என்ருள். முனிவர் குசப்புல்லிருந்து உருவாக்கிய பாலனுக்குக் குசலவன் எனப் பெயரிடப்பட்டது.

வான்மீகர், பாலர்கள் இருவருக்கும் பலகலைகளைக் கற்றுக் கொடுத்-தார். பாலர்கள் இருவரும் சீரும் சிறப்புமாய் வளர்ந்து வந்தனர். ஒரு நாள் பாலர்கள் இருவரும் வேட்டைக்குப் புறப்பட்டனர். அப்பொழுது பத்திரகாளி மாற்று வடிவெடுத்து கூனி வேடமிட்டு பாலர்கள் முன்னே வந்தாள். பாலர்கள் அவள் கூனில் கணை தொடுத்துக் கூனை நிமிர்த்தி விட்டனர். பத்திரகாளி அவர்களை நோக்கி, அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கிறீர்கள் எனக் கூறி வாழ்த்தி அனுப்பினுள்.

அடுத்து பாலர்கள் வனத்தில் வேட்டையாடி வரவே அங்கு தவம் செய்து வந்த முனிவர்கள் அச்செய்தியினைச் சிவனிடம் கூறினர். சிவன் பலரை அனுப்பிப் பாலர்களை பிடித்துவரச் சொன்ஞர். யாராலும் பாலர்களைப் பிடிக்க முடியவில்லை. பின்னர் வனத்தில் நின்ற சேவல் வடிவுடைய முனிவரைப் பாலர்கள் உயிருடன் பிடித்து வீட்டிற்குக் கொண்டு வந்து கட்டிப் போட்டனர்.

சீதை பாலர்களிடம், சேவல் யாது? எனக் கேட்டாள். பாலர் கள் 'வனத்திலிருந்து பிடித்து வந்தோம்' எனக் கூறினர்.

சேவல்முனிவர் சீதையிடம், தான் சேவலல்ல முனிவர் என்பதனை எடுத்துரைத்தார். மேலும் முனிவர் அவளிடம், தன்னை அவிழ்த்து விட்-

டால் உன்பாலர்களுக்கு உதவிடுவேன் என்றும் கூறினார். எனவே சீதை சேவல்முனிவரை அவிழ்த்து விட்டுவிட்டு பாலர்களிடமும் செய்தியினைக் கூறிவிட்டாள்.

இது இவ்வாருக, ராமர் லெச்சுமணனிடம் வசிட்ட முனிவரை அழைத்து வரும்படிக் கூறினார். வசிட்டமுனிவரும் வந்து சேர்ந்தார். அப்பொழுது வசிட்டர் ராமரிடம், 'சீதை எங்கே' எனக் கேட்டார்.

ராமர் வசிட்டரிடம், சீதையை வெட்டி விட்ட செய்தியினை வருத்தத்துடன் எடுத்துக் கூறி மீண்டும் சீதையை எழுப்புமாறு வேண்டினார். முனிவர் உடனே வேள்வி ஒன்றினை வளர்த்தார். வேள்வியில் குதிரை ஒன்று வந்து பிறந்தது. அக்குதிரையில் 'இக்குதிரையைப் பிடிப்பவர் ராமருக்குப் பெண் கொடுக்கலாம்' என்ற வாசகமும் எழுதப் பட்டிருந்தது; அக்குதிரை பின்னர் ஒருவர் பிடிக்கவும் அகப்படாமல் தப்பி ஓடியது; சேவல் வனத்தில் வந்து பயிர்களைத் தின்று அழித்தது; சேவல் முனிவர் குதிரையைப் பிடித்துக் கட்டுமாறு அசலவன் குசலவன் உதவியை நாடினார். பாலர்கள் சென்று குதிரையைப் பிடித்து வந்து கட்டிப் போட்டனர்.

ராமர் குதிரையைக் காணுமல் அனுமனிடம் அதனைத் தேடிப் பிடித்து வருமாறு கூறினார். அனுமன் குதிரையைத்தேடி வந்து அது கட்டிப் போட்டிருப்பதைக் கண்டான்; அனுமன் குதிரையினை அவிழ்க்கச் சென்றான். பாலர்கள் அவனைத் தடுத்தனர். அனுமனுக்கும் பாலர்களுக்கும் சண்டை ஏற்படவே சண்டையில் அனுமன் பற்களை இழந்து திரும்பினான்.

அனுமன் குதிரைகட்டப் பட்டிருப்பதனையும், தான் குதிரையை அவிழ்க்க முயன்று அடிபட்டு வந்ததனையும் ராமரிடம் கூறினான் ராமர் உடனே அங்கதனைப் பாலர்களிடம் தூது அனுப்பினார். பாலர்கள் போருக்குத் தயாராகினர். பாலர்கள் தன் தாயிடமும் வான்மீக முனிவரிடமும் வாழ்த்துக்களைப் பெற்றனர்.

ராமரும் படையுடன் களத்திற்கு வந்தார். பாலர்களும் களத்திற்கு வந்தனர். போர் தொடங்கியது கணைகள் சரமாரியாகப் பொழியப்பட்டன. அசலவன் அப்பொழுது தன் தாய் கொடுத்த சூளாமணியை விடுத்தான். ராமர் படை அத்தனையும் மயங்கி விழுந்தன. சூளாமணி ராமரின் மணிமுடியினையும் பறித்து வந்தது.

ராமர் தடுமாறி பாலர்கள் பக்கத்தில் வந்து அவர்களிடம் ஊரும் பெயரும் கேட்டார். அசலவன் ராமரிடம் 'நீங்கள் முதலில் கூறுங்கள்; பின்னர் நாங்கள் கூறுகிறோம்' என்றான்.

ராமர் உடனே தன் ஊரையும் பெயரையும் கூறினார். பாலர்களும் தம் பெயர்களைக்கூறி, பின்னர் தாயார் பெயரையும் கூறிவிட்டுத் தந்தை பெயர் தெரியாது என்றனர்.

ராமர் பாலர்களிடம் தந்தை பெயரை அறிந்து வருமாறு கூற பாலர்கள் சீதையிடம் வந்து விவரம் சொல்ல சீதை அப்பொழுது பாலர்களிடம் முன் வரலாற்றை எடுத்துரைத்தாள். அப்பொழுது பாலர்கள் சண்டைக்கு வந்தவர் தம் தந்தை என்பதை உணர்ந்தனர். பின் அசலவன் சூளாமணியால் இறந்து பட்ட ராமர் படையத்தனையும் எழுப்பினான். சீதை ராமரை வந்து அடிவணங்கினாள். அப்பொழுது ராமர் சீதையிடம் இரண்டு பாலர்கள் எப்படி வந்தனர்; நீ கற்பழிந்து விட்டாய்' என்றார்.

சீதை உடனே வருந்தித் தவிக்கவே, பத்திரகாளி அங்கு வந்து ராமரிடம் இருபாலர்கள் பற்றிய விவரத்தினை எடுத்துக் கூறினாள். ராமர் மனந் தெளியாமல் சீதையையும் பாலர்களையும் அக்கினியில் மூழ்கி வரும்படிக் கூறினார். சீதையும் பாலர்களும் அக்கினி மூழ்கினர். அக்கினியில் புல்லிலிருந்து உருவான குசலவன் அழிந்து விட்டான். உடனே அசலவன் தந்தையிடம் அக்கினியில் கருகிய தன் தம்பியை எழுப்பித்தருமாறு வேண்டினான். முதலில் ராமர் மறுத்து பின் குசலவனை எழுப்பினார்.

ராமர் சீதை பாலர்கள் யாவரும் அயோத்திக்கு வந்தனர். அயோத்தியா புரியில் ராமர் அசலவனுக்கு முடிசூட்டி விட்டு அவர் கயிலாசத்தில் வந்து வீற்றிருந்தார்.



## கிளைக்கதைகள்

அயோத்தி கதையில் பல கிளைக்கதைகள் இடம் பெற்றுள்ளன.* இக்கிளைக் கதைகளில் சில காவியப் பாத்திரங்கள் இடம் பெறுதன வாகவும், சில காவியப்பாத்திரங்கள் இடம் பெறுவனவாகவும் உள்ளன. இக்கிளைக் கதைகள் வேறு நூல்களிலும் குறிப்பாகக் கம்பராமாயணத்திலும் எவ்வாறு இடம் பெற்றுள்ளன என்று இங்கு விளக்கப்பட்டுள்ளது.

### 1. *ஐந்து கண் மாமுனிவர் கதை*

அயோத்தி கதையில், இக்கதை திசதரனின் முற்பிறவியில் நிகழ்ந்ததாக வசிட்டர் திசதரனிடம் கூறுவதாக உள்ளது. ஆனால் இந்நிகழ்ச்சி கம்பனில் தசரதனின் வாழ்க்கையில் முன்னொரு காலத்தில் நிகழ்ந்ததாகவும் தசரதன் அதனைக் கோசலையிடம் எடுத்துக் கூறுவதாகவும் உள்ளது.

அயோத்திகதையில், இக்கதை நிகழ்ச்சியில் வரும் ஆரியப் பட்டன் அவன் மனைவி என்ற இருவரும் கம்பனில் இடம் பெறவில்லை; மேலும் ஐந்து கண் மாமுனிவர் கம்பனில் சலபோசர் என்ற பெயரில் இடம் பெறுகிறார். ஐந்து கண் மாமுனிவரின் மகன் பெயரில்லாமல் பாலன் என்று குறிப்பிடப்படுகிறவன் கம்பனில் சுரோசனன் எனக் குறிப்பிடப்படுகிறான்.

### 2. *வெள்ளைப்பிள்ளையார் கதை*

இக்கதை ராவணன் சிவனிடம் வரம் வாங்கி வரும் பொழுது நிகழ்வதாக உள்ளது. கம்பனில் இக்கதை இடம் பெறவில்லை. விநாயாக புராணத்தில்[4] இக்கதை, ராவணன் வெள்ளைப் பிள்ளையாரைப் பெற்றுவந்ததற்குப் பதிலாகச் சிவலிங்கத்தைப் பெற்று வருவதாகவும், ஏமாற்ற வந்த பச்சை மாலுக்குப் பதிலாக பிள்ளையார் அந்தணச் சிறுவனாக வந்ததாகவும் இடம் பெற்றுள்ளது.

---

* அயோத்தி கதையில் இடம் பெறும் கதைகளைக் கிளைக்கதைகள் எனக்குறிப்பிடுவதா? இல்லை உட்கதைகள் எனக்குறிப்பிடுவதா? என்பது மேலும் ஆய்விற்குரியது.

4. (ப. ஆ) அரு. ராமநாதன், விநயக புராணம், பக். 285-289, 1986,

*3. எமதர்மன்கதை*

எமதர்மன் கதையில் எமதர்மன் மகோதர நாடாரை மந்திரியாக்குவதும், ராவணனோடு சண்டையிடுவதும், பின் மகோதர நாடாரை இராவணனுக்கு மந்திரியாக அனுப்புவதுமாக நிகழ்ச்சி உள்ளது. இந்நிகழ்ச்சி கம்பனில் இடம் பெறவில்லை. ஆனால் கம்பனில் மகோதரன் என்பவன் ராவணனின் மந்திரியாக உள்ளான்.

*4. மாவேலி ராசன் கதை*

அயோத்தி கதையில் இக்கதை விசுவாமித்திரரால் ராமர் பெருமையினைத் திசதரனிடம் எடுத்துக் கூறுவதாக அமைந்து உள்ளது. கம்பனில் இக்கதை விசுவாமித்திரரால் மிதிலைக்கு வரும் வழியில் இராம லக்குவரிடம் கூறுவதாக உள்ளது. மேலும் மாவேலி என்ற பெயர் கம்பனில் மாபலி என்றும், அந்தண வடிவில் வரும் திருமால் கம்பனில் வாமன மூர்த்தி என்ற குறுகிய வடிவம் உடையவராகவும், சுக்கிறீபன் என்ற அமைச்சர் கம்பனில் சுக்ர்பகவான் என்ற பெயரில் மாபலியின் குல குருவாகவும் காணப்படுகின்றனர்.

மேலும் மாவேலி ராசன் கதை, ஸ்ரீமத் மஹாபாகவதம்[5] ஞான வாசிட்டம்[6] என்ற நூல்களிலும் காணப்படுகின்றன.

*5. இரணியன் கதை*

இக்கதையும் விசுவாமித்திரரால் ராமர் பெருமையினை திசதரனிடம் எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. கம்பனில் இக்கதை விபீஷணனால் இராவணனுக்கு இராம அவதாரப் பெருமையினை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

அயோத்தி கதையில் இரணியனின் மகன் பெயர் குறிப்பிடப் படவில்லை. ஆனால் கம்பனில் அவன் பெயர் பிரகலாதன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் கதை நிகழ்ச்சியில் பிரகலாதனைக் கொல்வதற்கு இரணியன் எடுத்துக் கொண்ட முயற்சிகள் இருகதைகளிலும் சிற்சில வேறுபாடுகளுடன் உள்ளன.

---

5. எஸ். பி ராமச்சந்திரன, ஸ்ரீமத்மஹாபாகவதம், பக், 237-239, 1986
6. (மொ.பெ.ஆ) ஸ்ரீஆளவந்தார், ஸ்ரீ ஞானவாசிட்டம் மூலம், பக். 459—480, 1974

*6. அகலியர்கதை*

இக்கதை விசுவாமித்திரரால் ராமலெச்சுமணருக்கு மிதிலைக்கு வரும் வழியில் எடுத்துரைப்பதாய் உள்ளது. கம்பனிலும் இக்கதை மேற்கூறிய சூழலிலேயே அமைந்து வந்துள்ளது.

கதை நிகழ்ச்சியில் அகலியருக்காக கவுதமனும் இந்திரனும் நீரினுள் மூழ்கி இருந்த செய்தி அயோத்திகதையில் உள்ளது. இந்நிகழ்ச்சி கம்பனில் இடம் பெறவில்லை. மேலும் அயோத்திகதையில் இந்திரன் என்பவன் கவுதமன் வீட்டினுள் இருக்க, கவுதமன் அகலியரிடம் யாரேனும் இங்கு வந்தனரா எனக்கேட்க, அவள் இல்லை என உரைப்பதாகச் செய்தி உள்ளது. இந்நிகழ்ச்சியும் கம்பனில் இடம் பெறவில்லை

அய்யோத்திகதையில் கவுதமன், அகலியர் என இடம் பெறும் பெயர்கள் கம்பனில் கோதமன், அகலிகை எனக் காணப்படுகின்றன.

வால்மீகி ராமாயணத்தில் இக்கதை பாலகாண்டம் உத்தர-காண்டம் என்ற இரு காண்டங்களிலும் இடம்பெற்றுள்ளது.

தமிழ் இலக்கியத்தில்[6] இக்கதை கம்பனில் தொடங்கித் தற்கால இலக்கியப் படைப்பாளர் வரை எடுத்தாளப்பட்டுள்ளது.

குமரி மாவட்டத்தில் தாணுமாலையன் கோயில் அமைந்துள்ள சுசீந்திரம் (சுசி+இந்திரம்) என்னும் தலம் இக்கதையில் இடம்பெறும் இந்திரன் சாபவிமோசனம் பெற்ற தலமாகக் கூறப்படுகிறது. இது அகலிகை கதையின் செல்வாக்கால் ஏற்பட்டதே.

*7. கார்த்த வீரியன் கதை*

ராமரின் பாதம் பட்டதும் சாபவிமோசனம் பெற்ற அகலியரைப் போன்று கெந்தர்வ ராசனின் நூறு பெண்கள் கார்த்த வீரியன் காமத்திற்கு இணங்காததால் சாபம் பெற்றிருந்தவர் ராமர் பார்வை பட்டதும் சாப விமோசனம் அடைந்ததாக இக்கதை குறிப்பிடுகிறது. இக்கதை கம்பனில் இடம் பெறவில்லை.

*8. பரசூரன் கதை*

பரசூரன் கதை நிகழ்ச்சி ராமர் சீதையைத் திருமணம் முடித்துச் சுற்றத்தாருடன் அயோத்திக்குத் திரும்பி வரும் வழியில் நிகழ்வதாக

---

6. காண்க, க. கைலாசபதி, ''அகலிகையும் கற்புநெறியும்'' அடியும் முடியும், பக்—120—205, 1970

துரா, சுப்பிரமணியன், அலிகைக்கதைகள், அச்சிடப் பெறாத எம்.பில் பட்ட ஆய்வேடு, ம.கா. பல்கலைக்கழகம், 1980

அமைந்துள்ளது. கம்பனிலும் இக்கதை இதே சூழ்நிலையிலேயே அமைந்து. வருகிறது.

அயோத்திகதையில் பரசூரன் என்று இடம் பெறும் பெயர் கம்பனில் பரசுராமன் என்று அமைந்துள்ளது. அயோத்தி கதையில் பரசூரன் என்ற பெயர் பின்னர் ராமரால் பரசுராமன் என மாற்றப்பட்டதாகச் செய்தி அமைந்துள்ளது. அயோத்திகதையில் கார்த்தவீரியன் என்பவன் முனிவன் என்று கூறப்படுவது கம்பனில் ஓர் அரசன் என அமைந்துள்ளது.

*9. மயில்ராவணன் கதை*

அயோத்தி கதையில் இடம் பெறும் மயில்ராவணன் கதை வான்மீகியிலோ கம்பனிலோ இடம்பெறவில்லை. ஆனால் இக்கதை இந்தியாவின் பலபகுதிகளில் வழங்கி வருவதாகத் தெரிகிறது. இக்கதையின் தோற்றம் பற்றித்தெளிவாக அறியுமாறில்லை.

இந்தியாவில் வங்க மொழியில், 'மகீராவணெ பாலா'[7] என்ற பெயரில் இக்கதை காணப்பெறுகின்றது. இக்கதையின் ஆசிரியர் கிருத்திவாசகர். இக்கதையில் மயில்ராவணன் என்றபெயர் 'மகீராவண' என அமைந்துள்ளது.

இந்தியாவின் தென்பகுதியில் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளிலும் இக்கதை காணப்படுகின்றது. தெலுங்கு மொழியில் இது 'மயிராவணன் கதை'[8] என்ற பெயரில் உள்ளது. கருநாடகத்தில் இக்கதையினை யக்ஷகானத்திற்குப் பயன் படுத்துகின்றனர். மேலும் இக்கதை 'மகிராவணன் கதை'[9] என்ற பெயரில் வழங்குகிறது. மலையாள மொழியில் இக்கதை 'பாதாள ராமாயணம்'[10]. என்ற பெயரில் வடக்கன் கோட்டயம்கேரள வர்மாவால் கிளிப் பாட்டு வடிவில் எழுதப் பட்டுள்ளது.

---

7. கடிதவழித்தகவல், எஸ் சிங்காரவேலு, பேராசிரியர், இந்தியவியல் துறை, மலேசியப்பல்கலைக் கழகம், (13—2—1981)
8. தகவல், C.R. சர்மா, சேராசிரியர் தெலுங்கு மொழித் துறை, ம கா பல்கலைக்கழகம் (18—12—1986)
9. தகவல் P.S. சீனிவாசன் பேராசிரியர், கன்னட மொழித்துறை, ம.கா.பல்கலைக்கழகம் ('7—12—86)
10. விஸ்வ விஞ்ஞான கோஸம் தொகுதி, 8, பக். 242. தகவல், C.J. ராய், பேராசிரியர், மலையாள மொழித்துறை, ம.கா. பல்கலைக்கழகம் (17—12—86)

தெலுங்கு கன்னட மொழியில் அமைந்துள்ள 'மயி' 'மகி' என்ற சொற்கள் 'பாதாளம்' என்ற பொருளை உணர்த்தும். மலையாளத்தில் பாதாளம்' என்ற சொல்லே இடம் பெற்றுள்ளது. தமிழில் காணப்படுகிற 'மயில்' என்னும் வடிவம் தெலுங்கு மொழிச் செல்வாக்கால் ஏற்பட்டிருக்கலாம்.

தமிழில் மேலும் 'பெரியஎழுத்து மயில் ராவணன்கதை' என்றும் 'மாருதிவிஜயம் என்னும் மயில்ராவணன் சரித்திரம்' என்றும் இக்கதை கூறும் நூல்கள் உள்ளன.

மேலும் தமிழ் நாட்டில் மராட்டியர்களால் நடத்தப் பட்டுவரும் 'பாவைக் கூத்தில் இக்கதை இடம்பெற்று நாட்டுப் புறங்களிலும் பரவியுள்ளது.

இந்தியாவுக்கு வெளியே தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும்[11] இக்கதை வழங்கி வருகிறது. மலாய் மொழியில் 'மயில்' ராவணன் என்பவன் 'பாதாள மகா ராயன்' என்றும் தாய்மொழியில் 'மாஇய ராப்' என்றும் குறிக்கப்பெறுகிருன்.

*10. அசலவன்கதை*

அசலவன் கதை கம்பனில் இடம் பெறவில்லை. ஆனால் தமிழில் ஒட்டக்கூத்தரால் பாடப்பட்டது என்று கூறப்படுகின்ற 'உத்தரகாண்டத்தில்' இக்கதை இடம் பெறுகிறது. வால்மீகியிலும் இக்கதை உத்தரகாண்டத்தில் அமைந்துள்ளது.

அயோத்தி கதையில் இடம் பெற்றுள்ள அசலவன் கதை நிகழ்ச்சி ஒட்டக் கூத்தரின் உத்தரகாண்டத்தில் பற்பல வேறுபாடுகளுடன் உள்ளது.

மேற்கூறப்பட்ட கதைகளுள் மயில்ராவணன் கதையும், அசலவன் கதையும் மற்றக் கதைகளைவிட மூலக்கதையோடு மிகவும் பின்னிப் பிணைந்து அமைந்துள்ளன என்பதும் குறிக்கத்தக்கதாம்.

*கதை ஆய்வு :*

அயோத்தி கதை, திசதரனின் திருமண நிகழ்ச்சியிலிருந்து தொடங்கி ராமரின் வீரதீரச் செயல்களை விளக்கி ராமர் இறுதியில் கயிலாயத்தில் சென்றிருப்பதுடன் முடிவடைகிறது. பொதுவாக

---

11. கடிதவழித்தகவல், எஸ். சிங்காரவேலு, பேராசிரியர், இந்தியவியல் துறை, மலேசியப் பல்கலைக்கழகம், (13—2—1981)

இராமாயணக் கதை ஆய்வாளர்[12] இராமாயணத்தில் அடிப்படைக் கதைகளாக அமைவன அயோத்தி மன்னன் (தசதரன்) ராமர் கதையும் இலங்கை வேந்தன் ராவணன் கதையும் என்று கூறுவர். இவை தவிர இராமாயணத்தில் இடம் பெறும் நிகழ்ச்சிகள் யாவும் பிற் சேர்க்கை என்று கூறுவர். அயோத்தி கதையிலும் ராமர் ராவணன் என்ற இருவரே மையமாக அமைகின்றனர். ஏனைய நிகழ்ச்சிகளெல்லாம் அவர்களுக்குத் துணை நிலைகளாகவே அமைகின்றன.

அயோத்தி கதையில் மூன்று தலைமுறை நிகழ்வுகள் இடம் பெறுகின்றன. அவை முதலில் திசதரன் அடுத்து ராமர் இறுதியில் அசலவன் என்பவரைப் பற்றியன. இம்மூவருள் ராமரே விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்பட்டு தெய்வநிலையினை அடைகிறார்.

பொதுவாகத் தமிழக நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் கதைத்-தலைவன் வீரச் செயல்கள் புரிந்து இறந்து பட்டபின்னர் அவன் வரம் பெற்று ஊர்த்தெய்வமாக மாறியமையைக் காணலாம். அயோத்தி கதையில் ராமரின் இறப்பு நிகழ்ச்சி காட்டப்படாமல் அவர் கயிலா-யத்தில் சென்று வீற்றிருந்தார் என்பது மற்றைய கதைப்பாடல் தன்மையினின்றும் மாறுபட்ட அமைப்பாக உள்ளது.

## நிகழ்ச்சிகள் ஒப்பீடு

*சீதைபிறப்பு :*

அயோத்தி கதையில் சீதையின் பிறப்பு பற்றிய நிகழ்ச்சி சிவன் கோபமுற்று தன்னுடைய மணிப்பிரம்பால் ராவணனின் வாயிலில் கற்படியில் அடித்ததால் பிறந்தாள் என்று கூறப் படுகிறது.

வடமொழியில் உள்ள அத்புத இராமாயணத்தில் இராவணனின் இந்திரியத்திலிருந்து தோன்றியமகள் சீதை என்று கூறப்பட்டிருக்கிறது. இதைப்போன்று இடைக் காலத்தில் வங்காள மொழியில் தோன்றிய இராமாயணங்களிலும் காணப்படுகிறது.[13]

கிழக்காசிய நாடுகளில் வழங்கும் இராமாயணக் கதைகளிலும் சீதை இராவணனின் மகளாகக் கூறப்படுகிறாள்.[14]

---

12. Romila Thapar, Exile and Kingdom, P.6, 1978.
13. சுகுமார் சென், வங்க இலக்கியவரலாறு, ப.104, 1965 (மொ.பெ.ஆ) பெ ந. அப்புஸ்வாமி.
14. Harry M. Buck, Introduction to the Study of Ramayana in South and South East 'Asia', P.83. I International Tamil Conference Vol.1, 1966.

மேலும் புத்தசாதகக் கதைகளில் சீதை ராமரின் சகோதரியாக கூறப் பட்டுள்ளாள்.[15]

அயோத்தி கதையில் சீதை நேரடியாக ராவணனின் மகள் என்று சுட்டப் படாவிட்டாலும் அவன் வீட்டு நடையில் பிறந்தாள் என்று ராவணனோடு தொடர்புப் படுத்திக் கூறப் பட்டுள்ளாள் என்பது குறிப்பிடத்தக்கது.

*சீதை, குகன் எண்ணங்கள் :*

அயோத்தி கதையில் ராமர் சீதை திருமணம் நடைபெறுகின்றபொழுது ராமர் சீதையிடம், 'உன் கழுத்தில் நாகலோகமாலை, நகரெற்றின மாலைகள் ஏன் காணப்படவில்லை என்று கேட்கிறார்

சீதை ராமரிடம் உம் பாதம் பட்டதும் கல்லே பெண்ணானாள்; அது போல் உம் பொற்பாதமோ, திருமேனியோ என் மாலைகளில் பட்டு பெண்கொடிமார் தோன்றிவிட்டால் நீர் என்னை முகம் பாராமல் பெண் கொடிமார் மீது ஆசை கொண்டு விடுவீரோ என்று மாலைகளைக் கழற்றி விட்டேன்' எனக் கூறுகிறாள்.

இந்தி மொழியில் துளசியால் எழுதப்பட்ட 'இராமசரிதமானஸ் என்ற நூலின் ராமர் வில்லை யொடித்தபின் சீதை வெற்றி மாலையை ராமருக்குச் சூட்டுகிறாள். சீதையிடம் தோழியர் ராமர் திருவடியினைத் தொடுமாறு வேண்டுகின்றனர். சீதை தயங்குகிறாள். அவளுடைய கைகளில் வைரக்கல் வளையல்களும் மோதிரங்களும் நிறைய இருக்கின்றன, ராமருடைய பாதம்பட்டு இக்கற்களெல்லாம் பெண்களாகி விட்டால் என்ன செய்வது என்ற பயமே அவள் தயக்கத்திற்கான காரணமெனத் துளசிதாசர் குறிப்பிடுகிறார்.[16]

தெலுங்கு மொழியில் உள்ள 'மொல்ல ராமாயணத்தில்' ராமர் குகனிடம் ஆற்றைக்கடப்பதற்கு வேண்டும் பொழுது குகன் ராமரை ஓடத்தில் ஏற்றுவதற்குத் தயங்கி, ஐயனே நின் பாதம் பட்டுக் கல்லே பெண் ஆகியது. அது போல இந்த ஓடமும் பெண்ணாகி விடுமோ என அஞ்சி தான் நான் ஏற்றுவதற்குத் தயங்குகிறேன்'. எனக் கூறுகிறான்.[17]

---

15. Romila Thapar, Exile and Kingdom, P.7, 1978.
16. இரா. தண்டாயுதம், கம்பனும் துளசியும், பக். 237—244, இராமநாத சுவாமி திருக்கோவில் கும்பாபிஷேகமலர், 1975.
17. தகவல், C.R சர்மா, பேராசிரியர், தெலுங்கு மொழித்துறை, ம கா. பல்கலைக்கழகம், (17—12—86)

ஆக, 'கல் பெண்ணாகிய கதைச் செய்தி' படைப்பாளர் உள்ளங்களை எவ்வாறெல்லாம் பாதித்துள்ளது என்பதனை மேற்கூறிய செய்திகளால் உணரலாம்.

### நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்

இக்காவியத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகளெனக் கூறப்படுகிற மீண்டுவரல் அமைப்பு, நாட்டுப்புற உவமைகள், பழமொழிகள் வட்டார வழக்குச் சொற்கள், இயற்கைஇறந்த நிகழ்ச்சிகள் என்பன அமைந்து வந்துள்ளன.

மேலும் இக்காவியம் மக்கள் மத்தியில் வில்லுப்பாட்டாக பாடப் பட்டு வந்தமையால் சில இடங்களில் ஒரு நிகழ்ச்சி முடிந்து அடுத்த நிகழ்ச்சி தொடங்கும் பொழுது பாடகன் இடையிட்டு மக்களிடம்,

'கேள்ப்பீர் பூலோகத்தில் பெரியோர்களே
கெற்ச்சிதமாய் காறணங்கேள்க்க வேணும்'

என்று நேரடியாகக் கூறுவது போன்ற அமைப்பும் சாணப்படுகிறது.

### பாத்திரப் பெயர்கள்

பாத்திரப் பெயர்கள் சில, ஏனைய இராமாயணத்தில் குறிப்பாகக் கம்ப ராமாயணத்தினின்றும் சிறிது வேறுபட்டுக் காணப்படுகின்றன. அவை திசதரன், தினகரன் (ஜனகன்) இந்திரசெயித்து, விபூஷணன், பரசூரன், சுக்கிறீபன், வண்டோதரி, அங்குதன் என்பன. மேலும் இக்காவியத்தில், கம்பனில் இடம் பெற்ற சில பாத்திரங்கள் இடம்பெறாமலும், கம்பனில் இடம் பெறாத புதிய பாத்திரங்கள் சில இடம் பெற்றும் உள்ளன. இக்காவியத்தில் ராமர் பல பெயர்களால் குறிக்கப் படுகிறார் லெச்சுமணனும் இளைய பெருமாள் என்ற பெயரில் சுட்டப் படுகின்றான்.

### யாப்பு

இக்காவியம் தொடக்கம் முதல் இறுதி வரை ஒரே சீரான அமைப்பாகக் காணப்படுகிறது. சில கதைப்பாடல்களில் நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப மொழியமைப்பு மாறுபட்டு அமையும்; மேலும் இடை இடையே விருத்தங்களும் இடம்பெறும்; இக்கூறுகள் இக்காவியத்தில் காணப்படவில்லை. இருப்பினும் இக்காவியத்தில் ஈரிரண்டு அடிகளுக்கு மோனை ஒன்றி வருவது சிறப்பாக அமைந்துள்ளது.

### புதினத்தின் முன்னோடி

நாட்டுப்புறக் கதைக்காவியங்கள் அல்லது கதைப்பாடல்கள் உருவத்தால் பாடல் அமைப்பினைப் பெற்றிருந்தாலும் உள்ளடக்க அமைப்பில்

உரைநடைப் புதினங்களை ஒத்துக்காணப்படுகின்றன. தமிழ் இலக்கிய வரலாற்றில் நாட்டுப்புறக் கதைகளை (Folk Tales) தற்காலச் சிறுகதை களின் முன்னோடிகளாகவும் நாட்டுப்புறக் கதைக் காவியங்கள் (Folk Epics) கதைப்பாடல்களை (Folk Ballads) தற்காலப் புதினங்-களின் முன்னோடிகளாகவும் கருதலாம்.

## வாழ்வியல் செய்திகள் :

*கார்த்திகை மாசம் கார்த்திகை நக்ஷத்திரம்*

அயோத்திகதையில் இடம் பெற்றுள்ள மாவேலி ராசன் கதை யில் மாவேலி ராசன், மூன்றடி மண் இடம் கொடுக்க முடியாமல், உலகளந்த பெருமாளால் சிறைப்படுத்தப் படுகிறான். அப்பொழுது மாவேலி ராசன் பெருமாளிடம் 'கார்த்திகை மாசத்தில் கார்த்திகை நக்ஷத்திரத்தில் எந்தன் குடி மக்கள் வீடுகளில் விளக்கு ஏற்றி வைத்து மகிழ்ச்சியுடன் இருப்பதனை நான் பார்த்து வரவேண்டும்' என்று வரம் கேட்டுக் கொண்டான். பெருமாளும் வரம் கொடுத்து விட்டார்.

அந்நிகழ்ச்சியினைக் குறிப்பிடும் வண்ணம் இன்றும் குமரி மாவட்டத்தில் கார்த்திகை மாதத்தில் திருக்கார்த்திகைப் பண்டிகை[18] நாளில் மக்கள் வீட்டின் முன் புறம் பல விளக்குகளை ஏற்றி வைக்-கின்றனர் வீடுகளில் பலவித தின்பண்டங்கள் செய்யப்படும். பின்னர் ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் அரிசிமாவில் மஞ்சளை அரைத்துச் சேர்த்து நீர்விட்டுக் கலந்து உண்டாக்கிய கலவையினை வலது உள்ளங் கையிலும் விரல்களிலும் படும்படி ஒற்றி வாயிற் கதவுகளில் கை அடையாளங்கள் இடுகின்றனர். இரவில் மாவேலி ராசா ஊர்சுற்றிப் பார்க்க வருவதாகவும் இக்கை அடையாளங்கள் கதவுகளில் இருக்கு மானால் அந்த வீடுகளில் திருக்கார்த்திகை கொண்டாடப்பட்டுள்ளது என்று அவர் அறிந்து மகிழ்வதாகவும் இப்பகுதி மக்கள் நம்புகின்றனர். வீட்டுக்கதவுகளில் கை அடையாளம் இடப்படவில்லை யென்றால் திருக் கார்த்திகைகொண்டாடப்படவில்லை என்று அவர் சபித்து விடுவார் என்றும் மக்கள் கூறுகின்றனர்.

இவ்வாறாக மக்கள் மத்தியில் இன்றும் வழக்கத்திலிருக்கிற ஒருவாழ்வியல் செய்திதான் கதைக் காவியத்திலும் குறிப்பிடப் பட்டுள்ளது.

---

18. இப்பண்டிகை பற்றிய ஆய்விற்குக் காண்க.
S SenGupta & K. Krishnaswamy, FireFestival of India, 1985.

குமரி மாவட்டத்தில் திருக்கார்த்திகைப் பண்டிகை மாவேலி ராசாவின் சிறப்பு நாளாகக் கொண்டாடப்படுகிறது. என்பது கதைக் காவியம் வழியும் மக்கள்வழக்கு வழியும் அறிய முடிகிறது.

ஆனால் தமிழகத்தின் நடுப்பகுதியிலும், வட பகுதியிலும் திருக் கார்த்திகைப் பண்டிகை நாளின் மாவேலியின் சிறப்பு நாளாகக் கொண்டாடப்படுவதாகத் தெரியவில்லை, மாறாக மாவேலியின் அழிவு குறித்து மக்கள் மகிழ்வதாகத் தெரிகிறது. எவ்வாறெனில் திருக் கார்த்திகை நாளில் தீப்பந்தங்களைக் கொளுத்தி மக்கள் (பெரிதும் சிறுவர்) சுற்றிச்சுற்றி ஆடுகின்றனர். இது 'மாவளி சுற்றி ஆடுதல்' என்று குறிப்பிடப்படுகிறது. சில பகுதிகளில் இவ்வாறு 'மாவளி சுற்றி ஆடும் பொழுது' பாடலும் பாடப்படுகிறது.

'மாவளிக் காரன் பொண்டாட்டி
மரக்காப் புள்ளே பெத்தாளாம்
எடுக்க வந்த சீமாட்டி
இடுப்பொடிஞ்சி செத்தாளாம்
பாக்க வந்த சீமாட்டி
பல்லொடெஞ்சி செத்தாளாம்
கேக்க வந்த சீமாட்டி
கீளே விளுந்து செத்தாளாம்
தூக்க வந்த சீமாட்டி
தோளொடிஞ்சி செத்தாளாம்
சும்மா வந்த சீமாட்டி
சுருண்டு விளுந்து செத்தாளாம்.[19]

இப்பாடலில் இடம் பெற்றுள்ள 'மாவளி' என்பது மவேலி அல்லது 'மாவலி' என்பதன் மாற்று வடிவமாகும்.

கேரள மாநிலத்தில் கேரளத்துக்கே உரிய மிகச் சிறந்த பண்டிகையாகக் கொண்டாடப்படும் 'ஓணம்பண்டிகை' மாவேலியினை மையமாகக் கொண்டுகொண்டாடப்படும்பண்டிகையாகும். கேரளத்தில் திருக்கார்த்திகைப் பண்டிகை மாவேலியுடன் தொடர்புப் படுத்திக் கூறப்படவில்லை.

---

19. தி. நடராசன், நாட்டுப்புறச் சிறுவர் பாடல்கள், ப,31, 1979.

தமிழகத்தில் குமரி மாவட்டம் தவிர எஞ்சிய பகுதிகளில் மாவேலிக்குச் சிறப்பில்லாமல் இருக்க குமரிமாவட்டத்தில் மாவேலிக்குக் கிடைத்த சிறப்பிடம் கேரள மானிலத்தினைச் சார்ந்து குமரிமாவட்டம் அமைந்திருப்பதால் ஏற்பட்டதாகக் கருதலாம்.

மேலும் தமிழகத்தில் உள்ள மகாபலிபுரம் என்ற இடப்பெயரும் கேரளத்தில் உள்ள 'மாவேலிக்கரா' என்ற இடப்பெயரும் மாவேலி-யோடு தொடர்புடையன என்பதும் இங்கு நினைவு கூரத்தக்கது!

*மகோதர நாடார்*

கம்பனில் காணப்படுகின்ற 'மகோதரன்' என்ற பெயர் இக்-காவியத்தில் 'மகோதர நாடார்' என்று குறிக்கப்படுகிறது. இக்காவியத்தில் 'மகோதர நாடார்' முதலில் எமதர்மனின் அமைச்சராக இருந்து பின்னர் இராவணனின் அமைச்சராக மாற்றம் பெறுகிறார்.

மகோதரன் என்பவன் மகோதர நாடாராகக் குறிக்கப்பெறுவது இக்காவியம் தென்பகுதியில் பெரும்பான்மை இனத்தவராக வாழும் நாடார் சமுதாயத்தினரிடையே பெரிதும் வழங்கி வந்தமையால் ஏற்பட்ட விளைவாகலாம்.

*பத்திரகாளி*

இது ஒரு நாட்டுப் புறத்தெய்வம். இக்கதைக்காவியத்தில் பத்திர காளி பல இடங்களில் குறிப்பிடப்படுகிறாள். பத்திரகாளி நாடார் குல மக்களின் 'குல தெய்வம்' என்றும் கூறப்படுகிறது. ராமருக்கு இவள் சகோதரி உறவுடையவள் என்றும் இக்காவியம் சுட்டுகிறது. இக்காவியத்தில் பத்திரகாளி பங்கு பெறுவதற்கும் மக்கள் வாழ்வியலே அடிப்-படை. கேரளநாட்டிலும் பத்திரகாளியோடு இராமாயணம் நெருங்கிய தொடர்பு கொண்டது எனப்பொதுமக்கள் நம்பி வருகின்றனர். என தெ. பொ. மீனாட்சிசுந்தரன்[20] குறிப்பிட்டுள்ளார்.

*சடங்குகள்*

இக்காவியத்தில் திசதரனின் திருமணத்தின் பொழுது அயோத்தி யில் நடந்ததாகச் சுட்டப்படும் சடங்கு முறைகளை இன்றும் தென் மாவட்டங்களில் காணலாம். குறிப்பாக மாமன் சடங்கு, ஏழாம் நீர்ச் சடங்கு என்பவைகளும், இறப்புச் சடங்குகளும், திசதரன் நினைவு நாளன்று அன்னதானம் வழங்கல் என்பவைகளும் இன்றும் வழக்கத்தில் உள்ளவைகளே.

---

20. தெ பொ. மீனாட்சிசுந்தரன், 'கம்பநாடகம்' ப. 44, நீங்களும் சுவையுங்கள், 1978.

*சோதிடம்*

இக்கதையில் 'சோதிடம் பார்த்தல்' நிகழ்ச்சி இடையிடையே அமைந்துள்ளது. சோதிடம் பார்த்தல் நாட்டுப்புற வழக்கங்களில் ஒன்று. சோதிடன் சோதிடம் கூறும் பொழுது பின் நடப்பவைகளை எடுத்துக் கூறுகிறான். அந்தப்படியே கதை நிகழ்ச்சிகளும் பின்னர் அமைகின்றன. எனவே சோதிடனை நாடகங்களில் அமைந்துவரும் கட்டியங்காரன் என்னும் பாத்திரத்துடன் இணைத்து எண்ணும் படியாக உள்ளது.

மேற் கூறப்பட்ட செய்திகள் போன்று மேலும் பல செய்திகள் இந்நூலுள் காணப்படுகின்றன இத்தகைய வாழ்வியல் செய்திகள் மக்களின் பண்பாட்டு வரலாற்றினை அறிவதற்குச் சிறந்த ஆதாரங்-களாகும்.

*இராமாயணத்தின் தாக்குறவு*

இப்பகுதியில் இராமாயணத்தின் தாக்குறவு (influence) பொதுவாக நாட்டுப்புறங்களிலும் மற்றைய பகுதிகளிலும் எவ்வெவ்வாறு காணப்பெறுகின்றன என்று இப்பகுதியில் விளக்கப்படுகின்றது.

*இடப் பெயர்கள்*

தமிழகத்தில் உள்ள சில இடப்பெயர்களின் விளக்கம், மக்கள் வழக்கில் இராமாயணத்தோடு தொடர்புப் படுத்திக் கூறப்படுகிறது.

குமரிமாவட்டத்தில் உள்ள ஓர் இடத்தின் பெயர் (ஊர்ப் பெயர்) 'முஞ்சிறை' என்பதாகும். இவ்வூர் வழியாகச் செல்லும் ஆற்றில் முன்னர் மீன் அதிகமாக வருவதால் மக்கள் மீனைப் பிடிப்பதற்கு வலை போன்ற பொருட்களைப் பயன்படுத்தி மீனைச் சிறைப்படுத்தியதால் இவ்விடம் 'மீன் சிறை' எனப் பெயர் பெற்றுள்ளது. காலப்போக்கில் மக்கள் வழக்கில் அவ்வடிவம் திரிந்து 'முஞ்சிறை' என்றாகியுள்ளது.

இப்பொழுது 'முஞ்சிறை' என்பதற்கு மக்கள் வழக்கில் (Folk-Etymology) ராவணன் சீதையை அசோகவனத்தில் சிறை வைப்பதற்கு முன் இங்கு தான் சிறை வைத்தான்; எனவே தான் இவ்விடம் 'முஞ்சிறை' எனப் பெயர் பெற்றுள்ளது என்கின்றனர்.

இடப்பெயர்கள் பெயர் பெற்றமைக்கு உண்மைக் காரணம் ஒன்றிருக்க மக்கள் வழக்கில் இராமாயணத்தின் தாக்குறவால் சில விளக்கங்கள் கூறப்படுகின்றன.

குமரிமாவட்டத்தில் அமைந்துள்ள மற்றோர் இடம் 'வில்லுக் கீறி' என்பதாகும். தாடகையை அழிப்பதற்கு ராமர் இங்கு நின்றுதான் வில்-வில்கணை தொடுத்தார். கணைதொடுப்பதற்கு முன்னர் அவர் வில்லை தரையில் ஊன்றியிருந்த பொழுது வில்கீறிய அடையாளம் ஏற்பட்ட-தால் இவ்விடம் இப்பெயர் பெற்றது என்பர். மேலும் இவ்விடத்திற்கு இது ராமர் வில்லைக் கீறிய (உடைந்த) இடம் என்ற காரணமும் கூறப்படுகிறது.

மாங்கரை என்றொரு இடத்தினை மாரீசன் மானாக நின்று கரைந்த (சப்தமிட்ட) இடம் என்று கூறப்படுகிறது. சடாயுபுரம் என்னும் ஓர் இடம் சாடயு அறுபட்டு விழுந்தஇடம் என்று கூறப்படுகிறது.

திருநெல்வேலி மாவட்டத்தில் 'குரங்கணி' என்பது ஓர் இடம். ராவணன் சீதையினைத் தேரில் தூக்கிச் சென்ற பொழுது, சீதை நகைகளைக் கழற்றி எறிந்த போது அவை இவ்விடத்தில் தான் விழுந்தன என்றும் விழுந்த நகைகளை அங்கு வாழ்ந்திருந்த குரங்குகள் எவ்வணியினை எவ்விடத்தில் அணிவது எனத் தெரியாமல் மாற்றி மாற்றி அணிந்து மகிழ்ந்திருந்தன என்றும் அதனால் தான் இவ்விடம் குரங்கணி எனப்பெயர் பெற்றுள்ளது என்றும் கூறப்படுகிறது.

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள மானூர் என்பது மாரீசன் மானாக நின்ற இடம் என்றும் சீதபற்பநல்லூர் என்பது ராமர் சீதையைப் பறி கொடுத்த இடம் என்றும் கூறப்படுகிறது.

மேற்கூறியவாறு இடப்பெயர்களுக்கு விளக்கம் கூறுவதனை தமிழகத்திலும் இந்தியாவின் மற்றைய பகுதிகளிலும் மேலும் ஆராய்ந்தால் பல செய்திகளை அறியலாம்.

ரா. பி. சேதுப்பிள்ளை[21] நா. வானமாமலை[22] ஆகியோரும் மேற்கூறியவாறு பெயர் விளக்கம் கூறுகிற ஊர்கள் சிலவற்றினைக்குறிப்பிட்டுள்ளனர்.

இடப்பெயர்களுக்குக் காரணம் கூறுவதுபோல, சில இடங்களின் தன்மைகளும் இராமாயணத்தாக்குறவால் சுட்டப் பெறுகின்றன.

திருநெல்வேலி மாவட்டத்தில், திருச்செந்தூர் வட்டத்தில் 'ஆழ்வார் தோப்பு' என்று ஓர் இடம் உள்ளது. இவ்விடத்தில் உள்ள

---

21. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், பக். 286—287, 1976.

22. நா வானமாமலை, பழங்கதைகளும் பழமொழிகளும், பக். 157-175, 1984.

கிணற்று நீரில், உப்புச்சுவை மிகுதியாக உள்ளது. ஆனல் இவ்விடத்தினைச் சார்ந்த சுற்று வட்டாரங்களில் உள்ள கிணற்று நீர் நல்ல நீராக உள்ளது. எனவே இவ்விடத்தில் நீரில் உப்புச்சுவை மிகுதியாக இருப்பதற்குக் காரணம் சூர்ப்பனகை இவ்விடத்தில் சிறுநீர் கழித்திருந்தாள் என்று மக்கள் வழக்கில் கூறப்பெறுகிறது.

*மலைப் பெயர்கள்*

மலைகள் பல இராமாயணத்தின் தாக்குறவால் பெயர் பெற்றுள்ளன. குமரிமாவட்டத்தில், மருந்துவா மலை (மருந்து வாழ்மலை) மகேந்திரமலை, தாடகை மலை என்றும் திருநெல்வேலி மாவட்டத்தில், மருத்துவாமலை, சஞ்சீவிமலை மகேந்திரகிரி, குறுமலை என்றும் பலமலைகள் உள்ளன.

மருத்துவாமலை, சஞ்சீவிமலை என்பன ராமலெச்சுமணரின் மயக்கம் தெளிவிக்க அனுமன் கொண்டு வந்த மலைகள் என்றும் மகேந்திரமலை என்பது அனுமன் கடலைத் தாண்டுவதற்கு ஏறி நின்றது என்றும் தாடகை மலை என்பது தாடகை படுத்திருந்தால் எவ்வாறிருக்குமோ அது போல இம்மலை காணப்படுவதால் இவ்வாறு அழைக்கப்படுகிறது என்றும் குறுமலை என்பது அனுமன் மருத்துவா மலையினைத் தூக்கி வரும் பொழுது சிதறுண்டு விழுந்த ஒரு துண்டுப்பகுதி என்றும் மக்கள் மலைகளுக்கு விளக்கம் கூறுகிறார்கள்.

தாடகை மலைதவிர ஏனையவை அனுமனோடு தொடர்புப் படுத்தப் பட்டுள்ளன என்பது நோக்கத் தக்கதாம்.

மலைகள் பெயர் பெற்றது போல மலைகளில் உள்ள சில பகுதிகளும் இராமாயணத்தோடு தொடர்புப் படுத்தப் படுகின்றன.

மதுரைக்கருகில் உள்ள திருப்பரங்குன்றம் மலை மீது உள்ள சிக்கந்தர் மசூதியினை அடுத்து இயற்கையாகக் குடிசை போன்று அமைந்துள்ள ஓரிடத்தினை, மக்கள் 'இது ராமர் தங்கிய இடம்' எனக் குறிப்பிடுகின்றனர்.

மேலும், பல மலைகளில் பாதச்சுவடுகள் பொறிக்கப் பட்டுள்ளன. இச்சுவடுகளை 'ராமர் பாதம்' என மக்கள் வழங்கி வழிபடுகின்றனர்.

மதுரை மாவட்டத்தில் பல இடங்களில் மலைகளின் குகைகளில் அமைந்துள்ள சமணர்களின் படுக்கைகளை மக்கள் 'பஞ்சபாண்டவர் படுக்கை' எனக் குறிப்பிடுகின்றனர் என்பது இங்கு இணைத்து எண்ணத்தக்கது.

*ராமாயணச் சாவடி*

மதுரை நகரில் வடக்கு மாசி வீதியில் உள்ள ஒரு சாவடி 'ராமாயணச் சாவடி' என அழைக்கப்படுகிறது. இச்சாவடியில் முன்னர் இராமாயணம் படிக்கப்பட்டதாகக் கருதலாம்.

*நதிப்பெயர்*

திருநெல்வேலி மாவட்டத்தில் 'பணகுடி' என்னும் இடம் வழியாக கடந்து செல்லும் நதி 'அனுமன் நதி' எனப் பெயர் பெற்றுள்ளது.

அனுமன் கடல் தாண்டும் பொழுது வால்ப்பகுதியின் உராய்வினால் பூமியில் ஏற்பட்ட தடமே 'அனுமன் நதி' என மக்களால் வழங்கப் பெறுகின்றது. கருநாடகத்தில், மங்களூர் பகுதியில், ஒரு நதியின் பெயர் 'சீதா நதி' என உள்ளது.

*தீர்த்தப் பெயர்*

திருநெல்வேலி மாவட்டத்தில், தாமிரபரணி ஆற்றினை ஒட்டிய பகுதியில் உள்ள ஒரு தீர்த்தம் 'சடாயு தீர்த்தம்' எனப் பெயர் பெற்றுள்ளது. இங்குதான் சடாயுவைத் தகனம் செய்யப் பட்டதாகக் கூறப் பெறுகின்றது.

*உயிரினங்கள்*

உயிரினங்கள் சில இராமாயணத் தாக்குறவால் பெயர் பெற்றுள்ளன.

*ராமக் கோழி*

மதுரை மாவட்டத்தில் நீரில் வாழும் கோழி வகைகளுள் ஒன்று 'ராமக் கோழி' எனக் குறிப்பிடப் படுகிறது. இக்கோழியின் தலையில் ராமம் (நாமம்) இட்டது போன்ற அடையாளம் காணப் படுகிறது.

மதுரை மாவட்ட மக்கள் வழக்கில் 'நாமம்' என்ற சொல் 'ராமம்' என்று வழங்கப்படுகிறது. இவ்வழக்கு சற்று சிந்திக்கத்தக்கது. இம்மாவட்ட மொழி வழக்கில் 'நகர' முதலான சொல் எதுவும் 'ரகர' முதலாவதாகக் காணப் பெறவில்லை. 'நாமம்' என்ற சொல் 'ராமம்' என மாறியுள்ளதனைக் கூர்ந்து நோக்கும் பொழுது, நாம அடையாளம் ராமருக்கு இடப்பட்டிருப்பதாலும் மேலும் ராமபக்தர்கள் நாமத்தினை விரும்பி இட்டிருப்பதாலும் 'நாமம்' என்பது 'ராமம்' என ஆயிற்று எனக்கருத இடமளிக்கிறது.

*ராமபாணப் பூச்சி*

இப்பூச்சி புத்தகங்கள், துணிகள் போன்றவற்றைத் துளையிட்டு அழிக்கும் தன்மையது. துளையிடும் தன்மையால் இப்பூச்சி 'ராமபாணப் பூச்சி' எனப் பெயர் பெற்றுள்ளது.

குமரிமாவட்டத்தில் தவளை வகைகளுள் ஒன்று 'நாமத்தவளை' என்று வழங்குகிறது. இத்தவளையின் தலைப்பகுதியிலிருந்து முதுகு வரை நாம அடையாளம் காணப்படுகிறது. நாட்டுப்புறமருத்துவர் இத்தவளையினை வாத நோய்க்குரிய மருந்துப் பொருளாகக் கொள்கின்றனர். மற்றும் நெற்றியில் நாம அடையாளமுடைய குரங்குவகைகளுள் ஒன்று 'நாமக்குரங்கு' என வழங்கப்படுகிறது. 'நாமத்தவளை' 'நாமக்குரங்கு' என்ற பெயர்களும் மேலைச் செய்திகளோடு இணைத்து எண்ணத்தக்கன.

## பொருட்கள்

*ராமக் கரும்பு*

மதுரை மாவட்டத்தில் கரும்பு வகைகளுள் ஒன்று 'ராமக் கரும்பு' என வழங்கப்படுகிறது. இக்கரும்பில் நாம அடையாளம் காணப்படும். இக்கரும்பு மற்றைய பகுதிகளில் நாமக் கரும்பு எனக் குறிக்கப்படுகின்றது.

*சீத்தாப் பழம்*[23]

'சீத்தா' என்பது சீதையைக் குறிக்கும். சீத்தாப்பழம் பழ வகைகளுள் ஒன்று. இப்பழம் மேலை நாட்டவரால் (போர்த்துக்கீசியரால்) இந்தியாவிற்குக் கொண்டு வரப் பெற்றதாகக் கருத இடமுள்ளது. எவ்வடிப்படையில் இப்பழம் சீத்தாப்பழம் எனப் பெயர் பெற்றது என அறியுமாறில்லை.

குமரி மாவட்டத்தில் இப்பழம் 'பாஞ்சிப்பழம்'* என்றும், கன்னிப் பழம்' என்றும் வழங்குகிறது.

ஆந்திர மாநிலத்திலும் சீத்தாப்பழம் என்ற பெயர் உள்ளது. மேலும் சீத்தாப்பழத்தில் விதைகள் குறைவாகச் சதைப்பற்று மிகுதியாக உள்ள ஒருவகை, 'ராமசீத்தாப்பழம்' என்றும் குறிக்கப்படுகிறது.

---

23. இப்பழத்தினைத்தின்றால் சீதம் (சளி) பிடிப்பதால் இப்பழம் இப்பெயர் பெற்றது என்றும் ஒரு காரணம் கூறப்படுகிறது.

*குமரிமாவட்டத்தில் கைக்குட்டை (Hand kerchief) என்பது 'கைலேஞ்சு' என்றும் எலுமிச்சம் பழச்சாறு (Lemon juice) என்பது 'போஞ்சு' என்றும் வழங்குகின்றன. இவை பிற மொழிச் சொற்கள்.

*நெல்*

ஆந்திர மாநிலத்தில் உள்ள நெல் வகைகளுள் இரண்டு, ராம நெல்லு' 'சீதா நெல்லு' என்று வழங்கப் பெறுகின்றன.

*ராமாயணப் பலகை*

புத்தகங்கள் வைத்துப் படிப்பதற்கான ஒருவகை அமைப்புடைய பலகை தென் மாவட்டங்களில் 'ராமாயணப்பலகை' என்று கூறப்படு கிறது. இராமாயண நூல்கள் இப்பலகையில் வைத்துப்படிக்கப்பட்டு வந்ததால் பின்னர் இப்பலகையும் இப்பெயர் பெற்றதாகக் கருத இட முள்ளது.

***மக்கட்பெயர்***

இராமாயணத்திலுள்ள கதா பாத்திரங்களின் பெயர்கள் தமிழக த்திலும், இந்தியாவிலும் பரவலாக மக்கட் பெயர்களாக உள்ளன. பாத்திரங்களுள்ளும் இராமர், சீதை, இலக்குவன், பரதன், சத்துருக்கன், தசரதன், கோசலை, அனுமன் (அனுமந்தன்), விபீஷணன் என்ற பெயர்-களே பெரிதும் மக்கட் பெயர்களாகக் காணப் பெறுகின்றன. பாத்தி-ரப்பண்புகளின் மீது மக்களுக்கு ஏற்பட்ட ஈடுபாடே இதற்குக் காரணமெனலாம்.

இராமர்[24] என்ற பெயர் இராமன், இராமசாமி, இராமச்சந்திரன் போன்று எண்ணற்ற வடிவங்களில் வழங்கி வருகின்றது. லெச்சுமணன் என்ற பெயர், தமிழில் 'இளையபெருமாள்' என்றும் வழங்கி வருகிறது.

தமிழகத்தில் இரட்டையாகப் பிறக்கும் ஆண் குழந்தைகளுக்கு ராமன், லெச்சுமணன் என்று பெயரிடப் படுகிறது. பொதுவாக இராமாயணக் கதைக்ளில் ராமர் ஒரு தாயின் மகனாகவும் லெச்சுமணன் மற்றொரு தாயின் மகனாகவுமே உள்ளனர். புத்தசாதகக் கதை[25] யொன்றில் (தசரத ஜாதகா) ராமரும் லெச்சுமணனும் ஒருதாய் மக்களாகக் கூறப்படுகின்றனர். கதைகள் இவ்வாறிருக்க இரட்டைக் குழந்தைகளுக்கு இப்பெயரிடு முறை ராம லெட்சுமணர் இணைபிரியாமல் வாழ்ந்த காரணத்தால் ஏற்பட்டிருக்கலாம்.

மேலும் 'அயோத்தி' என்ற இடப்பெயரும் ஆள்ப்பெயராக வழங்கி வருகிறது.

---

24. காண்க, வ. பெருமாள், 'இராமன் எத்தனை இராமனடி' பக்.358-362 இராமநாத சுவாமி திருக்கோவில் கும்பாபிஷேக மலர், 1975.
25. Romila Thapar, Exile and kingdom, P. 7, 1978.

## இலக்கியங்கள்

இலக்கியங்களிலும் இராமாயணத்தின் தாக்குறவுகள் காணப்படு கின்றன.

### *சிற்றிலக்கியங்கள்*

தமிழில் இராமாயணக்கதை நிகழ்ச்சிகளைக் கருவாகக் கொண்டு உருவான சிற்றிலக்கியங்கள்[26] பல உள்ளன. அவை இராமாயணக் கீர்த்தனைகள், இராமாயணக்கும்மி, இராமர் தாலாட்டு, இராமாயணச் சிந்து, இராமாயணக் கப்பல், ஸ்ரீராமர் வனவாசம் அம்மானை என்பன.

### *நாட்டுப்புறப்பாடல்கள்*

நாட்டுப் புறப்பாடல் வகைகளுள் தாலாட்டுப் பாடலில் இராமாயண நிகழ்ச்சிகள் இடம் பெற்றும் அல்லது இராமாயணப் பாத்திரப் பெயர் கள் உவமைகளாக அமைந்தும் காணப்படுகின்றன. மற்றும் திருமண வாழ்த்துப் பாடல்களிலும் நலுங்குப் பாடல்களிலும் இராமாயணத்தின் தாக்குறவினைக் காணலாம். பெண்கள் நின்று கைகொட்டியாடும் கும்மிப் பாடலிலும் இராமாயணக் கதை இடம் பெறுகிறது.

### *பழமொழிகள்*[27]

இராமாயணத் தாக்குறவால் பல பழமொழிகளும் தோன்றியுள்ளன.

'இராமபாணம் பட்டு உருவினுப் போல'

'இராவண சந்யாசி போலிருக்கிறுன்'

'இராமனைப் போல ராசா இருந்தால்
அனுமனைப் போல சேவகனும் இருப்பான்'

'இராவணன் குடிக்கு மகோதரன் போலும்
சுயோதனன் குடிக்குச் சகுனி போலும்'

'இராமர் விட்ட பாணம்
திரும்பிப் பாத்தா காணோம்'

'படிப்பது இராமாயணம்
இடிப்பது பெருமாள் கோவில்'

இப்பழமொழிகள் வழக்கில் எவ்வெவ் சூழ்நிலையில் வழங்குகின்றன என்பதனைத் தெரிந்து ஆராய்ந்தால் மேலும் பல உண்மைகளைக் கண்ட றியலாம்.

---

26. ச.வே. சுப்பிரமணியன், திராவிடமொழி இலக்கியங்கள், பக்.143, 1986.

27 பழமொழிகள் சில 'கழகப் பழமொழி அகரவரிசை' (1970) என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டன.

மேலும் தமிழகத்தில்,

'விடிய விடியக்கதை கேட்டு
விடிஞ்ச பெறகு
சீதைக்கு ராமன் சித்தப்பண்ணும்'

என்ற பழமொழி பரவலாக வழங்கி வருவதாகும். இப்பழமொழி கன்னட மொழியில்

'பெளகான ராமாயண கேளி
ராமங்கூ சீதைகூ
ஏனு ஆக பேக்கு
அந்த கேளதா'
(காலைவரை ராமாயணம் கேட்டு
சீதைக்கும் ராமனுக்கும்
என்ன உறவுன்னு கேட்டான்)

என்று சிறு மாற்றத்துடன் வழங்கி வருகிறது.

தெலுங்கு மொழியில்[28] வழங்கும் ஒரு பழமொழியின் விளக்கமாக இராமாயணக் கதை நிகழ்ச்சியே சுட்டப்படுகிறது.

'நவ்வு நாலுகு, விதாலா சேடு'
(சிரிப்பு நாலு வகையிலும் கெடுதல்)

இப்பழமொழிக்குக் கூறப்படும் கதை நிகழ்ச்சியாவது ராமர் வனவாசம் சென்று ராவண சம்காரம் முடித்து பின்னர் சீதையுடன் மீண்டும் அயோத்திக்கு வந்தபொழுது பட்டாபிஷேகவிழா, சிறப்பாக நடைபெறுகிறது. விழாவினைப்பலர் கண்டுகளிக்கின்றனர். அப்பொழுது லெச்சுமணன் அடக்கு முடியாதவாறு சிரித்தானும்.

லெச்சுமணன் அவ்வாறு சிரிப்பதைப் பார்த்து,

1. ராமர் 'நான் ராவணன் உடன் வாழ்ந்த சீதையைக் கூட்டிவந்து பட்டாபிஷேகம் நடத்துகிறேன் என ஏளனமாகச் சிரிக்கிருனே' என நினைத்தாராம்.

2. சீதை 'நான் நேற்றுவரைக்கும் இலங்கையில் ராவணன் உடன் வாழ்ந்தவள் இன்றைக்குப் பட்டாபிஷேக விழாவில் பங்கேற்கி-றேன் என ஏளனமாகச் சிரிக்கிருனே' என நினைத்தாளாம்.

3. பரதன் 'நான் நேற்றுவரைக்கும் அரசாட்சியில் இருந்து விட்டு இன்று வெறுங்கையனுக நிற்கிறேன் என ஏளனமாகச் சிரிக்கிருனே' என நினைத்தானும்.

---

28 தகவல், T.S கிரிபிரகாஷ், இணைப்பேராசிரியர், தெலுங்கு மொழித் துறை ம.கா. பல்கலைக்கழகம், (17—12—86)

4. அனுமன் பயபக்தியுடன் 'நம் தலைவனுக்குப் பட்டாபிஷேக விழா நடக்கும் போது இவன் ஏன் இப்படிச் சிரிக்கிருன்' என நினைத்தாளும்.

அப்பொழுது ராமர் லெச்சுமணனிடம் ஏன் இப்படிச் சிரிக்கிருய்? என்று கேட்டாராம்.

லெச்சுமணன் 'இல்லை! பதினன்கு வருடம் வனத்தில் ஊண் உறக்கத்தினை மறந்து உனக்குச் சேவையும், பணியும் செய்து வந்தேன்; அப்பொழுதெல்லாம் எனக்குத் தூக்கம் வரவில்லை. ஆனுல் இப்பட்டா பிஷேகம் நடக்கும் பொழுது என்னையும் அறியாமல் எனக்குத் தூக்கம் வருகிறது. அதை நினைத்துத் தான் சிரிக்கிறேன் வேறென்றுமில்லை' என்ருனும்.

ஆக ஒருவர் சிரிப்புப் பலருக்குப் பல பொருள் தரும் என்பதை மேலைப் பழமொழி உணர்த்துகிறது.

*விடுகதைகள்*

இராமாயணத் தாக்குறவால் விடுகதைகள் சிலவும் தோன்றியுள்ளன

1. இராமனும் அரசுசெய்வான் அயோத்தியில் அல்ல
இராவணனும் சண்டைசெய்வான் போர்க்களத்தில் அல்ல
சீதையும் பூ முடிப்பாள் சிங்காரிப்பாள்
சிந்தை மகிழ்ந்திடும் மாந்தரும் மது உண்பர் மனையில் அல்ல
அது என்ன?

(விடை : இராமாயணப் புத்தகம்)

2. இராவணன் சிரசற்றதேன்?
இராவெள்ளி மறைவதேன்?

(விடை : இராமன் தாரத்தால்
இரா மந்தாரத்தால்)

3. இவ்வளவூண்டு ராமனுக்கு
அவ்வளவூண்டு நாமம்
அது என்ன?

(விடை : மொச்சை)

4. அடுப்பு சாதம் கொதிப்பதேன்?
அரிசி அன்ன மாவதேன்?
இலங்கை அழிந்ததேன்?
இரும்பு உருகுவதேன்?

(விடை : நெருப்பால்)

---

29. ச.வே. சுப்பிரமணியன், தமிழில் விடுகதைகள், வெளியீடு ஆண்டுஇல்லை.

5. உடம்பு எல்லாம் உரோமம் உண்டு
வால் அடர்ந்திருக்கும் கீரியல்ல
மரமேறிக் கிளைக்குக் கிளை தாவுவான்
பழம் தின்பான் குரங்கும் அல்ல
உடம்பிலே வரிகள் உண்டு
சேதுகட்ட சகாயம் செய்த உத்தமன்
இவனே. அவன் யார்?

(விடை : அணில்)

6. உடம்பு எல்லாம் உரோமம் உண்டு வால் நீண்டிருக்கும்
மரமேறித் தாவுவான் பழம் தின்பான் அணிலுமல்ல
கிளைகளைப் பிடித்து ஊஞ்சலாடுவான்
நாம் எப்படிச் செய்யினும் அப்படிச் செய்வான்
இலங்காபுரிக் கோட்டையைத் தாண்டினவன்
இவனே. அவன் யார்?

(விடை : குரங்கு (அனுமன்) )

7. கறுப்புச் சட்டைக்காரன் கள்ளத்தனத்தில் கெட்டிக்காரன்
தோட்டி வேலை செய்திடுவான்
சுறுசுறுப்பாய் இருந்திடுவான்
ஒருவனை நாம் கூப்பிட்டால்
ஊரையே அழைப்பவன்
சீதையை கொத்தினதால் ஸ்ரீராமர் சாபம் ஏற்றவன்
அவன் யார்?

(விடை : காகம்)*

---

*இது தொடர்பாக வழக்கில் ஒரு கதை உள்ளது.

காட்டில் சீதை ராமரின் மடியில் தலைவைத்து தூங்கிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அமர்ந்த நிலையில் ராமரும் தூங்கிக் கொண்டிருந்தார். அரக்கன் ஒருவன் காக வடிவில் வந்து சீதையின் மார்பினைக் கொத்தினான். இதைக்கண்ட ராமர் ஒரு புல்லைப்பிடுங்கி ராமபாணமாக அக்காகத்தின் மீது எய்தார். காகம் பயந்து ஓடி தேவாதி தேவர்களிடம் அடைக்கலம் புகுந்தது. தேவர்கள் காகத்திற்குப் பரிந்து இராமபாணத்திற்குப்பலியாகச் சிறு தண்டனை வழங்கினர். அச்சிறு தண்டனையால் காகத்திற்கு ஒற்றைக் கண் பார்வையாயிற்று.

இவ்விடுகதைகள் இராமாயண நூல், பாத்திரங்கள், சிறு நிகழ்ச்சிகள் என்பவைகளைப் புலப்படுத்தும் நிலையில் உருவாகப் பெற்றுள்ளன.

### கலைகள்

கலைகள் பலவற்றில் இராமாயணத்தின் தாக்குறவினைக் காணலாம்.

*ஓவியம்*

இராமாயணக் கதை நிகழ்ச்சிகள் ஓவியமாகத் தீட்டப்பட்டு தமிழகத்தில் பல இடங்களில் காணப்படுகின்றன.

மதுரையில் அழகர் கோயில் வசந்த மண்டபம்[30], இராமனுதபுரத்தில் இராமலிங்க விலாசம் அரண்மனை, திருச்சியில் ஸ்ரீரங்கம் கோயில், செங்கம் பெருமாள் கோயில் ஆகிய இடங்களில் ஓவியங்கள் எழுத்து விளக்கங்களுடன் உள்ளன. எழுத்துக்கள் தமிழ் தெலுங்கு என்ற இரண்டு மொழிகளிலும் உள்ளன.

மற்றும் தமிழகத்தில் ஊர்த்தெய்வங்கள் இடம் பெற்றிருக்கும் கோயில்களிலும் கூட இராமாயண ஓவியங்கள் வரையப் பெற்றுள்ளன.

*சிற்பம்*

ஓவியம் இடம் பெற்றிருப்பதைப் போன்று சிற்பங்களிலும் இராமாயண நிகழ்ச்சிகள் வடிக்கப் பட்டுள்ளன. தமிழகத்தின் பல கோயில்களில் இராமாயணச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.

*ஆட்டக்கலைகள்*

தமிழகத்தில் உள்ள நாட்டுப்புறக்கலைகளாகிய கணியான் கூத்து ஒயிலாட்டம், தேவராட்டம் போன்ற கலைகளிலும் இராமாயண நிகழ்ச்சிகள் பாட்டாகவும் ஆட்டமாகவும் இடம் பெறுகின்றன.

*தெருக்கூத்து, நாடகம், திரைப்படம்,*

தமிழகத்தில் நாட்டுப்புறக்கலையான தெருக்கூத்திலும் மற்றும் நாடகம் திரைப்படம் போன்றவற்றிலும் இராமாயணக்கதை அல்லது நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளன.

### கோயில்கள்

ராமர் விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்பட்ட பின்னர் அவர் மக்களின் வழிபடு தெய்வமாகவே, அவருக்கென பல கோயில்கள்

---

30. அழகர் கோயில் இராமாயண ஓவியத்தினை ஜி. விஜயவேணுகோபால், ஆய்வு செய்துள்ளார்.
G. Vijayavenugopal, 'Ramayana Paintings of Alakarkoil' (PP. 412 - 419)
Vaisnavism in Indian Arts and culture, 1986.

எழுந்துள்ளன. மேலும் அனுமனுக்கும் கூட கோயில்கள் எழுப்பப் பட்டுள்ளன.

### வழக்காறுகள்

தமிழகம், கருநாடகம், ஆந்திரம் போன்ற பகுதிகளில் மக்கள் வழக்கில் இராமாயணத் தாக்குறவால் ஏற்பட்ட சில வழக்காறுகளும் உள்ளன.

தமிழகத்தில், ஒருவர் சமுதாயத்தில் முன்னர் நடந்து முடிந்த நிகழ்ச்சிகளை மற்றொருவரிடம் கூறும் போது கேட்பவர் விருப்பமின்றி கேட்டுக் கொண்டோ, கேட்காமலோ இன்னொருவரிடம்' 'அவர் ராமாயணம் பாட ஆரம்பிச்சிட்டார்' எனக்கூறுவதனைக் காணலாம். இவ் வழக்காறிலிருந்து இராமாயணம் 'முன்னர் நடந்த கதை' என்றும் அது 'மிக நீண்டகதை' என்றும் மக்கள் அறிந்திருந்தனர் என்பதனை நாம் உணரலாம்.

### அணில் செய்த உதவி

தமிழ் நாட்டில், பெரியவர்களுக்குச் சிறியவர் ஏதேனும் சிறு உதவி செய்த பொழுது, பெரியவர் அவ்வுதவிக்கு நன்றிகூறும் பொழுது சிறியவர் அப்பெரியவரிடம்' 'நான் அப்படி என்ன செய்துட்டேன் அணில் செய்தது போலச் செய்தென்' என்று கூறும் வழக்குக்காணப் படுகிறது.

அணில் செய்தது என்ன? ராமர் கடலைக்கடந்து இலங்கைக்குச் செல்வதற்குக் குரங்குகளிடம் ஏவ குரங்குகள் பாலம் அமைத்துக் கொண்டிருந்தன. இதனை ஓர் அணில் பார்த்து அதுவும் சென்று தன்னால் இயன்ற அளவுக்குப் பாலம் அமைப்பதற்கு உதவி செய்ததாம். இதுவே அணில் செய்த உதவியாகக் குறிப்பிடப்படுகிறது.

தமிழ் இலக்கியத்தில் இச்செய்தி தொண்டரடிப்பொடியாழ்வார் பாடலில் அமைந்துள்ளது.

> 'குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடி
> தரங்க நீ ரடைக்க லுற்ற சலமிலா அணிலும் போலேன்
> மரங்கள்போல் வலியநெஞ்ச வஞ்சனேன் நெஞ்சு தன்னால்
> அரங்கனார்க் காட்செய்யாதே அளியத்தே னயர்க்கின்றேனே'

(திருமாலை, 27)

கம்ப ராமாயணத்திலோ, அயோத்திகதையிலோ இந்நிகழ்ச்சி குறிக்கப்படவில்லை.

அணில் செய்த உதவி பற்றிய செய்தி தெலுங்கு மொழி வழக்கிலும் உள்ளது. தெலுங்கு மொழியில் அணில் என்பதற்கு இணையான வடிவம். 'உடுதா' என்பதாகும். அணில் செய்த உதவியினைத் தெலுங்கில் 'உடுதா பத்தி' என்று கூறப்படுகிறது. பத்தி என்பது பக்தியினைக் குறிக்கும்.

தெலுங்கில், சிறியோர் செய்த உதவியினைப் பெற்ற பெரியோர் சிறியோரைப் பாராட்டும் பொழுது, சிறியோர் இது 'உடுதா பத்திகா சேசானு' (அணில் பக்தி போலச் செய்தேன்) என்று கூறும் வழக்காறு உள்ளது. மேலும் தெலுங்கு மொழியில் பெரியோருக்குச் சிறியோர் ஏதேனும் பரிசுகளைக் கொடுக்கும் பொழுது கூடப் பணிவாக' 'இச்சிறிய பரிசினைத் தங்களுக்குக் கொடுக்கிறேன்' என்னும் பொருள்பட 'உடுதா பத்தியா இஸ்துகுனு' என்று கூறும் வழக்கும் உள்ளது.

தமிழ் நாட்டில் 'அணில் செய்த உதவியோடு தொடர்புடையதாக மற்றுமொரு செய்தியும் வழங்கி வருகிறது. அணை கட்டுவதற்கு அணில் செய்தஉதவியினை ராமர் பார்த்து அதன் பக்திக்கு இரங்கி அதனை அன்புடன் எடுத்து தம் கை மூன்று விரல்களால் அதன் முதுகில் வருடினராம். அம்மூன்று விரற்குறிகளும் தான் அணிலின் முதுகில் மூன்று கோடுகளாக விழுந்துள்ளனவாம்.

மேற்கூறப்பட்ட செய்தி சிறிது மாற்றத்துடன் தென் மாவட்டத்தில் வழக்கில் உள்ளது.

ராமர் தண்ணீர்த் தாகத்துடன் உட்கார்ந்திருந்தார். ராமர் தாகமாக இருப்பதனை அணிலும் ஓணானும் அறிந்தன. ராமரின் தாகத்தினைத் தீர்ப்பதற்கு, அணில் விரைந்து ஓடிச்சென்று 'இளநீர்' கொண்டு வந்து கொடுத்ததாம். ஆனால் ஓணானோ 'தன்னுடைய சிறு நீரைப் பெய்து கொண்டு கொடுத்ததாம். ராமர் இரண்டு உயிரினங்களின் செயலினை உணர்ந்து அன்புடன் அணிலின் முதுகினையும் வெறுப்புடன் ஓணானின் முதுகினையும் தடவிக் கொடுக்க அணிலின் முதுகில் அழகிய கோடுகளும் ஓணானின் முதுகில் அருவருக்கத் தக்க முள் போன்ற அமைப்பும் ஏற்பட்டதாம்.

*லெச்சுமண ரேக்கா**

கருநாடகத்தில் லெச்சுமணனும் சீதையும் பங்கு பெறும் நிகழ்ச்சி ஒன்று மக்கள் வழக்காறாக கூறப்படுகிறது.

---

*தகவல். T.B. சித்தலிங்கையா, பேராசிரியர். சைவசித்தாந்தத்துறை ம.கா. பல்கலைக்கழகம், (17—12—86)

சமுதாயத்தில் யாராலும் மீற முடியாத உத்தரவினை அல்லது தடையினை மற்றையோருக்கு வழங்கினல் அத்தடையினை மக்கள், 'லெச்சுமண ரேக்கா' என்று கூறும் வழக்காறு உள்ளது.

இராமாயணத்தில் சீதை வனத்தில் இருக்கும் பொழுது மான் பிடித்துதரும்படி ராமரிடம் கேட்க ராமர் மான் பிடிக்கச் செல்ல-சிறிது நேரத்தில் வனத்திலிருந்து அபயக் குரல் கேட்க, சீதை உடனே லெச்சுமணனிடம் ராமரைப் போய்ப் பார்த்து வரும்படி கூற, லெச்சுமணன மறுத்துத் தயங்க, சீதை மேலும் அவனை வற்புறுத்த லெச்சுமணன் அப்பொழுது சீதை தங்கியிருந்த இடத்தில் கோடு (ரேக்கா) கீறி அக்கோட்டுக்கு வெளியே எக்காரணத்தினை முன்னிட்டும் வரக்கூடாது என்று தடையிட்டுக்கொண்டு செல்வதே மக்கள் வழக்கில் 'லெச்சுமணரேக்கா' என்று உவமையாக வழங்கிவருகிறது.

மேற்கூறிய தாக்குறவு பற்றிய செய்திகளிலிருந்து இராமாயணக் கதை எந்த அளவுக்கு மக்கள் வாழ்வுடன் பின்னிப் பிணைந்துள்ளது என்பதனை உணரலாம்.

தமிழில் கம்பராமாயணத்தில் ஆய்வுகள் பல நிகழ்ந்துள்ளன, கம்பராமாயணம் தவிர ஏனைய இராமாயணங்கள் இதுவரை ஆய்வுப் பொருளாகவில்லை. பல இராமாயண நூல்கள் அச்சுவடிவம் பெருமல் ஏட்டளவிலேயே இடம் பெற்றிருக்கின்றன. மற்றும் தமிழகத்தில் பரவலாக இராமாயணக்கதை வாய்மொழி இலக்கிய நிலையிலேயே உள்ளது. எனவே ஆய்வாளர் நூல் வடிவம் பெருமல் உள்ள இராமாயணங்களை முதலில் நூல்வடிவு பெறச் செய்ய வேண்டும். அடுத்து, தமிழகத்தில் உள்ள இராமாயணங்களை ஒப்பிட்டு ஆய்தல் வேண்டும். அவ்வாறன ஒப்பீடு அடுத்த நிலையில் தென்னிந்திய நிலையிலும் தொடர்ந்து இந்திய நிலையிலும் அதனைத் தொடர்ந்து வெளிநாடுகளில் உள்ள இராமாயணங்களோடு ஒப்பிடுகிற நிலையிலும் அமைதல் வேண்டும். ஒப்பீட்டாய்வு, மூலக்கதையினை உணரவும், கதை பரவுதல்கள் எவ்வாறு நடைபெற்றுள்ளன என்பதை அறியவும், என்னென்ன கதை மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன? அதற்கான காரணங்கள்யாவை என்பதைத் தெரியவும் வழிவகுக்கும். ஒப்பீட்டாய்வின் போது இராமாயணத் தாக்குறவுச் செய்திகள் பெரிதும் பயன்படும்.

மேற்கூறப்பட்ட ஆய்விற்கு ஒரு தொடக்க நிலையாகவே இந்நூல் வெளிவருகிறது. எனவே ஆய்வாளர் இந்நூலினைக் கற்று ஆய்வினை மேற்கொள்வாராக.

மதுரை,
23—1—87.

இவை
வை.தி. நடராசன்

# அய்யோத்தி கதை

ஸ்ரீ - ரும
ஜெயம்
சரஸ்பதி
முன்னிற்க்க
அய்யோத்தி
கதை நன்ருக

*காப்பு*

நாடிய பொருள் கை கூடும் ஞானமும் புகழும் உண்டாம்
வீடிய வெளியதாகும் வேதியன் கமலநோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டொளிய வாள்க்கை
சூடிய சிலையால் ராமன் சொல்கதை கூற்வதற்க்கே.

மதத்திஞல் வலிய வீரன் மன்னனுக்கிளையோன் தம்பி
சிகத்திஞல் யிலங்கையாண்டோன் விபூஷணன் சொன்னபுத்தி
சிகத்திநில் வேந்தர்க்கேதான் திருவெழுத்தூதன் சொன்ன
நற்றமிள் கதைக்கு நான் முகத்தோன் மாதும் கந்தனுங்
காப்புத்தானே.

ஆதவம் வாள்க வாள்க அருந்தவ முனிவர் வாள்க
பூவுலகேழும் வாள்க புவிதனில் மாதும் வாள்க
மாதினில்க் கருமமெல்லாம்
மன்னனுக்குரைக்க லுற்றேன்.

*பின்னோயாரடி*

சீர்சிறந்த தெய்வக்கயிலை வளர்
சிவனுருமை புத்திரனே
பேர்பெரிய நல்ல கிணபதியே

---

1. ஜெகம் > சிகம் (பே.வ.மா)
2. விபீஷணன் > விபூஷணன் (பே.வ.மா)
2. நான்முகத்தோன்—பிரம்மன்
2. நான்முகத்தோன் மாது—சரஸ்வதி
3. கணபதி > கிணபதி (பே.வ.மா)

பேழை வயிறுடைய ஐங்கரனே
வாழைப்பளம் வருக்கைத் தேன் கனியும்
வகுப்பு வகுப்பாய் நான் படைப்பேன்
எள்ளுஞ் சிறு பயறுனதுவும்
யிதமாயருந்தவே நான் படைப்பேன்
வற்ண வயிற்றைங்கரனே
வாரியுனக்கு வகுப்பாய்த் தருவேன்

தென்னங்குலையின் தேங்காய் விடலை
சிறப்பாய்த்தருவவேன் யெப்பொழுதும்
பண்ணுதமிள் கதையியியல் தருவாய்
பார்தனில் ராமர்கதை படிப்பதற்கு

### சரஸ்வதி

சின்னமருங்குடை மரதகமே
செல்வமே சரஸ்பதி உன் வாக்கருள்வாய்
பொன்னே நகமணியின்பமுள்ள
பூவே அமுற்தே நல்தேன்கனியே
வாலை சரஸ்பதி வாள் மயிலே
வந்து தயவு தந்து வாக்கருள்வாய்

### திருமால்

மூலப் பொருளே நீ யெப்போதும்
முத்தி பெறக்காரும் திருமாலே
ஆலவிசம் உண்டோன் திருமகனே
அளகன் மைத்துனு நெடுமாலே
கோல நெடுமாலே உன் கதை படிக்க
குருவாய் வந்தருள் புரிவாயே

---

4. பேழை—பெரிய
5. வருக்கை – பலாப்பழவகைகளில் ஒன்று
6. வகுப்பு—பகுதி 7. சிறுபயிறு—பாசிப்பயிறு
11. விடலை—இளநீர்
15. மரகதம் > மரதகம் (பே.வ.மா)
17. நவமணி > நகமணி (பே.வ.மா)
18. அமிர்து > அமுற்து (பே.வ.மா)

## முருகன்

சூரனை வென்ற வேலாயுதனே
சுப்பிரமணிய சடாக்ஷரனே
வேலவனே ராமர் கதை படிக்க
வேறுவினை வாராமல் காற்த்தருள்வாய்

## சாஸ்தா

சிவன்தன் விஷ்ட்டுணுவின் கை மீதில்
சிறப்பாய் வந்துதித்த சாத்தாவே
கார்மேகன் அரிராமர் பேரில்
கதை பாடுகிற யென்னைக் காத்தருள்வாய்

## அவையடக்கம்

பூமி தேசத்தில் அதிகம[ா]தாய்
புகள் பெற்றிருக்கிற பெரியோரே
யேனையடியேன் ராமர் கதை படிக்க
யிடறென்று வாராமல் காத்தாருள்வாய்
தெருவில் சிறுபிள்ளை மணல்குவித்து
சிறப்பாய்க் கோலம் யிடுவதுபோல்

கதையது பெருகவே காசினியில்
கற்றோர் பெரியோர் முன் பாடுகிறேன்
தென் கடல் சூள்ந்த வையகத்தில்
தென் பூமி சமுத்திரக் கரையருகே
காரி ஐயன் பதிபேர் குடியாய்

---

27. வேலாயுதன்—முருகன்

31-32. இவ்வரிகளில் சாத்தாவின் பிறப்பு பற்றிய செய்தி குறிக்கப்பட்டுள்ளது. சாத்தா; ஐயன், ஐயப்பன் எல்லாம் ஒரே தெய்வத்தினைக் குறிக்கும் பெயர்கள்,

32. சாஸ்தா > சாத்தா (பே.வ.மா)

33. கார்மேகன்—திருமால்

44. தென்பூமி—தமிழகத்தின் தென்பகுதி, சமுத்திரம்—கடல்

45. ஐயன்—நாட்டுப்புறத் தெய்வம்

காரி கோவிலென்ற ஊரதிலே
ஆக முதலாய் வளி வளியாய்
அரசர் நிலைதில் அன்பு கூர்ந்து
பூமி தனையாள உடையவனாய்
புகள் நடத்தியே கீற்த்தி பெற்றோன்

வீர முடைய நல் கீற்த்தி பெற்ற
வேலாயுதப் பெருமாள் விதன்வேளை
ஆசை வெகுவாக அய்யனுட
அருளைத்துதித்தவர் பெற்றமைந்தன்
அரிகர புத்திரர் தம் அடிவணங்கி

அன்பாயனைபேற்க்கும் ஆசை கொள்ள
அரசர்கினிதாக அன்புடனே
அரசனென நல்லபேரு பெற்றோன்
பெரியோர்சியலால் அடிவணங்கும்
பிச்சையாண்டியென்ற வடிவளகன்

பாடுகிறேனான் ராமர் கதை
பத்திரகாளியம்மன் துணையினக்கு
நாடு மிகுந்துகுடி மீதிருத்தி
நன்றாய்ப்படிப்பித்த குருவினக்கு
அண்ணாவி சுப்பிறமணியன் குரு

அவர்களை ஒருநாளும் நான்மறகேன்
பண்ணாக யெங்களைஓதின குரு
பாரில் சிவலோக தேசிகனார்
கண்ணா யெங்களை யாதரிப்பாய்
கதை பாடுறேன் பாதம் மறகிகாமல்

---

55. அரிகர புத்திரர் —சாஸ்தா
59. செயல் > சியல்(பே.வ.மா)
60. பிச்சையாண்டி —பாடலாசிரியன்
62. பத்திரகாளி —நாட்டுப் புறத்தெய்வம். இத்தெய்வத்தின் பேரிலும் நாட்டுப் புறப் கதைப்பாடல் உள்ளது.
65. அண்ணாவி —ஆசிரியன்(குரு)
70. மறகாமல் —மறவாமல்

என்றுமும் ராமரருள் புரிந்து
எப்போதுங் காலந்தப்பாமல்
பண்டான ராமர் தன் கதையை
பளகப்படிக்கிறேன் சந்தமதாய்
பாட விரும்பினேன் பெரியோரே
பண்பாயெங்களை காத்தருள்வீர்

## கதை

அய்யோத்தி நாட்டு வளப்பமெல்லாம்
அனேகமுண்டு சொல்லத்துலையாது
அய்யோத்தியிலரசு செய்திருப்பார்
அரிராமர் கீற்த்தி சொல்லத்துலையாது
அரசர்களாதி பிதிர் வளமை
அனேகமுண்டுஞ் சொல்லத்துலையாது
யேளையடியே ஞனிவ்வுலகில்
யினக்குத் தெரிந்தபடி சொல்லுகிறேன்
கோளைப்படாதபடி அரிராமர்
குருவாய் வந்தேனக்கருள் புரிவாய்
அறம் பொருள் தரித்த ராமர்
அய்யோத்தியில் வந்த வாறு
வரம் பெறு முனிவராலே
வனத்தில் போய்த்தனித்திருந்தே
சிரமறயரக்கர்மாள
சிலையதால் செயித்துமாறி

---

73. பண்டான — பழமையான
74. சந்தமதாய் — இனிய ஓசை உடையதாய்
77. வளப்பம் — வள்மை
78. தொலையாது > துலையாது (பே.வ.மா)
81. பிதிர் — கிளை (பிரிவு)
85. எனக்கு > யினக்கு (பே. வ. மா)
85. கோளை — குறைவு
91. சிரம் — தலை, மாள — இறந்துபட
92. சிலை — வில், செயித்து — வெற்றிபெற்று

பதம் பெற்று அய்யோத்தி
பட்டமும் தரித்த வாறே

## வசிட்டர் வரம் பெறல்

யிருந்தார் கயிலையில் சிவனாரும்
யேற்ற வசிட்டருந்தவம் புரிந்தார்
வசிட்ட முனிவர் தவத்தைக்கண்டு
மகிள்ந்து சிவனாரு மேதுசொல்வார்
யென்ன யென்ன வரம் வேணும்
யேத்த வசிட்ட மாமுனியே

தேசவனமது பாற்பதற்க்கு
சிவனேயினக்கு வரந்தர வேணும்
என்று சொல்லவே வசிட்டமுனி
யீஸ்பரனாரும் மன மகிள்ந்து
அந்த வரமது உனக்குத்தந்தேன்

ஆன வசிட்ட மாமுனியே
தந்த வரமது வாங்கிக் கொண்டு
தானே வசிட்ட மாமுனிவர்
காலில் பாதக் குறடுமிட்டு
கையிலுத்திராச்சிய மாலையுடன்

பூசை வேட்டியுந் தோளில் போட்டார்
பொக்கணமும் புலித்தோலுமிட்டார்
தெண்டு கமண்டலங் கையிலெடுத்து
திருநீற்றுக்கப்பரை கயிலெடுத்தார்
ஒட்டியாணமொடு முட்டுக்கச்சை

---

101. தேசம்—நாடு; வனம்—காடு
102. யீஸ்பரன்—சிவன்
109. பாதகுறடு—மிதியடி
110. உருத்திராக்கம்>உத்திராச்சியம்(பே.வ.மா)
113, தண்டு>தெண்டு(பே.வ.மா)—சிறுகம்பு
113. கமண்டலம்—ஒரு வகைப் நீர்பாத்திரம்
114. கப்பரை—பிச்சைக்கலம்
115. ஒட்டியாணம்—இடையணி

யோக வேட்டியுங் கொய்துடுத்தார்
கண்ட சரமாலை தானெடுத்து
காலில் பாதாக்குறடு மிட்டார்
கயிலாச மலையுமிட்டு
காண்டுருவப் பொய்கை விட்டு

செயலான மாமுனிவன்
செய்கை உனந் தான் பாற்த்து
யீணமுதல் யாள்ப்பாணம்
யெங்குமுள்ள வளர்நாடு
அன்பத்தாறு தேசமெல்லாம்

அம்முனிவர் சுற்றிப்பாற்த்து வந்தார்

## வசிட்டரை திசதரன் உபசரித்தல்

தெய்வ அய்யோத்தியா புரிதனிலே
திசதர ராசனிடத்தில் வந்தார்
மாமுனி வசிட்டர் வரவுகண்டு
வற்ண திசதர ராசாவும்

சிங்கர்சனமிட்டுக் கீளிறங்கி
திசதரரா(ச) மன்னவரும்
மாமுனி பாதத்தில் அடிதொழுது
மன்னன் திசதரராசாவும்
சிங்காசனத்திலே தானிருத்தி

தீரன் திசதர ராசமன்னன்
தகைத்து வந்தோர் மாமுனிக்கு
தகையது தீரவேணுமென்று

---

116. கொய்து—சுருக்கி, 117. சரமாலை—கழுத்தணி
123. யீணம்—ஈழ நாடு (இலங்கை)
123. யாள்ப்பாணம்—ஈழ நாட்டில் உள்ள ஓரிடம்
125. ஐம்பத்தாறு>அன்பத்தாறு (பே.வ.மா)
128. கம்ப இராமாயணத்தில் 'தசரதன்' என்று குறிக்கப் பட்ட பெயர் இந்நூலில் 'திசதரன்' என்று குறிக்கப் பட்டுள்ளது.
138. தகைத்து—தாகமுற்று

பாலு பளமொடு சீனியுடன்

பளந்தேன் நல்ல சற்க்கரையும்
கானிலுள்ள தேனுமிட்டு
கருத்துடனல்ல யமுதுமிட்டார்
வரிசையாய் வெள்ளித்தட்டில் வைத்து
மாமுனிவர் கையில் தான் கொடுத்தார்

வாங்கியே வசிட்ட மாமுனிவர்
வளம் பெறவே தான் பொசித்தார்
உண்டு நன்ருய்க்கை விளக்கி
உடனடைக்காயுமருந்தி
தண்டருமுந்தவ மாமுனிவர்

தானிருக்கிற வேளையிலே
என்குருவே வசிட்ட மாமுனியே
எங்கிருந்துயிங்கு வந்தீர்
மன்னவர்க்குத் துரை மன்னவரே
வணங்காத அய்யோத்தி முடிவேந்தர்

தென்னவர்க்குத்துரை மன்னவரே

### வசிட்டர் திசதரனை மணமுடிக்கக் கூறல்

தீரன் திசதரராசமன்ன
அன்பத்தாறு தேச வளங்களெல்லாம்
ஆராய்ந்து சுற்றிப்பார்த்து வந்தேன்
அய்யோ(த்)தியா புரியானதிலே

அதிசெயமாயிருக்குதிங்கே
பட்டத்து தேவி மாரில்லாமல்
பாருலகை யரசாளலாமோ

---

142. கான்—காடு
147. புசித்தார்>பொசித்தார் (பே.வ.மா)
148. கை விளக்கி—கையினை சுத்தம் செய்து
149. அடைக்காய்—பாக்கு

அம்பலம் சந்தியில் போகலாமோ
அரண்மனை யாசனம் போகலாமோ
சிங்காசனத் திருக்கலாமோ
திருமுடிவைத்தரசாளலாமோ
நானும் உன்னுடயிட மதிலே
நாள்தோறும் வரவும் பார்த்திருந்தேன்
என்னுட கண்ணில் முளியாதே
எட்டிநில்லு மன்ன திசதரனே
பெண்ணுக்கிரங்காமல் அரசிருந்தால்
பெருமைகளல்ல திசதரனே
யின்னேரம் நல்ல மாலை மணம்
யேற்ற திசதரா சூட்டு மென்றார்
மாமுனியானவர் விடை கொடுக்க
மன்னன் திசதர ராசாவும்
என் குருவே வசிட்ட மாமுனியே
எந்தயெந்த தேசத்திலே
யேற்ற மணம் சூட்டிடலாம்
யியல் முனிவரே சொல்லுமையா
கோசலைவாள் பட்டணத்தில்
கொற்றவனே மணம் சூட்டுமென்றார்
மாமுனிவர் வசிட்டர் சொல்ப்படியே

## திசதரன் கோசலை மன்னனுக்கு ஓலை அனுப்பல்

மன்னன் திசதர ராசாவும்
அறுபத்தி நாலாயிரம் மந்திரியில்
அதிலே ஒருவனை வரவழைத்து
வாரும் பிள்ளாய் நீ
வார்த்தையொன்று நீ சொல்லக்கேழு
மாமுனி சொன்ன சொல்ப் படிக்கு

---

164. அம்பலம் — பொது விடம்
164. சந்தி — பல வழி கூடுமிடம்
170. கண்ணில் முளியாதே — கண்ணில் படாதே
171. எட்டி — விலகி

மங்கையரை மணமுடிக்க வேணும்
கோசலை நாடென்ற பட்டணத்தில்
கோசலை ராசன் திருமகளை
கோசலை பிராட்டியம்மனைத்தான்
கொடியிடையை மணஞ் சூட்டவேணும்

ஒட்டன் கையில் திரு நீட்டெழுதி
உண்மையுடனவரனுப்புவாராம்
அய்யோத்தி பட்டணம் அரைசாளும்
அளகு திசதரராசனுக்கு
கோசலை ராசன் திருமகளை

கொடியிடையை மணஞ்சூட்டவேணும்
திருநீட்டு வாசகந்தானெழுதி
சிறப்புடன் ஒட்டன் (ை)கயில் கொடுத்தார்
வாங்கிச்சிமித்திரை மந்திரியும்
மகிள்ச்சையுடனவர் தானிருந்தார்

ஆண்ட படைவீடு தானுமிட்டு
அய்யோத்தி பட்டணந்தான் கடந்து
தவமுனிவர்கள் வாழுமலை
சன்னாசிகள் மலையுமிட்டு
குன்றுமலை நல்ல குறிஞ்சிமலை

கூடு கொம்பன்மலையுமிட்டு
திடுதிடெனயவர் வளிகடந்து
சிறந்த கோசலைபட்டணத்தில் வந்தார்
தண்டருழும் சிம்மாசனத்தில்
தானே கோசலைராசாவும்

கூத்துப்பாட்டுந் தான்பார்த்து
கொலுவிலிருக்கிற வேளையிலே

## கோசலைமன்னன் ஓலைபெறல்

சிம்மாசன மேடையிலிருக்கையிலே
திருநீட்டை ஒட்டன் கைக் கொடுத்தான்
வாங்கித்திருநீட்டு வாசகத்தை

196. ஒட்டன் — செய்தியினை ஓடிக் கொண்டு செல்பவன்
196. நீட்டு — திருமுக ஓலை (கடிதம்)

வாய்த்த கோசலை ராசாவும்
வாசிக்க சொன்னாரே ராசமன்னன்
திருநீட்டையவர் தான்வாங்கி
சிறப்புடனேயவர் வாசிப்பாராம்

அய்யோ(த்)தி பட்டணம் அரைசாழும்
அளகு திசதரராசனுக்கு
உம்முடைய மகள் கோசலையை
உற்ற மணமாலை சூட்டுதற்கு
மணமாலை சூட்டுதற்கு

வாய்த்த மணவோலை யென்றுரைத்தார்
சந்தோசமாகக்களி கூர்ந்து
தானே கோசலை ராசாவும்
எந்தன் மகள் பேறுபெற்றாள்
எல்லாற்க்கும் யிப்படிக்கிட்டாது

மாப்பிள்ளை நல்ல மாப்பிள்ளை தான்
மகளுக்கேற்ற மணவாளன்
நாட்டில் யிப்படிக் கண்டதில்லை
நல்ல மணவாளன் கோசலைக்கு
சோதிரி தன்னைவரவழைத்து

சொல்லுப் பொருத்தங்கள் கேள்க்க வேணும்

## கோசலை மன்னன் சோதிடம் பார்த்தல்

அந்த வாற்த்தை கேட்ட போது
அழைத்து வந்தார் சோதிரியை
சோதிரியும் வந்தல்லவோ
தொழுது நின்றான் மன்னவனை

மன்னவரும் மனம் மகிள்ந்து
வைக்கச் சொன்னார் பூப்புரச்சம்
மன்னருரைத்த மொளி கேட்டு
வைத்தானே நல்ல புரச்சமது

---

232 களி—மகிழ்ச்சி, கூர்ந்து—மிகுந்து
235. கிட்டாது—கிடைக்காது
240. சோதிரி — சோதிடன்

சாந்தாலே தறைமெழுகி
சந்தணத்தால் நல்ல கோலமிட்டு
கன்னி மேல மூலையிலே
கணபதியை அவர்தானிருத்தி
நிற நாளி நிற விளக்கு
நெல்ப் பொரி யெள்ப் பொரியும்வைற்றார்
வைத்தார் கடலை விடலையது
வகை வகையாய்த் தான் படைத்து
பாலாலே பரல் கழுவி
பலகையிலே நிரத்துவாராம்
சுத்தி வைத்த பரலை யெண்ணி
சொல்லுவாருஞ் சோதிருள்சி
யிருபத்தேழு நச்சத்திரமும்
எண்ணி நன்றாய் தேற்ந்துசொல்வான்
பன்னிரண்டு ராசிக்ககம்
பகுந்தானே சோதிருள்சி
உன்னியொரு கிரக நிலை
உண்மையுடனிருக்குது காண்
தெளிந்த புகள் சோதிருள்சி
செப்புவானும் சாஸ்திரத்தை
மன்னர்க்குத் துரை மன்னவனே
வாய்த்த கோசலை ராசாவே
தென்னவர்க்குத் தென்னவனே
செய்திசொல்லக் கேழுமையா
கோசலைக்கும் நல்ல திசதரற்க்கும்
கூடும் அசுபதியானதிலே
அசுபதியில் மாலையிட்டு
அய்யோத்தி பட்டணம் போய்ச்சேற்ந்தால்
தெய்வ அய்யோத்தியை அரைசாள

---

250—261. இவ்வரிகளில் சோதிடன் சோதிடம் கூறுமுன் செய் நிகழ்ச்சிகள் விளக்கப்பட்டுள்ளன.

254. நாளி — முகத்தலளவைப் பெயர்

261. சோதிருள்சி — சோதிடன்

275. அசுபதி — ஒரு நட்சத்திரம்

சிறந்த சந்ததிதானும்யில்லே
சந்ததிபாக்கிசம் யில்லாமல்

தயங்கிடுவாள் மெற்ற மயங்கிடுவாள்
கசங்கிய பூப்போல் கருத்தளிந்து
கமலமுகமங்கே வாடிடுவாள்
பின்னும் ரெண்டு பெண்கொடியை
பிரபலமாய் மணமுடிப்பார்

பின்னுமந்த பெண் கொடிக்கு
பெருக சந்ததியில்லாமல்
வாடிடுவார் மெத்தக்கோடிடுவார்
வலேயில் பட்டமான்போலே
கோடிமுகம் வாடிடுவார்

கோகுலம் போலேயவர்கள்
மங்கையர் கற்ப்பு நெறியாலே
மகாதேவர் திருவருளால்
கான மாமலேயானதிலே
கலேக்கோட்டு நல்ல மாமுனிவன்

மாமுனி வளக்கும் வேள்வியிலே
மாயாவுதாரனுந் தான்பிறப்பார்
தேவருடையதோர் சிறைதவிற்க்க
செண்கண்ணெடு மாலுர்தான் பிறப்பார்
யிப்படியாகவே சாஸ்திரங்கள்

யிருக்கிது கோசல ராசாவே
ஆதிபரனெழுதினதை
அளித்தெழுதவுங் கூடாது
மகதேவரெழுதினதை
மறுத்தெழுதவு முடியாது

---

279. சந்ததி—வாரிசு
288. கோடிடுவார்—வருந்திடுவார்
293. மகாதேவர்—சிவன்
297. மாயாவுதாரன்—இராமன்
299. செங்கண் என்பது செண்கண் என்று எழுதப்பட்டுள்ளது.

பிரமதேவனெழுதினதை
பிரித்தெழுதவுங் கூடாது
அவரவற்க்கு அமைத்தபடி
அல்லால் வேறுவதுண்டோ
எப்படி தானிருந்தாலும்
யெந்தன்மகள் கோசலையை
செப்பமுடன் திசதரற்க்கு
திருமணமாலை சூட்டவேணும்
வந்து சொன்ன ஒட்டனுக்கு
வரிசை பலதுங் கொடுத்தார்
வாரும் பிள்ளாய் சிமித்திரையே
வாற்த்தை யொன்று சொல்லக் கேழும்

## திசதரன் கோசலை திருமணம்

நாளான நல்ல நாளிலே
நல்ல வெள்ளிக்கிளமையிலே
தசமி யென்ற பக்கத்திலே
தார்குளலை மணமுடிக்க
கோசலை பிராட்டியை மணமுடிக்க
கோசலை ராசாவும் வரவே சொன்னார்
என்று சொன்னாரந்த மந்திரியும்
யேற்றதிசதர ராசனுக்கு
சந்தோசமாகக் களி கூர்ந்து
தானே திசதர ராசாவும்
கேட்டஊருக்குப் பாக்கு வைத்தார்
கேளாத ஊருக்கு பறை சாத்தினார்
மணமாலை சூட்டுதற்க்கு
மணப்பந்தலை யலங்கரித்தார்
ஒன்பது கால் பந்தலிட்டு
ஒருகாலில் பிரமனிட்டார்

---

315. வரிசை — பரிசு

332. ஒன்பது கால் பந்தல் பற்றிய குறிப்பு 'கோவலன் கர்ண்ணகை கதை' என்ற நாட்டுப்புறக் கதைப்பாடலிலும் காணப்படுகிறது.

மாப்பிளே விதானஞ் செய்தார்கள்
மாமன் சடங்கு தான் முடித்தார்

மாமன் சடங்கு முடிந்தபோது
மாப்பிளே சடங்குதான் முடித்தார்
சடங்குகளெல்லாந்தான் முடித்து
தானே திசதர ராசாவும்
பட்டத்துக்குப் பெரிய ஆனையின்மேல்

பாரவிள்க்கது யேற்றிவர
வீரசேதகனென்ற தொரு
வெள்ளானே தன்னே அலங்கரித்து
ஆனே கழுத்திலே திசதரரை
ஆதரவாகவே தூக்கி வைத்தார்

அன்பத்தாறு தேச ரா(சா)க்கள்
அறுபத்தி நலாயிரம் மந்திரிமார்
ஆனே படையோடு குதிரை படை
அதிலே ஒட்டி ரெட்டிசேனே படை
சேனேபடை தன்னுடனே

தெய்வ அய்யோத்தியை தான்கடந்து
குன்றுமலே நல்ல குறிஞ்சி மலே
கூடு கொம்பன் மலே தான் கடந்து
யிஞ்சிமலேயோடு யேல மலே
யேற்ற சன்ஞசி மலே கடந்து

ஆனே படையோடு சேனேப்படை
அடுத்த மலேகழுந்தான் கடந்தார்
கூண்டு வளி கொண்டு மன்னர் படை
கோசலே பட்டணந் தனிலே வந்தார்
கோசலே பட்டணம் வந்த போது

---

335. திருமணச்சடங்கு நிகழ்வதற்கு முன்னர் ''தாய்மாமனே'' உட்கார வைத்துச் செய்யப்படும் சடங்கே ''மாமன் சடங்கு'' இன்றும் இச்சடங்குமுறை தென் மாவட்ட நாடார் சமுதாயத்தில் காணப்படுகிறது.

349. ரெட்டி — இரு மடங்கு

358. கூண்டு — கூடி

கொற்ற முடி வேந்தன் திசதரனும்
சந்தோசமாய்க்களி கூர்ந்து
தானே கோசலை ராசாவும்
எதிர்மாலை கொண்டு வந்து
எடுத்தணிந்தாரே பொன்மாலை

அடுத்த பக்கம் ஒரு பந்தலிலே
அய்யோத்தி மன்னனைத்தானிருத்தி
தகைத்து வந்த திசதரற்க்கு
தகனமது தீரவென்று
பாலுபளம் நல்ல சீனியுடன்

பசுந்த சற்க்கரை கதலிப்பளம்
கானிலுள்ள தேனுமிட்டு
கருத்துடனே அமுதுமிட்டார்
நல்ல வெள்ளித்தட்டத்திலே
நலமுடன் திசதரற்குத்தான் கொடுத்தார்

உண்டு நன்றாய்க்கை விளக்கி
உடனடைக்காயுமருந்தி
தண்டருள் மாளிகையில்
தானேயிருக்கிற வேளையிலே
மந்திரி மார்களை வரவழைத்து

மன்னன் கோசலை ராசாவும்
எந்தன் மகள் நல்ல கோசலைக்கும்
யேற்ற திசதர ராசருக்கும்
மணமாலை சூட்ட வேணும்
வாய்த்த மணிப்பந்தலிலே

மாந்தையரை வரவழைத்து
மாயக்காவணமிடவே சொன்னார்

---

364. எதிர்மாலை — மணமகனுக்கு மணமகளின் சகோதரன் அணிவிக்கும் மலர் மாலை
371. கதலிப்பளம் — வாழைப்பழ வகைகளுள் ஒன்று
372. கான் — காடு
376. விளக்கி — சுத்தம் செய்து
386. மாந்தையர் — தச்சர்
387. காவணம் — மணப்பந்தல்

அப்போது அந்த மாந்தயர்கள்
அதுக்கிசைந்து நல்லதென்று
சித்துளிய(ா)ம் பேருளியாம்

சிறந்ததச்சி முளக்கோலாம்
மரமுறிக்க கோடாலி
வாய்த்தற்மழுவாளெடுத்தார்
மரங்கள் வெட்ட மாந்தையர்கள்
மலைதனிலேயேறுவாராம்

சந்தணமொடு குந்திருக்கம்
தனித்துவாள்கிற மலையில் வந்தார்
காவணத்துக்குயேற்ற மரம்
கண்டு வெட்டுவார் மாந்தையர்கள்
மரங்கள் வெட்டிக்கொண்டு வந்து

வன்னமணிப் பந்தலிட்டார்
பட்டாலே நல்லமேற்க் கட்டிப்பும்
பகளத்தாலே அலங்கரித்தார்
வன்ன மணிப்பந்தலிலே
வாழைக்கரும்புகள் நாட்டுவாராம்

மாப்பிள்ளைதான் வந்திருக்க
மணவறை மாணிக்கத்தாலே செய்தார்
தெய்வசூரியன் போலளகாய்
திசதரராசன் வந்திருக்க
வன்ன மணிப்பந்தலானதிலே

மரதகப்பச்சையலங்கரித்தார்
பந்தலலங்காரஞ் செய்தபோது
பாற்த்தார் கோசலை ராசாவும்
காவணமிட்ட மாந்தயற்க்கு
கைவளைமோதிரந்தான் கொடுத்தார்

கொத்துச்சரப்பளி ரெத்தினவடம்
கோதண்ட மாலைதான் கொடுத்தார்
வரிசையது வாங்கி மாந்தயர்கள்

---

386. மாந்தையர் — தச்சர்
387. காவணம் — மணப்பந்தல்
390. சித்துளி பேருளி — உளிப்பெயர்கள்
391. தச்சி முளக்கோல் — இரண்டரையடி நீளமுடையகோல்
392. கோடரி > கோடாலி (பே.வ.மா)
402. மேற்கட்டிப்பு — பந்தலின் உள்பகுதியில் வெள்ளைத்துணியால் கட்டுவது
414-417 இவ்வரிகளில் பந்தலிட்டவர்க்குப் பரிசளித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

வகையுடனவர் பதியில் போனர்
மாந்தையர்கள் போனபோது

மன்னன் கோசலே ராசாவும்
சாஸ்திரிமரை வரவழைத்து
தானே முகிற்த்தம்யிடவே சொன்னர்
சொன்ன பொழுதிலே சாஸ்திரிமார்

சொகுசாய் ஓமங்கள் தான் வளர்த்தார்
கலியாணப்பந்தலில் மாப்பிள்ளையை
கனிவாய் மணவறைதனிலிருத்தி
மன்னனை வலத்தேயிருத்தி
மடக்கொடியை யிடத்தே வைத்து
கோ(த்)திரத்துக்குள்ளபடி

குருக்கள் வந்து காப்புக்கட்டி
சாஸ்திரத்தின் படியே தான்
சடங்குசளெல்லா முடித்து
அத்தைமார் நாத்திமார்கள்
அல்லோரும் சூள்ந்து நிற்க

சித்திரச்செப்பைத் தான் திறந்து
திருமங்கிலியந்தான் புனைந்தார்
மங்கிலியர் தரித்த போது
மடக்கொடியு மன்னவரும்
சங்கிலித்துடரது போல்

தடக்கை கொண்டுதான் பிடித்தார்
மணவறை வீடானதிலே
வாள்ந்திருந்தாரிரு பேரும்
யேளாம் நீருங்களித்து
யேந்திழையாள் கோசலேக்கு

மன்னன் கோசலே ராசாவும்
மகள் தனக்குப்பால் வாற்த்தார்
மன்னவனை வலத்தே வைத்து

---

419. பதி—வீடு
429. 430. இவ்வரிகளில் திருமணச்சடங்கின் பொழுது ஆடவனை வலப்புறமும் பெண்ணை இடப்புறமும் உட்காரவைத்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது
431. காப்புக்கட்டி—நூலில் மஞ்சள் துண்டினைக்கட்டி, அந் நூலினை மணமக்கள் கையில் கட்டுதல்
434. அத்தை, நாத்தி—உறவு முறைப்பெயர்கள்
435 அல்லோரும் - எல்லோரும்
437. திருமங்கிலியம்—தாலி 440. தொடர்>துடர் (பே. வ. மா)
441. தடக்கை—அகன்றகை
444 யேளாம் நீர்—திருமணத்தின் பின்னர் ஏழாம் நாள் நடைபெறும் சடங்கு. இச்சடங்கு ''ஏழுகளித்தல்'' என்று குமரிமாவட்டத்தில் வழங்கப்படுகிறது.

மட்டக்கோடியை யிடத்தேயிருத்தி
யென்ன யென்ன சீதனங்கள்

யென்மகளுக்குக் கொடுத்திடுவேன்
பண்டே பட்டாளக் குதிரைகளும்
பணப்பெட்டியும் நகமணியும்
கண்டதெல்லாம் நேர்பாதியென்று
கைக்குள்ளே நீர்வாற்த்தார்

யின்னம் யென்ன சீதனங்கள்
என்மகளுக்குக் கொடுத்திவேன்
குலையானை நானூறு
கூட எழுநூறு ஒட்டகமும்
யேழு குளப் புரவுகளும்

யெழுநூறு கோட்டை விதப்பாடும்
பூட்டி உளக் காளைகளும்
பெண்மகளே உனக்குச் சீதனங்கள்
ஆனையின்மேல் அம்பாரிவைத்து
அதிலே லெட்சம் பொன்தருவேன்

வகையிலுங் காவலிலும் நேர்பாதி
வகையுடன் கருவலத்தில் நேர்பாதி
பொன் பணத்திலும் பேர்பாதி
பூலோகத்திலும் பேர்பாதி
உண்டதெல்லாம் உங்களுக்கு

நீங்கள் உண்ணுததெல்லாம் யெங்களுக்கு
நீர் வாற்த்து முடிந்தபின்
நின்ற பெண்கள் சடங்குசெய்தார்
சடங்கதுவும் முடிந்தபோது
தானே கோசலை ராசாவும்

என்மகளே பொன்மகளே
யேந்திழையே கோசலையே
நீ அய்யோத்தி அரசாளப்போனாலும்
என்மகளே கோசலையே
வருசத்துக்கு ரெண்டுதரம்

---

458. கொலையானை என்பது குலையானை என்று எழுதப்பட்டுள்ளது.
459. கோட்டை—அளவைப்பெயர்
459. விதப்பாடு—விதைவிதைப்பதற்கான இடம்
460. குளப்புரவு—குளமும் அதனைச் சார்ந்த வயல்பகுதியும்
467. கருவலம்—வைப்பு நிதி வைக்கும் இடம்
468 பேர்பாதி—நேர்பாதி
480. ரெண்டுதரம்—இரண்டு முறை

நான் வந்திடுவேன் என்மகளே
கண்ணேறு திஸ்ட்டிகள் வாராமல்
கையில் விபூதியுந்தான் கொடுத்தார்
கையில் விபூதியை வாங்கிக்கொண்டு
கருத்தாயுரைத்தாரே திசதாரும்

என்னுட மாமா கோசலைராசாவே
எந்தன் அய்யோத்திக்குப் போகவேணும்
மன்னன் திசதரர் சொன்னபோது
வாய்த்த கோசலை ராசாவும்
சேனைத்தளங்களை வரவழைத்து

சிறந்த அய்யோத்திக்குப் போக வேணும்
பயணம் பயணம் என்று
பாளையத்தை யெழுப்புமென்றார்
ஐம்பத்தாறு தேசராசாக்கழும்
அறுபதினாயிரம் மந்திரிமாரும்

ஆனைபடையோடு குதிரைபடை
அதிலேயும் ரெட்டி சேனைபடை
சேனைபெரும்படை தன்னுடனே
திசதரராசாவும் பிறப்படுவார்
கோசலை பிராட்டியுந் தேரிலேற

கொடியிடைமாதரும் பல்லாக்கேற
கோசலை பட்டணந்தான் கடந்து
கூண்ட வனச்சோலை தான் கடந்தார்
திடுதிடென வளி நடந்து
தெய்வ அய்யோத்தியாபுரியில் வந்தார்

அய்யோத்தியாபுரிபட்டணத்தை
அரசாண்டிருந்தாரே திசதாரும்

**கோசலை பிள்ளை இல்லாமைக்காக வருந்துதலும் திசதான் தேற்றலும்**

ஆண்டங்கிருக்கின்ற நாளையிலே
ஆயிளையம்மன் கோசலையும்
சந்ததி பாக்கிசமில்லாமல்

தயங்கிடுவாள் மெத்த மயங்கிடுவாள்
என்னுடமன்னவர் என் கணவா
யிப்போ ஒரு வாற்த்தை சொல்லக்கேழும்

---

487. கண்ணேறு—கண்திருஷ்டி
482. திருஷ்டி என்பது திஸ்ட்டி என்று எழுதப்பட்டுள்ளது.
483. விபூதி—திருநீறு
497. ரெட்டி—இரண்டு மடங்கு
499. புறப்படுவார் > பிறப்படுவார் (பே. வ. மா)
510. பாக்கிசம்—பாக்கியம், பேறு

யேற்றுபுகள் நல்ல கணவனோடே
யேங்கிப்புலம்புவாள்யேது சொல்வாள்

தீராத குறை செய்தேனோ
சிவன் நமக்கில்லாத காரணமோ
ஆரோட்டு சொல்லி அழுதிடுவேன்
என்னை அரசாளும் மன்னவரே.
நல்லமதலை தானில்லாமல்

நான்யிருந்தாலென்ன யிறந்தாலென்ன
நல்லோர் பெரியோர் பூவுலகில்
நம்மை மக்கள் பாலனில்லா மலடி யென்பார்
சொல்லும் வார்த்தைகள் கேட்டுக் கொண்டு
துணிந்துயிருப்பேனோ யென மொளிந்தாள்

தாள்ந்து நின்று கணவனுடன்
தையல் வருத்தமதை யுரைத்தாள்
சோர்ந்து மன்னன் திசதரரும்
துசரப்படதேயென் தோகையரே
யேந்தி யெடுத்து மடியில் வைத்து

யேது சொல்லுவார் திசதரரும்
கூர்ந்து பிரமனும் விதித்தபடி
குளந்தை தருவார் வாள் மயிலே
என்று திசதர மன்னன் சொல்ல
யேந்திழை கோசலை யேது சொல்வாள்

நன்றிசேர் மன்னா யென்கணவா
நகைக்கப் பொறுத்து நானிருப்பேனோ
நாட்டிலுள்ளார்கள் சேட்டை சொல்ல
நான் பொறுப்பேனோ யென்கணவா
மன்றிலுள்ளோர்கள் எனைபார்த்து

மலடியென்று சொல்கையிலே
மலடியென்று சொல்லையிலே
என் மனசியெல்லாம் வாடுதையோ
கோடிப் பணமிருந்தாலும்
குளந்தை யொன்று வேண்டாமோ

பிள்ளையில்லாத வாள்வது தான்
கள்ளவாள்வல்லோ யென்கணவா
அம்புபட்ட மான்போலே

---

520. மதலை—குழந்தை

520. துயரம் > துசரம் (பே. வ. மா)

539. நகைக்க—பிறர்சிரிக்க

538. சேட்டை—குற்றம்

543. மனது > மனசி (பே. வ. மா)

அழுதுபுலம்புவாள் கோசலையாள்
அழுதவளை யரவணைத்து

அளகு திசதர ராசாவும்
என்னுடைய பெண்ணே கோசலையே
யோதிலையே நீயுஞ் சொல்லக்கேழு
அன்று பிரமனெழுதினதை
அளித்தெழுதவுங் கூடாது

பிரமதேவனெழுதினதை
பிரித்தெழுதவுமுடியாது
அன்றெழுதிவிட்டபடியல்லாது
அல்லால் வேறுவதுண்டோ
யிடைதனிலே வருவதுண்டோ

என்னுடைய பெண்ணே கோசலையே
அஞ்சவேண்டாம் அலையவேண்டாம்
ஆயிழையே நான் சொல்லக்கேழு
எண்ணைதண்ணீர் ஸ்த்தானம் பண்ணி
யேற்றமகன் வேண்டாமோ

வசிட்ட மாமுனிவரிடமதிலே
மதலையொன்று நான் வேண்டிவாறேன்
அய்யோத்தியா புரியானதிலே
ஆயிழையே நீ பார்த்திருப்பாய்
என்று சொல்லித் திசதரரும்

யிசல்வுடனே வழி நடந்தார்

*திசதரன் வசிட்டரிடம் முறையிடல்*

ஆண்டபடை வீடும் விட்டு
அய்யோத்தி பட்டணந்தான் கடந்தார்
கூண்டு வழி நடை கொண்டேகி
கொற்றவேந்தன் திசதரரும்

திடுதிடெனவழி நடந்து
தெய்வக்கயிலாச மலை தனிலே
தெய்வக்கயிலாச மலைதனிலே
சிவமுனி வசிட்டரிடமதிலே
என்குருவே வசிட்ட மாமுனியே

யியல் முனியே சொல்லக் கேழுமையா
உம்முடைய சொல்ப்படியே
ஒன்றெுடிகோசலையை மாலையிட்டேன்
மாலையிட்டு மணமுடித்து
வாய்த்த அய்யோத்தியை ஆண்டிருந்தேன்

---

583. ஒண்டொடி என்பது ஒன்றெுடி என்று எழுதப்பட்டுள்ளது

அய்யோத்திப்பட்டணமரைசாள
அருமைப் பாலகனில்லாமல்
வாடிமனங் கோடுகிருள்
மங்கை நல்லாளந்த கோசலையாள்
கோடிமுகம் வாடிக் கோசலையாள்

கோம்பிளந்த பசுப்போலே
கசங்கிய பூப்போல் வாடுகிருள்
கருத்தளிந்து நல்ல கோசலையும்
யிப்படியிருந்ததி ஞலென்னபலன்
என்குருவே வசிட்டாகேள்

வாலசன்ஞசி வேடங்கொண்டு
வனத்திலே நான் போறேன்
அய்யோத்தி பட்டண மானதிலே
அம்முனியே அரசாண்டு கொள்வீர்
என்று சொல்லிய திசதரர்க்கு

யேற்ற வசிட்டரு மேதுரைப்பார்

## வசிட்டர் பதிலுரைத்தல்

அஞ்சவேண்டாம் அலையவேண்டாம்
அய்யோத்தி மன்ஞ திசதரனே
தெய்வ அய்யோத்தியை அரைசாள
சிறந்த திசதரா நீதானே அப்பா

அய்யோத்திப் பட்டணமரைசாள
அளகு பாலகர்தானுமுண்டு
யின்னமுமொரு மாலைமணம்
யிருக்குதடா மன்ஞதிசதரனே
யெந்தயெந்த தேசத்திலே

யேந்திழையை மணஞ்சூட்டிவைப்பேன்
கைகேசிப்பட்டணமானதிலே
கைகேசி ராசன் திருமகளை
கைகேசி பிர(ா)ட்டி தன்னை
காவலவா மணஞ்சூட்டுமென்ருர்

## திசதரன் கைகேசி திருமணம்

மாமுனியானவர் சொல்ப்படியே
வாய்த்த திசதரராசாவும்
கைகேசி நாடென்ற பட்டணத்தில்
கைகேசி ராசாவின் திருமகளை
கைகேசி ராசாவின் திருமகளை

---

588. கோடுகிருள் – வருந்துகிருள்

கடுகெதிசதரர் மாலையிட்டார்
மாலையிட்டு மணமுகித்து
வாய்த்த அய்யோத்தியாண்டிருந்தார்
ஆண்டிருக்குமந்த நாளையிலே
ஆயிளையாளந்த கைகேசிக்கு

சந்ததி புத்திரனில்லாமல்
தயங்கிமெற்ற மயங்கி விட்டாள்

### கைகேசி பிள்ளை இல்லாமைக்காக வருந்துதலும் திசதரன் தேற்றுலும்

என்னுடைய மன்னுயென் கணவா
யிப்போது ஒருவார்த்தை சொல்லக்கேழும்
பிள்ளையில்லாதவர் வாசலிலே

பெரியோர்கள் வந்து பேசுவாரே
மதலையில்லாத வாசலிலே
வந்துபுசியார் பெரியோர்கள்
மதலையில்லா வாள்வதுதான்
மாயமானவாள்வல்லவோ

என்று சொல்லியே கைகேசி
யேங்கி மறுகியே தானழுதாள்
அழுதவளையரவணைத்து
அளகுமன்னன் திசதரரும்
பழுதறவே வாற்த்தை சொல்லி

பைங்தொடிக்குயேது சொல்வார்
வாரும் பெண்ணே மடக்கொடியே
மங்கையரே சொல்லக்கேழு
என்னைக் கன்னியதானம் பண்ணச் சொன்ண
யேத்த வசிட்டரிடமதிலே

மதலையொன்று நான் வாங்கி வாறேன்
மடக்கொடியே யிங்கிருப்பாய்
அய்யேத்தியா புரியானதிலே
ஆயிளையே நீயிங்கிருப்பாய்
என்று சொல்லித்திசதரரும்

யேற்ற கயிலாசகிரியில் வந்தார்
கயிலாச கிரியானதிலே
கானவ(ா)சிட்டரைச் சென்றுகண்டார்

### திசதரன் வசிட்டரிடம் முறையிடல்

என்குருவே(வ)சிட்ட மாமுனியே
யிப்போ ஒருவார்த்தை சொல்லக்கேழும்

---

622. முகித்து - முடித்து
633. புசியார்—உண்ணுர்

உம்முடையதோர் சொல்ப்படியே
ஓவியத்தாளையும் மாலையிட்டேன்
மாலையிட்டு நான் மணமுகித்து
வையகத்தை யாண்டிருந்தேன்
அய்யோத்திப்பட்டண மரைசாள

அருமைப் பாலனிகல்லாமல்
வாடியவள் மனங்கோடுகிறார்
மங்கையர்களிருபேரும்
கோடி முகங் வாடுகிறார்
கோ[ர்]குலம் போலேயவர்கள்

நல்ல அய்யோத்தியாபுரியை
நானாண்டிருந்தாலென்ன பலன்
என்று சொன்ன திசதரர்க்கு
யேற்ற வசிட்டருமேதுரைப்பார்

## வசிட்டர் பதிலுரைத்தல்

அஞ்சாதே அலையாதே திசதரனே

அய்யோத்தியரை சாளப்பிள்ளையுண்டு
சிமித்திரை ராசனாடதிலே
சிமித்திரை பிராட்டியம்மனைத்தான்
சிமித்திரை ராசன் திருமகளை
திசதரனே மணஞ்சூட்டுமென்றார்

## திசதரன் சிமித்திரை திருமணம்

மாமுனி வசிட்டர் சொல்ப்படியே
மன்னன் திசதரராசாவும்
சிமித்திரை பிராட்டியம்மனைத்தான்
சிறப்புடனே மணமுகித்தார்
மாலையிட்டு மணமுகித்து

வாழும் அய்யோத்தியாண்டிருந்தார்
ஆண்டிருக்கிற நாளையிலே
ஆயிளையாளந்த சிமித்திரைக்கு
சந்ததி புத்திரனில்லாமல்
தயங்கி மெற்ற மயங்கிடுவார்

## சிமித்திரை பிள்ளை இல்லாமைக்காக வருந்துதலும் திசதரன் தேற்றுதலும்

என்தலையில் விதிவசமோ
யீஸ்பரனிட்ட கட்டளையோ
ஆரார் செய்த தீவினையோ
அரசாளப் பிள்ளையில்லாமல்
ஒருதியல்லோ மலடியென்பார்

உலகத்திலே உள்ள முறை
மூபேரு மலடிருக்க
நாங்கள் முன்செய்த தீவினையோ
பிரமனிட்ட கட்டளையோ
பிள்ளையில்லாதிருப்பதெல்லாம்

என்று சொல்லி பெண்கொடிமார்
யேங்கி மறுகியே தானழுதார்
அழுத பெண்களை அரவணைத்து
அளகு முடிமன்னன் திசதரரும்
அஞ்சவேண்டாம் அலையவேண்டாம்

ஆயிழைமார்களே பெண்கொடியே
என்னைக் கன்னியதானம் பண்ணச்சொன்ன
யேத்த வசிட்ட மாமுனிவர்
வசிட்ட மாமுனிவரிட மதிலே
மதலையொன்று நான் வாங்கி வாறேன்

என்று சொல்லித் திசதரரும்
யேற்ற வசிட்ட ரிடத்தில் வந்தார்

### *திசதரன் வசிட்டரிடம் முறையிடல்*

என்குருவே வசிட்ட மாமுனியே
யியல் முனிவரே சொல்லக் கேளும்
கோசலை கைகேசி சிமித்திரை ராசி

கொடியிடை மார்களை மாலையிட்டேன்
மாலையிட்டு மணமுகித்து
வாழும் அய்யோத்தியை ஆண்டிருந்தேன்
சந்ததி புத்திரனில்லாமல்
தார்குளல்மார்கள் மூபேரும்

கோடிமுகம் வாடுகிறார்
கோ[ர்]குலம் போலேயவர்கள்
கசங்கிய பூப்போலே
கலங்கி மெத்த வாடுகிறார்
யிருந்ததினாலென்ன பலன்

என்குருவே வசிட்ட மாமுனியே
என்று சொல்லிய திசதரர்க்கு
யேற்ற வசிட்டருமேதுரைப்பார்

### *வசிட்டர் பதிலுரையாக முற்பிறப்பினைக் கூறல்*

அஞ்ச வேண்டாம் அலைய வேண்டாம்
அய்யோத்தி மன்னா திசதரனே

யிப்பிறப்பில் திசதரராசாவென்று
யேற்ற அய்யோத்தியை ஆண்டிருந்தாய்
முப்பிறப்பில் நீ வேடனாக

---

728. முப்பிறப்பில்—முன்பிறப்பில்

முறமையுடனரைசாண்டிருந்தாய்
வேடனுக யிருக்கையிலே

விரையந்தோட்டங்காத்திருந்தாய்
முப்பிறப்புக் காறணமும்
மௌனியக் கேழுந்திசதரனே
தினைவிதைத்துக்கதிராகியபின்
தினைப்பருவமான போது

தெய்வேந்திரன் தான் வளர்த்த
சிறந்த புகள் வெள்ளானையது
எழுபது வெள்ளையானை வந்து
யேற்ற பயிர்களையளித்து தென்று
வில் வளைத்து ஞாணேத்தி

விரைவாய்த் தொடுத் தெய்து விட்டாய்
அறுபத் தொன்பது யானை தன்னை
ஒரு அம்பாலெய்து கொன்று விட்டாய்
ஒரு யானை தப்பிப் போச்சுதென்று
ஒளிவு கெட்டி காத்திருந்தாய்

காத்தங்கிருக்கின்ற நாளையிலே
கடுகஅய்ந்து கண்மா முனிவன்
ஐந்து கண்ணனுந் தேவியுமாய்
அவர்களிரு பேர்கழுக்கும்
யிரு பேர்க்கும் மதலையில்லாமலே

யேற்ற தவமது பண்ணவென்று
யேற்ற தவமது செய்யவென்று
யிந்திராணி யென்ற மலைதனிலே
யிந்திராணி யென்ற மலைதனிலே
யேற்ற சிவசக்தி கோவிலிலே

சத்திசிவனுட கோவிலிலே
தானே ஐந்து கண்மாமுனிவர்
அரகராசிவனே பர முருகா
ஆதிபராகயிலை மலைநாதா
யேழையடியாரைக் காற்க்கும் நாதா

யினக்கு வரமது தாருமையா
நயனமில்லாத பாவிகள்க்கு

---

737. வெள்ளானை—வெள்ளை நிறமுடைய யானை

739. அழித்து என்பது அளித்து என்று எழுதப்பட்டுள்ளது.

740. ஞாண்—நாண்; கயிறு

745. ஒளிவு—மறைவு

747. ஐந்து என்பது அய்ந்துஎன்று எழுதப்பட்டுள்ளது

நயனந்தரவேனும் யீஸ்பரனே
வனத்திலே கோலங்காட்டுதற்கு
வாய்த்த பாலகன் தரவேணும்

யினக்குச்சந்ததி தாருமையா
யேளையாண்டி பரமசிவா
யென்று சொல்லி ஐந்துகண் மாமுனிவன்
யீஸ்பரன் கோவிலில் தகமிருந்தான்
தசங்கியிருக்கிற வேளையிலே

சங்கரனுரு மனமிரங்கி
ஐந்து கண் தேவி திருவயிற்றில்
ஆதரவாய்க் கெற்பந்தரித்திடுமாம்
ரிசி கெற்பம் ராத்தங்காமலே
யீன்றெடுத்தாள் சிறுபாலகனை

பாலகனும் பிறந்த போது
பண்புடனைந்து கண்முனிவன்
யீஸ்பரன் கோவிலில் பூசை பண்ணும்
யேத்த ஆரியப்பட்டனைத் தான்
ஆரியப்பட்டனை வரவழைத்து

அம்முனியானவ ரேதுரைப்பார்
உந்தனக்குச் சந்ததி தானுமுண்டோ
உத்த ஆரியப்பட்டனே சொல்
என்று ஐந்துகண் முனி கேள்க்க
எடுத்துரைப்பாராதியப் பட்டன்

என் குருவே ஐந்துகண் மாமுனியே
யிசல் முனியே சொல்லக் கேழுமையா
என்னுட தேவி பிராமணியாள்
யிருக்குகிருள் யிள மலடாக
மனதிரங்கி ஐந்துகண் மாமுனிவன்

வாய்த்த ஆரியப்பட்டனுக்கு
யிதுவரைக்கும் யினக்கு மகன்
யினிமேலுனக்கு மகனினவே
யிந்தா சந்ததி யென்று சொல்லி
யெட்டிக்கொடுத்தாரே மாமுனிவன்

மாமுனியானவர் கைகொடுக்க
வாங்குவான் ஆரியப் பட்டனுமே

---

766. எனக்கு>யினக்கு (பே. வ. மா)
769. தகம்—தவம்
773. கர்ப்பம்>கெற்ப்பம் (பே. வ. மா.)
788. பிராமணி—பிராமணப்பெண்

தன்னுட மனவியாளிடமதிலே
தானே வந்தானுரியப் பட்டனுமே
என்னுடைய பெண்ணே பிராமணியே

யிப்போ ஒரு வார்த்தை சொல்லக்கேழு
சந்ததியில்லாமல் யிருந்ததற்க்கு
சந்ததி தந்தாரீஸ்பரனுர்
மதலையில்லாமலிருந்ததற்கு
மதலை தந்தார் மகாதேவர்

பிள்ளையில்லாமலிருந்ததற்க்கு
பிள்ளை தந்தார் பிரமதேவன்
யிந்தா சந்ததி யென்று சொல்லி
யெட்டிக் கொடுத்தானே ஆரியப்பட்டன்
வாங்கியே அந்த பிராமணியாள்

மார்போடே சேற்த்தணைத்தாள்
மார்போடு சேற்த்தணைத்த போது
மார்பில் பால் சுரந்திடுமாம்
கொங்கையிலே அணைத்த போது
குழந்தைக்குப் பால் சுரந்திடுமாம்

பாலூட்டியவள் நீராட்டி
பஞ்சணை மீதே கிடத்தி
நீராட்டியவள் தாராட்டி
நிற்ணயமாய்த் தான் வளர்த்தாள்
வளர்ந்தானே சிறு பாலகனும்

வாற்புருக்கி வாற்த்தது போல்
ஒன்று ரண்டு மூன்று நாலு
உற்ற அஞ்சி ஆறு யேழு
யேழு வயசான போதே
யெழுத்தோத வைக்க வென்ன

வாத்தியாரை வரவழைத்து
வரிசையுடனுரியப் பட்டன்
தேங்காயுடைத்து வைத்து
தெட்சணை நிற நாளி வைத்து
பிள்ளையாற்குப் பூசை பண்ணி

பிறபலமாய் வாத்தியார் தான்
அரி ஓம்நமாவெனவே
அன்புட னெழுத் தோதி வைத்தார்

---

821. வாற்பு—வாய் அகன்ற பெரியபாத்திரம்
824. ஏழுவயதில் கல்வி கற்பித்தல் என்ற செய்தி நாட்டுப் புறக் கதைப் பாடல்கள் பலவற்றில் காணப்படுகிறது.
829. தட்சணை > தெட்சணை (பே.வ.மா)

அருச்சுவடி கொன்றெ வேந்தன்
அன்னையம் பிதா மூவுரையும்

எழுதிப்படித்தானே யெண்சுவடி
எழுத்தினதிகார மெல்லாம்
எல்லாம் கற்று வல்லவனாய்
யிருக்கு மந்த வேளையிலே
என்னுடையதோர் ஐயாவே

யிப்போ ஒரு வாற்தை சொல்லக் கேளும்
கோவில் பூசை நான் செய்து வாறேன்
கோவில் சாவியைத் தாருமையா
பாலகன் வாற்த்தை சொன்ன போது
பரிவுடன் ஆரியப் பட்டனுந்தான்

சந்தோசமாகிக் களிகூர்ந்து
தானே மகிள்ந்து ஆரியப்பட்டன்
சங்குடனே சேகண்டியும்
கைதனிலே நல்ல சருவங்கமும்
யிங்கிதமாகவே தான் கொடுத்து

யேற்ற சிறு பாலகனும்
கோவில் சாவியும் வாங்கிக்கொண்டு
கூண்ட பாலகன் வளி நடந்து
திடுதிடென வளி நடந்து
சிறந்த நல்ல பாலகனும்

நாடும் பல பலகாடு விட்டு
நல்ல சிவன் கோவிலிலே
கோவிலுக்கத வதைத்தான்
கூண்டபாலன் பார்க்கும் நேரம்
அய்ந்து கண்ணனுந் தேவியரும்

அவர்களிருபேருமங்கிருக்க
சத்தி சிவனுட கோவிலிலே
தானே யேச்சி போட்டாரென்று
கன்னஞ் செவிடு செவிடெனவே
கடுக ஐந்துகண் மாமுனியை

அடிபிடியாகவே தானடிக்க
அய்ந்து கண்ணுமாமுனியும்

---

835. முதுரை என்பது மூவுரை என்று எழுதப்பட்டுள்ளது.
846. களி—மகிழ்ச்சி, கூர்ந்து—மிகுந்து
848. சங்கு, சேகண்டி—இசைக்கருவிகள்
849. சருவம்—பாத்திரம்
863 ஏய்த்து >யேச்சி (பே.வ.மா) —ஏமாற்றி
864. செவிடு – காதோடொட்டிய பகுதி

அடி பொறுக்க மாட்டாமல்
அபய முறைய மென்ருர்கள்
பிடரியிலே மிதி போட்டு

பிளக்கடையிலிழுத்தெறிந்தான்
அய்ந்து கண்ணனுட தேவி தன்னை
ஆயிளையாளைத் தான் பிடிந்து
பின குடும்பிதனைப் பிடித்து
பிளக்கடையிலிழுத்தெறிந்தான்

மத்தியான வேளையில் 'தான்
மறுகியழுகிருர் மாமுனிவன்
யிந்த விசேசங் கேட்டபோது
யேத்த ஆரிபப்பட்டனுந்தான்
யென்ன பாவத்தைச் செய்து போட்டாய்

யியலளகாயென் மகனே
உன்னைப்பெற்றதுவும் அவரல்லவோ
உன்மாதாபிதாக்கழும் அவரல்லவோ
தாயை அடிப்பது ஞாயந்தானே
தகப்பனையும் அடிக்கலாமோ

குளங்களை வெட்டி முடிப்பதிலும்
கொடிய பாவமல்லோயிப்பாவம்
அந்தணரைக் கொன்ற பாவத்திலும்
அதிகப்பாவமல்லோயிப்பாவம்
கோவில் பூசைகுறைந்திடிலும்

குருக்கள் சம்பளம் பிடித்திடிலும்
நிறைய விளைந்த சென்(ெ)னலிலே
நீர்ச்சாவி கலந்திடிலும்
குறைமரைக்கால் போட்டதிலும்
கொடியபாவமல்லோயிப்பாவம்

ஆளி சிங்கமுள்ளமலை
அங்கே ராச்சதர் வாழுமலை
மலையதிலே தானிருந்து
மசங்குமந்த தந்தையற்க்கு
தாகமது தான் தீற்த்து

---

869. அபயம்—அடைக்கலம்

871. புறக்கடை>பிளக்கடை(பே.வ.மா)

891. குரு—பூசாரி

894. மரக்கால் என்பது மரைக்கால் என்று எழுதப்பட்டுள்ளது

896. யாளி> ஆளி (பே.வ.மா)—ஒரு மிருகம்

899. மயங்கும்> மசங்கும் (பே. வ. மா)

தயவுடனே வாற்த்தை சொல்லி
ஒரு நொடியில் நீயுஞ்சென்று
உன்தந்தையற்குத் தெளிவுசொல்லி
வருவாயென்றனுப்பிவைத்தார்
வரிசையுடன் ஆரியப்பட்டன்

பாலகனை வளியனுப்ப
பண்புடனே அவன் தந்தையிடம்
தந்தையிடன் வந்துநின்று
தயவுடனே வாற்த்தை சொன்னான்
அப்போது மாமுனியும்

அருகழைந்துப்பாலகனை
தாகமது பொறுக்கக்கூடுதில்லை
மகனே தண்ணீர்தான் வேணுமென்றார்
தண்ணீர்வேணுமென்றபோது
தக்கபுகள் பாலகனும்

தண்ணீர் கோரமொந்தையது
தானவனும் எடுக்கும்போது
ஆளிசிங்கமுள்ளமலை
அங்கே ராச்சதர்கள் வாழுமலை
கரடி புலியுள்ள மலை

கட்டானைகள் வாழுமலை
வனமதிலே உன்னை விடுவதற்கு
மகனே யென்மனம் பொருந்துதில்லை
என்று சொல்லி ஐந்துகண் மாமுனிவர்
யெண்ணுதெல்லாம் யெண்ணி யெண்ணி

கமண்டலமானதை கையிலெடுத்து
கடுக மாமுனி கையில்கொடுத்தார்
வாங்கியே சிறுபாலகனும்
வாய்க்க சுனைக்கரை தன்னில் போனான்
திடுதிடென வளி நடந்து

சிறந்த சுனைக்கரையருகில் வந்தான்
கானில் சுனைதனிலிறங்கி
கடுகப் பாலன் நீர் கோர
கமண்டலம் சுளி போட்ட சத்தம்
கடுகக் கெங்கையும் ஓலமிட

கெங்கை சத்தத்தைக் கேட்ட போது
கெடி பார்த்திருந்த வேடுவனும்

---

916. கோர (குமரிமாவட்ட வழக்கு)—முகர
916 மொந்தை – செம்பு
935 கெங்கை தண்ணீர்; ஓலமிட—ஓசையிட
937. கெடி—தருணம், சமயம்

ஆனை வந்ததுயென்று சொல்லி
அம்புகொண்டவனெய்து விட்டான்
அம்புபட்ட சிறுகுளந்தை
அளகு சுனைக்கரையி லெழுதிவைத்தான்
என்னையெய்த ராச்சதர்கள்
என்னுடைய தாய்தகப்பனுக்கு
யிருபேர்க்கும் நயனமில்லாமல்
யிருக்கிறாரந்த மலைதனிலே

வடவால மரமூடதிலே
மாமுனியான வரிருக்குகிறார்
தண்ணீர் தகனந் தீர்த்திடுவீரென்று
தரையிலெழுதி வைத்தான் சிறுபாலகனும்
மாமுனிமகன் யெழுதி வைத்து

மாண்டிறந்தானே சுனைக்கரையில்
ஆனையென்றாக்கால் அலறிவிழும்
அப்படிக்கில்லையே யென்று சொல்லி
உத்துச்சொன்னால் அத்ததுபொருந்தும்
என்று அந்தவேடுவனும்

பாலகனிறந்த படுகளத்தை
பண்புடன் வேடன் கண்ணில் கண்டான்
ஆனையென்று நானெய்து போட்டேன்
அம்முனிமகன் பாவத்தை யேத்தேன்
யினியென் செய்வோம் யேதுசெய்வோம்

யென்று சொல்லியந்தவேடுவனும்
பாலகனுட படுகளத்தை
பண்புடன் வேடன் கண்ணில் கண்டு
அம்புபட்டதொரு மான்போலே
அங்கமெல்லாம் வேறுபட்டு

உண்டைப்பட்ட மான்போலே
உள்ளுடைந்து தடுமாறி
வாடி மனந்தள்ளாடி
மணலதிலே எழுத்தைக்கண்டான்
வாசகத்தைக் கண்டபோது

மனம் பதறியே யவனும்
வருவதெல்லாம் வரட்டெனவே
வண்மையுடன் வேடுவனும்
தீர்க்கடனும் நீர்க்கடனும்
சிறந்த வேடுவன்தான் முடித்து

---

44. நயனம்—கண்பார்வை
46. வடவால—வடபக்கம்
48. தகனம்—தாகம்
66. உண்டை – உருண்டைக்கல்
74. தீர்க்கடன் நீர்க்கடன்—இறந்தவர்களுக்குச் செய்யும் சடங்குகள்

மாமுனிதாகந் தீருதற்கு
வாய்த்ததொரு வேடுவனும்
கமண்டலமானதைக் கயிலெடுத்து
கடுகதண்ணீர்தான் கோரி
பாலகன் வந்துபட்டபிறகே

பதறி நடந்தானே வேடுவனும்
கான வனங்கழுஞ்சோலைவிட்டு
கல்லாறுபுல்லாறு தானும் விட்டு
வடவால மரமானதிலே
மாமுனியானவரிடத்தில் வந்தான்

என்னுடைய தகப்பா மாமுனியே
யிந்தாருந்த ண்ணீரருந்துமென்றார்
என்று சொல்ல வேடுவனும்
யேத்த ஐந்துகண் மாமுனிவர்
ஆரப்பா ஒருவேத்துக்குரல்

அசுவையாகவேயிருக்குதங்கே
வேறேயொரு குரலுமில்லை
விரைவாய்ப் பூஞ்சோலையானதிலே
பூஞ்சோலை ஆறானதிலே
போயிறங்கி விளையாடினேன்

நீர்த்தோசமானதுதான் பிடித்து
நிண்ணயமாகக்குரல் பிடித்து
சத்தம் வேறுபட்டதல்லாது
வேத்துக்குரலது தானுமில்லை
யென்று சொன்னானந்த வேடுவனும்

யேத்த ஐந்து கண் மாமுனிவன்
எத்தனைதான் சொன்னாலும்
என்மனது சற்றுந்தேருது
எந்தன்மகன் தன்னைக் கொன்றுபோட்டு
யிங்கு வந்தாய் போடாவேடா

யிந்த வரலாறு அறிய வேணுமென்று
யிப்போது ஒன்று சொல்லக்கேழு
நானிருப்பது யெந்தமலை
நான் வளர்ந்தது யெந்தமலை
என்னுடைய தனிப்பேரும்

---

986. தகப்பா— தந்தையே
990. வேத்துக்குரல்—வேறு ஓசை
991. அசுவை — சுவையின்மை
996. நீர்த்தோசம்—ஜலதோசம்

எந்தன் ஆச்சிதன் பேரும்
மலைக்குவகை சொல்லச் சொல்லி
மாமுனி கேட்க வேடுவனும்
எடுத்துச் சொல்லென்றுவேடுவனை
யியல் முனியானவர் கேட்டபோது

மலைக்கு வகைசொல்ல முடியாயல்
மனம் பதறியே வேடுவேனும்
தட்டுக்கெட்டுத்தடம் புரண்டு
தாடாளனந்த வேடுவனும்
உத்துச் சொன்னாலத்துப் போகும்

உன்னுடைய வகையேது
என்குருவே மாமுனியே
எனையாண்ட நாயகமே
கானவன வாசமானதிலே
கடுகத்தினைத்தோட்டம் பயிர்கள் செய்தேன்

தினை விளைந்து கதிராகியபின்
தினைப்பருவமானபோது
தெய்வேந்திரனுடைய வெள்ளையானை
சிறந்துயெழுபதுயானையுண்டு
யெழுபது வெள்ளையானையுந்தான்

யெந்தன் தினைகளை யளித்ததினால்
அறுபத்தொன்பது யானை தன்னை
ஒரு அம்பாலேயெய்து போட்டேன்
ஒருயானைமேலம்பு பாயாமல்
ஒளித்தோடிப்போனதுவே

கானகமாமலையானதிலே
கண்ணாடிச் சுனையருகே
கடுக ஒளிவு போட்டுக் காத்திருந்தேன்
காத்தங்கிருக்கின்ற வேளையிலே
கருத்தாய் ஒளிவு போட்டு நானிருந்தேன்

கமண்டல மொந்தை தானெடுத்து
கடுக தண்ணீர் கோருஞ்சத்தங் கேட்டு
தப்பிப்போனதோர் யானை தானும்
கடுக தண்ணீரருந்து தென்று
மத்தகத்தினால் தண்ணீரை

---

1011. ஆச்சி—தாயின் தாய்

1018. தட்டுக்கெட்டு—தடுமாறி

1019. தாடாளன்—முயற்சியுள்ளோன்

1045. மத்தகம்—யானையின் தலைப்பகுதி

வாரியே அருந்துதென்று
வில்வளைத்து ஞாணேத்தி
விரையச்சரமதுயெய்து விட்டேன்
விட்டசரமது பட்டுருவி
விழுந்தானே சிறுபாலகனும்

உம்முடைய மகனை ஒன்றுஞ் செய்யவில்லை
உற்றயானை யென்று யெய்து போட்டேன்
குஞ்சரமென்றெய்து போட்டேன்
கூறறியாத மாமுனியே
சிறியோர்கள் செய்தபிழை

பெரியோர்கள் பொறுக்கவேணும்
பிழையது தான் பொறுத்தால்
பேர் பெரிய மாமுனியே
உம்முடைய மகனிலும் அஞ்சி பங்காய்
உத்தயேவல் செய்து நிற்ப்பேன்

வனமானதிலே கோலம் போட்டு
மாமுனியே நான் திரிவேன்
யின்றுமுதல் சபையோரறிய
யினிவிருதுக்கட்ட நானறியேன்
தானடியார் புலவருட

சப்பாணிதனை யெடுப்பேன்
அடப்பமது பிடித்திடுவேன்
ஆக்கி விடு பத்தாவாவேன்
என்று சொல்லியந்த வேடுவனும்
யியல் முனியை அடிதொழுதான்

அடிதொழுத வேளையிலே
அம்முனியானவரெடுத்துரைப்பார்
ஆதிபரனார் மனதிரங்கி
அளகுபாலகன் தன்னையீந்தார்
வனமதில் போனமகன் வருமுன்

வாழுகிறதினியிவிடம் வேண்டாம்
உனக்கிந்தப்பிறவிபோய் மறுபிறப்பில்
உனக்கேத்த சந்ததி தானுமில்லை
அதிக வரத்தினால் பிள்ளை தன்னை
ஆதிபிரமன் தந்தாலும்

---

1047. ஞாண்—கயிறு; 1049. சரம்—அம்பு

1053. குஞ்சரம்—யானை

1059. ஐந்து>அஞ்சி (பே.வ.மா); பங்காய்—மடங்காய்

1060. உற்ற>உத்த (பே.வ.மா)

1068. பத்தா—தொண்டன்

தீர்க்கடன் நீர்க்கடன் செய்யாமல்
சிறந்தபுகள் வேடுவனே
எந்தன் மகனைப் போலுன்மகன்தான்
யேத்த வனத்திலே போய் விடுவான்
மகனுடைய கவலையினுல்

மாண்டு போவாயென்று சொன்னுர்
சாபமிட்டு ஐந்துகண் மாமுனிவன்
தானே ஒரு வேடங் கொண்டாரே
கலையாக வடிவு கொண்டு
கானகத்தில் முனி ஓடிவிட்டார்

கொம்பு ரெண்டுந்தங்கமதாய்
குளம்பு நாலும் வெள்ளியுமாய்
மேனியெல்லாம் தங்கநிறம்
விரைய நல்ல மாமுனிவன்
அறுபதினுயிரங்கலை தனக்கு

அவருமொரு முதக்கலையாய்
கானவன வாசமானதிலே
கடுக முனிவனும் ஓடிவிட்டார்
மாமுனியானவர் போனபோது
வாய்த்த ஐந்துகண் திருத்தேவி

மன்னவனைத் தானிளந்தேன்
வாய்த்த பாலகன்தனை யிளந்தேன்
யினியிருந்ததினுலென்னபலன்
என்று யேந்திளையாள் திருத்தேவி
ஆலமரத்திலே முட்டியல்லோ

அம்முனிதேவியுமாண்டு விட்டாள்
ஐந்துகண்ணன்பளி மூன்றும்
அந்தப்பளியது விட்டிடுமோ
யீ யெறும்பு யெண்ணுயிரம்
யெண்பத்து நால்க்கோடி சீவனுக்கும்

யெந்த வகையாலும் பிள்ளையுண்டு
யேத்த திசதரராசாவே
என்று சொன்னுர் வசிட்ட மாமுனிவர்

### *திசதரன் பதிலுரை*

யேற்ற திசதரரெடுத்துரைப்பார்
என்குருவே வசிட்ட மாமுனியே

---

**1089.** கலை—மான்

**1091.** இரண்டு>ரெண்டு (பே.வ.மா)

**1110.** சீவனுக்கும்—உயிர்களுக்கும்

எனையாண்ட நாயகமே
பிள்ளையில்லா வாள்வதுதான்
பெருக வாள்வு வாள்ந்தாலென்ன
மதலையில்லா வாள்வதுதான்
வாள்ந்தாலும் வாள்வல்லவே

பிள்ளையில்லா வாசலிலே
பெரியோர்கள் புசியார்கள்
மதலையில்லா வாசலிலே
வந்து புசியார் பெரியோர்கள்
நானிருந்ததினுலென்னபலன்

என்குருவே வசிட்ட மாமுனியே

### வசிட்டர் மீண்டும் திசதரனிடம் வழி முறை கூறல்

என்று சொன்ன திசதரராசனுக்கு
யியல் முனியானவரெடுத்துரைப்பார்
ஐந்துகண் முனியானவர்தான்
அளகு கலைக்கோட்டு முனியானுர்

கானவனவாசமானதிலே
கலைக்கோட்டு மாமுனியிருக்கிருர்
மாமுனியானவருடசாபம்
மாமுனியாலவே தீரவேண்டும்
கடுக முனிவனைக் கூட்டிக்கொண்டு

கருத்தாய் அய்யோத்திக்குவந்ததுண்டால்
அய்யோத்திப்பட்டணம் அரைசாள
அருமைப்பாலனைத் தந்திடுவார்
எந்தயெந்த வகையாலே
யியல் முனியைக் கூட்டிவரப்போறேன்

ஐயோத்தியா புரிதனிலே
அதிகத்தவமதுதான் புரிந்தால்
தெய்வலோகந்தனிலிருந்து
தேன்மொளிமாரெண்டு பெண் வருவார்
யேலகையென்றும் யிலுப்பை யென்றும்

யேந்திளைமாரெண்டு பெண் வருவார்
அவர்களால் கலைக்கோட்டு மாமுனியை
ஐயோத்தி நாட்டுக் களைத்திடலாம்
மன்றுலகையரைசாள
மதலையதுவேணுமானுல்

அன்னகலைக்கோட்டு மாமுனியை
அளைத்துயிங்கே வந்ததுண்டால்
மதலையது உனக்கு உண்டு
மன்னவனே சொல்லக்கேழு
வன்னமுடன் வேள்விசெய்து

---

1146. யேந்திளைமார்—அணிகலன் அணிந்த பெண்கள்

வருந்தித்தவம் நீயிருந்தால்
அன்னக்கலை மாமுனியை
அளைத்துயிங்கே வாறேனென்றார்
வாறேனென்று மாமுனியும்
வளிநடந்தார் சடுதியிலே

காடுமலை வனங்கடந்து
கலைமுனியைத்தேடிப் போறாரையா
வசிட்ட குருக்களும் போகையிலே
மன்னன் திசரதரேது செய்தார்
திண்ணமுடனொரு வேள்விசெய்து

சிறப்பாயிருக்கின்ற நாளையிலே
வன்னமுடன் ராவணன் பிறந்து
வந்ததைச் சொல்லக்கேளுமென்றார்

*ராவணன் பிறப்பு*

வெள்ளிக்கயிலாசபுர மதிலே
மிக்க ஓலைக்கமண்டபத்தே
வீத்திருக்கின்ற சிவனாரும்
விரவினுடனவரேது சொல்வார்
பாற்கடலிலே பள்ளி கொள்ளும்
பச்சைமாலை வரவளைத்தார்
அளைத்தபோது சுவாமிகெருடனேறி

அதிவிரவாயோடிவாறாரையா
வெள்ளிக்கயிலாச மலைதனிலே
வெண்ணையுண்டோன் வந்தபோது
கண்டு பரம சிவனாரும்
கடுகவரவளைத்தேது சொல்வார்

வாரும் யெந்தன் மைத்துனரே
வாற்த்தை ஒன்று சொல்லக்கேளும்
அய்யோத்தியாபுரி பட்டணத்தில்
ஆண்டிருக்கும் திசதரற்க்கு
மதலையொன்று யில்லாமல்

வருந்தித்தவம்யிருக்குகிறான்
அவன் தனக்கு மதலையாக
அச்சுதரே பிறக்கவேணும்
என்று சிவன் சொன்னபோது
யேதுசொல்வார் நாரணனார்

---

**1160.** சடுதி—விரைவு
**1170.** ஓலைக்கமண்டபம்—சபாமண்டபம்.
**1174.** பச்சைமால்—திருமால்
**1175.** கருடன் > கெருடன் (பே.வ.மா)
**1177.** வெண்ணையுண்டோன்—கண்ணன்

என்னுடைய மைத்துனரே
யிப்போ நான் சொல்லக் கேளுமையா
யிரணியனைக் கொல்வதற்கு
யேற்ற மகனாக நான்பிறந்து
வாசல் நடையிலே யிரணியனை

வைத்து நெஞ்சைப்பிளக்கையிலே
யிரணியனுமோ கோபமுற்று
யிரண்டுகையும் பிடித்துக் கொண்டான்
அப்போது மைத்துனரே
ஆதரவாக உமைநினைத்தேன்

நினைத்தேன் உம்முட வரத்தாலே
நெஞ்சிநேர் கரமுளைத்துதையா
முளைத்தகையாலே யிரணியனை
முடித்தேன் நரசிம்ம ரூபமாக
யிரணியனும் உயிர்போகையிலே

என்னைப் பாற்த்து அவனேது சொல்வான்
சின்ன மனிதனே மூன்று கையால்
சிம்மரூபமாய்க் கொன்றாயென்றான்
யிந்தப்படி சொன்ன யிரணியனை
என்னுடைய மைத்துனரே

பத்துச் சிரசாகப் பிறவி செய்ய
பரமசிவனே அருளுமையா
அந்த உரைகேட்டுச்சிவனாரும்
அரக்கன் ராவணன் உருப்பிடித்தார்
பத்துச்சிரசும் யிருபது கையும்

பாரமலைபோலே உடம்புகளும்
சூரன் ராவணன் உருப்பிடித்தேன்
தொல்லுலகையளந்த பெருமாளே
அந்தஉரைகேட்டு மாயவனார்
ஆதி பரனோடேயேது சொல்வார்

## ராவணன் சகோதரர் பிறப்பு

கூண்ட ராவணனுக்கு துணையாக
கும்பகற்ணன் உருப்பிடியுமென்றார்
அந்த உரைகேட்டுச் சிவனாரும்
அரக்கன் கும்பகற்ணன் உருப்பிடித்தார்
உருப்பிடித்துக்கருவுருவாய்

---

1208. சிங்கம்>சிம்மம் (பே.வ.மா)

1211. சிரசு—தலை

1214. உரு—வடிவம்

சூத்தயிலங்கைக்குப்பகை வருத்த
உதாருங்கொங்கை மின்னுள்
சூர்ப்பனகையாளென்று உருப்பிடித்தார்
உருப்பிடித்த சிவனுரே
உலகளந்தோன் பாற்த்தேதுசொல்வார்

நமக்கும் உமக்கும் நல்லவனுய்
ராவணன் குலத்தில் பிறக்கவேணும்
யிலங்கைநகர் அரசாளவேணும்
யேற்ற உருவொன்று பிடியுமென்ருர்
அந்தவுரைகேட்டுச் சிவனுரும்

அரிய திருமேனி வேர்வைசிந்த
வேர்வைதன்னை வளித்துருட்டி
விபூஷணரென்று தானினைத்தார்
நாலுபேரிலும் யிளையவனுய்
நல்ல விபூஷணர் உருப்பிடித்தார்

உருப்பிடித்த சிவனுரும்
உண்மையுடனவரிருக்கையிலே
யிலங்கை நகர்தனையாண்டிருந்த
யேற்ற நல்ல குருபகரனும்
கைகேசி யென்ற பெண்ணுமாக

கருத்தாய் அரசாண்டுயிருக்கையிலே
நெடுநாளாய் மலடாக
நேரிளையாள் சடைத்திருந்தாள்
யிருக்கையிலே விச்சிரவாகு
யென்றதொரு மாமுனியும்

வனத்தில் வரக்கண்டு கைகேசி
மங்கை நல்லாழுமேது சொல்வாள்
யிந்த முனியோடே சேற்ந்தோமானுல்
யெப்படியும் நமக்குப் பிள்ளையுண்டு
என்று கைகேசி தானெழுந்து

யேற்ற முனியுட முன்பில் வந்தாள்
வந்து கைகேசி மாமுனியை
வாற்த்தையேதுரை சொல்லுவாளாம்
அய்யா மாமுனி சொல்லக் கேழும்
அடியாளோடே நீர் சேரவேணும்

சேற்ந்துயினக்குப் பிறக்கும் பிள்ளை
தேசம் அரசாள வேணுமையா
என்று சொல்லியே கைகேசி
கூடி மருவியிருபெரும்
கூண்டடங்கிருக்கின்ற வேளையிலே

---

1247. மலடாக—குழந்தைப்பேறில்லாமல்

கூண்டடங்கிருக்கின்ற வேளையிலே
கயிலை மலையிலே வீத்திருக்கும்
கரைக்கண்டனாரும் யேதுசெய்தார்
பிடித்து வைத்த உருவையெல்லாம்
பிறவி செய்தாரேயிளவயித்தில்

வந்து கெற்ப்பந்தரித்த போது
மாசந்திகைந்தந்த கைகேசி
திங்கள் திகைந்தந்த கைகேசி
சிறந்த பாலகனைப் பெற்றெடுத்தாள்
பத்துச் சிரசும்யிருபது கையும்

பாவி ராவணன் பிறந்தானையா
ராவணன் வந்து பிறந்த போது
நாயகியாள் திருவயிற்றில்
தீனுக்குப் போலே மூக்குகழும்
சிறந்த கும்பகற்ணன் பிறந்தானையா

யிருபேரும் பிறந்தபோது
யேந்திளை சூற்ப்பனகை பிறந்தாள்
சூற்ப்பனகை வந்து பிறந்தபோது
தோகை நல்லாள் திருவயிற்றில்
நாலுபேரில் யிளையவனாய்

நல்ல விபூஷணன் பிறந்தானையா
பிறந்துயிலங்கையில் நாலுபேரும்
பெருமையுடன் வளந்து வரும் நாளில்
விச்சிரவாகு முனியருளால்
வில்வித்தைகள் பலதும் படித்தார்

கூடுவிட்டுக்கூடு பாயும் வித்தை
குசால வித்தைகள் தான் படித்தார்
படித்துயிலங்கை நகர்தனிலே
பாவினையாகயிருக்கும் நாளில்
யிருக்கும் நாளையில் ராவணனும்
யேது சொல்லுவார் மூபேரையும்
சென்றுபுவிதன்னையாள்வதற்கு
சிறந்த வரமது வேண்டாமோ

### ராவணன், சகோதரர் தவமிருத்தல்

என்று சொல்லியே நால்பேரும்
யிருந்தார்கள் தவசாக

1268. கரைக்கண்டன்—நீலகண்டன்; சிவன்
1272. மாதம்>மாசம் (பே.வ.மா)
1272. திகைந்து—நிறைவுற்று
1300. தவசு—தவம்

வேள்வியது தானுஞ் செய்து
வீரன் ராவணன் தவசிருந்தான்
ஒருவருசந்தவசிருந்தான்
ஒருவரும் வரக்காணுனேயா
ஒருவரும் வரக்காணுமல்

ஒருசிரசை அறுத்தெறிந்தான்
ரண்டு வருசந்தவசிருந்தான்
ரண்டு சிரசை அறுத்தெறிந்தான்
மூன்று வருசந்தவருசிந்தான்
மூன்று சிரசை யறுத்தெறிந்தான்

நாலு வருசந்தவசிநாந்தான்
நாலு சிரசை யறுத்தானேயா
அஞ்சி வருசந்தவசிருந்தான்
அஞ்சி சிரசை யறுத் தெறிந்தான்
ஆறுவருஷந் தவசிருந்தான்

ஆறுசிரசை யறுத்தெறிந்தான்
யேழுவருஷந் தவசிருந்தான்
யேழுசிரசையறுத்தானேயா
எட்டு வருஷந்தவசிருந்தான்
யெட்டுச்சிரசையறுத்தெறிந்தான்

ஒன்பது வருஷந்தவசிருந்தான்
ஒன்பது சிரசையறுத்தெறிந்தான்
பத்துவருஷந்தவசிருந்தான்
பாரமுடிமன்னன் ராவுணனும்
தவசிருந்து பிரமதேவனேயும்

தானே காணுமல் ராவணனும்
ஒரு சிரசும் அறுப்பேனென்று
ஓங்கி அவனிற்க்கும் வேளேயிலே

## ராவணன், சகோதரர்களுக்குப்பிரமதேவன்வரமளித்தல்

அறிந்த பிரமதேவனுந்தான்
ஆதரவாயோடி வாருரையா

ஓட்டமும் நடையுமாக
ஓடிவந்தாரே பிரமதேவன்
ராவணன் தவசி முகப்பில்
நலமுடனே வந்தாரையா
வந்தபிரமனேக் கண்ணுல் கண்டு

---

1303 – 1323. இவ்வாறு ஒன்று முதல் பத்து வரை அடுக்கிச் சொல்வதை பல நாட்டுப்புறப்பாடல்களில் காணலாம்.

வாற்த்தை சொல்லுவான் ராவணனும்
மூவுலகும் ஆள்வதற்கு
மூனரைக்கோடிவரம்வேணும்
அறுத்த சிரசுகள் முளைப்பதற்கும்
அரிய வரந்தாரும் பிரமதேவா

என்று ராவணன் கேட்டபோது
யிந்த(ா)ப்பிடி வரந்தந்தேனென்றார்
தந்தேனென்று பிரமதேவன்
தானே குடும்பகற்ணனிடத்தில் வந்தார்
வந்து கும்பகருணனைப் பாற்த்து

வாற்த்தையேதுரை சொல்லுவாராம்
என்னவரமதுவேணுமென்றார்
என்று பிரமதேவன்கேள்க்க
யேது சொல்லுவான் கும்பகற்ணன்
நிகள் புவியெல்லாமறைசாள

நித்திரைத்தத்துவந்தரவேணும்
என்று கும்பகற்ணன் கேட்டபோது
யேது செய்வார் பிரமதேவன்
நித்திராதேவி தனையழைத்து
நிமிச முடனேயேது செய்தார்

கும்பகற்ணன் முகமதிலே
குணமுடனேயேவி விட்டார்
தூக்கமும் முனிப்புமாக
தூங்குகிறான் கும்பகற்ணன்
அந்தச்சணத்திலே பிரமதேவன்

ஆதரவாகவேயேது சொல்வார்
யென்ன வரம்வேணுங் கும்பகற்ணா
யிப்போது நீகேழுகும்பகற்ணா
யென்று சொல்லவே பிரமதேன்
யேது சொல்லுவான் கும்பகற்ணன்

நிமிர்ந்து முளித்துப் பாற்த்தான்
நித்திரை தத்துவம் வேணுமென்றான்
ஆறுமாசம் உண்பதற்க்கும்
அறுமாசம் உறங்குதற்க்கும்
நினைத்தபடியே உந்தனக்கு

---

1338. மூன்றரை > மூனரை (பே. வ. மா)
1351. நித்திரை — தூக்கம்
1355. நிமிசமுடனே — நிமிடத்திற்குள்ளாக
1358. விழிப்பு — முளிப்பு (பே. வ. மா)
1360. அந்தச்சணம் — அந்தநேரம்

நித்திரைதத்துவம் தந்தேனென்ருர்
என்று சொல்லியே பிரமதேவன்
யேத்த சூர்ப்பனகையிடத்தில் வந்தார்
வந்து நின்று பிரமதேவன்
வாற்த்தை யேது சொல்லுவாராம்

யென்ன வரம்வேணும் யென்று கேள்க்க
யேது சொல்வாள் சூர்ப்பனகை
கண்ணுக்கிசைந்தாரைக் கண்டதுண்டால்
கையைப்பிடித்து நான் சேரவரம்
மாட்டேன்னென்றவர் சொன்னபோது

மறுத்துப் போர் செய்ய வரம் வேணும்
என்று சூர்ப்பனகை கேட்டபோது
யேது சொல்லுவார் பிரமதேவன்
கண்டபேர்களைப் பிடித்ததுண்டால்
காதுகண்களை யறுக்க வரம்

யிந்தவரம் உனக்குத்தந்தேனென்று
எழுந்து விபூஷணரிடத்தில் வந்தார்
வந்தவரையடிதொழுது
வாற்த்தை சொல்லுவார் விபூஷணரும்
நல்லோர்களிடம் சேரவரம்

நாட்டிலனைபேரும் வணங்கவரம்
அடைக்கலமென்று வந்தபேரை
ஆபத்துயர்துணை காற்க்க வரம்
யிலங்கை நகர்தனை யெந்தனக்கு
யேத்தமுடிசூட்டியாளவரம்

யென்று கேள்க்க விபூஷணரும்
யெல்லாவரமும் உனக்குத்தந்தேனென்ருர்
யென்று சொல்லிய பிரமதேவன்
யேகி வளி நடந்தாரையா

## ராவணன் பிரமதேவன் மோதல்

பிரமதேவன் போகும்போது

பின்னல் ராவணன் ஓடிவாருன்
நில்லும் நில்லும் பிரமதேவா
நினைத்தவரம் வாங்க மறந்துபோனேன்
அந்தஉரைகேட்டு பிரமதேவன்
அதிய ராவணனோடே சொல்வார்

எந்தவரமது மறந்துவிட்டாய்
யிப்போ சொல்லுவாய் ராவணா நீ
அறுத்தால் சிரசது முளைப்பதற்க்கும்
அமுர்த கலசமுந்தரவேணும்
என்று ராவணன் கேட்டபோது

யேது சொல்லுவார் பிரமதேவன்
எந்தவரமது கேட்டாலும்
யிந்தவரமொன்றுங் கேளாதெடா
எந்த வரந்தந்தாலும்
யிந்தவரந்தரமாட்டேன்

என்று சொல்ல பிரமதேவன்
யேது சொல்லுவான் ராவணனும்
யினக்கு வரந்தராவிட்டால்
யிருப்பீரோ பிரமதேவா
சடையறுப்பேன் முடியறுப்பேன்

தாடிவீசயைப்யிடித்தறுப்பேன்
கட்டுடனே உந்தனையும்
கடியபாணத்தால் கொல்வேனென்றான்
என்றுசொல்லவே ராவணனும்
யேதுசொல்லுவார் பிரமதேவன்

வாராய் ராவணா உந்தனக்கு
வாய்த்தவரமதுதந்தேனென்றார்
யென்று சொல்லவே பிரமதேவன்
யேது சொல்லுவான் ராவணனும்
நான்கேட்டவரங்கள் தந்தால்

நலமுடனே போவாயென்றார்
என்று ராவணன் சொன்னபோது
எழுந்து பிரமதேவன் வாறாரையா
வாறபோது பிரமதேவன்
னார்த்தையேதுரை சொல்லுவாராம்

கொடுத்த வரமதையளிப்பதற்கு
கூறுவாராம் ஒருவார்த்தை
அடித்து நீ பறித்தவரம்
உனக்கு ஆபத்துக்கு உதவாது
என்றுசொல்லியே பிரமதேவன்

யேகிவளி நடந்தாரையா
அப்போது ராவணனும்
அங்காரக்கோபமுடன்
தந்தவரத்தைப்பிரமதேவன்
தானே அளித்துப் போறாரென்று

---

**1418**. எனக்கு > யினக்கு (பே.வ.மா)

**1421**. மீசை > வீசை (பே வ மா)

**1423**. பாணம் — அம்பு

**1443**. அகங்காரம் > அங்காரம் (பே வ மா)

கோபங்கொண்டு ராவணனும்
கூறுவானும் பிரமதேவனைத்தான்
ஓடாதே ஓடாதே பிரமதேவா
ஒருபோதும் உன்னையினிவிடமாட்டேன்
என்றுசொல்லியே ராவணனும்

யிவனும் பிறகாலே வாறானையா
வாய்வு மண்டலந்திசை நோக்கி
வாறாரையா பிரமதேவன்
பிரமதேவனும் வரும்போது
பின்னாலே ராவணன் வாறானையா

வருணபகவான்யிருக்கின்ற
வருணமண்டலந்தனிலே வந்தார்
வந்த பிரமதேவனைக்கண்டு
வாய்வு பகவானும் யேது சொல்வார்
யேதேது பிரமதேவா

எங்களிடத்திலே வந்ததென்ன
என்று வருணனுங் கேட்டபோது
யேது சொல்லுவார் பிரமதேவன்
வல்லரக்கனென்ற ராவணனுக்கு
வரத்தைக் கொடுக்கவு மாட்டேனென்றேன்

மாட்டேனென்றயேதுவினால்
மறுத்துப் பின்னாலே வாறானையா
என்று சொல்லவே பிரமதேவன்

## வருணனும், வாய்வும் ராவணனுடன் போர் செய்தல்

யெழுந்து வருணன் வாய்வு பகவானும்
ஓடிவந்ததோர்ராவணனை

உடன் செறுத்தார்களிருபேரும்
நில்லும் நில்லும் ராவணசூரா
நீயுமிங்கே வந்ததென்ன
அந்த உரைகேட்ட ராவணனும்
ஆங்காரக் கோபமுடன்

பிரமதேவனை யிப்போது
பிடிக்கவென்று நானோடி வந்தேன்
என்று ராவணன் சொல்லிடவே
யேது சொல்லுவாரிருந்தான்
பிரமதேவனைக் கண்டதில்லை

1451. பிறகாலே—பின்னாலே
1451 வருகிறான்>வாறான் (பே.வ.மா)
1452. வாய்வு—காற்று
1456. வருணன்—சூரியன்
1471. செலுத்தார்—தடுத்தார்

போடா ராவணா வென்றுரைத்தார்
யென்ற பொழுதிலே கோபமுற்று
யேது சொல்லுவான் ராவணனும்
பிரம தேவனைவிடுகிறாயா
போருக்கு நீ வருகிறாயா

என்று ராவணன் கேட்டபோது
யேது சொல்லுவாரிருவருந்தான்
பிரம தேவனை விடுவதில்லை
போருக்கு நாங்கள் வாறோமென்றார்
வாறோமென்றுவாய்வு பகவானும்

வருண பகவானும் யெழுந்திருந்தார்
எழுந்திருந்துயிருபேரும்
யின்பமுடனிற்க்கையிலே
ஓடிவந்து ராவணனும்
உடனெதுத்தானிவரோடே

எதுத்த ரெண்டுபேர்களையும்
ரெண்டு கையாலே பிடித்துக்கொண்டான்
வருணபகவான் தனையும்
வாய்வுபகவான் தனையும்
கையோடேகை நெரித்து

காட்டரக்கன் யிடுக்கிக் கொண்டான்
அப்போது வாய்வு பகவான்
அதிகோபங்கொண்டெழுந்து
ஆகாசம் பாய்ந்ததுபோல்
அவர் போனார் மூபேரும்

குகைகள் பறுபதமும் விட்டு
கொடுபோனார் வாய்வுபகவான்
கயிலைமலைதிசைநேரக்கி
கருத்துடனே வாறாரையா
பரமசிவன் வீற்றிருக்கும்

பாரவெள்ளிக்கயிலை வந்தார்

## ராவணன் கயிலையில் சிவனிடம் வரம்வேண்டல்

வந்தபோது ராவணனும்
வாய்வுவற்ண பகவானையும்
யிருவரையும் ஓடவிட்டு
யீஸ்பரர்முள் வாறானையா

1495. எதிர்த்து>எதுத்து (பே.வ மா)
1504 ஆகாயம்>ஆகாசம் (பே வ.மா)
1506. பருவதம்>பறுவதம் (பே.வ.மா)—மலை
1507. கொடு—கொண்டு

வந்துகயிலாச வளமையெல்லாம்
வரிசையுடனவன் பாற்த்தானையா
பாற்க்குமந்தவேளையிலே
பாரவெள்ளிக்கயிலையிலே
கோடிநூருயிரம் விளக்கெரிய

கூண்டுதெய்வார்போத்தி நிற்க்க
வாடாமல் தெய்வார் பூமலரை
வாரித்தூவியே நிற்க்கிறதும்
கண்டு அந்த ராவணனும்
கண்கொள்ளாச் சந்தோசமாய்

யிந்தக்கயிலை நமக்கானால்
எப்படியும் யிருந்தாண்டிடலாம்
என்று சொல்லி ராவணனும்
யின்பமுடனின்றானையா
பரமசிவன் மனமகிள்ந்து

பாற்த்துரைப்பார் ராவணனை
யேதேது ராவணனே
யென்னிடத்தில் வந்ததென்ன
யென்று சொல்ல பரமசிவன்
யேது சொல்லுவான் ராவணனும்

அறுத்த சிரசு முளைக்க வேணும்
அமுற்த கலசந்தரவேணும்
விரைவுடனே பரமசிவா
வெள்ளைப் பிள்ளையாரும் வேணும்
மூனரைக் கோடி வரம்

முக்கண்ணரே தர வேணும்
என்று சொல்ல ராவணனும்

*சிவன் வரமளித்தல்*

யேது சொல்வார் பரமசிவன்
பிள்ளையாரை உனக்குத் தந்தால்
புத்தி சொல்கிறேன் கேழுமன்னா

பூமிதனிலே வைத்ததுண்டால்
புவன பாதாளம் வேரூன்றும்
என்று சொல்லியே பரமசிவன்
யெல்லாவரமுனக்குத்தந்தேனென்றார்
அந்த உரை கேட்டு ராவணனும்

ஆதிபரனோடேது சொல்வான்
எல்லா வரந்தந்த சிவனாரே
யின்னம் ஒருவரந்தாருமையா
லெச்சுமிதேவியென்றபெண்ணை
நீரும் யினக்குத்தரவேணும்

---

1547. புவனம்—மண்ணுலகு

அந்தஉரைகேட்டுப்பரமசிவன்
அப்படியே நானுந்தந்தேனென்றார்

### ராவணன் திரும்பி வரலும் பச்சைமாலுடன் மோதலும்

யிந்தப்படி வரம் வாங்கிக் கொண்டு
யேத்த ராவணன் வாருனேயர
கயிலைமலைவிட்டு ராவணனும்

காட்டின் வளியாக வருகையிலே
பாற்கடலில் பள்ளி கொண்ட
பச்சைமாலும் அறிந்தாரையா
ராவணனுட வரத்தையெல்லாம்
நாமள் குறைக்கவே வேணுமென்று

காட்டின் வளியாக தானடந்து
கரியமாலவரேது செய்தார்
தழுத்தகத்தரிதனைப் பிடுங்கி
தலைகீளாகத்தானட்டி
ஆயிரங்கண்யில்லிப் பானை கொண்டு

அன்பினுடன் வெள்ளங்கோரி
கத்தரிக்கு வெள்ளமிடும் வேளையிலே
கடிய ராவணன் கண்டு கொண்டான்
கண்டான் ராவணன் பெருமானை
கருத்தினுடனவனேது சொல்வான்

மடையா உந்தனைப்போலே நான்
வையகத்திலுங் கண்டதில்லை
தலைகீளாகக் கத்தரியை
தறையில் நடுவாரோபூவுலகில்
பூவுலகில் உனைப்போலே

புத்திகெட்டதோர் மூடரில்லை
மூடர்யில்லிப் பானையிலே
முகந்தால் தண்ணீர் வருகுமோடா
என்று சொல்லவே ராவணனும்
யேது சொல்லுவார் பெருமாளும்

உன்னைப் போலே மூடனைத்தான்
உலகத்திலே கண்டதில்லை
மூனரைக் கோடி வரமதுதான்
மூடாயேதுக்கு வேண்டிவந்தாய்
யே[ய்]த்துப் போட்டானே உன்னையவன்

---

**1565.** நாமள்—தன்மைப் பன்மைப் பெயர்

**1568.** தளிர்த்த—தழுத்த; கத்தரி—கத்தரிச்செடி

**1570.** யில்லி—சிறிய ஒட்டை

**1571.** வெள்ளம்—தண்ணீர்;

யேற்ற ராவணு சொல்லக்கேளு
லெச்சு(மி)யென்றதோர் பெண்ணையுமோ
நிமிசமுடன் கையில் கொடுத்துவிட்டு
மூனரைக் கோடி வரமதிலே
அரைக்கோடி வரம் வாங்கிக் கொண்டு

வண்டோதரியென்ற பெண்ணொருத்தி
வளருங்கொண்டைக்குள் யிருக்குகிறாள்
அவளையிங்கே வாங்கிக் கொண்டு
வந்தால் ஆளலாம் உலகமெல்லாம்
என்று பெருமாளும் சொன்னபோது

யேது செய்தானந்த ராவணனும்

*ராவணன் மீண்டும் கயிலையில் வந்து வரம் கேட்க சிவன் வரமளித்தல்*

யிதுவே நல்லகருமமென்று
யேகி நடந்தானே ராவணனும்
பரமசிவனுட கயிலைநோக்கி
பாவிராவணன் வாறானையா

வனங்களென்ற வனங்கடந்து
வந்துசிவனுடகயிலையிலே
வந்து நின்று ராவணனும்
வாற்த்தையேது சொல்லுவானும்
மூனரைக்கோடி வரமதுதான்

முக்கண்ணரே வேண்டாமையா
லெச்சுமி தேவி யென்ற பெண்ணும்
நேசமுடனினக்கு வேண்டாமையா
உங்கள் கொண்டைக்குள் யிருக்குகின்ற
வண்டோதரி யென்ற பெண்வேணும்

அரக்கோடி வரமும் வேணும்
ஆதிபரனுதாதாருமையா
என்று கேள்க்கவே ராவணனும்
யேது செய்தார் பரமசிவன்
உமையவள் கொண்டை தனிலிருந்த

உற்றதொரு தாளம் பூவதையும்
வண்டோதரியென்ற பெண்ணுக்கி
வல்லரக்கனுட கைக் கொடுத்தார்
தந்தேன் நீ கேட்ட வரங்களென்று
தானே ராவணன் கைகொடுத்தார்

---

1596 கம்ப இராமாயணத்தில் மண்டோதரி என வழங்கும் பெயர் இந்நூலில் வண்டோதரி எனக் காணப்படுகிறது.
1616. அரை > அர (பே. வ. மா)

கொடுத்த வரங்களை வாங்கிக் கொண்டு
கூண்ட ராவணன் வாறானையா

## வாய்வு பகவான் ராவணனுக்கு தொல்லை கொடுத்தல்

ராவணசூரனும் வாறபோது
நாட்டையளந்த பெருமாளும்
யின்று ராவணன் தன் வரத்தை

யிப்போ குறைக்கவே வேணுமென்று
வாய்வு பகவானை வரவளைத்து
வார்த்தையேதுரை சொல்லுவாராம்
பரம சிவனுட கயிலையிலே
பாவி ராவணன் வரங்கள் வேண்டி

வாறான் வனகாசக் காட்டின் வளி
வரிசையுடனேதா நீருஞ்சென்று
ராவணனுட தன் வயிற்றை
நலமுடனீருங்கலக்கிவிட்டால்
வரிசையுடனே நானும் வந்து

வரத்தைத்குறைத்து விடுவேனென்றார்
என்று சொல்லவேதான்கேட்டு
எழுந்துநடந்தார் விரவாக
ராவணன் வரும் வளிதனிலே
நலமுடனே ஓடிவந்தாரையா

வயிற்றுக்குள்ளே தான்புகுந்து
மடமடென்றுயிரச்சலிட்டு
வயிறுகளிகின்ற வேளையிலே
வல்லரக்கனென்ற ராவணனும்
பிள்ளையாரை யெங்கே வைப்பேனென்று

பேதலித்தவன் நிற்க்கையிலே
மாயன் பெருமாழுங்கிளவனாக
வல்லரக்கனுடயெதிரே வந்தார்
கண்டு ராவணன் சந்தோசமாய்
யிந்தக்கட்டயைக் கொஞ்சம் பிடியுமென்றார்

கையில் சற்றே பிடியுமென்றான்
காலுக்கழுவினான் வாறேனையா
யென்று சொல்லவே ராவணனும்
யேது சொல்லுவார் பெருமாழும்
கட்டயையென் கையில் தந்ததூண்டால்

---

1647. இரைச்சல்—யிரச்சல் (பே.வ.மா)—ஓசை

1651. பேதலித்து—மாறுபட்டு

1659 காலுக்கழுவி—மங்கலச்சொல்

காவலனேனுனும் சொல்லக்கேழு
நிமிசமதிலே நீ வாராவிட்டால்
நின்று மூன்று சத்தங் கூப்பிடுவேன்
வாராதே நீயிருந்ததுண்டால்
வைத்துவிடுவேனுன பூமியிலே

என்று சொல்லி பெருமாழும்
யேற்ற மரக்கட்டை (யை) கையில் வாங்கி
ராவணன் தானும் போனபோது
நல்லபெருமாழும் யேது செய்தார்
சற்றே நேரம் வைத்துக்கொண்டு

தானே கூப்பிட்டார் மூன்று சத்தம்
மூன்று சத்தங் கூப்பிடவே
முன்னே ராவணன் வரவுமில்லை
ராவணனையுங் காணுமல்
நலமுடனவர் கீளே வைத்தார்

வைத்து ராவணன் வருகுமுன்னே
மாயன் பெருமாழு மறைந்து கொண்டார்
மறைந்து மாயவர் போனபோது
வந்து பாற்த்தானே ராவணனும்
பாற்த்து ராவண சூரனுமே

பாவி கெடுத்தானே யென்று சொல்லி
வெள்ளப்பிள்ளை யாரானவரை
வீரன் ராவணன் தொட்டெடுத்தான்
புவுன பாதாளமது வரைக்கும்
புகுந்துவேர்ப்போட்டுக் கொண்டுதையா

யிழுத்துயிழுத்துப் பார்த்தானையா
யிருபது கையாலே ராவணனும்
தன்னுலேயவனுகுமட்டும்
தானும்யிழுந்தானே ராவணனும்
யேலா மலவனிலங்கையிலே

யிவன் போனுன் ராவணனும்

## ராவணன் இலங்கையை ஆண்டுவரல்

யிலங்கையிலே யவன்போக
எழுந்திருந்து வெள்ளைப்பிள்ளையாரும்
கயிலாசமலை நோக்கி
கருத்துடனேயவர் போய்ச்சேற்ந்தார்

யிப்படியாகயிருக்கையிலே
யிலங்கையில் போய் வீற்றிருந்தான்
வீற்றிருக்கின்ற தோர் நாளையிலே

---

1690 இயலாமல் > யேலாமல் (பே.வ.மா)

விரவாக ராவணனுக்குக் கிரீடம்வைத்து
யிலங்காபுரி நகர் பட்டணத்தை

யிசைந்து ராவணன் அரசாண்டான்
அரசாண்டிருக்கிற நாளையிலே
ஆதவன் நாரதப்பிரம ரிசியும் வந்தார்

### நாரதர் ராவணன் கொடுமைகளை ராமேசுர ராஜாவிடம் கூறல்

வந்தரிசியும் அங்கே ரெண்டுதினம்
வம்பன் ராவணன் செய்யுங்கொடுமைகளை

பொறுக்கமாட்டாமல் நாதரும்
புத்தி தடுமாறி யிப்பரதவித்து
யிங்கேயிருக்கக்கூடாதென நினைந்து
யேகினர் ராமேசுரப்பட்டணத்தில்
பட்டணத்தில் ராசன் தனையுங்கண்டு

பார்த்தார் ராசனும் முனிவர்தன்னை
ஆசனத்திலிருத்தி உபசரித்து
அன்பாகத் தெண்டஞ் செய்து அடிபணிந்தார்
நாரதபிரமரிசி சுவாமி
நாட்டிலிருந்துயிப்போ வந்தீர்களே

எங்கிருந்துயிங்குவந்தீர்
யியலுடன் காறணஞ் சொல்லுமென்ருர்
என்று ராசனுந்தான் கேள்க்க
யிசைந்து முனி நாரதர் சொல்லுவாராம்
யிலங்காபுரி பட்டணந்தனையாழும்

யிடும்பன் ராவணனிடத்தில் போனேன்
போனபோதுதான் ரெண்டுதினம்
புண்ணியத்தைப்பாற்க்கவேணுமென நினைந்து
ஆதரவாய் நானும் பாற்க்கும் போது
அவன் செய்த அனீதி முடியாது

முடியாது சொல்லுகிறேன் கேழுமன்னு
முயற்ச்சையாய் நானு முரைக்குகிறேன்.
வாய்வு பகவான் வந்து ஊளியஞ்செய்யுகிருர்
வருணபகவான் வந்து மாரி பெய்ய
அக்கினி பகவான் வந்துயேவல் செய்ய

---

1713. தெண்டம்—வணக்கம்
1727. முயற்சி > முயற்ச்சை (பே. வ. மா)
1728. ஊளியம்—தொண்டு

அங்கே தெய்வார்கள் அடிவணங்க
இப்படி அனியாயஞ் செய்தவர்கள்
எங்கும் நான் கண்டிருப்பதில்லை
புகள்ச்சையாய் நாரதர் சொன்னபோது
பூலோக ராசனுந் தானுரைப்பார்

அரக்கன் ராவணனைக் குறித்துச் சுவாமி
சொன்னீர்களே நீங்கழுந்தான்
அவன் வேறுராசருடன்
பொருது வென்றிருக்கிறானா சுவாமி
திக்குவிசயஞ்செய்திருக்கிறானா

அப்படியானால் அவனைமதித்துக் கொள்வோம்
என்று ராமேசுரராசனுரைத்த போது

### ராமேசுரராஜா கூற்றினை நாரதர் ராவணனிடத்தில் கூறல்

யெழுந்து நாரதர் யிலங்கையில் வந்தார்
யிலங்கையில் வந்து ராவணன் தன்னிடத்தில்
யிந்த வரலாறெல்லா முரைத்தபோது

யிப்படியவர்கள் யிருக்கையிலே
கேட்டு அரக்கனுந்தலையசைத்து
கெம்பீரமாகவே கேட்டுக் கொண்டார்
அப்போது முனியெழும்பித்தான் போனார்

### எமதர்மன் மகோதர நாடாரை மந்திரியாக்கல்

ஆதி காரணமொன்று சொல்லக்கேளும்
கேள்ப்பீர் பூலோகத்தில் பெரியோர்களே
தெற்ச்சிதமாய்காறணங் கேள்க்கவேணும்
யிமலோகத்துக்கதிகாரியான
யேமதற்ம ராசன் தேசமதில்
வீத்திருந்து சட்டவிதிப்படிக்கு

விரைவாய் அதிகாரஞ் செலுத்தும்போது
படித்தமுள்ள மந்தி(ரி)நம்மிடத்தில்
பண்பாகத்தானொருவர் வேணுமென்று
சிந்தையில் கருதியவரிருக்கும்போது
சிறப்பாயிலங்கை நகர்பட்டணத்தில்

பச்சைமால் சிவபெருமான் கிருபையினால்
வந்துதித்த தெய்வக்கன்னி பெற்றமக்கள்

---

1739 பொருது—போர் செய்து

1752 கெற்ச்சிதமாய்—சிறப்பாய்

1757. படித்தமுள்ள—கல்வியறிவுள்ள

வலங்கை மாக(ா)ளி வளர்த்த பாலர்களில்
மாயன் கிருபையால் அவதரித்து
வலங்கைச்சான்ரோர்களில் மூத்தபாலன்

மந்திரமுற்த்தி நாடார்தானும் பெற்ற
மகிபன் மகோதர நாடார் தான்
வணக்கஞ்செய்து குருக்களிடந்தனிலே
சகல படித்தங்கள் யேல்லாங்கற்று
தயவாக ஞானங்கற்ற வராய்

யிருக்கிருரென்றுதான் தெரிந்து
யிமதற்மராசனுமப்போது
தகப்பன் மகனுமாய்யிருவலரையும்
தானே தூதரால் அழைத்துவந்து
ஆசனத்தில் வீத்திருக்கத்தானுஞ்செய்து

அன்பாக தாகபோசனந்தீற்த்தபோது
யெமதற்ம ராசன் தானுமப்போ
யியல்வாக மந்திர மூற்த்தி நாடாரிடம்
உங்கள் பாலன் மகோதர நாடாரை
நமக்கு உகந்த பட்டத்து மந்திரியாய்

நாமே வைத்துக் கொள்ளவேணுமென்று
நாதன் கிருபையாலே உங்களையும்
வரவழைத்தேன் உங்களை நானுமிப்போ
வாக்காலே உத்தரவாக வேணும்
யென்றுயிமதற்ம ராசன் கேட்டபோது

யிசைந்த மந்திரமுற்த்தி நாடார் சம்மதித்து
உங்கழுட வாக்கில் பகற்ந்தபடி
உகந்த பாலன் கரத்தை தான்பிடித்து
யேமதற்ம ராசனிடமதில் ஒப்புவித்து
யெழும்பினுர் தாமியிருக்குயிடந்தனிலே

அப்போது சிலநாள் களித்த பின்பு
ஆதவன் மகோதர நாடார்க்கு
தெய்வக்கன்னி ஒரு பெண்தனையும்
சிறப்பாய் மணமது முடித்தபின்பு
யெமதற்ம ராசாவும் மகோதரனை

யின்பமுடன் பட்டத்து மந்திரியாய்
மற்றப்பிரதானிக்கும் மந்திரிக்கும்

---

1797. பிரதானி—முக்கிய நபர்

1763-1765 நாடார் குல மக்களை 'பத்திரகாளிபுத்திரர்' என்றும் 'வலங்கைஇனத்தவர்' என்றும், 'சான்ருர்' என்றும் வழங்கும் செய்தி இந்நூலிலும் காணப்படுகிறது. மற்றும் விளக்கமான செய்திகளை 'பத்திரகாளியம்மன் கதை' என்ற நூலில் காண்க.

1768 குரு—ஆசிரியன்

1776. போசனம்—உணவு

மகிமையாய் மேலானமந்திரியொன்று
யாவருக்கும் தெரியும்படிபட்டம் வைத்து
ஆண்டு சிலகாலம் யிருக்கும் போது

### ராவணன் போருக்காகத் தன் படைகளைத் திரட்டல்

யிலங்காபுரிக்கோட்டையாழுகின்ற
யிசைந்த அரக்கன் ராவணனும்
ராமேசுரம் ஆழுகின்ற ராசாவும்
நம்மை அவமரியாதேபறைந்து விட்டார்
என்று மனதினில் உச்சரித்து

எல்லாப்பேரையுமருகளைத்து
பட்டந்தரித்தோர் ராசாக்களில்
பண்பாகத்தென் திசையில் தானிருக்கும்
யிருக்கும் யிமதற்மராசனிடம்
யிசைவாகப் போர் பொருது வெல்லவேணும்

வென்றுதிக்குவிசயஞ்செலுத்தவேணும்
மிக்கப்படைதளகத்தரே யெழும்பவேணும்
என்று ராவணனுரைத்த போது
எல்லாப்படைகழுந்தானெழும்பி
யேமதற்ம ராசனென்று சொல்கிறவர்

யிசைந்த தெய்வலோகச்சட்டப்படி
அற்ற உயிர்களைத்தான்பிடித்து
அவரவர் செய்த வேலைக்குத்தக்கபடி
கூலிகொடுத்துத் தெண்டிக்கவும்
கொடுத்த அதிகாரமல்லால் வேறென்றுமில்லை

அவரிடத்தில் நாம் போகவேண்டாஞ் சுவாமி
ஆத்தியம் யெல்லோரும் உரைத்தஉடன்
ராவணன் அரக்கனுங் கோப மீறி
அப்போது யாவரையுந்தான் பாற்த்து
நாம் உரைத்தபடி நீங்கள் தவருமல்

நலமுடன் யாத்திரை வாருமென்று
ராவணன் பிறப்பட்டு யெழும்பி விட்டான்
யெல்லாப் படைகழுந்தானெழும்பி
போனார்கள் யெமலோகப்பட்டணத்தில்

### ராவணன் எமதர்மனுக்குத் தூது அனுப்பல்

புகள்ச்சையாய் ஒருமுகமாய் நின்று கொண்டு

---

1804. பறைந்து (மலையாள வழக்கு)—சொல்லி, கூறி
1810. பொருது—போர் செய்து
1819 தண்டிக்க>தெண்டிக்க (பே. வ. மா)
1822 ஆத்தியம்— முதலாவது
1827, புறப்பட்டு > பிறப்பட்டு (பே. வ. மா)

தூதன் தன்னிடத்தில் புகன்ற வாற்த்தை
சொல்லுகிறேன் கேழுங்கள் பெரியோரே
ராவணமகராசன் உம்மிடத்தில்
நவின்றுபோர்புரியவந்திருக்குகிருர்
உங்களிடம் அறிவிக்கச் சொன்னபடி

உரைத்து அறிவித்து வந்து சேற்ந்தான்

## எமதர்மன் தன் படைகளைத் திரட்டல்

எமதற்மராசன் கேட்டுக் கொண்டு
யெல்லாத் தளகத்தர் படைகளையும்
வருத்தி வைத்துக் கொண்டு யிமராசன்
வந்த காரணமெல்லாந்தானுரைத்து

ராவணனுக்கு அரக்கோடி வரமுடிந்தாக்கால்
நாம் அவனைப்பிடித்து சிச்சை செய்வோம்
என்று மனதில் கிலேசம் சற்றும் யெண்ணுமல்
யிப்போபோர்புரியவந்திருக்குகிருன்
நீங்கள் யாவரும் யெழும்பவேணும்

நாமும்யிப்போயெழும்பி வருகிரேருங்காண்
என்றுரைத்தபடி தளகத்தர் படைகளுடன்
எல்லாவரும் போய் அணிவவத்தார்
அப்போது ராவணன் தான் பாற்த்து
அவர்படைகளையும் பிரித்து அணிவகுத்தார்

யிப்படி அணிவகுத்துப் பொருதார்கள்
யிருகச்சிப் படைகளுந்தான் பொரவே
அப்போதுப்படைகள் ஒன்றுக்கொன்று
அங்கே சமர்பொருது மடியும் போது

## இருபடைகளும் சமாதானம் செய்தல்

யிருகச்சிதளகத்தரும் ஒன்று கூடி

யிசைந்தார்கள் ஒரு சமதானம்
சமதானம் பேசியேயெமதர்ம ராசனிடம்
சந்தித்து ராவண மகராசன் தன்னிடமும்
பகறந்தார் சமதான மான வாற்த்தையது
பண்பாக உரை(க்)கின்ரேருங் கேள்க்க வேணும்

---

1834. நவின்று—விரும்பி
1842. சிச்சை—தண்டனை
1843. கிலேசம்—வருத்தம்
1852. கச்சி—தரப்பு, பிரிவு
1854. சமர்—போர்

யிருவருங்கேள்க்க வேணுஞ்சுவ(ா)மிகளே
யிலங்கபுரி ராசனே உங்கழுக்கு
யீசர்உத்தரவு அரக்கோடிவரம்
யிசல்வுடனேயிருக்குதையா
அரக்கோடி வரமுடியுமட்டும்

ஆராலும் உங்களை வெல்லமுடியாது
யெமதற்மராசாவே யெங்கள் சுவாமி
யீசர் மகாதேவர் கிருபையாலே
புவனம் யாவற்று மனுக்கழுக்கு
புகள்ந்து உயிர் பாட்டந்தந்த பரம்சிவம்

கிருபையுடன் சுவாமி யெக்காலமும்
கீற்த்தி பெற யெமலோகம் ஆள்வதல்லால்
வேறே ஒரு யெதிரிகள் தன்னாலே
வெல்ல முடியாது சுவாமிகளே
யிப்போ நீங்கள் யிருபேரும் போர்புரிந்தால்

நாங்கள் யாவருமாண்டுபோவோம் சுவாமி
என்று தளகத்தர் படைகள் உரைத்தபோது
யிருவரும் சம்மதித்துக் கொண்டார்கள்
சம்மதித்து சமதானம் ஆனபின்பு
தக்கராசன் யிருவரும் படைகழுமாய்

எல்லாப்பேர்கழும் உறவுபேசி
யிருந்தார்கள் யெமலோகப்பட்டணத்தில்
பட்டணத்தில் வீற்றிருக்கும் போது
பண்பாக யெமதற்மராசன் சொல்வார்
தாகத்துக்குத்தான் பொசிக்க வேணுமென்று

தயவாக யாவரும் பொசித்தார்கள்
பொசித்தவுடன் தாம்பூலந்தானருந்தி
புகள்ச்சையாய் யாவருமங்கிருக்கும் போது
போசனஞ்செய்யவேணுமென்றார்
பொருந்தியே எமதற்மராசன் உரைத்த உடன்

ராவணமகாராசன் கேட்டுக்கொண்டு
நாமும்யிவிடம் பொசிக்க வேணுமானால்
உங்கள் தேசத்தில் நடக்கும் புதுமையெல்லாம்
உகந்து நாமும் பாற்க்கவேணும்
என்றுரைத்தபோது யெமதற்மராசன்

---

1869. புவனம்—பூலோகம்; மனுக்கழுக்கு—மனிதர்களுக்கு
1870. பாட்டம்—குத்தொகை
1885. புசிக்க > பொசிக்க (பே. வ. மா)
1887. தாம்பூலம் வெற்றிலை பாக்கு

யிசைந்து பாற்த்து வாருமென்றுரைத்தார்

## ராவணன் எமதர்மன் நாட்டினைச் சுற்றிப்பார்த்தல்

உரைத்து உத்தரவானபோது
உகந்த தளகத்தருடன் கூடி
பிறப்படும்வேளையில் எமதற்ம ராசனிடம்
புகள்ந்து எங்கழுக்கு உதவியாக

பட்டத்து மகோதரமந்திரியை
பண்பாக நகர்சுத்திப் பாற்பதற்க்கு
யினக்கு உதவியாக விடவேணும்
என்று உரைத்தபோது மந்திரியை
வருத்தி உதவிசெய்து வாருமென்று

மகோதரமந்திரிக்கு உத்தரவு செய்தார்
செய்தஉடன் நகரெல்லாஞ் சுற்றிப்பாற்த்து
சிறப்பாயீசானம் வளரும் வேள்வியதை
கண்டவுடன் ராவணனுந்தான் பயந்து
கடுகஅக்கினி வேள்வியைப் பார்த்தவுடன்

உடனே மகோதர மந்திரி தன்னிடத்தில்
உற்ப்பனமாயிந்த வே(ள்வி)வளருங்காறணம்
காரணந்தன்னையினக்கு உரைக்கவேணும்
களிப்பாக மந்திரியே காரணத்தை
சொல்ல வேணுமையா வென்றவுடன்

சுயம்பாக மகோதரமந்திரி தானுரைப்பார்
யிப்போது யென்றால் சொல்லமுடியாது
ரகசியமாகவே சொல்லவேணும்
என்று மந்திரி உரைத்தபோது
யிசைந்து ராவணன் படைகளையும்

படைதளகத்தரையும் விலகச்சொல்லி
பண்பாக ராவணனுமந்திரியும்
மறைத்துயிருந்து சொல்லுமந்த
வாற்த்தையானது ராவணம்காராசனே
உமக்கு அரக்கோடி வரமுடிந்தவுடன்

முயற்ச்சையாய் யெங்கழுடராசமன்னன
யிந்த அக்கினி வேள்வியிலே
யேமகால தூதுவர்கள் தன்னைவிட்டு
பின்கட்டாகக் கட்டிக் கொண்டு
பிசகாமல் அக்கினி வேள்வியிலே

---

1908. யீசானம்—வடகீழ்த்திசை
1912. உற்ப்பனம்—தந்திரம்
1916. சுயம்பாக—தானாக
1930. பிசகாமல்—தப்பாமல்

தள்ளி விடுவாரென்று தானுரைக்க
சமற்த்தன் ராவணன் மனங்கலங்கி
புத்தி தடுமாறி தான்பயந்து
புகலுவான் மந்திரியிடமாக
என்னேயிந்த வேள்யில் தள்ளாமல்

யிருக்கும்படி செய்வீர்கள் அய்யாவே
என்று உரைத்தபோது மந்திரியும்
யெக்காலமும் நான் உம்மிடத்தில்
யிருந்து நம்முட உத்தரவுப்படி
யிசைந்து நடந்தாக்கால் நீர் நினைத்தபடி

முடிவாகும் பின்னும் நான் சொல்லுகிறேன்
முதல்வனே ராசமன்ன கேழுமென்றார்
என்னுடைய ராசன் யேமதற்மர்
எக்காலமும் பிரிய விடமாட்டார்
ராசர்க்கு முதமந்திரியானதாலே

என்று பகற்ந்தபோது ராவணனும்
யிசைந்து யேமதற்மராசன் சமுகமதில்
உத்தரவு நான்வாங்கிக் கொள்வேனேயா
உண்மையிது சமுசியம் நினைக்கவேண்டாம்
அந்தவாற்த்தை மந்தரி தான் கேட்டு

அன்பாகத்தான் மொளி உரைக்கக் கேழும்
நாம்பேசிக் கொண்ட ரகசியம் ஒருவருக்கும்
பிரஸ்தாபுந் தெரியக் கூடாது
என்று மந்திரி உரைக்க ஒப்புக்கொண்டார்
யிசைந்துராசனிடம் வந்து சேற்ந்தார்

வந்தஉடன் எமதற்மமகராசன்
வரிசையுடன் போசனத்தை வரவழைத்து
போசனமளித்துத் தாம்பூலங் கொடுத்து
புகள்ச்சையாய் ஒன்றுகூடி சந்தித்தார்கள்
சந்தித்துயாவரையு மகிள்ச்சையாக்கி

தானேபோய் வருவீரென்று உரைத்தவுடன்

### ராவணன் எமதர்மனிடம் உதவிவேண்டல்

யிலங்கபுரிபட்டணம் ஆழுகின்ற
ராவணமகராசன் எழுந்துநின்று
கைகெட்டி யெமராசனே வணக்கமாக
கருதி ஒருவசனங் கூறுவாரம்

1932. சமற்த்தன் - திறம்படச் செயல்படுபவன்
1934. புகலுவான்—சொல்லுவான்
1949. சமுசியம்—சந்தேகம்
1965. வசனம்—வார்த்தை, செய்தி

சுவாமி உங்களுட பட்டத்துமந்திரியை
உதவியாய் யென்னிடம்யிருக்கும்படி
உத்தரவாகவேணும் யென்சுவாமி
ஓவியமே யெந்தன் அய்யாவே
என்றுராவணமகராசன் கேட்டபோது

### எமதர்மன் சம்மதம் தெரிவித்தல்

பியல்வாய் மகோதரமந்திரியை வரவழைத்து
எக்காலமும் ராவணராசனிடம்
யிருக்கவேணுமென்று உத்தரவு செய்தார்.
அப்படியே உத்தரவு பெற்றுக்கொண்டு
அல்லோரும் யிலங்கையில்போய்ச் சேர்ந்தார்

### திசதரர் தெய்வலோகப் பெண்களிடம் முறையிடல்

யிப்படியிருக்கின்ற நாளையிலே
யேது செய்தார் திசதரரும்
பன்னிரெண்டு வருசமட்டும்
பாரத்தவமது தான்புரிந்தார்
தெய்வலோகந்தனிலிருந்து

தேன்மொளிமாரெண்டு பெண்கள் வந்தார்
யேதுமன்னு திசதரனே
யெங்களையழைத்ததோர் காரணமேன்
அய்யோத்தியாபுரியானதிலே
அரசாண்டு நான்வரும் நாளில்

கோசலைக் கைகேசி சிமித்திரரசி
கொடியிடைமார்களை மாலையிட்டேன்
பட்டத்துதேவிமார்களுக்கு
பாலகன் ஒன்றுமில்லாமல்
உங்களுடகிருபையினுல்

உலகம் ஆளப்பாலகன் பிறக்கவேணும்
கானகமாமலை யானதிலே,
கலைக்கோட்டு மாமுனி யிருக்குகிருர்
கலைக்கோட்டு மாமுனியானவரும்
கடுக அய்யோத்திக்கு வந்ததுண்டால்

அய்யோத்தி பட்டணம் அரைசாள
அருமைப்பாலன் பிறந்திடுவான்
என்று சொன்னுர் திசதரரும்

### தெய்வலோகப் பெண்கள் முனியைத்தேடல்

யேந்திழைமார்கள் ரெண்டு பெண்கள்
யிதுதானே ஒரு பிரதானம்

---

1975. அல்லோரும் எல்லோரும்
1995. கடுக—விரைவாக

யென்று சொல்லியிலங்கைப் பெண்கள்
மத்தாளத்தை ஒருதியெடுத்தாள்
மகுடமானதை ஒருதியெடுத்தாள்
கைத்தாளமானதை ஒருதியெடுத்தாள்
கைமணிதோரணம் ஒருதியெடுத்தாள்

கானவனவாசமானதிலே
காரிமை மாதர்வளிநடந்தார்
வனங்களென்ற வனங்களெல்லாம்
மாமுனியை அவர் தேடலுற்றார்
தேடியுமோயவர் காணாமல்

செய்யிளைமாரிலங்கைப்பெண்கள்
யெங்கே சென்றால் நாம்காணப்போறோம்
யேற்றகலைக் கோட்டு மாமுனியை
அந்தவனவாசமானதிலே
ஆயிளைமார்கழும்யிருக்கையிலே

முனிவர் வரல்

அறுபதினாயிரங்கலைதனக்கு
அளகுமுனியொரு முதக்கலையாய்
கொம்புரெண்டுந்தங்கத்தாலே
குளம்புகழும் வெள்ளியினால்
மேனியெல்லாந் தங்கநிறம்

விரையக்கலைக்கோட்டு மாமுனிவன்
கானவனத்திலே வருகையிலே
காரிளைமார்களைக் கண்டு கொண்டார்
காரிளைமார்களைக் கண்டபோது
கலைக்கோட்டு மாமுனியானவர்தான்

அந்தமலைநல்லவாரத்திலே
அம்முனியானவர் தானிருக்க
யிவர்தான் கலைக் கோட்டு மாமுனிவர்
யிவரை மசக்கவும் வேணுமென்ன
யேழுயிடை நல்ல சற்க்கரயை

யிரும்புக்கிடாரத்திலே தான் கரைத்து
அத்திச்சருகும் ஆலஞ்சருகும்

---

2002. மத்தாளம்—இசைக்கருவி
2003. மகுடம் இசைக்கருவி
2004. கைத்தாளம்—கஞ்சதாளம்
2016. கலை—மான்
2026. வாரம்—அடிப்பகுதி
2029. மயக்க > மசக்க (பே வ. மா)
2030. எடை > யிடை (பே. வ. மா)
2031. கிடாரம்– வாய் அகன்ற பெரிய பாத்திரம்
2032. சருகு– காய்ந்த இலை

அதிகபச்சமாய்த்தான் தொளித்தார்
தொளித்து மலைக்குள்ளே தான் ஒளித்து
தோகைமார்கழுந்தானிருந்தார்

முன்வந்தகலைக் கோட்டு மாமுனிவர்
முத்திபெறவந்துதான் குடித்தார்
தண்ணீர் குடித்துத் தாகந் தீர்ந்த போது
தானே கலைக்கோட்டு மாமுனிவன்
தன்னுடயினத்தோடே போகாமல்

தானே மசக்கங்க ழுண்டாகி
அந்தமலையடிவாரத்திலே
அம்முனியானவர் மசங்கி விட்டார்

## தெய்வலோகப் பெண்கள் முனிவரை மயக்கல்

கண்டார்களிந்தயிலங்கைப் பெண்கள்
கானவனத்தில் மாமுனியை

யிவரை மசக்க வேணுமென்று
யேந்திளைமார்களிருபேரும்
கொண்டையைக் கோரி சீப்புமிட்டு
கொண்டையிலே வட மாலைசூடி
நெத்திப்பிறையோடு உச்சிப்பிறை

நேர்விளிக்கு மையெழுதி
அஞ்சன கண்மையெழுதி
அமந்த செந்தூரப் பொட்டுமிட்டு
யேத்தாப்பாம் நடையுடையாம்
யிருகை நல்ல வீச்சிகழும்

பாற்த்த பேர்கள் மசங்கிவிள
பத்துவிரலுக்கு மோதிரமாம்
மோதிரங்கள் யிருகைக்கும்
முருக்கம் பூப்போல் வாயளகும்
ஆலிலைபோல் வயிறளகும்

அமந்த நல்ல புருவங்கழும்
சந்திரசூரியனுதித்தாப் போல்
தார்குளலாரந்த யிலங்கைப் பேண்கள்
மத்தளத்தை ஒருதி தட்ட
மகுடத்தை ஒருதி தட்ட

கைமணியானதை ஒருதி தட்ட
கைத்தாளத்தை ஒருதி தட்ட
கலைக்கோட்டு மாமுனிபேரில்
காரிளைமார்கள் கவிபாட
கல்லுங்காடுந்தானுருக

---

2047—2063. இவ்வரிகளில் இலங்கைப் பெண்கள் இருவரின் உடல் வருணனைகள் அமைந்துள்ளன.
2050. நெத்திப்பிறை, உச்சிப்பிறை—ஆபரணங்கள்

கலைக்கோட்டு மாமுனி மனமுருக
பட்டமரம்யிலை தழுக்க
பாடினார்கள் ராகமதை
புல்லுருக புவனமுருக
புண்ணியபாற்பதி மனமுருக

சீரான நல்ல சங்கீதம்
செவிகுளிரக் கேட்டபோது

## முனிவர் பெண்கள் உரையாடல்

எந்த ஊர் யெந்தத்தேசம்
பிங்கு வரக்காரணமேன்
என்று கலைக் கோட்டு மாமுனி

யேந்திளையை பாற்த்தேது சொல்வார்
மார்பிலே கொம்பு முளைத்ததென்ன
மாதர்களே உங்கழுக்கு
என்று கேட்டார் கலைக்கோட்டுமாமுனி
யேந்திளை மாதரெடுத்துரைப்பார்

மலையிலே வாள்கின்ற பேர்கழுக்கு
மண்டையிலே ரெண்டு கொம்புமுண்டோ
மானிலத்திலே வாள்கிற பேர்கழுக்கு
மார்பதிலே ரெண்டு கொம்புமுண்டோ
நாங்கள் ரெண்டு பெண்கள் தானே

நல் முனிவரே சொல்லக்கேளும்
அய்யோத்தி நகரானதிலே
ஆயிளைமார்களேழு பெண்கள்
நாகக்கன்னி முத்துக்கன்னி
நண்ணுதலாள் தெய்வகன்னி

யிலங்கையென்றும் யிலுப்பையென்றும்
யேந்திளையாள் ராசகன்னி
யிருக்குகிறார் அய்யோத்திப்பட்டணத்தில்
என்று சொல்லியந்த யிலங்கைப் பெண்கள்
யேற்றகலைக்கோட்டு மாமுனிவர்

பெண்கள்மேல் கொண்ட மோகத்தினால்
பெண்கொடிமார்கள் யென்முன்னடக்க
காடும் பலபலவனங்கடந்து
கலைக்கோட்டு மாமுனிவரவு கண்டார்
பூக்காதமரங்கள் பூத்து

---

2072. தளிர்க்க > தழுக்க (பே. வ. மா)
2075. பாற்பதி—சிவனின் மனைவி

புண்ணியர்க்கு பூச்சொரிய
காய்க்காத மரங்காய்த்து
கலைமுனிக்குக் கனியுதிர
யிந்த அதிசெயம் பாற்த்துக்கொண்டு
யேந்திளைமார்கள் யிலங்கைப்பெண்கள்

யிப்படிக்கொத்த மாமுனிவன்
யேற்ற அய்யோத்திக்கு வந்ததுண்டால்
செப்பமுடன் திசதரற்க்கு
சிறந்தபாலகன் கொடுத்திடுவார்
என்று சொல்லியந்தயிலங்கைப் பெண்கள்

யிருபேரும் எண்ணிக்கொண்டார்

## முனிவர் அய்யோத்தியில் வரலும் திசதரர் வேண்டுதலும்

அய்யோத்தியாபுரி நாடதிலே
அளகுமுனிவரும் வந்தபோது
பதினாலு வருச மட்டும்
பாரில்மழையது பொளியாமல்

மழைமாரி பொளியாமல்
வருணனும் மறைந்ததுவாம்
மாமுனிவர் பாதம்பட்டபோது
மழைமாரி பொளிந்திடுமாம்
தண்டருளுஞ்சிம்மாசனத்தில்

தவமுனியானவர் தானிருந்தார்
பாலுபளமொடு சீனியுடன்
பசுந்தேங்காய் சற்க்கரையும்
கானிலுள்ள தேனுமிட்டு
கருத்துடனே யவரமுதுமிட்டார்

உண்டுநன்றாய் கைவிளக்கி
உடனடைக்காயு மருந்தி
என்குருவே கலைக்கோட்டு மாமுனியே
எனை வளர்த்த நாயகமே
அறுபதினாயிரம் வருசமட்டும்

அய்யோத்திப் பட்டணமாண்டிருந்தேன்
கோசலை கைகேசி சிமித்திரரசி
கொடியிடை மார்களை மாலையிட்டேன்
அய்யோத்திப் பட்டண மரைசாள
அளகு பாலகரில்லாமல்

---

2122 வருணன்—மழைக்கடவுள்

வாடிமனங்கோடுகிறார்
வாய்த்த சந்ததியில்லாமல்
உங்கழுட தயவாலே
உலகம் ஆளப்பாலன்தரவேணும்
என்று சொல்லத்திசதரரும்

## முனிவர் வேள்வி செய்தல்

யியல் முனியானவரேது சொல்வார்
மாமுனி பாதத்திலடி தொழுது
மன்னன் திசதர ராசாவும்
சந்தோசமாகக் களி கூர்ந்து
தானேகலைக்கோட்டு மாமுனிவர்

அஞ்சவேண்டாம் அலையவேண்டாம்
அய்யோத்தி மன்னா திசதரனே
தெய்வ அய்யோத்தி அரைசாள
சிறந்த பாலகன் பிறப்பதற்கு
அய்யோத்திபாபுரியரைசாள

அளகுபாலகன் பிறக்கவேணும்
வேள்விக்குண்டான சாமான்கள்
விரைவாய்த் திசதராதாருமென்றார்
மாமுனியானவர் சொன்னபோது
மன்னன் திசதரர்தாறேனென்றார்

அய்யோத்தியாபுரிக்கோர் புறமாய்
அம்முனியானவர்தலத்தைக்கண்டார்
அன்பத்திரெண்டடி அகலத்திலே
அறுபத்திமூன்றடி நீளத்திலே
அந்த முனி சொல்ப்படி ஓமகுண்டம்

அகலம் பெறவேள்வி வெட்டுவாராம்
யேறப்படி யிறங்கப்படி
யிருபத்தொரு படியும் வைத்தார்
சாந்தாலே காறை பூசி
சந்தணத்தால் கோலமிட்டார்

கறண்டகம் போலவே சிமிட்டிமினுக்கி
கண்ணுக்களகான வற்ணஞ் செய்தார்
ஒழுங்குடன் வேள்விக்கு விறகு
உறுதியுடன் வெட்ட வேணுமென்றார்
சந்தணம் சாதிலிங்கந்தானேமுல்லை

---

2157. உண்டான—தேவையான

2163. ஐம்பத்திரண்டு > அன்பத்திரண்டு (பே, வ. மா)

2170 கறண்டகம்—மிகச் சிறிய பாத்திரம்

தக்கபிலாமரம் அத்திமரம்
யேழுகுலத்து விறகதுதான்
யிமைக்கு முன்னுகவே வெட்டுவாராம்
வெட்டிய விறகதைக் கொண்டுவந்து
விரவுடன் வேள்விக்குளிக்குள்ளே போட்டார்

சுத்திவரவே திரை வளைந்து
சூதான வேள்விக்கொரு வாசலிட்டார்
வடமாலை சந்திரமாலை போட்டசர்
மணக்கின்ற வில்லைப் பெபடியது போட்டார்
எள்ளுப் பொரியிலொரு கோட்டை போட்டார்

யிலுமிச்சம்பளம் பெழுநூறுபோட்டார்
மல்லிகை செண்பகமதின் மேலிட்டார்
மஞ்சள் பொடியிலொரு கோட்டை போட்டசர்
கொத்தோடே தென்னங்குலை போட்டார்
குலையோடே வாழைப்பளமுமிட்டார்

அன்றுயரைத்த மஞ்சணையுமிட்டார்
அன்றைக்கு ஆட்டின யெண்ணையுமிட்டார்
திண்ணைக்குறட்டிலே தேங்காயுடைத்து
தெருவெல்லாம் வாடை மணம்வீச
வாசனையானது கமகமென

வளருதல்லே திருவேள்வி
கைரெண்டும் விறைத்துக் கொண்டு
கண்ணுரெண்டு மூடிக் கொண்டு
நமசிவாயமென்ற அஞ்செழுத்தை
நாவினுல் வார்த்தை உச்சரித்தார்

பன்னிரெண்டு வருசமட்டும்
பாரத்திருவேள்விதான்வளர
பதிமூன்ரும் வருசத்திலே
பரமசிவனுட திருவருளால்
மாமுனி வளர்த்த வேள்வியிலே

மாபூதம் வந்து பிறந்திடுமாம்
மாபூதத்தின் கைதனிலே

---

2176. பலா > பிலா (பே வ.மா)
2177. குலம்—வகை, இனம்
2181. திரைவளைந்து—மறைவாகும்படி துணியைக்கட்டி
2185. கோட்டை –அளவைப்பெயர் இருபத்தொருமரக்கால் கொண்டது.
2186. எலிமிச்சை>யிலும்ச்சை (பே. வ. மா)
2191. மஞ்சணை—சிவப்பு நிறக்குளம்பு
2197. இரண்டு >ரெண்டு (பே வ.மா)
2197. விறைத்து—நடுங்கி

வன்னபொக்கணம் வந்து பிறந்திடவே
பொக்கணத்துக்குள்ளாக
பிறந்துதல்லோமூன்றுபரல்

மூன்றுபரல் வந்து பிறந்தபோது
முத்திபெறக்கலைக்கோட்டு முனி

## முனிவர், திசதரர்தேவிகளுக்குப் பரல் கொடுத்தல்

வாரும்பிள்ளாமன்னுதிசதரனே
வானுதல்மார்களையளையுமென்றார்
கோசலை கைகேசி சிமித்திரரசி

கொடியிடைமார்கள் மூன்றுபேரும்
பட்டத்துதேவிமார் மூபேரும்
பதிவினுடன் வந்து அடிதொழுதார்
அடிதொழுதந்தவேளையிலே
அளகுகலைக்கோட்டு மாமுனிவர்

கோசலைபிராட்டியைவரவழைத்து
கொடுத்தாரேயவரொரு பரலை
சிமித்திரைபிராட்டியை வரவழைத்து
சித்தமுடனொரு பரல் கொடுத்தார்
கைகேசி பிராட்டியை வரவழைத்து

கடுக முனியும் பரல் கொடுத்தார்
ரிசிகொடுத்தபரல் ராத்தங்காமல்
எல்லோருங் கூடியே பூசைபண்ண

## புத்திரர் தோன்றல்

கோசலையாழுட திருவயிற்றில்
கோபாலராமருந்தான் பிறந்தார்

மாயசிறிராமர் பிறந்தபோது
மைவிளிமாதர்கள் குரவை பாட
சிமித்திரை பிராட்டி திருவயிற்றில்
தீரன்யிளைய பெருமாழும்
யிளைய பெருமாழும் சத்துருக்கனும்

யின்பமுடன் வந்துதான்பிறந்தார்
லெச்சுமணப் பெருமாள் பிறந்த போது
நாகலோகத்தார் குரவையிட
கைகேசி பிராட்டிக்குத்தான்
கருத்துடன் பரதன் வந்து பிறந்தான்

---

2214. வாணுதல் என்பது வானுதல் என்று எழுதப்பட்டுள்ளது.

2234. யிளையபெருமாள்—இலக்குவன்

பரதன் வந்து பிறந்த போது
பாவையர்கள் குரவையிட
மூன்றுபேருக்கும் நாலுபிள்ளை
முத்தி பெறவே தான் பிறந்தார்

### புத்திரர் வளர்தல்

பிள்ளை பாலரது பிறந்த போது
பெண் கொடிமார் மூபேரும்
பாலூட்டி நீராட்டி
பஞ்சணை மேலேதான்கிடத்தி
தாராட்டி ஓராட்டி
தாய்முலைப்பாலமுதூட்டி
வளர்ந்தார்கள் பாலகர்கள்
வாலசூரியன் போலளகாய்
ஒன்றுரண்டு மூன்று நாலு
உற்ற ஐந்து ஆறு யேளில்

### புத்திரர் கல்வி கற்றல்

யேழுவயதான போது
யெழுத்தோத வேணுமென்று
மாமுனி வசிட்டரிடமதிலே
மன்னன் திசதரராசாவும்
என்குருவே வசிட்ட மாமுனியே
எனையாண்ட நாயகமே
உம்முடைய கிருபையினால்
உற்ற கணக்கு ஓதுமென்றார்
மன்னன் திசதரர் சொன்னபோது
மாமுனியானவர் சந்தோசமாய்
தேங்காய் உடைத்து வைத்து
தெட்சணை நிறநாளி வைத்து
பிள்ளையாற்க்குப் பூசைபண்ணி
பிரபலமாயெழுத்தோத
மாமுனியெழுத்தோதிக் கொடுக்க
மாயாவுதாரனுந் தம்பியுமாய்
அரிச்சுவடிகெ(ா)ன்றே வேந்தன்
அன்னையும்பிதா மூதுரையும்
எண்சுவடி வினாவெழுத்து
எழுத்தின் அதிகாரந்தான் படித்தார்
ஆனையேற்றங் குதிரையேற்றம்

---

**2252.** வால—இளமையான, வெண்மையான
**2270—2282.** இவ்வரிகளில் பாலகர்கள் கற்ற கல்வி வகைகள் கூறப்பட்டுள்ளன.
**2270.** மாயாவுதாரன்—இராமன்

ஆயுத வித்தைகள்தான் படித்தார்
வில்வித்தை சாஸ்த்திரமும்
விதம்விதமாய்த்தான் படித்தார்
யந்திரசாலம் மந்திரசாலம்
யிருக்கப்பறக்கத் தொளில் படித்தார்

கூடுவிட்டு கூடு பாயுதற்க்கும்
குசாலவித்தையுந்தான் படித்தார்
எல்லாங்கற்று வல்லவனுய்
யிருக்கின்றதோர் வேளேயிலே
கெங்கைக்கரையிலே தானம்பண்ணி

கிருபையுடனே மாத்துடுத்து
யிட்ட நாமம்யிருபத்தேளாம்
யிலங்கும் நாமம் பதினேளாம்
நாமக்குறியதுதான் கீறி
ராமசுவாமியுந் தம்பிமாரும்

சிங்காடி வில்லுங் கயிலெடுத்து
தெருவில்நிற்க்கும் மரங்களிலே
மோதிவளர்ந்து நிற்க்கும்
முக்கியமான மரங்களிலே
குருவிகழுந்தாருவும்

கொண்டஞ்சிருடி கருக்குருவி
தெருவதிலேயிளமரத்தில்
சிட்டுதெறித்தவர் நிற்க்கையிலே

கூனியின் வருகை

பருவத்தின்யிள மடவாள்
பக்குவமாங்கூனி வெள்ளாட்டி

கூனுஒரு பிறஞ்சாய
குடமிருந்து தாராட
எதிரேவந்தாள்கூனி வெள்ளாட்டி
கண்டாரேயிளேய பெருமாழும்

காரிகையாள் கூனி வெள்ளாட்டியை
என்னுடைய அண்ணு ரெகுராமரே
யிறையவரே என்கோவே
நம் பிறந்த நாள் முதலாய
நம்முட அய்யோத்தி பட்டணத்தில்

---

2291. சிங்காடி—சின்ன

2296. கொண்டஞ்சிருடி, கருக்குருவி—குருவிப்பெயர்கள்

2300. வெள்ளாட்டி—வேலேக்காரி

2301. புறம்>பிறம் (பே.வ.மா)

கூனும் உண்டோ குருடும் உண்டோ
கூண்ட அய்யோத்தியாபுரியில்
என்று சொல்லயிளைய பெருமாளும்

### இராமரும் தம்பியும் கூனியைக் கேலி செய்தல்

ரெகுராமசுவாமியும் அப்போது
அந்தபார கூனி வெள்ளாட்டியை

அளகன் யிளைய பெருமாளே
கூனைப்பாரு அவமுடகுடத்தைப்பாரு
கூனி வருகிற சையலைப்பாரு
என்று சொல்லி நந்தக்கோபாலர்
யென்பெருமாளவர் கோலங் கொண்டு

கூனில் ஒருகையை வைத்தார்
குடத்தில் ஒருகையை வைத்தார்
யிருபத்தொரு கூனும் நிமிர்ந்து
எதிரே வந்தாள் கூனி வெள்ளாட்டி
விதனம் பொறுக்க மாட்டாமல்

முன்னே வந்தாள் கூனிவெள்ளாட்டி
அங்கம் பறக்குதே கோபாலா
ஆத்துமாச் சோருதேரெகுராமா
கும்பிகொதிக்குதே கோபாலா
குடலுபதைக்குதே ரெகுராமா

என்னையும் உடைத்துப் போட்டாய்
என்குடத்தையும் உடைத்துப் போட்டாய்

### கூனி சாபமிடல்

சுட்டித் தலையா ரெகுராமா
சும்மா தெருவில் வரவுட்டாயில்லே
என்னையிப்படிச் செய்ததற்க்கு

என்பெருமாள் நந்தக்கோபாலர்

உன்னைப்பதினாலு வருசமட்டும்
உற்றவனவாசமானதிலே
காடதிலே மிதித்தகால்
நாடதிலே மிதியாமல்

பதினாலு வருசமட்டும்
பாராவனத்திலே விரட்டாவிட்டால்
கைகேசிக்கு வேலைசெய்யும்
கூனிவெள்ளாட்டி நானுமல்ல
கூனி வெள்ளாட்டியுஞ்சாபமிட

---

2325. விதனம்—வேதனை
2328. ஆத்துமா—உயிர்
2329. கும்பி—வயிறு

கோபாலர் தம்பி மசங்கிவிட்டார்
கண்டாரே நந்தக்கோபாலர்
கண்ணர் பெருமாழும்யிளையவரை
என்னுடதம்பி லெச்சுமணு
யிளையபெருமாளேயென்கோவே

வாடாதேகமலமுகம்
வாடியிருப்பானேன் தம்பியரே
கோடாத கமலமுகம்
கோடியிருப்பதேன் தம்பியரே
யென்று கேட்டாரே கோப(ா)லர்

யிளயபெருமாழும்யேது சொல்வார்
கூனி வெள்ளாட்டிசாபத்தினுல்
கோபால ராமரே மசங்கிவிட்டேன்
யிளயபெருமாழுஞ் சொன்னபோது
ரெகுராமசுவாமியும் யேது சொல்வார்

படைத்தபிரமன் படைத்ததற்கு
பதறி அறைக்குள்ளே யிருக்கையிலே
அடைத்துக்கொண்டங்கே யிருந்தாலும்
அங்கே வருமே உள்ள விதிதானும்
வாறவிதி தானிக்காது

மன்னுயிளைய பெருமாளே
கூனிசாபமிருக்கிறதும்
கூண்டவனவாசம்போகிறதும்
தம்பியிளையோற்க்குப் புத்தி சொல்லி
தரணியளந்த பெருமாழும்

## இராமரையும் தம்பியரையும் பெண்கள் கண்டுமையல் கொளல்

அந்தத்தெருவீதி தான்கடந்து
அரிராமசாமியுந்தம்பியரும்
அந்தத்தெருவீதிப் பெண்களெல்லாம்
அரிராமர்பேரிலே மையலாகி
எங்கிருந்துயிங்கு வந்தார்

யிப்படி ஒருவரையுங் கண்டதில்லே
எந்தத்தேசத்து ராசாவோ
யிக்குலத்தில் வந்து பிறந்தாரோ
திருநாமக்குறி கண்டபெண்கள்
திசங்கிடுவார் மசங்கிடுவார்

---

2353. கமலமுகம்—தாமரைமுகம்
2365. நிற்காது>னிக்காது (பே.வ.மா)
2374. மையல்—மோகம்

கையில் வரிவில்லைக் கண்ட பெண்கள்
கண்விறியாப்புக் கொண்டிடுவார்
முகரேகைகண்ட பெண்கள்
மூற்ச்சையற்றுத்தான் கிடப்பார்
பின்னாலே நடை கண்டபேர்கள்

பிரமை பிடித்தேதுரைப்பார்
அன்று வைத்தமண்சுவரை
அநித்தோடிப் பார்த்திடுவார்
வாறாரோ நம்மைச் சேர்வாரோ
வாயில் ஒருமுத்தந்தாராரோ

சேராரோ நம்மையின்றிரவு
சேற்ந்திருந்து விளையாடாரோ
யெங்கள் தெருவிலே வாருமையா
யெங்கள் மசக்கத்தை தீருமையா
உம்மைக்கண்டதொரு நாள் முதலாய்

உற்றகண்கழுஞ் சோறாதில்லை
கோபாலரைக் கண்ட நாள்முதலாய்
கொண்ட கணவன் மேல் கருத்துயில்லை
ஆடை உடையது தான் கொடுக்க
என்அருமைக்கணவனே!நானிருந்தேன்

வாராதே நீரிருந்தாலெங்கள்
வானாலுயிப்போ போகுதையா
பெண்பளியைக் கொள்ளாதே
பிள்ளைகள் வருமே ரெகுராமா
எங்கள் தெருவிலேவாருமையா

எங்கள் பஞ்சத்தை தீருமையா
உம்மைக்கண்ட நாள்முதலாய்
உற்றகணவன் மேல் கருத்துயில்லை
கோபல(ா)ரைக் கண்ட நாள்முதலாய்
கொண்ட கணவனிடம் வெறுப்பாச்சே

கற்த்தனேயிவன் வேலவனே
காயாம்பு மேனியனே
சந்திரனேயிவர்சூரியனே
தாமோதரனே பெருமாளோ
யிந்திரனே யிறையவனே

யென் பெருமாள் நந்தக்கோபாலனே

---

2392. விறியாப்பு – மயக்கம்

2383. முச்சு > மூற்ச்சை (பே. வ மா)

2386. பிரமை — மயக்கம்

2411. கற்த்தன் — இறைவன்

பாற்க்கடலில் பள்ளிகொண்ட
பச்சை முகில் நிறமேனியனே
காச்சிய பால் வெண்ணையுண்ட
காயாம்பு மேனியனே

யீரடியாலளப்பதற்க்கு
யிடங்காணாதென்று சொல்லி
ஓரடியால் நாடளந்த
உலகளந்த மாயவனே
அன்னங்களே கிள்ளைகளே

அரிராம சுவாமியை தானளைத்து
கிள்ளைகளைத் தூதுவிட்டு
கோபால ராமரைத் தானளைத்து
ஆசையுடன் நாமெல்லோரும்
ஆனந்தம் பாடிடுவோம்

வீட்டுக்கு வ[ா]ந்தால் மணவாளன்
வேறேகுறைதறை தானினைப்பார்
கூட்டுக்கிளி போலே உம்மை
கும்பிட்டு நமக்கிருப்போம்
ஆசையது யிருந்தாக்கால்

ஆகட்டு நாளை நான் வருவேன்
வேளையில்லை பெண்ணே யின்றைக்குத்தான்
விளையாட நாளை வாறேன் போங்கோ
நாளைக்கு வாறேனென்று சொல்லி
நகைத்து அப்பாலேதான் போனார்

தெருவீதி பவுனி வந்து
செங்கை நெடுமாலுந் தம்பியரும்
அய்யோத்தியா புரியானதிலே
அளகு சிம்மாசன மேடையிலே
கொலுகுசிம்மாசன மேடையிலே

கோபால ராமருந்தம்பியரும்
தனிச்சிம்மாசன மேடையிலே
தாமோதரனும் அரசிருந்தார்
வன்ன அய்யோத்தி நாடதிலே
வாள்ந்தங்கிருக்கின்ற காலமதில்

---

2418. முகில்—மேகம்

2421—2424. இவ்வரிகளில் மாயவன் உலகினை ஓரடியாய் அளந்த கதை குறிக்கப் பட்டுள்ளது.

2425. கிள்ளை—கிளி

2437. வேளை—நேரம்

2338. வருகிறேன் > வாறேன் (பே. வ. மா)

## சிவன் இலங்கைக்கு வரல்

சென்றே கயிலை ஆதிபரன்
சிறப்பாயொரு வேசங்கொண்டார்.
கொண்டார் கோலஞ்சிவனும்
கொடிமை செய்த ராவணனை
சென்றேயிலங்கையில் பிலங்குறைந்து

திருமாலுட வாழுக்கிரையாய்
உண்டாக்கிடவேவேணுமென்று
உமையாள் பாகன் மனிதிலுற்று
சொந்தயிலங்கைக்குப்போகவென்று
சிறந்த பாப்பானாய் வேசங் கொண்டார்

பட்ட நாமமுந்துட்டத்தடி
பாப்பான் பூணூலுங்கைப்பிரம்பும்
யிட்டநாமம் யிடதுதோளில்
யேற்றகண்டகோடாலி
பொக்கணமும் புலித்தோலும்

பூண்ட சிவமாலைகளும்
திருநீற்றுக்கப்பறையும்
சேர ஒருகையில் குடையிடுக்கி
கக்கலுடன் விக்கலுமாய்
காலில் பாதாக்குறடுமிட்டார்

யிந்தப்படியாக வேசங்கொண்டு
யிரப்பனைப்போல் வாறாரையா
காடுமலை வனந்தான் கடந்து
கல்லாறு புல்லாறு மிட்டார்
கோடிமுனிரிசி வனங்கடந்து

கூண்ட யிலங்கைக்கு வாறாரையா

## சிவன் இராவணனிடம் பிச்சைகேட்டல்

வாறார்ராவணன் வீத்திருக்கும்
மண்டபத்தில் வாறாரையா
வாசல் நடையிலே வந்து நின்று
வாற்த்தை யேதுரை சொல்லுவாராம்

பசியாலே நான் களைத்தோடி
பாவியிங்கே வந்தேனையா
பொசிப்பதற்க்கு யேற்றபண்டமா

---

2454. கொடுமை>கொடிமை (பே. வ. மா)
2458. உமையாள் பாகன் - சிவன்
2464. கோடரி—கோடாலி (பே. வ. மா)
2472. யிரப்பன்—பிச்சைக்காரன்
48. ண்டம்—தின்பண்டம்

போட்டனுப்பவேணுமையா
என்று சொல்லியே பிச்சையது

யிரப்பனைப்போல்நின்று கேட்டாரையா
ஒன்றும் பேசாமல் ராவணனும்
ஊமைபோலேயிருந்து கொண்டான்

செவியில் கேளாதவன் போலே
சிரசு கவிள்ந்துயிருந்து கொண்டான்

ரண்டரை நாளிகை தேரம் வரை
நல்லபாப்பானும் நின்றுரையா

## சிவன் சாபமிடல்

நின்று கடுங்கோபங் கொண்டவரும்
நேரேபாற்த்தவரேது சொல்வார்
சீதைவந்து பிறக்கவேணும்

உன்தென்னிலங்கை யளிய வேணும்
ராமபாணத்தால் உன்சிரசுபத்தும்
ராவணா அத்துவிளவேணும்

## சீதை தோன்றல்

என்று சொல்லியே மணிப்புரம்பை
எடுத்தார்கை தனிலாண்டாரும்

கைதனில் வெள்ளிப்புரம்பெடுத்து
கல்லுப்படிதனில் அடித்தாரையா
அடித்தவாசல் கல்லுப் படிதனிலே
அலறி சீதையும் பிறந்தாளையா
கல்லுப்படியில் சீதை பிறந்தபோது

காணாமல் ஆண்டார் மறைந்து கொண்டார்
மறைந்துகொண்டவர் போனபோது
மறுத்துராவணன் எழுந்திருந்தான்
வாசல்நடை யெட்டிப்பாற்க்கும்போது
வளருங்குளந்தயைக் கண்ணால் கண்டான்

## இராவணன் குழந்தையைக் கொல்ல முற்படலும் மந்திரிமார் தடுத்தலும்

கண்டான் குளந்தயைப் படிதனிலே
கதறிக்கதறியழுதிடவும்

---

2490. சிரசு—தலே

2491. ரண்டரை நாளிகை—ஒரு மணி நேரம்

2491. தேரம் – நேரம்

2499. பிரம்பு > புரம்பு (பே. வ. மா)

அவனும்பிள்ளையைக்கண்ணில்கண்டு
ஆண்டிகெடுத்தானே அய்யோவென்று
யிந்தப்பிள்ளையையிப்போது

யின்பமுடனுமள் கொல்லவேணும்
என்று சொல்லியே ராவணனும்
எழுந்துகோபத்தோடோடிவாறான்
ராவணனோடிவாறபோது
நல்லமந்திரிமா ரறிந்தார்

வந்துமந்திரிமார்களெல்லாம்
வாற்த்தையேது சொல்லுவாராம்
நில்லும் நில்லும் ராவணசூரா
நெட்டூரஞ் செய்ய வேண்டாமையா
அன்றுங்குளந்தயைக் கொன்றதுண்டால்

அனியாயஞ் சூளாதோ ராவணனே
யென்று சொல்லியே மந்திரிமார்

## குழந்தையைக் காட்டில் புதைத்தல்

யேது சொல்லுவான் ராவணனும்
காட்டில் கொண்டுபோய் குளந்தை தன்னை
கருத்துடன் வெட்டிப்புதையு மென்றார்

என்று ராவணன் சொன்னபோது
யெழுந்து மந்திரிமார்களெல்லாம்
கூடிச்சேற்ந்தொரு பெட்டகத்தில்
குளந்தை சீதையை அதிலிருத்தி
வாழும் யிலங்கை நகரும் விட்டு

வனவாசக்காட்டகத்தே
பூமிதன்னையுந்தான் தோண்டி
பெட்டகத்தையும் புதைத்தாரையா
புதைத்து வைத்தந்த மன்னவர்கள்
போனாரவர்கள் யிலங்கையிலே

யிலங்கையிலவர் போனபோது

## சீதை காட்டில் பெட்டியில் வளர்தல்

யேத்த நல்லகாட்டகத்தே
வன்னச் சீதையும் வில்லுமாக
வளருகிறார் பெட்டகத்தில்
பெட்டகத்தில் வளர்ந்துவர

2518. வருகிறான்>வாறான் (பே.வ.மா)
2524. நெட்டூரம்—கொடுமை

பெரியமிதுலாபுரிபட்டணத்தில்
வாள்ந்தங்கிருக்கின்ற தினகரரும்
மதலையில்லாச் சடவாகி
சடைவாய்த்தினகரராசாவும்
தானே யிருக்கின்ற நாளையிலே

### சீதையை உழவர் கண்டெடுத்தல்

நாட்டில் மழைமாரி மிகவும் பெய்து
நலமாயிருக்கின்ற சனங்களெல்லாம்
காலமழை பெய்ததென்று
காட்டை வெட்டி வெளியாக்கி
வெளியாக்கிக் காட்டையெல்லாம்

விரைவினுடனே உழுதாரையா
காட்டை உழுதுவருகையிலே
கலப்பை கொழுவு முனியதிலே
தாயார்சீதைவளருகின்றதங்கப்பெட்டகந்தட்டிடுமாம்
தட்டக்கண்ட உளவரெல்லாம்

தானே யெடுத்தாரே பெட்டகத்தை

### உழவர் சீதையை தினகரமன்னரிடம் காட்டல்

யெடுத்தாரே பெட்டகமானதையும்
யேதுசொல்லுவார் உளவரெல்லாம்
தங்கப்பெட்டக மானதையும்
தனியே நாமள்திறக்க வேண்டாம்

நம்முடைய மிதுலாபுரி
நல்லபட்டண மானதிலே
வாழுந்தினகரராசன் முன்னே
வரிசையுடன் கொடுபோவோமென்றார்
யென்றுசொல்லவே பெட்டகத்தை

எடுத்து உளவர்கள் வாருரையா
வந்துதினகரராசன் முன்னே
வரிசையுடன் வைத்தார் பெட்டகத்தை

### தினகரன் குழந்தையைக்கண்டு மகிழ்தல்

வைத்தபெட்டகந்தன்னைக் கண்டு
மகிள்ந்து கொண்டார் தினகரரும்

பண்டுள்ளோர் முன்னாள் தேடிவைத்த
பாரப்பெட்டகம் பொருளிதுவோ

---

2548 சடவு—சோர்வு

2568. கம்பராமாயணத்தில் ஜனகன் என்ற பெயர் இங்கு தினகரன் என்று அமைந்துள்ளது

அறியவேணும் நாமென்று சொல்லி
அளகுபூட்டை திறந்தாரையா
திறந்து மன்னனும் பார்க்கும்போது

சிறந்த சந்திரன் சூரியன்போல்
தோன்றுஞ் சந்திர சூரியன்போல்
தூய்யமணி விளக்கொளி போலே
தாண்டும் புவிதனில் மின்னொளிபோல்
தையல் சீதையும் வில்லளகும்

கண்டுதினகரராச மன்னன்
கையால் வாரியே முத்தமிட்டார்
தேடக்கிடையாத அருமைப்பொருள்
தெய்வம்யினக்குப் பிச்சையிட்டார்
என்று சொல்லியே மன்னவனும்

யேத்ததேவிதனையளைத்து
சீதையம்மனும் வில்லையுந்தான்
தேவிகைதனில் கொடுத்தாரையா

### தினகரன் மனைவி குழந்தைக்குப் பாலூட்டல்

கொடுத்த உடனவள் சந்தோசமாய்
குளந்தைதனையவள் வாங்கும் போது

மாது தேவியார்க்கிருதனமும்
மடமடென்று பால் சுரக்க
சுரந்தபாலை சீதையற்க்கு
தோகை தேவியும் பாலூட்ட
சீதையம்மனும் பால்குடித்து

சிறந்த வில்லும் வளர்ந்திடுமாம்
வளர்ந்து வருகின்ற நாளையிலே

### விசுவாமித்திரர் வேள்வி வளர்த்தல்

வையந்தனிலுள்ள முனிவர்களில்
விசுவாமித்திரரென்ற மாமுனியும்
விரைய வேள்வி வளப்பதற்க்கு

தெய்வக் கயிலாச மலைதனிலே
சிறந்த ஓலக்க மண்டபத்தில்
வல்லசிவனாரும் வலமிருக்க
மங்கை பார்பதியிடமிருக்க

பிள்ளைக் குமாரனுங்கரிமுகனும்
பெரிய கணங்களும் போற்றி நிற்க

---

2610. குமாரன்—முருகன்
2610. கரிமுகன்—கணபதி

பொருளாநந்தி மாமலையும்
பொய்கை சூள்ந்திருக்கும் மலை
அருணகிரியென்ற மலை
அங்கு திரிபுரம் வாழுமலை
ஆதிமறை யோரும் வானவரும்
அமர்ந்தங்கிருக்குமாமலையாம்
தினங்காட்சி கொடுக்கு மலை
தேவருறையு முனிவர்மலை
தேவர்கள் வந்துநின்று

தினங்காட்சி கொடுக்குமலை
வலியபறுபதமும்
வளர்ந்தோங்கி வாழுமலை
தவசி முனிவர்கழும்
சன்னாசி வாழுமலை

உச்சாணி வாழுமலை
உத்திராச்சியங் காய்க்குமலை
உலகமது பதினாலும்
ஒக்கவே வாழுமலை
விக்கினேசர் வந்துநின்று

விருந்தளிக்குங் கயிலைமலை
மேகம் வந்துசோலையிலே
வேரூன்றிமளை பொளியுமலை
பொருந்தியே மலைதானேறி
புகழுடனே வளி நடந்தார்

அந்தஅந்த மலைகளெல்லாம்
ஆகாதெனக்களித்து
சிந்தையுடன் விசுவாமித்திரர்
சிவமுனியானவர் வருகையிலே
தாடகையானவள் வாழுமலை

தலையலங்காரந் தெரியக்கண்டார்
பன்னிரண்டு காதவளி
பக்கமலைகள் தான் வளர்ந்து
முப்பத்திரண்டு காதவளி
முடியுஞ்சரமுள்ளமலை

மூங்கில் மரங்கள்தான் சூள்ந்து
முகிலினங்கள் தான்மூடி
ஓங்கி நின்றபுனலருவி
ஓசையுடன் திசைதோறும்
அருவியுட ஓசைகழும்

ஆனைநின்று அலறுவதும்
யிரைகிடையாப் புலிகடுவாய்

---

**2651.** யானை > ஆனை (பே வ.மா)

யிரைதேடித்திரிகிறதும்
வேடருடபிள்ளேகளே
விருதெடுத்துத்தின்ற தென்று

காடுதனில் அலேகள் வந்து
காத்திருந்து கொல்கிறதும்
பசுவினுட கன்றுகளே
பாம்பெடுத்துவிழுங்குவதும்
அச்சத்திலே புலிகடுவாய்

ஆள்ப்பாற்த்து நிற்ப்பதுவும்
கையில் முதலுள்ளவரை
கள்ளர் வெட்டிக் கொல்வதுவும்
பொய்யுரையாய் தீவிணேபோல
புகள் பெரிய சோலேகளும்

கிளேபடர்ந்த சீனிக்கொடி
கிளங்கு வையாமல் போச்சுதென்பார்
வாளேமரம் குலேபோடாமல்
மளேயில்லாமல் வாடுதென்பார்
சந்தணமுங்காருகிலும்

சற்று மணம் வீசவில்லே
மந்திகளுங்குதிபாய்வதற்க்கு
வகையறியமாட்டுதில்லே
தனித்திருந்தாலிந்தமலே
தண்ணீர்தான் கசந்திடுமாம்

ஒருவரும் போயிறங்காத
உவாதியுள்ள வனவாசம்
அரக்கர் வந்து நடமாடி
அங்கலித்துப் போச்சுதென்று
யிந்தமலே நல்லமலே

யேற்ற வேள்வி வளப்பதற்க்கு
அந்த மலேயானதிலே
அதிசெயங்கள் தான் பாற்த்தார்
அதிசெயங்கள் தான் பாற்த்து
அளகு விசுவாமித்திரரும்

வேள்விக்குத்தலம் பாற்த்து
விரைவாய் திருவேள்வி வளப்பதற்க்கு
அன்பத்திரெண்டடி அகலத்திலே

---

2655. விருது—வெருகு, காட்டுப்பூனே

2666. சீனிக் கொடி—சர்க்கரை வள்ளிக் கிளங்குக் கொடி

2779. அங்கலித்து—அருவருத்து

அறுபத்தி மூன்றடி நீளத்திலே
அளகான ஓமகுண்டம்

அகலம் பெற வேள்வி வெட்டுவாரம்
சாந்தாலே காறைபூசி
சந்தணத்தால் கோலமிட்டார்
யேறப்படியிறங்கப்படி
யிருப்பத்தொரு படியும் வைத்தார்

யிருபத்தொரு படியும் வைத்து
யேத்த திரு வேள்வி வெட்டி
வேள்வி மண்டபமானதிலே
நாளிகைமணிதூக்குவாராம்
வேப்பிலே தோறணங்கள் கெட்டி

வேந்தர் தோறணங் கெட்டுவாரம்
கொத்துச்சரமொடு முத்துச்சரம்
கூண்டசரந்தூக்கு வாராம்
குத்துவிளக்கு ஆயிரமாம்
கொழுத்தினூர் ஒருப்போலே

வெத்திபெற வீசுவாராம்
விசுவாமித்திர மாமுனியும்
முத்திருள்சி மனமகிழ்ந்து
முகனேயுடன் வேள்வியது
பன்னிரண்டு வருசமட்டும்

பாரத்திரு வேள்விதான் வளர

### இராவணன் வேள்வி வளர்த்தலே
### தாடகைக்குச் சொல்லல்

வானமட்டும் பூமி மட்டும்
வாய்த்த புகையதுதான் வீச
யிலங்காபுரி நகரமெல்லாம்
யேற்றபுகையது தானெழும்ப

கண்டானே ராவணனும்
காவலவனேது சொல்வான்
என்னுடபூட்டி தாடகையே
யின்னமும் நீ அறியலேயோ
உன்னுடைய மலேயானதிலே

---

2692. காறை — மேற்பூச்சு
2705. கொழுத்தினூர் — பற்றவைத்தார்
2705. ஒருப்போலே — ஒன்றுபோல
2706. வெற்றி > வெத்தி (பே. வ. மா)
2718. பூட்டி — உறைவு முறைப்பெயர். பாட்டியின் தாய்.

ஒருவன் வேள்வி வளக்குகிறான்
என்னுடைய மலையாயிருந்தால்
யிப்படிவேள்வி வளப்பானோ
பெண்ணல்லவோ யென்று யெண்ணிக் கொண்டான்

### தாடகை சீற்றமடைதல்

பெரிய மாமுனி சடையறுப்பேன்

சடையறுப்பேன் முடியறுப்பேன்
தாடிவீசயைப் பிடித்தறுப்பேன்
பின்குடும்பிதனை யறுப்பேன்
அவன் பூணூலைப் பிடித்திழுப்பேன்
முனியென்றும் பாற்க்க மாட்டேன்

வாய்க்குள் அண்ணறுந்து போட்டிடுவேன்
என்று சொல்லியந்த பெண்கொடியும்
யேந்திழை தாடகை கோபங்கொண்டாள்
கண்ணுரெண்டுந் தீப்பறக்க
கடுங்கோபங் கொண்டாள் தாடகையும்

மூன்றுமலை போலே மண்டையது
கோபுரம் போல் தலை முடியும்
கரும்பனைபோல் காலுங்கையும்
கண்ணுரெண்டும் வட்டிலுப்போல்
கோபுரங்களைத்தான் பிடுங்கி

கொருத்துத்தாலியாய்க் கெட்டிக் கொண்டாள்
பனையின் ஓலையைதான் விரித்து
பட்டுச் சேலையாய்த்தான் பூட்டி
ஓலையைச் சீலையாகக் கெட்டி
உடுத்துக் கொண்டாள் தாடகையும்

யேழுகடலையும் ஒரு குதியாய்
யெழும்பிக் குதித்தாளே தாடகையும்
மலைமீதில் மலைபோல
வல்லரக்கியும் வந்து நின்றாள்
தும்புக்கை யானையை வாயிலிட்டாள்

சுருட்டி பல்லுக்குளமுக்கிக் கொண்டாள்
பன்னிரண்டு கரடியை வாயிலிட்டாள்
பல்லுக்கிடையிலே பதித்துக் கொண்டாள்
மூச்சிவிடும் போது செடிமரங்கள்
முறிந்து கீளே விழுந்திடுமாம்

---

2939. வட்டில்—வட்ட வடிவமான தட்டு போன்ற பாத்திரம்

2740. கோர்த்து > கொருத்து (பே.வ.மா)

2750. தும்பி > தும்பு (பே.வ.மா)

யிரைந்துமளை பெய்யு மேகங்களை
யெட்டிப் பாற்த்தாள் பளிகாறி
ஒதுங்கி மளை பெய்யு மேகங்களை
ஊதிப் பறத்திடுவாள் பளிகாறி
தினமும் பிரமனையடிப்பதற்கு

தேறிவருவாள் பளிகாறி
வரத்தால் பெரியதோர் மாயவரை
மல்லுப்பிடிக்க வாடா வென்பாள்
அரனை உமையோடே விரட்டுதற்கு
ஆசையிருக்கிது அவளிடத்தில்

அப்படிக் கொத்த பளிகாறி
அரக்கி தாடகை ஓடிவந்தாள்
வல்லரக்கியவளோடிவந்து
வானுதலாளோடு சத்தமிட்டாள்
எட்டுத்திசையும் யிடிவெட்டினாப் போல
யீரேழுபதினாலுலோகந்தான் குலுங்க

### விசுவாமித்திரர் தாடகைக்கு அஞ்சி ஒழித்தல்

சிவபத்தியிருந்த விசுவாமித்திரர்
திடுக்கென்று முளித்தவரெட்டிப்பாற்த்தார்
கன்னியுங்கண்டார் மலையுங்கண்டார்
காரிகையாமுட சைகைக் கண்டார்

பளிகாறி தாடகை கொல்வாளென்று
பாரவனத்திலே ஓடிவிட்டார்
முசலை நாய்கள் துடர்வதுபோல்
முனியைத் துரத்தினாள் தாடகைப் பெண்
கானவனத்திலே போறபோது

காவலவன் விசுவாமித்திரரும்
அச்சுதா ஆனந்தக்கோபால(ா)
அரிராமசுவாமியே காற்த்தருளும்
என்று சொல்லி விசுவாமித்தரரும்
என்பெருமானைத் தான் நினைந்தபோது

கானவன வாசமானதிலே
கல்ப்புடையானது தோன்றிடுமாம்
கல்ப்புடையானதுக்குள்ளாக
கடுக முனிவருந் தானொளித்தார்
மாமுனியானவரொளித்தபோது

---

2763. மல்லுப்பிடிக்க—சண்டைசெய்ய
2769. சப்தம்>சத்தம் (பே.வா.மா)
2773. விழித்து>முளித்து (பே.வ.மா)
2778. முயல்>முசல் (பே.வ.மா)
2787. புடை—துவாரம், இடைவெளி

## தாடகை வேள்வியை அழித்தல்

வல்லரக்கியந்த தாடகையாள்
வல்லரக்கியந்த தாடகையும்
வாணுதலாளவளேது சொல்வாள்
யிங்கேவந்த மாமுனிவன்
எங்கேயோ போயொளித்துக் கொண்டான்

யிருக்கப் பறக்கத் தொளிலுமுண்டோ
யிந்திரமாஞ்ஞால வித்தையுண்டோ
கூடுவிட்டு கூடுபாய்வதற்க்கு
குசால வித்தைகள் பாடமுண்டோ
கண்டால்சும்மா விடுவேனோ

கள்ளுக்கூட்டிக்குடுத்திடுவேன்
மாமுனியென்று நான்பாற்க்க மாட்டேன்
வாய்க்குள் அண்ணுந்து போட்டிடுவேன்
சடையறுப்பேன் முடியறுப்பேன்
தாடிவிசையைத் தானறுப்பேன்
பின் குடும்பியைத் தானறுப்பேன்
பூணூலைப் பிடித்தறுப்பேன்
பெண்ணென்றல்லோயெண்ணிக்கொண்டான்
பேர்பெரிய மாமுனிவன்
மாமுனி வளர்த்த வேள்விதன்னை

மானபங்கம் செய்யவேணுமென்று
வானத்திலே ஒருகாலை வைத்தாள்
மாமலையானதில் சாய்ந்து கொண்டாள்
யேழுகடலுடைத்தது போல்
யேந்திளை தாடகை நீருவிட்டாள்

நீரைவிட்டு வேள்விதன்னை
நினைக்குமுன்னே அளித்துப்போட்டாள்

### ஒழிந்திருந்த விசுவாமித்திரர் வெளிவரல்

வேள்விக்குளியது தானிறைந்து
மிதந்துபோகுதே கரிக்கட்டயாய்
கான வனமெல்லாந்தான் பெருகி

கல்ப்புடையானது பெருகிடுமாம்
கல்ப்புடைக்குள்ளே ஒளிந்திருந்த
கருத்துள்ள விசுவாமித்திரர்தான்
சடைநனைந்து முடிநனைந்து
தாடிவீசையுந்தான் நனைந்து

---

2801. தாடகை விசுவாமித்திரரை கள் குடிக்கும் போது துணை உணவாகத் தின்றிடுவேன் என்கிறாள்.
2815. நீருவிட்டாள்—சிறுநீர் கழித்தாள்

பின் குடும்பியுந்தானனைந்து
பூணுலுந்தானனைந்து
வெள்ளெலிக்குச் செவி நனைந்ததுபோல்
வெளியில் வந்தார் விசுவாமித்திரர்
யிதுயென்ன மாயமென்று சொல்லி

யேத்த விசுவாமித்திரரும்
வனத்தில்மழையது பொளியவில்லை
மலையில் வெள்ளம் வரவும்யில்லை
அரக்கி தாடகை நீரினவே
அம்முனியானவர் தானறிந்தார்

எச்சிப்படுத்திப் போட்டாளென்று
யேற்ற விசுவாமித்திரரும்
திருப்பாற்கடலிலே தீர்த்தமாடி
சிறந்த விசுவாமித்திரரும்

*விசுவாமித்திரர் ஈசுவரனிடத்தில் செய்தி கூறல்*

யீஸ்பரன் வெள்ளிக் கயிலையிலே

யிசல் முனிவருந்தானே வந்தார்
கண்டாரேயீஸ்பரனுர்
கடுகவிசுவாமித்திரரை
என்ன காரியமாக வேதான்
யிசல் முனிவரே யிங்கு வந்தீர்

யீஸ்பரனுருங் கேட்டபோது
யேதுசொல்லுவாரப்போது
தாடகை மலையானதிலே
தாஞெரு வேள்வி நான் வளர்த்தேன்
வளர்த்த வேள்விதன்னையவள்

வல்லரக்கியுமளித்து விட்டாள்
ஆனதினுலே நான் மாயவரை
அனை(த்து)வரயிங்கு வந்தேன்
யெங்கே சென்று காணப்போறேன்
யென் பெருமாள் கோபாலரை

பாற்கடலில் பள்ளி கொள்கிருரோ
பச்சை முகில் வற்ணர் கோபாலர்
வைகுண்ட வீட்டில் யிருக்கிருரோ
மாயரெகுராமர் கோபாலர்
அங்காடி வீட்டிலிருக்கிருரோ

அசோக மலையிலிருக்கிருரோ
சீரங்கம் வீட்டிலிருக்கிருரோ

---

2836. எச்சிப்படுத்தி—இழிவுபடுத்தி
2862. ஸ்ரீரங்கம் > சீரங்கம் (பே.வ.மா)

திருவனந்தரபுரத்திலிருக்கிருரோ
சீதைமனையிலிருக்கிருரோ
செங்கை நெடுமால் கோபாலர்

யெந்த யெந்த யிடமதிலே
யென் பெருமானைக் காணப்போறேன்
என்று சொல்லி விசுவாமித்திரரும்
யேற்ற முனிவர் சொன்னபோது

### வசிட்டர் விசுவாமித்திரர்க்கு இராமர் இருக்குமிடம் கூறல்

அந்த அந்த தலங்களெல்லாம்

அச்சுதராமரைத் தேடவேண்டாம்
அய்யோத்தியாபுரி பட்டணத்தில்
அளகன் திசதர ராசனுக்கு
திசதர ராசனுக்கு மகனுக
செண்கண்ணெடுமால் பிறந்திருந்தார்

அச்சுதராமரைக் கூட்டிக்கொண்டு
அம்முனியே வாருமென்றுரைத்தார்
வசிட்டகுருக்கழுஞ் சொன்ன போது

### விசுவாமித்திரர் திசதரனைக் காணல்

மனமகிள்ந்து விசுவாமித்திரரும்
கயிலாச மலைதானும் விட்டு

கடுகஅய்யோத்தியா புரியில் வந்தார்
கண்டார் சிம்மாசனமானதிலே
களைத்து முனிவர் வருகிறதை
தகைத்து வந்த மாமுனிக்கு
தகனமதுதீரவென்று

பால்பளமும் சீனியுடன்
பளந்தேங்காய் சற்க்கரையும்
கானிலுள்ள தேனும் விட்டு
கருத்துடனே யமுதுமிட்டார்
நல்ல வெள்ளித்தட்டத்திலே

நல்ல முனிவற்க்குத்தான் கொடுத்தார்
வாங்கியே விசுவாமித்திரரும்
வளம் பெறவேதான் பொசித்தார்
உண்டு நன்ருய் கைவிளக்கி
உடனடைக்காயுமருந்தி

---

2875. செங்கண் என்பது செண்கண் என்று எழுதப் பட்டுள்ளது.

தண்டருள் சிம்மாசனத்திலே
தானிருக்திற வேளையிலே

### திசதரன் விசுவாமித்திரரிடம் செய்தி கேட்டல்

என்குருவே விசுவாமித்திரரே
எனையாண்ட நாயகமே
யித்தனை நாள் யிதுவரைக்கும்

யெங்கிருந்தீர் விசுவாமித்திரரே
என்று கேள்க்க மன்னவரும்

### விசுவாமித்திரர் இராமரைத் தனக்குத் துணையாக அனுப்ப வேண்டல்

யேற்ற விசுவாமித்திரருரைப்பார்
மன்னவர்க்குதுரை மன்னவனே
வாழும் அய்யோத்திக்கதிபதியே

தென்னவர்க்குத்துரை மன்னவனே
திசதரராசனே சொல்லக்கேழு
யீஸ்பரனிடத்தில் வரம்வாங்கி
யேற்ற வேள்வி வளக்க வென்று
தாடகையாழுட மலைதனிலே

தானே வளர்த்தேன் ஒருவேள்வி
வளர்த்த அந்த வேள்விதன்னை
அளித்துவிட்டாள் தாடகைப் பெண்ணுள்
அளித்த வேள்வி வளர்க்கவென்று
அவளைச்சங்காரஞ் செய்வதற்க்கு

உந்தன்மகன் நந்தக் கோபாலரை
உலகளந்[த]தோனைத் துணையிடுவாய்
பச்சவற்ணன் நந்த கோபாலரை
பள்ளி கொண்டோனைத் துணையிடுவாய்
வல்லரக்கியோடு போரு செய்ய

மாயாவுதாரனைத் துணையிடுவாய்
மாமுனியானவர் சொன்னபோது

### திசதரன் இராமரை அனுப்ப மறுத்தல்

மதிமசங்கி மன்னன் திசதரனும்
வாயசைந்து கையசைந்து
வற்ணவிளிகளில் நீர் சொரிய

கால்பதறி கைபதறி
காவலவரெடுத்துரைப்பார்
அம்பெடுக்கவகை தெரியாதையா
ஆயுத மெடுக்கவும் வகையறியான்
அறுபதினுயிரம் வருசமட்டும்

---

2915. சம்காரம் > சங்காரம் (பே.வ.மா)-அழித்தல்

அய்யோத்திப்பட்டணம் ஆண்டிவந்தேன்
மலடிருந்து பெற்றபிள்ளை
மாயனரிகரி கோபாலன்
வல்லரக்கியுடன் போருசெய்ய
மாயாவுதாரனுங் குளந்தையல்லோ

குலைவாளரக்கி பொல்லாதாள்
கொன்றிடுவாளவள் யென்மகனை
ஆரும்யில்லாத வனந்தனிலே
அரிராம சாமியைக் கொன்றிடுவாள்
மாயாவுதாரனைப் போர்க்கு விட்டு

நான் வாழும் அய்யோத்தியிலிருப்பதில்லை
என்று சொல்ல அந்த திசதரனும்

## விசுவாமித்திரர் இராமர் பெருமையினை எடுத்துரைத்தல்

யிசல் முனியானவரெடுத்துரைப்பார்
மன்னவர்க்குத்துரை மன்னவனே
மகுட முடிமன்னு திசதரனே
உந்தன் மகனென்று யெண்ணிக்கொண்டாய்
உலகமளந்த பெருமாளல்லோ
ராமர் பிறந்த அவதாரமே
நான் சொல்லக் கேளுந்திசதரனே
காயாத பால் தயிருண்டவர்தான்

கல்லுரலில் கட்டுப்பட்டவர் தான்
ஆள்ப்படிதன்னில் வளர்ந்தவர் தான்
அன்றிடச்சியைக் கோப்பளித்தவர்தான்
பேச்சிதனப்பாலுண்டவர்தான்
பூதனையைமுன்னே கொன்றவர்தான்
யீரேழுலகமளந்தவர் தான்
யிரணியன் மார்பைப் பிளந்தவர்தான்

## மாவேலிராசன் அவதாரக்கதை

மாவேலி ராசன் அவதாரம்
மன்னன் திசதராசொல்லக்கேழும்
யீஸ்பரனுர்க்குக் கோவில் கட்டி
யேற்ற கோவில் பூசைபண்ணி
திருவிளக்கானது யேத்தி வைத்து
சிறந்த பூசாரி நடந்து விட்டான்
ஆரியப்பட்டனும் போனபின்பு
அறிவுள்ள வீட்டெலி ஓடிவந்து

---

**2936.** கொலை > குலை (பே. வ. மா)

**2950-2957** இவ்வரிகளில் இராமனின் வேறுவேறு அவதாரங்களில் நிகழ்ந்த கதைச் செய்திகள் சுட்டப்பட்டுள்ளன.

மூஞ்சியினாலே திரித்தூண்டி
எரியுமட்டுங்காத்திருந்து
காத்திருக்கிற வேளையிலே
கண்டு யீஸ்பரர் தானறிந்து
யீஸ்பரருந்தானறிந்து

யின்பமுடனவரேது சொல்வார்
நமக்கு விளக்கு யெரித்தவற்க்கு
நல்லபதவி கொடுக்க வேணும்
யென்னயென்ன பதவியது
யிவன் தனக்குக் கொடுத்திடலாம்

யென்றுசொல்லி யீஸ்பரரும்
யின்பமுடனேது செய்தார்
வாரும் பிள்ளா மாவேலியே
வாற்த்தை யொன்று சொல்லக்கேழும்
யிப்பிறப்பில் மாவேலி தான்

யினிமேல் பிறக்கிற பிறவியிலே
மாவேலிராசாவைத்தான் பிறந்து
வையகத்தைநீயாண்டிருப்பாய்
என்று சொல்லியீஸ்பரனார்
யேற்றவிடையதுதான் கொடுத்து

மறுபிறவியானதிலே
மாவேலி ராசாவாய்த்தான் பிறந்தான்
மாவேலி ராசாவாய்த்தான் பிறந்து
வையகத்தை யரசாண்டான்
ஆறி லொரு கடமைதண்டி

அசையாத மணியுங் கெட்டி
கூற்றி லொன்று குறையாமல்
குவலயத்தை யரசாண்டிருந்தான்
ஆண்டிருக்கிற நாளையிலே
அரிராமச்சந்திரரும்

மாயவர் நந்த கோபாலர்
வைகுண்டரா மருந்தானறிந்து
அல்லும் பகலும் அறுபது நாளிகையும்
அரனை நினைந்தானேயல்லாது
சிவசிவனே யென்று சொல்லி

---

2966. மூஞ்சி—முகம்

2990. கடமை—வரி

2998. அறுபது நாளிகை—ஓர் இரவும் ஒரு பகலுமாகிய இருபத்து நான்கு மணி நேரம்

சிவனை நினைந்தானே யல்லாது
சீரங்கத்தில் பள்ளி கொண்ட
திருமாலைச் சற்றும் நினைக்கவில்லை
என்று சொல்லியந்தக் கோபலர்
யின்பமுடனவரேது சொல்வார்

யிவனுட தேசத்தைப் பாற்க்க வென்று
என்பெருமாள் நந்தக்கோபாலர்
பாப்பானைப் போல் வடிவுகொண்டு
பச்சைமுகில் வர்ணர் கோபாலர்
பக்கப் பழுத்தவர் போல்

பஞ்சுபோல் நரைத்தலையும்
கக்குக்கென்றிருமிக் கொண்டு
கையில் தடியது ஊன்றிக் கொண்டு
வயசு சென்ற கிளவனைப் போல்
வந்தாரே நந்தக்கோபாலர்

மாவேலி ராசனிடத்தில் வந்து
வளமையுடனேது சொல்வார்
வாரும்பிள்ளா மாவேலி ராசாவே
வாற்த்தை யொன்று சொல்லக்கேளும்
என்னுடலும் விறைக்குதல்லோ

என்மேனியெல்லாந் தடுமாறுதல்லோ
கைப்பிலனே யல்லாது
காலில் சற்றும் பிலனேயில்லை
உன்னுட தேசமானதிலே
ஒருமூன்றடியிடம் வேணும்

என்று கேட்டார் வேதப்பாப்பான்
யேது சொல்லுவான் மாவேலியும்
மூன்றடிமண்ணென்றதற்கு
மூவாயிரம்மடி அளந்து கொள்ளும்
யென்று சொன்னான் மாவேலிராசன்

யேதுசொல்லுவார் வேதப்பாப்பான்
வாயினாலே சொன்னதுண்டால்
வழுகாது மாவேலி ராசாவே
நீர்வாற்த்துத்தந்ததுண்டால்
நிச்சயமாகவே யெண்ணிக்கொள்வேன்

---

3010. பக்கப் பழுத்தவர்—முதிர்ந்த வயோதிகர்

3012. கக்குக்—ஒலிக் குறிப்புச் சொல்

3020 விறைக்குது—நடுங்குது

3022. பலன் > பிலன் (பே. வ. மா)

3033. வழுகாது—தவருது

என்றுகேட்டார் வேதப்பாப் பானும்
யேது சொல்வான் மாவேலி ராசன்
நாளே உதைய காலத்திலே
நல்லதாகட்டும் நீர் வார்ப்போம்
மறுநாழுதய காலத்திலே

வந்தார் வேதப்பாப்பானும்
அப்போது மாவேலி ராசாவும்
ஆதரவாகவே மனமகிள்ந்து
பீதாம்பரப்பட்டுபோர்த்துக் கொண்டு
பிரபலமாகவே யெழுந்தருள

கெண்டிதாரயைக் கைலெடுத்து
கிறுவையுடனே வளி நடந்தார்
யிருபேரும் ஒன்று போலே
யின்பமுடன் வளிநடந்தார்
அந்தவனமதுதான் கடந்து

அதற்க்கடுத்த மலேச்சோலே விட்டார்
கானவனத்திலே வாறபோது
கடுக வேதப்பாப்பானும்
. . . — — — — — — — — — —
. . . — — — — — — — — — —

. . . — — — — — — — — — —
. . . — — — — — — — — — —
. . . — — — — — — — — — —
. . . — — — — — — — — — —
சந்தோசமாகக் களி கூர்ந்து

தானே நடந்தார் வேதப்பாப்பானும்
அவர்களிருபேரும் ஒன்றுகூடி
அன்புடனே வளிநடந்தார்
மாமுனிவர்கள் வாழுமலே
வாய்த்த சன்னுசி மலேயுமிட்டார்

யீயிருந்தாலத்து விழும்
யிந்திராணி மலேயுமிட்டார்
அகத்தியர் புலத்தியர் வாழுமலே
அருணகிரி நாதர் மலேயுமிட்டார்
யிஞ்சியேலம் மலேயுமிட்டு

---

3044. பீதாம்பரப்பட்டு—பொன்னுடை
3047. கிருபை>கிறுவை (பே. வ. மா)
3054—3059. ஓலேயில் சிதைவு
3066. யீ—ஈ என்னும் உயிரினம்
3066. அத்து—அறுந்து

யிருமிச்சந்தோட்டமிடடார்
காக் — — — — — — — — — — — —
கான் — — — — — — — — — — — —
கண்ண — — — — — — — — — — —
காவல் — — — — — — — — — — —

வாரு — — — — — — — — — — —
வாற — — — — — — — — — — — —
எங்கிருந்து யிங்கு வந்தீர்
எனக்கறியச்சொல்லுமென்ருர்
எங்கிருந்தோ ஒரு பாப்பான்

என்னிடத்தில் ஓடிவந்து
மூன்றடிமண்ணிடங் கேட்டான்
முத்தி பெறத்தாறே னென்றேன்
என்று சொல்ல மாவேலிராசாவும்
யேது சொல்வான் சுக்கிறீபன்

பாப்பானென்று யெண்ணவேண்டாம்
பச்சைமுகில் வற்ணனவரல்லவோ
கஞ்சனை நெஞ்சைப்பிளந்தவர்தான்
கன்றுகொண்டு கனியெறிந்தவர்தான்
பேச்சிமுலைப்பாலையுண்டவர்தான்

பூதனயை முன்னுள் கொன்றவர்தான்
ஆள்ப்பாடியிடத் தெருவில்
அறுபதினுயிரம் யிடப்பெண்களை
அன்று ராவைக்குள்ளாக
அல்லோரையுங் கோப்பளித்தவர்தான்

குளந்தைகள்க்கு குளந்தயைப் போல்
கிளவிகள்க்கு கிளவியைப்போல்
அல்லோறக்கும் மாப்பிள்ளையாய்
அரிராமசுவாமி நின்றவர்தான்
அப்படிக் கொத்த பெருமாளல்லவோ

அளகு மாவேலி ராசாவே
என்று சொன்னுன் சுக்கிறீபன்
யேது சொல்வான் மாவேலியும்
கெட்டபயலே சுக்கிறீபா
கெடுமதி யென்னேடே சொல்லாதே

யிந்த நல்லகிளட்டுப் பாப்பான்
என்னுடதேசத்தைப் பறிப்பானே

---

3091 பூதனை—பூதகி
3094. ராவைக்குள்—இரவுக்குள்

என்தனக்கோ புத்தி சொல்லவந்தாய்
என்கண்ணில் முளியாதே அப்பாலேபோ
எட்டிநில்லு சுக்கிறீபனே

எந்தன் கண்ணில் முளியாதே
என்றுமாவேலி தானுரைக்க
யேது சொல்லுவான் சுக்கிறீபன்
நல்லவற்க்குப் புத்தி சொன்னால்
நல்லபுத்தி யென்று கேட்டுக் கொள்வான்

பொல்லாதவற்க்குப்புத்தி சொன்னால்
பிளேகே டெண்ணிக் கொள்வார்கள்
தன்னாலே கெட்டு போறவர்க்கு
நாம் யென்ன சொன்னாலுங்கேளாது
என்று சொல்லி சுக்கிறீபன்

யின்பமுடன்தானிருந்தான்
யிருக்கிற தோர் வேளேயிலே
யேற்ற மாவேலி ராசாவும்
பாப்பானையுங் கூட்டிக்கொண்டு
பரிவினுடன் வெளிநடந்தான்

அந்தவனமதுதான்கடந்து
அடுத்தமலைச்சோலே விட்டார்
குன்றுமலே குறிஞ்சி மலே
கூடுகொம்பன் மலேயுமிட்டார்
கானவனமதுதான் கடந்து

காவேரியாத்தங்கரையில் வந்தார்
யிருபேருந்தானே வந்து
யின்பமுடன் தானிருந்தார்
யிருக்கிறதோர் வேளேயிலே
யேற்ற மாவேலி ராசாவும்

கெண்டி தாரகை கயிலெடுத்து
கிறுவையுடனே நீர் வாற்த்தான்
நீர்வாற்க்கும் வேளேயிலே
நீசன் சுக்கிறீபனேது செய்தான்
கெட்டுப்போனானென்று சொல்லி

கிறுபையுடன் சுக்கிறீபன்
உண்டையாகவேதான் திரண்டு
கெண்டிதாரயை அடைத்துக்கொண்டான்
யிப்படியிருக்கிவேளேயிலே
யேற்ற மாவேலிராசாவும்

3131. ஆற்றங்கரை >ஆத்தங்கரை (பே.வ.மா)

கெண்டிதாரயைக்கயிலெடுத்து
கிருபையுடனீர் வாற்த்தான்
நீர் வாற்க்கும் வேளேயிலே
யேற்ற கெண்டிஒளுகவில்லே
ஆருடைய உபாயமிது

அறியவேணுமென்று சொல்லி
அரிராமச்சந்திரரும்
ஞானக்கண்ணுல் தான்பாற்த்தார்
சுக்கிறீபனுட உபாயமென்று
தானறிந்தார் கோபாலர்

கையிலிருந்த தெற்ப்பப்புல்லே
எடுத்துக்கண்ணிலே குத்திவிட்டார்
ஒத்தக்கண்கெட்டேனென்றுசொல்லி
ஓடிப்போய்விழுந்தான் மளேக்கண்ணிலே
மளேக்கண்ணிலே போய் விழுந்து

வஞ்சகமாகவே மளேபெய்தான்
சுக்கிறீபனும் போனபோது
கெண்டிதாரையும் ஒளிகிடுமாம்
அப்போது மாவேலி ராசாவும்
ஆதரவாகவே நீர்வாற்த்தார்

நீர்வாற்த்துக்கொடுத்த போது
நிண்ணயமாய் வேதப்பாப்பானும்
குதிரையானது பாய்ந்தாப்போல்
கோபாலராமரும் ஓடிவிட்டார்
காவேரியாத்தங்கரைதனிலே

காயாம்பு வண்ணரும் ஓடிவாருர்
அந்தமலேயதுதான் கடந்து
அதுக்கடுத்த மலேச்சோலேவிட்டு
குன்றுமலே குறிஞ்சிமலே
குடமாடி மலேயுமிட்டு

யீயிருந்தாலத்துவிழும்
யிந்திராணி மலேயுமிட்டு
அகத்தியர்புலத்தியர் வாழுமலே
அருணகிரி மலேயுமிட்டு
யிஞ்சியேலம் விளேயுமலே

யிருமிச்சந்தோட்டம் விட்டு
ஒத்தக்கண்ணனுடதேசம்விட்டு
ஒளுகுகல் பாதை விட்டு
யிருட்டுநாடு உருட்டுநாடு
யிருளுறைந்தான் தேசம்விட்டு

---

3156. தருப்பைப்புல்—தெற்ப்பப்புல் (பே. வ. மா.)

தேசம் பலதுந்தான் கடந்து
திருமாலைப்பெருமாழும் ஓடுவாராம்
மாவேலிராசன் பட்டணத்தில்
வந்தாரே நந்தக்கோபாலர்
என்பெருமாளோடிவந்து

யேற்ற மூன்றடி அளப்பதற்க்கு
தேசமெல்லாந்தான சுருக்கி
திருமாலும் அளக்கலுற்றார்
ஓரடியாய்த்தானளந்தார்
உலகளந்த பெருமாழும்

ஓரடிமண்வந்துபோச்சு
யீரடிமண்யெங்கேயென்றார்
என்றுரைக்க வேதப்பாப்பானும்
யினிமேல்நானென்ன செய்வேன்
என்று சொல்லி மாவேலி ராசாவும்

யிருந்து மெற்றக்கிலேசமிட்டார்
யேய்துப்போட்டான் வேதப்பாப்பரனும்
யென்றெண்ணிக்கொண்டு மாவேலியும்
அங்கமெல்லாம் வேறுபட்டான்
அளகு மாவேலி ராசாவும்

தள்ளாடித் தடுமாறி
தானேயிருக்கிற வேளையிலே
யிருக்குமந்த வேளையிலே
யேதுசொல்வார் மாவேலி ராசாவும்
மந்திரிபேச்சைக்கேட்டோமில்லை

மாவேலி ராசனுமென்று சொல்லி
வாறவிதி வந்ததுண்டால்
வாய்திறக்கநீதமுண்டோ
என்று சொல்லியந்த ராசாவும்
யிருக்கிறதோர் வேளையிலே

யிருக்கிறதோர்வேளையிலே
யென் பெருமாளவரேது சொல்வார்
படித்துப்படித்து நீபேசாதே
பத்தியுள்ள மாவேலியே
யீரடிமண்ணுக்கிடமுமெங்கே

யென்றுகேட்டார் கோபாலர்
ஈரடிமண தருமளவும்
யென்சிரசில் காலைவைத்துக்கொள்ளும்

---

3213. நீதம்—நீதி
3218. படித்துப்படித்து—திரும்பத்திரும்ப

மறுபாதத்தை தான் தூக்கி
மாவேலி சிரசியில் வைத்துக் கொண்டார்

யீரடிமண் வந்து போச்சு
ஓரடிக்குயிடமுமெங்கே
என்று கேட்டாரந்தக் கோபாலர்
யேற்ற மாவேலி ராசாவும்
ஓரடிக்குயிடந்தருகு மட்டும்

என்னைச் சிறைச்சாலையில் வைத்துக்கொள்ளும்
உலகமளந்த பெருமாளே
என்னைச் சிறைச்சாலையில் வைத்துக்கொள்ளும்
யென்பெருமானே நந்தகோபாலா வென்றுரைத்தான்
சிறைச்சாலையில் வைக்கும்போது

திரும்ப ஒருவரங் கேட்டுக் கொண்டான்
காற்த்திகமாசமானதிலே
காற்த்திக நக்ஷத்திரந்தனிலே
எந்தன் குடியான பேர்களெல்லாம்
எந்தன் கண்ணினால் பாற்க்வேணும்

வீடுவாசல் தான் மெழுகி
விடியுமட்டும் விளக்கு வைத்து
ஆடலுடன் பாடலுமாய்
அன்புடனே நான்பாற்க்கவேணும்
அன்று ஒருநாளை மட்டும்

அரிராமசுவாமி விடைதரவேணும்
யென்றுகேட்ட மாவேலிக்கு
யென்பெருமாளேதுசொல்வார்
வருசத்துக்கு ஒருதரம் போய்
மாவேலி ராசாவே பாற்த்துக் கொள்ளும்

---

**3225.** சிரசியில்—தலையில்

**3236—3250.** குமரி மாவட்டத்தில் திருக்கார்த்திகை பண்டிகை நாள் இரவில் மக்கள் வீட்டின் முன்புறம் பல விளக்குகளை ஏற்றி வைப்பர்; பல்வேறு வகையான தின்பண்டங்கள் ஒவ்வொரு வீட்டிலும் செய்யப் படும். ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் அரிசிமாவில் மஞ்சளை அரைத்துச் சேர்த்து நீர்விட்டுக் கலந்து உண்டாக்கிய ஒருவகைக் கலவையினை வலக்கையினை ஐந்து விரல்களிலும் உள்ளங்கையிலும் படும்படி எடுத்து முன் வாயில் கதவுகளில் ஒற்றிக்கை அடையாளம் வைக்கின்றனர். ஏன் இவ்வாறு கை அடையாளம் கதவுகளில் இடு கின்றனர் என்றால் மக்கள் இரவில் தூங்கிய பின்னர் மாவேலி ராசா திருக்கார்த்திக்கைப் பண்டிகை நாள் இரவில் ஊர் சுற்றிப்பார்க்க வருவாராம். அப்பொழுது முன்வாயில் கதவுகளில் உள்ள கை அடையாளங்களைப் பார்த்துவிட்டு இந்த வீடுகளில் கார்த்திகைப் பண்டிகை கொண்டாடப்பட்டுள்ளது என அறிந்து கொள்வாராம். இது மக்கள் நம்பிக்கை. இந்தச்செய்தியே இவ்வரிகளில் குறிக்கப் பட்டுள்ளது.

மறு நாளுதயத்திலே
மாவேலி ராசாவே சிறையிருப்பாய்
மகதேவர் மாவேலியை
வஞ்சிறையில் வைத்துக் கொண்டார்
அப்படியுள்ள பெருமாளல்லோ

அளகு திசதர ராசாவே
உந்தன்மகனென்றேயெண்ணிக் கொண்டாய்
உலகமளந்த பெருமாளல்லோ
தாடகை சங்காரம் முடிப்பதற்கு
தரணியளந்தோனை துணையிடுவாய்

யென்றுரைக்க விசுவாமித்திரர்
யெடுத்துரைப்பார் திசதரரும்
யேன்காணுமா முனியே
யிந்தப்புத்தியென்னோடுபேசாதே
மலடிருந்து மனமுருகி

மாயாவுதாரனை யீன்றெடுத்தேன்
அம்பெடுக்கத் தெரியாதையா
ஆயுத மெடுக்கவுந் தெரியாதே
கணையெடுத்துவிடுவதற்க்கு
கைப்பிலமில்லையே மாமுனியே

குளந்தையென்று சொல்லுகிறாய்
கோபாலருட செய்திகேளும்

### இரணியன் வரலாறு

யிரணியன்தேவி திருவயிற்றில்
யேற்றபாலகனாய் பிறந்து
பிறந்துவயசேளாக

பிறபலமுள்ள இரணியனும்
யேழுவயசான போது
யெழுத்தோத வைக்கவென்று
வாத்தியாரை வரவழைத்து
வாய்த்த யிரணியனேது சொல்வான்

வாருமையா வாத்தியாரே
வாற்த்தையொன்று சொல்லக்கேளும்
என்னுடைய பாலகனுக்கு
எழுத்தோதிக்கொடுவு மென்றார்
என்றுரைக்க யிரணியனும்

யேதுசொல்வார் வாத்தியாரும்
யென்ன வரிசைதந்திடுவீர்
யினக்கறியச்சொல்லுமென்றார்

3287. வரிசை—பரிசு

என்று கேட்டவாத்தியார்க்கு
யேதுசொல்வான் யிரணியனும்

முப்பதுபொன் ஒருமுடியாய்
முடிந்து தருவேன் வாத்தியாரே
யிரணிய நமாவென்று சொல்லி
யெழுத்தோதிக்கொடுவுமென்ருர்
அப்படியாகட்டு மென்று சொல்லி

ஆதரவாக வாத்தியாரும்
பாலகனே வரவழைத்து
பாங்குடனெழுத்தோதுதற்கு
பிள்ளையாரைப்பிடித்து வைத்து
பிரபலமாய் யெழுத்தோதுதற்கு

தேங்காயுடைத்து வைத்து
தெச்சணையுங் கொண்டு வைத்தான்
அந்தவரிசையான தெல்லாம்
ஆதரவாகவே வாங்கிக்கொண்டு
யிரணியநமாவென்று சொல்லி

எழுத்தோதிக் கொடுத்தாராம்
யிரணிய நமாவென்றபோது
யிருசெவியும் பொத்திக்கொண்டான்
அரிநமாவென்று சொல்லுமென்று
அந்தப்பாலகனெழுத்தோத

கண்ணுரெண்டுஞ் சிவப்பேறி
கடுகப்பாலகன்தனைப்பிடித்து
தலையிலே மூன்று கொட்டுங்கொட்டி
தானேயெழுத்தோதி வாத்தியாரும்
யிரணிய நமாவென்று சொல்லி

யெழுத்தோதி கொடுத்தார் வாத்தியாரும்
யிரணிய நமாவென்றபோது
யிருசெவியும் பொத்திக் கொண்டான்
யிரண்டு செவியும் பொத்திக்கொள்ள
யேதுசொல்வார் வாத்தியாரும்

வாருமையா யிரணியனே
வாற்த்தை ஒன்றுசொல்லக்கேளும்
உங்கழுக்குப் பிறந்தபிள்ளையல்ல
ஊருக்குப்பிறந்த பிள்ளையிது
உமக்குப்பிறந்த பிள்ளையென்ருல்

உம்முடைய பேர் சொல்லாதோ
என்றுரைத்த வாத்தியாரும்

3308. பொத்தி—கையினல்மூடி

யேது சொல்வான்யிரணியனும்
யிங்கே வாயிங்கே வாயென் மகனே
எடுத்துமடிமீதில்வைத்துக்கொண்டான்

முகத்தோடே முகத்தைவைத்து
முத்தமிட்டான்யிரணியனும்
பாலுபளமொடுசீனியுடன்
பசுந்தேங்காய் சற்கரையும்
கானிலுள்ள தேனுமிட்டு

கருத்துடனே அமுதூட்டி
உண்டுநன்ருய் கைவிளக்கி
உடனடைக்காய் தானருந்தி
தண்டருமு மாளிகையில்
தானேயிருக்கிற வேளையிலே

அக்கினி ஒமக்குளிவளர்த்து
அக்கினிக்குளிக்குள்ளே போட்டதுண்டால்
அக்கினிக்குளிக்குள்ளே போட்டதுண்டால்
அக்கினிதேவியுங்கொன்றிடுவாள்
நமக்குக்களையது ஒளிந்துபோகும்

நன்ருய்ச்சொன்ஞனே யிரணியனும்
மனதிலேயவனினைத்தபடி
வளர்த்தானே ஒரு வேள்வி
அன்பத்திரெண்டடியகலத்திலே
அறுபத்திமூன்றடி நீளத்திலே

அளந்தளந்து ஓமகுண்டம்
அகலம் பெறவே வெட்டுவாராம்
யேழுகுலத்து விறகடுக்கி
யேழுகுலத்து பூவும் போட்டார்
மடமடென்றுங் குமுகுமென்றும்

வளருதல்லோ திருவேள்வி
திருவேள்வி வளரும் போது
சிறந்த பாலகனைத்தான்பிடித்து
காலுங் கையும் வரிந்துகெட்டி
கடுகவேள்வியில் வைத்துவிட்டான்

வேள்விக்குளியிலே போட்டபோது
விரையப்பாலகனேது சொல்வான்
யிரணியனுக்குத்தெரியாதே போஞல்
யிந்த அக்கினிதேவிக்குந்தெரியாதோ
என்றுசொன்ஞனந்தப்பாலகனும்

யேற்ற அக்கினி தேவியாள்
அக்கினியாகவே யெழும்பினது

---

3359. வரிந்து கெட்டி—சுற்றிக்கட்டி

அருஞ்சுனைத் தண்ணீர்போல் குளிர்ந்திடுமாம்
செந்தாமரைப் பொய்கையென்று
சிறப்புடனே வெளியில் வந்தான்

முன்னிருந்த அளகதிலும்
மூன்றுரெட்டி அளகானுன்
பளபளென்றும் மினுமினென்றும்
பாங்குடனே வெளியில் வந்தான்
வருகிறதோர் வேளையிலே

வாய்த்தயிரணியன் கண்ணில் கண்டான்
வாரும் பிள்ளாய் சிறுபாலகனே
வாற்த்தை யொன்றுசொல்லக் கேளாய்
அக்கினிக்குள்ளே போட்டேனே
அக்கினி தேவியும் விடுவாளோ

ஆருடையகற்பு உனைக்காற்த்தது
என்னுடையகற்பல்லவோ உனைக்காற்த்தது
என்று சொன்னனந்தயிரணியனும்
யிரணியனுஞ் சிறுபாலகனை
யிரணிய நமாவென்றெழுத்தோத

என்று சொன்னன்யிரணியனும்
எழுதிக்கொடுத்தாரே வாத்தியாரும்
யிரணிய நமாவென்றபோது
யிருசெவியும் பொத்திக்கொண்டான்
அரிஓம்நமாவென்றிப்போது

அந்தப்பாலகனெழுத்தோத
அப்போது பாற்த்தானே யிரணியனும்
ஆதரவாகவே யேதுசொல்வான்
அக்கினிக்குளியிலே தூக்கிப்போட்டோம்
அக்கினிதேவியும் விட்டுவிட்டாள்

எந்தவிதத்திலே யிவனையினி
யிந்தப்பாலனைக் கொன்றிடலாம்
என்றுசொல்லியந்த யிரணியனும்
யின்பமுடனவனேது செய்தான்
மதயானையை வரவழைத்து

வாய்த்த பாலனைக்கூட்டிவந்து
காலுங்கையும் வரிந்துகட்டி
கடுக ஆனைமுன்னே போட்டுவிட்டால்
நமக்குக்களை ஒளிந்துபோச்சு
நல்லமதயானை கொன்றுவிடும்

போட்டவுடனே பாலகனும்
புகள்ந்துதானவனேது சொல்வான்

---

3372. மூன்று ரெட்டி—மூன்றின் இருமடங்கு

யிரணியனுக்குத் தெரியாதேபோனுல்
யேற்றமதகரிக்குந் தெரியாதோ
என்று சொன்னனந்தப்பாலகனும்

யேற்றமதயானையானதுதான்
நம்முடைய பெருமாளென்று
நல்மதயானையது
தும்புக்கையாலேகட்டவிள்த்து
துய்யமேனியில் மண்துடைத்து

மத்தகத்தின் மேல் தூக்கிவைத்து
வருகுதல்லோ தெருவீதி
வருகிறதோர் வேளையிலே
வாய்த்தயிரணியன் கண்ணில் கண்டான்
மதயானையின் காலில் போட்டோம்

மதயானை கொல்லாமல் விட்டதுவே
யெந்தயெந்தவிதத்தாலே
யிந்தப்பாலனைக் கொன்றிடலாம்
என்று சொல்லி யிரணியனும்
யின்பமுடனேது சொல்வான்

சமுத்திரத்தில் கொண்டு போட்டால்
வலம்புரிசங்கு விழு(ங்கி)ப்போடும்
மனதிலவன் நினைத்தபடி
வாய்த்த அந்தயிரணியனும்
வலம்புரி சங்குவிழுங்காவிட்டால்

மகரமீனது விழுங்கிவிடும்
பாலகனைப்பிடித்து வந்து
படலைக்கல்லையும் மேலேகட்டி
படலைக்கல்லையும் யிடுப்பில்கட்டி
பாற்கடலிலே போட்டுவிட்டான்

சமுத்திரத்திலே போட்டபோது
தானே சொல்லுவான் பாலகனும்
யிரணியனுக்குத் தெரியாதே போனுல்
சமுத்திராதேவிக்குந் தெரியாதோ
என்று சொல்லச்சிறுபாலகனும்

யேற்ற சமுத்திரா தேவியவள்
முதப்பக்கட்டை முதந்ததுபோல்
முதந்துவிட்டான் சிறுபாலகனும்
படலைக்கல்லொரு தோணியதாய்
பாலகன் தோணிக்காறனுமாய்

---

3426. சமுத்திரம்—கடல்
3433. படலைக்கல்—அகன்று விரிந்தகல்
3342. மிதப்ப > முதப்ப (பே. வ மா)

மகரமீனது வளிகாட்ட
வலம்புரி சங்கு ஓலமிட
யேலேல மென்று சொல்லி
யேலப்பாட்டும் பாடிக்கொண்டு
அலவாக்கரையானதிலே

ஆதரவாகவே தானும் வந்தார்
யிங்கே வாயென் மகனே
யென்றெடுத்துத் தோளில் வவத்து
வருகிறதோர் வேளையிலே
வாய்த்த யிரணியனேது சொல்வான்

யிரணிய நமாவென்பதுதான்
யென்பேரல்லோ பாலகனே
அரிநமோ வென்பதுதான்
அளகுபாலகா சொல்லுமென்றான்
யெள்ளுக்குள் யெண்ணை போலே

யெங்குமாக தானிருப்பார்
தூணிலுந்தானிருப்பார்
துரும்பிலுந்தானிருப்பார்
தூணிலிருப்பாரென்ற போது
தூருச முடனந்தயிரணியனும்

மந்திரவாளை உறைக்களத்தி
வாளால்யிருதுண்டாய் வீசிவிட்டான்
தூணும் யிருதுண்டாய் விழுந்தபோது
துருசமுடனந்தக் கோபாலர்
நரசிங்கமாக வேதான்

நல்ல அரிராம சந்திரரும்
யெந்த விதத்தாலே யிப்போது
யிரணியன் தனைக் கொன்றிடலாம்
அல்லும் பகலுமாய்க் கொல்லொண்ணாது
அதிகவரம் பெற்ற யிரணியனை

உள்ளும் பிறமுமாய்க் கொல்லொண்ணாது
உத்தவரம் பெற்ற யிரணியனை
யிப்படி வரம் பெற்றயிரணியனை
எப்படிநான் கொன்றிடுவேன்
என்று சொல்லியந்தக் கோபாலர்

யென்பெருமா ளேதுசெய்வார்
வானில் உதிக்கின்ற சூரியனும்
மலைக்குள் பாதி வெளியில் பாதி

---

3449. யேலப்பாட்டு—தோணிப்பாட்டு. இது நாட்டுப்புறப் பாடல் வகைளில் ஒன்று

3450. அலவாக்கரை—கடற்கரை

அங்குமிங்குமாயிருக்கையிலே
அவனை நடையிலே குனியவிட்டு

வாசல் நடையிலே குனியுமுன்னே
மலத்திக்கிடத்தியே யிரணியனை
வரமதிகம் பெற்ற யிரணியனை
வைகுண்டராமருமேது செய்தார்
அம்பாலே கொல்லொண்ணுது

ஆயிதத்தாலே கொல்லொண்ணுது
எந்தயெந்த வகையாலே
யிரணியனைக் கொன்றிடலாம்
சுண்டுவிரல் நகத்தாலே
துருசமுடன் மார்பிளந்தார்

யிரணியனை மார்பிளந்த
யிரணமுகசிங்கம் அவரல்லவோ
குடல்பிடுங்கி மாலையிட்ட
கோபால ராமரவரல்லவோ
அப்படியாப்பட்ட கோபாலர்

அரக்கியை கொல்வதுமவர்தானே
மாமுனிவர் சொன்னபோது
மன்னன் திசதரராசாவும்
சந்தோசமாகிக் களிகூர்ந்து
தானேயிருக்கிற வேளையிலே

யிருக்கிறதோர் வேளையிலே
யேது சொல்வார் திசதரரும்

### திசதரர் புத்திரர்களை விசுவாமித்திரருடன் அனுப்பி வைத்தல்

யென்மகனே நந்தக்கோபாலா
யிளையபெருமாழும் போய்வருவீர்
ராமபாசக்கணைகயிலெடுத்து

ராமசாமிக்குத்தான் கொடுக்க
யிந்த நல்லகணையினக்கு
யெடுத்த காரியஞ்செயிக்குமென்றுர்
என்று சொன்னுரந்தக் கோபாலர்
யின்பமுடனது சென்றிறங்கி

அந்தநல்ல ராமகணையதுதான்
அரி ராமசுவாமியை அடிதொளவே
நந்த கோபால சரணஞ்சரணம்
நரசிங்க முற்த்தியேசரணஞ்சரணம்
பாற்க்கடலில் பள்ளிகொண்டோனே

---

3495. துருசமுடன்— விரைவில்

பச்சைமுகில் வற்ணு சரணஞ்சரணம்
ஆள்ப்பாடிதனில் பிறந்தோனே
அரிகரிராமா சரணஞ்சரணம்
பேச்சிதனப்பாலையுண்டோனே
பெரியபெருமாளே சர(ண)ஞ்சரணம்

கல்லுரலில் கட்டுண்டோனே
காயாம்புவற்ணு சரணஞ்சரணம்
மோதிரக்கை குட்டுபட்டவரே
முகில்நிலவற்ணுசரணமைய்யா
சரணமிடவே ராமபாணம்

தரணியளந்தோனும்யிருக்கையிலே
விசுவாமித்திரர் அப்போது
விரைவுடனேயேது சொல்வார்
மாவேரியைச் சிறைவைத்தோனே
மண்ணை வெண்ணையென்று உண்டோனே

ஆத்தங்கரை மணலை யெண்ணினாலும்
அரிராமர் பிறவியை யெண்ணலாமோ
என்று சொல்லிவிசுவாமித்திரரும்
என் பெருமாளுடன்திடமுஞ் சொல்வார்
என்னுடஅய்யாவே திசதரரே

யிப்போது ஒருவாற்த்தை சொல்லக் கேளும்
மாமுனிவருட சொல்ப்படிக்கு
வல்லரக்கி யென்ற தாடகயை
தாடகைப்பெண்ணுளைச் சங்கரித்து
தானும் அய்யோத்திக்கு நான் வருவேன்

என்றுசொல்லி நந்தக் கோபாலர்
யேற்ற திசதரராசர்வும்
சந்தோசமாகிக் களிகூர்ந்து
தானே திசதரராசாவும்
கண்ணேறு திஸ்டிகள் வாராமல்

கையில் விபூதிதான் கொடுத்தார்
திசதராசாவை வளியனுப்பி
தேன்மொளி கோசலை முன்பில்வந்தார்
என்தாயே அம்மா கோசலையே
எனைவளர்த்த நாயகியே

மாமுனிவருட சொல்ப்படியே
வல்லரக்கியோடே போருசெய்து
தாடகைப் பெண்ணுளைச் சங்கரித்து
தவமுனிவர் வேள்விதான் வளர்த்து
மாமுனியானவர் துயரந்தீர்த்து
வாழும் அய்யோத்திக்கு நான் வருவேன்

---

3522. ஆள்ப்பாடி—ஆயர்பாடி ; கண்ணன்பிறந்தஇடம்.
3550. திருஷ்டி > திஸ்டி (பே.வ.மா)

என்றுசொல்ல நந்தக்கோபாலர்
யேந்திளை கோசலை சந்தோசமாய்
சந்தோசமாகக் களிகூர்ந்து
தார்குளலாளந்தக் கோசலையும்

கண்ணேறு திஸ்டிகள் வாராமல்
கையில் விபூதிதான் கொடுத்தாள்
கோசலையாளையும் வரவனைத்து
கோபால ராமரும் வளியனுப்பி
வளியனுப்பிநந்தக் கோபாலர்

வருகிறதோர் வேளையிலே
கண்டாரேயிளைய பெருமாளும்
காயாம்பு வண்ணர் கோபாலரை
எங்கள் பெருமாளே கோபாலரே
யேற்ற ரெகுராமசந்திரரே

அடியேனுங் கூடவாறேனென்று
அச்சுதராமருடதம்பியரும்
என்று சொல்லயிளைய பெருமாளும்
என்பெருமாள் நந்தக் கோபாலரை
வந்தடிதொழுதாரேயிளையவரும்

மாயாவுதாரனுஞ் சந்தோசமாய்
சந்தோசமாய்க்களிகூர்ந்து
தம்பியிளையோனைக் கூட்டிக்கொண்டு
சிமித்திராதேவியை வளியனுப்பி
செண்கண்ணெடுமாலுந்தம்பியரும்

கெங்கையிலே நீர் மெழுகி
கிறுவையுடன் மாத்துடுத்து
யிட்டநாமங்கள் யிருபத்தேழும்
யிலங்கு நாமம் பதினாயிரம்
நாமக்குறியதுதான் கீறி

ராமரும்யிளையபெருமாளும்
திருந்த சந்தணப்பொட்டுமிட்டு
செங்கையில் வரிவில்லெடுத்து
அம்பெடுத்தார் சரமெடுத்தார்
ஆயுதபாணிகள் சேற்ந்தெடுத்தார்

கொலுகுசிம்மாசன மேடைவிட்டு

## விசுவாமித்திரர் இராமன் இலக்குவருடன் தாடகைமலை நோக்கி வரல்

கோபால ராமருந்தம்பியரும்
காடுசெடி வனங்கடந்து
கானயாறுந்தான்கடந்து
தவமுனிவர் வாழுமலை

சன்னாசியுட மலையுமிட்டு
கொக்கிருந்து யிறகுணத்தும்
குடமாடி மலைகடந்து
யிஞ்சி யேலம் விளையுமலை
யிலுமிச்சந் தோட்டம்விட்டு

அன்றுநட்டுஅன்றறுக்கும்
அளகுசம்பாவயலுமிட்டு
யீயிருந்தாலத்து விழும்
யிந்திராணிமலை கடந்து
காடுசெடிவனங்கடந்து

கானையாறுவட்டப்பாறை விட்டு
என்குருவேவிசுவாமித்திரரே
யியல் முனிவரே சொல்லக்கேழும்
காதம் உண்டோயின்னந்தூரம் உண்டோ
காரிகை தரடகை வனமதுதான்

காதம்யில்லை யின்னந்தூரம்யில்லை
காரிகை தாடகை வனமதுதான்
அந்தாதெரியுது உசந்தமலை
அரிராமசந்திரரே
கோவில் கொடிமரந்தெரியுதையா

கொலுகுமணிமேடை தெரியுதையா
தாடகையாளுடமலைதனிலே
தலையலங்காரமுந்தெரியுதையா
என்று சொல்லி விசுவாமித்திரரும்
எங்கள் பெருமாளுந் தம்பியுமாய்

தாடகையாழுட மலைதனிலே
தாமோதரருந்தானே வந்தார்

## இராமரும் தம்பியும் வேள்வி வளர்த்தல்

மாமுனிவர்வளர்ந்த வேள்விதன்னை
மாயரெகுராமர்தானே கண்டார்
யிந்தநல்லவேள்வியது

எச்சியாகிப்பேச்சுதென்று
அந்தநல்ல வேள்விக்கருகாக
அரிராமசுவாமியுந்தான் பாற்த்தார்
யிந்தத்ததலம் நல்லதலம்
யேத்த வேள்வி வளப்பதற்கு

அன்பத்திரெண்டடி அகலத்திலே
அறுபத்தி மூன்றடி நீளத்திலே
வேறுவெட்டினா் வேள்விக்குளி அட்டபாதாளம்

---

3602. உணத்தும்—உலர்த்தும்

விஸ்தீரணமானதொரு வேள்விக்குளியில்
கண்ணுக்களகான வற்ணமுஞ்செய்தார்

கண்ணுடி போலவே சீவிமினுக்கி
வாக்குடன் வேள்விக்கொரு வாசலுமிட்டார்
வரிசையாய் விறகுவெட்ட வேணுமென்ருர்
உண்ணுமுன்னே குலத்துக்கொரு விறகு
ஒரு நொடிதனிலே வெட்டவேணுமென்ருர்

சந்தணங்காருகில் மஞ்சணுத்தி முல்லை
தக்கபிலாமரம் அத்தியரசு
யேழுகுல விறகதுதான்
யிமைதட்டிமுளிக்குமுன்னே வெட்டுவாராம்
வெட்டியவிறகை வண்டிதனிலேற்றி

விரவுடன் வேள்விக்குளி முன்னே போட்டார்
சுற்றிவரவே திரையும் வளைந்து
சூதான வாசலிட்டு விறகடுக்கி
கொத்தொடு தேங்காய் குலைகழும்போட்டார்
குலையோடு வாழைப்பளங் கொண்டெறிந்தார்

அன்று கடைந்த மஞ்சணை போட்டார்
அன்றைக்கு ஆட்டின யெண்ணையுமிட்டார்
வாடைப் பொடியிலொருகோட்டை போட்டார்
மணக்குமாம் பச்சைக் கற்பூரமிட்டார்
எள்ளுப் பொரியிலொரு கோட்டை போட்டார்

எங்கள் பெருமான் சந்தோசமாக
அன்று விரிந்த முல்லைப்பூப் போட்டார்
அளகுடைய திருவேள்விக்குளிதன்னில்
வடமாலை சந்திரமாலையும் போட்டார்
மல்லிகை முல்லையிருவாச்சி போட்டார்

சிந்தனைகள் வாராமல் தேங்கயுடைத்து
செவ்விளனி ஆயிரங்கண்திறந்துவிட்டார்
தெற்ப்பையும் நறுநெய்யுந்தீயிலேவிட்டார்
தென்னிலங்காபுரியெங்கு மணக்க
எண்ணைக்குடத்திலே தொண்ணூறுமிட்டார்

யிலுமிச்சங்காயிலே அஞ்ஞூறுபோட்டார்
வெள்ளயைக் கொண்டங்கே முன்னே தொளித்தார்
வெள்ளத்தலிப்பூவை வாரியே போட்டார்
வாசனைமணங்கள் கமகமவென்ன
வளருதல்லோ திருவேள்வியதுதான்

---

3646. காரகில் > காருகில் (பே. வ. மா)—மரப்பெயர்

3667. செவ்விளனி—செந்தேங்காய் இளநீர்

3671. ஐந்நூறு > அஞ்ஞூறு (பே. வ. மா)

## வேறு

வானமட்டும் பூமிமட்டும்
வளருதல்லோகருவுருவாய்
வேள்விக்கருகே விசுவாமித்திரர்
விரைவாயச் செபத்தில்தானிருக்க
கண்ணுரெண்டு மூடிக்கொண்டு

கைரெண்டும் விரித்துக்கொண்டு
அரிஓம் நமசிவாயமென்று
அரனுடபேரில் ஒருநினவாய்
வளர்த்த வேள்விக்கொருபிறமாய்
மாமுனியானவர் தவமிருக்க

வளருதல்லோ புகையதுதான்
வானமட்டும் பூமிமட்டும்

## *தாடகை சீற்றமடைதல்*

கண்டாளே அந்த தாடகையாள்
காரிகையாள் கோபங்கொண்டாள்
கண்ணுரெண்டுஞ்சிவப்பேறி

கடுங்கோபங்கொண்டாள் தாடகையும்
எல்லாமலையிலும் பெரியமலையாய்
எந்தன்மலையது ஆகிப்போச்சே
பெண்பிள்ளையென்றல்லோ எண்ணிக்கொண்டான்
பேர்பெரியதோர் மாமுனியும்

முன்னேஒருதரம் வேள்விசெய்து
மோசப்பட்டுப்போனான் மாமுனியும்
கண்டதுண்டமாகத் தலையைவெட்டி
கள்ளுமதுவுங் கூட்டிக்குடித்திடுவேன்
கொன்றிடுவேன் அவனைத்தின்றிடுவேன்

கூறுகூறாய்க்குலை பிடுங்கிடுவேன்
காறச்சுட்டுக் கரையில்வைத்து
கள்ளுமதுவுங் கூட்டிக்குடிப்பேன்
சடையறுப்பேன் முடியறுப்பேன்
தாடிவீசயைப் பிடித்தறுப்பேன்

பின்குடும்பிதனையறுப்பேன்
அவன் பூணூலைப் பிடித்தறுப்பேன்
என்று சொல்லியந்த தாடகையாள்
யேந்திழையரக்கி கோபங் கொண்டாள்
யேழுகடலும் ஒரு குதியாய்

யெழும்பிக்குதித்தாளே தாடகையும்
கண்ணில் கண்டாளே தாடகையாள்
காரிகையு மெத்தக் கோபங் கொண்டாள்
கண்ணுரெண்டுஞ்சிவப்பேறி
காயாம்பு வண்ணரும் தம்பியரும்

பச்சை முகில்வற்ணர் கோபாலரை
பைங்தொடிதாடகை கண்ணில் கண்டாள்

## தாடகையும், இராமருந் தம்பியும் வாதமிடல்

குளந்தையாகவே தெரியக்கண்டு
கொம்பனைதாடகை யேதோசொல்வாள்
உன்தகப்பனும் நீலனேடா

உன்னைப்பெற்றவளும் நீலியோடா
குருமுனிவனுடபேச்சைக்கேட்டு
குளந்தயையெப்படி பிலத்துவிட்டான்
மாமுனிவனுடபேச்சைக்கேட்டு
மதலையையெப்படி போர்க்கு விட்டான்

என்றுசொல்லியே தாடகைப்பெண்
என்பெருமாளுக் கெடுத்துரைப்பாள்
தாடகை பெண்ணுளுந்தானுரைக்க
தாமோதரரும் யெடுத்துரைப்பார்
பாரமலை போலிருந்தாலென்ன

பட்டுப் போகப் போறாய் தாடகையே
மலைபோலே அரக்கி நீயிருந்தாலென்ன
மண்ணுங்கட்டியென்றெண்ணிக் கொள்வேன்
அடவியென்ற கருமலையை
அளகு சித்துளி பிளந்தாப்போல்

துண்டுதுண்டாய்ப் பிளந்ததுபோல
துனிபடப்போறாய் தாடகையே
யேந்திழையேயின்னஞ் சொல்லுவென்று
யென்பெருமாளதி கோபங்கொண்டார்
வேலும் யீட்டிக்கெதிராக

விரைவாய் மல்பிடிக்கவாராயோ
எதிர்த்து சண்டை செய்வது நீதானே
என்று சொன்னளந்த தாடகையாள்
யென்று சொல்லவே தாடகையாள்
யென் பெருமாளேது சொல்வார்

வாரும் பெண்ணே தாடகையே
வாற்த்தை யொன்று சொல்லக்கேழு
உன்னைப்போல் பாரு பெண்பிறந்தால்

---

3720. நீலன்—நீலியின் அண்ணன் குமரி மாவட்டத்தில் நீலன்சாமி கோயிலும் நீலன்சாமி கதைப்பாடலும் உள்ளன என்பது இங்குக் குறிக்கத்தக்கது.
3731. பட்டு—மடிந்து
3733. மண்ணுங்கட்டி—மண்ணிலாகிய சிறியதுண்டு.
3737. துணிபட—துண்டுபட

ஓடிக்கொண்டு திரிவாரோ
கறக்க ஒட்டாப் பசுப்போலே

காடேறித் திரிவானேன்
மேலுங்கோடேறித்திரிவதற்க்கு
விட்டாரோ உந்தனைத்தான்
விட்டுவிட்டாரோ யென்ற போது

## தாடகைப் போர்

வேகங் கொண்டாளே தாடகையும்

கண்ணுரெண்டுஞ் சிவப்பேறி
காரிகையாளதி கோபங் கொண்டு
குன்றுமலைகளைத்தான் பிடுங்கி
கோபாலர் மேலே விட்டெறிந்தாள்
வில்லுனுடைய முனையாலே

மேகவண்ணருந்தட்டிவிட்டார்
ஆலமரங்களைத்தான் பிடுங்கி
அச்சுதர் மேலேவிட்டெறிந்தாள்
வள்ளலார் கையில் பிடித்தவில்லும்
வஞ்சகியின் யெதிரே நிற்க்க

உள்ள நாள் முளுதும் உண்டு
ஒளித்துப் பின்வாங்கலாகாது
துள்ளத்தோளடிகள் தன்னை
துணிக்க ஓரம்பினாலே
கொல்லவோவிடவோ வென்று

கோபால ராமருங் கூறினாரே
கோதண்ட வில்லதை ஞாணும் பூட்டி
கோபல ராமரும் யெய்துவிட்டார்

## தாடகைஅழிவும், வரம்பெறலும்

ராமபாசக்கணையானதையும்
நண்ணுதல் தாடகைமேல் தொடுத்தார்

அம்புபட்டுதாடகையாள்
அலறிவிளுந்தாளேமலைமீதிலே
மலைமீதுல் மலைசாய்ந்ததுபோல்
வல்லரக்கியுந்தான் விழுந்தாள்
வானிலுயிர் பிரியுமுன்னே

---

**3750.** ஒட்டா — ஒட்ட விடாத

**3752.** கோடு — குன்று, மலை

**3772.** ஞாண் — கயிறு

மாயவரையடிதொழுதாள்
யென்பெருமாளே கோபால(ா)
ரெகுராமச்சந்திரரே
சிறியோர்கள் செய்தபிளே
பெரியோரே பொறுக்கவேணும்

பிளேகள்பொறுத்தால் பெரியோ(ர்)க்கு
பெருமையல்லவோ கோபாலா
உம்முடகையிளுலிறப்பதற்க்கு
உற்றபதவி தாருமையா
தாருமென்று தாடகையாள்

தாமோதரனேயடிதொழுதாள்
அருகிருந்த லெச்சும(ண)ரும்
அரிராமசுவாமிக்கேதுரைப்பார்
நம்மோடே யெதிர்த்ததென்ன
நம்மை வந்தடிதொளுததென்ன

என்றுகேள்க்கவே லெச்சுமணரும்
என்பெருமாழுமெடுத்துரைப்பார்
நம்மோட யெதித்தற்க்கு
நல்லபதவி கொடுக்கவேணும்
தாடகை யென்றபேர்மாற்றி

தாடகை வெள்ளியென்றுபேர் கொடுத்தார்
நச்சேத்திரப்பதவிதான் கொடுத்து
ராமசுவாமியுந் தம்பியரும்
மாமுனி விசுவாமித்திரரை
மாயாவுதரனுமடிதொழுதார்

சந்தோசமாகி களிகூர்ந்து
தவமுனி விசுவாமித்திரரும்
தாடகையைச் சங்கரித்தீரோ
தாமோதரரே பெருமாளே
என்னவெகுமதி செய்திடுவேன்

யேதுவெகுமதி செய்திடுவேன்
அட்டியல் நல்லசரப்பளியும்
ஆபரணமாலே கொடுத்திடவோ
கொத்துச்சரப்பளி ரெத்தி(ன)வடம்
கோதண்டமாலே கொடுத்திடவோ

முன்கை விரளாளி மோதிரமும்
மோகனமாலே கொடுத்திடவோ
அந்தவகைக ளானதெல்லாம்

---

**3784.** பிழை > பிளே (பே. வ. மா.)

**3812.** அட்டியல் — கழுத்தணி

**3812.** சரப்பளி — கழுத்தணி

ஆகாதெனவே களித்து

### விசுவாமித்திரர் இராமருக்கும் தம்பிக்கும் பாசுபதக்கணைபற்றிக் கூறல்

வளர்த்த அந்தவேள்விதன்னில்

வந்துபிறந்துதே பாசுபதம்
பாசுபதக்கணை பிறந்தபோது
பதிவுடன் விசுவாமித்திரரும்
யேதென்று கேட்டாரேகோபாலரும்
யிசல் முனியானவரெடுத்துரைப்பார்

கேள்க்கலையோ நந்தக்கோபாலா
கீற்த்தி பெற்றதோர் வாசகத்தை
தென்னிலங்கா புரியரசாண்ட
திருமுடிபத்துள்ள ராவணனும்
ராவணசூரனுட திருமகன்றுன்

நயமுடியிந்திர செயித்தவனும்
யீஸ்பரனுடையயிடமதிலே
யிலங்கையாண்டோன் மகன்யிந்திரசெயித்து
பதினுலு வருசமட்டும்
பாரவனவாச மானதிலே

உண்ணுமலுறங்காமல்
ஒருநினவாய் தானிருந்து
தவசதுதான் செய்யுகிறுன்
சண்டாளன் யிந்திரசெயித்து
வல்லரக்கன் மகனுடனே

வாய்த்த போரது செய்யும்போது
யிந்த பாசுபதக்கணையாலே
பட்டுவிளுவான் யிந்திரசெயித்து
என்றுரைக்க விசுவாமித்திரர்

### விசுவாமித்திரரும் இராமரும் தம்பியும் மித்திலாபுரிக்குவரல்

யென்பெருமாள் தம்பிலெச்சுமணர்

என்குருவே விசுவாமித்திரரே
யிசல்முனியே சொல்லக்கேளும்
உம்முடைய சொல்ப்படிக்கு
ஒன்றெடித்தாடகையைச் சங்கரித்தோம்

---

3821. பாசுபதம்—பாணம்
3831. இந்தரசித்து என்று கம்பராமாயணத்தில் இடம் பெற்றுள்ள பெயர் இந்நூலில் இந்திரசெயித்து என்று காணப்படுகிறது.
3837. நினேவு > நினவு (பே. வ. மா)
3849. ஒண்டொடி என்பது ஒன்றெடி என்று எழுதப்பட்டுள்ளது.

தாடகைப்பெண்ணுளைச் சங்கரித்து

தவமுனியே வேள்வி தான்வளர்த்தோம்
அய்யோத்தி பட்டணமானதிலே
அளகுமுனியே போய்ச் சேர்வோம்
மாயாவு தரனுஞ் சொன்னபோது
மாமுனியானவரேது சொல்வார்

வாருமையா அரிகோபாலா
மாயாவுதாரனே சொல்லக்கேழும்
அய்யோத்திப்பட்டணமானதிலும்
அஞ்சு பங்கு மிதுலாபுரி
மிதுலாபுரிபட்டணம் போய்ப்பாற்த்து

விரைவாய் அய்யோத்திக்குச் செல்லவேணும்
மாமுனியானவர் சொன்னபோது
மாயாவு தரனுந்தம்பியரும்
மூபேருந்தான் கூடி
முத்தி பெறவே வளிநடந்தார்

*அகலியர் வரலாறு*

கானவனவாசமானதிலே
காயாம்பு வண்ணரும் வாறபோது
கல்லாய்கிடந்ததோர் அகலியரும்
கார்வ(ண்)ணர் பாதம் பட்டபோது
பெண்ணுகவே யெழுந்திருந்து

பெருமாளை வந்தடிதான் தொழுதாள்
அப்போது நந்தக்கோபாலர்
அம்முனியுடனேதுரைப்பான்
கல்லாய்க்கிடந்த தென்ன
பெண்ணுய் யெழுந்ததென்ன

கேள்க்கிருயோ நந்தக் கோபாலா
கீற்த்தி பெற்றதோர் வாசகத்தை
கல்லுப்பெண்ணுகிய காரணத்தை
காயாம்பு வண்ணரே கேழுமென்ருர்
முப்பத்துமுக்கோடிதேவர்கழும்

முனிவரிருஷிகிணநாதர்
அட்டவசுகள் கிணனுதர்
அமுறுதங்கடைய வேணுமென்ருர்
தெய்வேந்திரன் கௌதம மா(மு)னியும்
சிறந்(து)திருப்பாற்க்கடலதிலே

பருமலேயை மத்தாக்கி

---

3868. அகலியர் – அகலிகை கௌதமரின் மனைவி ஒரு பெண்

பாம்புதன்னைக்கயிருக்கி
பூமிதன்னைச் சாடியாக்கி
புகள் பெறவே யமுற்தங்கடைந்தார்
அமுற்தமது கடைந்திடவே

ஆதி சிவன் கிறுபையினல்
தெய்வேந்திரன் கடைந்த அமுற்தத்திலே
சிறந்தகேதகம் பிறந்திடுமாம்
கேதகம் வந்து பிறந்த போது
கிறுபையுடன் தெய்வேந்திரன்

வண்ணுனுக்கு உபகாரமாய்
வனவாசமானதில் விரட்டிவிட்டான்
கௌதம முனிகடைந்த அமுற்தத்திலே
கிளிபோல் அகலி பெண் பிறந்தாள்
ஒப்பினையும் உடலளகும்

ஒருபாகந் தலைமுடியும்
அஞ்சணகண் மையளகும்
ஆடுகொப்புங்குளல் காதும்
யேத்தாப்பும் நடையளகும்
யிருகால்கை வீச்சளகும்

பாற்த்தபேர்கள் மசங்கிவிள
பத்துவிரல் மோதிரமும்
ஆலிலை போலே வயிறும்
அமைந்த நெத்திப் புருவங்கழும்
சந்திர சூரியன் உதித்தாப்போல்

தான்பிறந்தாளே அகலிப் பெண்ணுள்
அவளுடைய அளகு கண்டு
அளகுமுடி தெய்வேந்திரனும்
தெய்வேந்திரன் யெனக்கென்ருன்
சிறந்த முனிவரினக்கே யென்ருர்

உனக்கினக்கென்றுசொல்லி
உற்றசண்டையும் போட்டுக்கொண்டார்
தெய்வார்கள் கூட்டசபைதனிலே
சிறப்பாயிருபேருந்தானே வந்தார்
அப்போதுஅந்தத் தேவர்கழும்

ஆதரவாகவேதான் மகிள்ந்து
தெய்வேந்திரன் பக்கந்தானுரைத்தால்
சிறந்த கௌதமர்தான் சபிப்பார்

---

3893. கேதகம்--கழுதை
3901. ஒருபாகம்—அளவைப் பெயர்

மாமுனிபக்கந்தானுரைத்தால்
வாய்த்த தெய்வேந்திரனிருக்க ஒட்டான்

யென்று சொல்லியந்த தெய்வார்கள்
யின்பமுடனவர்தான்கூடி
ஆளிச்சுனை யானதிலே
ஆயிரம் வருசம் முங்கியிருந்தால்
முங்கியிருந்து வந்தவற்க்கு

முறமையுடன் தாரேமென்றார்
என்றுரைக்கத்தெய்வார்கள்
யேத்த முடிதெய்வேந்திரன்
கச்சைகெட்டி நாமமிட்டு
காந்தமுடிதெய்வேந்திரன்

குதிபோட்டுத்தெய்வேந்திரன்
கூண்டசுனைக்குள்ளே முங்குவாராம்
அஞ்நூறு வருசம் முங்கியிருந்து
அளகுமுடிநல்லதெய்வேந்திரன்
மூச்சுப் பொறுக்க மாட்டாமல்

முகனைபெற்ற தெய்வேந்திரன்
தெய்வலோக மானதிலே
சிறந்தயேழு கன்னியரும்
யேலையென்றும் அரம்பை யென்றும்
யேத்த ஊர்வசியாளென்றும்

நாககன்னி முத்துக்கன்னி
நல்லயிந்திராணி யென்றும்
யிப்படியேழுகன்னிமாரிருக்க
யேற்ற அகலிகைப் பெண்ணாலே
அவகடங்கள் பண்ணுவாளும்

அளகுமுடி தெய்வேந்திரனும்
மூச்சுப் பொறுக்க மாட்டாமல்
முகனையுடள் வெளியில் வந்தான்
ஆயிரம் வருசமுங்கியிருந்து
ஆயிரத்தொன்றும் வருசத்திலே

ஆயிரத்தொன்றும் வருசத்திலே
அம்முனியானவர் வெளியில் வந்தார்
கெ[ா]ளதம முனியானவர்தான்
கன்னியகலிகையை மாலையிட்டார்
மாலையிட்டு மணமுகித்து

---

3929. முங்கி—மூழ்கி
3950. அவகடங்கள்—வஞ்சகங்கள்

வாள்ந்தங்கிருந்தாரே கவுதமரும்
யிருக்குமந்தவேளையிலே
யேதுசொல்வான் தெய்வேந்திரன்
அஞ்ஞூறு வருசம் நான்முங்கினேன்
ஆயிரம் வருசம் நீ முங்கினுய்

எந்தனக்குப் பாதியுண்டு
யேந்திளையைப் போகஒட்டேன்
யென்று சொல்லியந்த தெய்வேந்திரன்
யியல் முனியுடனேயுரைத்தான்
அளிவளக்குப்பண்ணுதே

அளகுமுடி தெய்வேந்திரா
என்று சொல்ல அந்தக் கவுதமரும்
யேதுசொல்வான் தெய்வேந்திரன்
எந்த வகையாலும் மாமுனியே
யேந்திளை ஆகலிகையை வலதளிப்பேன்

வலதளிப்பேனென்று சொல்லி
வாய்த்த தெய்வேந்திரன் போனுன்
தெய்வலோக மானதிலே
தேவராசன் தெய்வேந்திரன்
அந்த ஆசனமானதிலே

அளகுமுடிவேந்தர் தானிருந்தார்
யிருக்குமந்த வேளியிலே
யேத்த முடிதெய்வேந்திரன்
சொன்னவாதம் அளிப்பதற்கு
தூங்கா முடிவேந்தன் தெய்வேந்திரன்

தெய்வலோகம் விட்டு கீளிறங்கி
தெய்வேந்திரன் ஆனவன் தான்
உண்டுறங்குஞ் சாமத்திலே
ஒருவரையும் அறியாமல்
அகலியுட மண்டபத்தில்

ஆதரவாகவே வந்து நின்று
சேவலாக வடிவு கொண்டு
சிறகு தட்டிக் கூவுவானும்
கூகூ கூகூ வெனவே
கூவுவானுந் தேய்வேந்திரன்

சேவல்சத்தங்கேட்டபோது
சிறந்தகவுதமரேது சொல்வார்

---

**3970**. வழக்கு > வளக்கு (பே.வ.மா)
**3975**. வலது—வல்லமை; செயல்

என்னுடைய பெண்ணே அகலியரே
யேந்திழையே சொல்லக்கேழு
நேரம் விடிகூறாகிப் போச்சு

நேரிழையே அகலியரே
யீஸ்பரனார்க்குப் பூசைபண்ண
யேந்திழையே நான் போகவேணும்
பொக்கணமும் புலித்தோலும்
பூசைப் பெட்டியுந்தானெடுத்து

தெண்டு கமண்டலந்தானெடுத்து
திருநீற்றுக்கப்பரை தானெடுத்தார்
ஒட்டியாணமொடு முட்டுக்கச்சை
யோக வேட்டியுந்தானெடுத்தார்
யித்தனையுந்தானெடுத்து

யேது சொல்வார் அகலியற்க்கு
மன்னவன் கள்ளப் பாடமெல்லாம்
மங்கை நல்லாள்க்கு யெடுத்துரைப்பார்
வாரும் பெண்ணே அகலியரே
மங்கையரே சொல்லவுங்கேள்

ஆளிசிங்கம் வாழுமலை
அங்கே ராச்சதர் வாழுமலை
கரடிபுலியுள்ள மலை
கள்ளருடைய பயமுமில்லை
யிந்த அகலிகைப் பெண்ணவழும்

ரெத்தினமாலயை யெடுத்தணிந்தாள்
முத்துச்சரப்பளி ரெத்தின வடம்
மோகன மாலயை யெடுத்தணிந்தாள்
அட்டியலுஞ் சரப்பளியும்
ஆபரண மாலை யெடுத்தணிந்தாள்

அப்போது கவுதமனாரும்
அன்புடனவரேது சொல்வார்
பூசை பண்ணி வருமளவும்
பெண்கொடியே அகலியரே
வாசல் கதவைத்தான் பூட்டி

மங்கையரே நீயிருப்பாய்
என்றுசொல்லியந்த மாமுனியும்

---

4004. பொக்கணம்—சோளியப்பை

4006. கமண்டலம்—ஒருவகை நீர்ப் பாத்திரம்

4007. கப்பரை—வட்ட வடிவான சிறுபாத்திரம்

4008. கச்சை—ஆடை

யியல்முனியும் வருகையில்
திடுதிடென வளிநடந்து
சிவமுனியும் வருகையிலே

அந்தவனவாசமிட்டு
அளகு முனிவருகையிலே
சேவல் வடிவாயிருந்த
தேய்வேந்திரன் ஓடிவந்து
மாமுனிவர் வடிவுகொண்டு

வந்தானே தெய்வேந்திரன்
சண்ணைபோட்டு யிருமிக்கொண்டு
தானேவந்தான் தெய்வேந்திரன்
யென்னுடைய பெண்ணேஅகலிகயே
யேந்திளையே வாசல்திற

வசால்திறபெண்ணே வாசல்திற
மடக்கொடியே வாசல்திற
அப்போது அகலியரும்
ஆயிளையுமெழுந்திருந்து
நம்முடநாயகர் வந்தாரென்று

நாயகியாளும் யெழுந்திருந்து
வாசல்தன்னை திறந்தபோது
வந்தானே தெய்வேந்திரன்
காமவெறி தானெழும்பி
கருத்தளிந்து தெய்வேந்திரன்

ஆனையலறி விழுந்ததுபோல்
அடித்துப்புரண்டவள்மேல் விழுந்தான்
அப்போது அகலிப்பெண்ணாள்
ஆயிளையாளும் மனம்பதறி
என்னமோசம் வந்துபோச்சு

என்கணவன் மாமுனிக்கு
. . ம் மாடன் பிடித்தானே
தட்டியெழுப்பிச்சோமாமுனியை
கடுகவெறி தானெழும்பி
கண்ணைமருட்டிட்டோ மாமுனியே

என்றுசொல்லியந்த அகலிப்பெண்ணாள்
யேங்கிமெத்தப் பரதவித்தாள்
ஆவிக்கெட்டிச் சேற்த்துத்தானெடுத்து

---

4042. சண்ணை—ஓசை
4055. கருத்தளிந்து – நிலைதடுமாறி
4067. பரதவித்தாள்—வருந்தினாள்
4068. ஆவிக்கெட்டி—பற்றிப்பிடித்து

ஆயிளையாளைக் கொடுபோனான்
பள்ளியறை மேடையானதிலே

பைங்கொடியாளைக்கொடு போனான்
மதனும் ரதியும் போலே
மகிள்ந்து நன்றாய்ப்பாராட்டி
யிருபேரும் ஒருஉடலாய்
யிருந்தார்கள்யிருபேரும்

யிப்படியேயிவரிருக்க
யேத்த கவுதலைமாமுனிவர்
கெங்கைக் கரையிலே செ[ா]ல்லும் நேரம்
கெங்காதேவி முளிக்கவில்லை
நந்தவனத்திலே செ[ா]ல்லும் நேரம்

நறுமலர்கழும் விரியவில்லை
யிதுயென்ன மாயமென்று
யேத்தகவுதம மாமுனிவர்
ஞானக்கண் ஒளிவினாலே
. . . . யக்கண்ணுக்குத்தெரியக்கண்டார்

தெய்வேந்திரனுட உபாயமென்று
சிவமுனியானவர் தானறிந்தார்
பூசைபண்ணிலாவ தென்ன
பூப்பறித்தாலா வதென்ன
கண்ணு ரெண்டுந்தீப்பொறியாய்

கடுங்கோபமானார் மாமுனிவர்
பூசைப்பெட்டியை உடைத்தெறிந்தார்
பூணூலை அறுத்தெறிந்தார்
திருப்பிரம்பானதை முறித்தெறிந்தார்
தெண்டு கமண்டலம் யெடுத்தெறிந்தார்

உத்திராச்சியமாலையை அறுத்தெறிந்தார்
யோகவேட்டியைக் கிளித்தெறிந்தார்
திருமுடியானதையவுத் தெறிந்தார்
திருநீற்றுக்கப்பறை உடைத்தெறிந்தார்
யீஸ்பரனுடைய கோவிலிலே

யேற்றபூசையது பண்ணாமல்
அந்தவனவாசச் சோலைவிட்டு
அடுத்த வனக்காடும்விட்டு
திடுதிடென வளிநடந்து

---

4069. கொடு—கொண்டு

4078. சொல்லும்—செல்லும்

4098. அவிழ்த்து > அவுத்து (பே. வ. மா)

சிவமுனியானவர் வந்துவிட்டார்

என்னுடைய பெண்ணேஅகலிகையே
யேந்திழையே வாசல்திற
வாசல்திறபெண்ணே வாசல்திற
மங்கையரே பெண்ணேவாசல்திற
மாமுனி சத்தங்கேட்டபோது

மங்கைநல்லாளந்த அகலிகையும்
அம்புபட்ட மான்போலே
அங்கமெல்லாம் வேறுபட்டு
உண்டைபட்ட மான்போலே
உள்ளுடைந்து தள்ளாடி

என்னசெய்யப் போறேனென்று
யேங்கியழுதவள் தான்திறக்க
வாசல்கதவைத் திறந்தபோது
வாசல் நடையிலே யிருந்துகொண்டார்
வாசல் நடையிலேயிருந்து கெரண்டு

மங்கை நல்லாழுடனேது சொல்வார்
பூசைபண்ணப் போனதின்பின்
பெண்கொடியே யிங்கேயாராகிலும்
வந்ததுண்டோ சொல்லுவென்று
மாமுனியானவர்தான் கேட்டார்

உம்மாணை மாமுனியே
ஒருவரும்யிங்கே வரவேயில்லை
என்னயென்ன சொன்னாலும்
என்மனசுதேறுதில்லை
பெண்ணென்று பிறந்தவரை

பின்னுமுன்னும் நம்பொண்ணுது
மண்டபமானதிலே
மணிவிளக்கை யேத்து மென்றார்
மன்னவனுடைய — — — — — — — —
மணிவிளக்கை யேற்றுவாளாம்

அங்கம் பதறியேதெய்வேந்திரன்
ஆடெடுத்த கள்ளனைப்போல்
மாமுனிக்கு நானென்ன சொல்வேன்
மனம் பதறியே தெய்வேந்திரன்
பூனையாவான் யெலியாவான்

பூச்சியாவான் தெய்வேந்திரன்

---

4126. ஆணை—சத்தியம், ஆணையிடு என்றால் 'சத்தியம்செய்' எனக் குமரி மாவட்ட வழக்கில் பொருள்படும்.

4137. ஆடெடுத்த – ஆடுதிருடிய

ஆனையைப் போலிருந்தவனதான்
பூனையைப் போல்வடிவெடுத்தான்
பூனையைப்போல் வடிவுகொண்டு
புகள்பெறவே தானிருந்தான்

வாசல் நடையிலே தானிருந்த
மாமுனி யெட்டிப்பிடித்துக் கொண்டார்
கைப்பிடியாகத்தான் பிடித்து
கடுக அடித்தாரேமாமுனியும்
அடிபொறுக்க மாட்டாமல்

அபயமபய முறையோமென்றார்
யேன்காணு மாமுனியே
யென்னை யடித்தாயே மாமுனியே
ஆயிரம் வருசம் நீ முங்கியிருந்தாய்
அஞ்நூறு வருசம் நானிருந்தேன்

எந்தனக்குப் பாதியுண்டு
யேத்த அகலி
ஆனமட்டும் நீ பாரினவே
அளகு தெய்வேந்திரன் சொன்னபோது
ஒருயோனிக்கு ஆசைப்பட்டாய்

உற்றபுகள் நல்ல தெய்வேந்திரா
உந்தனுடைய தேகமெல்லாம்
உற்றயோனியாய்ப் போவாயென்றார்
ஆயிரம் யோனியாய்ப் போவாயென்று
அருள் முனிவர் சாபமிட்டார்

மாமுனிவர் சாபமிட்ட போது
வாய்த்த தெய் வேந்திரனும்
பார்த்த பார்த்த யிடங்களெல்லாம்
பதிந்த யோனியாயிருக்கக் கண்டார்
நாற்றம் பொறுக்கவும் மாட்டாமல்

நளின முடி தெய்வேந்திரன்
யிந்தச் சாபமானதுதான்
என்னாலே பொறுக்கரிது
அடியேன் பேரில் குற்றமையா
அளகுமுனியே பொறுக்கவேணும்

சிறியோர் செய்தபிழை
பெரியோர்கள் பொறுக்கவேணும்
என்றுசொல்லி தெய்வேந்திரன்
யியல்முனியை அடிதொழுதான்
மனமிரங்கி மாமுனிவர்

---

4151. அபயம்—அடைக்கலம்
4160. யோனி—பெண்குறி

மறுத்து ஒரு சாபமிட்டார்
உந்தனக்கு யிட்டசாபம்
ஒருக்காலுமே தீராது
பாற்த்தபேருக்கு ஆயிரங்கண்ணும்
உந்தனுக்கு ஆயிரம்யோனியென்றார்

ஆயிரங்கண்ணுடையானென்று
அந்தரத்தேயாண்டிருந்தான்
வாரும்பிள்ளா தெய்வேந்திரா
வாற்த்தையொன்று சொல்லக்கேழு
அய்யோத்தி நாட்டில் ராமர் பிறந்து

அரக்கிதாடகையைச் சங்கரித்து
மிதுலாபுரியானதிலே
வீரலெச்சுமியை மணமுகித்து
ராவண சங்காரம் போர்முடிக்க
ராமாவுதாரனுந்தான் வருவார்

வருகிறதோர் நாளையிலே
வாய்த்தமுடி தெய்வேந்திரா
ஆயிரமணி முடித்தோளதயும்
அரிராமசாமிக்குக் கொண்டு செல்வாய்
என்றுசொல்லிக் கௌதமரும்

யின்பமுடன் சாபமிட்டார்
தெய்வலோக மானதிலே
தேவர்க்கிறையவன் தெய்வேந்திரன்
அகலிகைப் பெண்ணுளைதானளைத்து
அம்முனியானவரேது சொல்வார்

வாரும் பெண்ணே அகலிகையே
மங்கயரே சொல்லக்கேழு
கற்பளிந்து போனுயகலிகையே
என் கண்ணில் முளிக்கவுங் கூடாது
அறமளிந்து போனுய் அகலிகையே

அம்முனியிடத்திலுமாகாது
கல்லாகப் போவாயென்று சொல்லி
கடுக முனிவருஞ் சாபமிட்டார்
மாமுனிவர் சாபமிட்டபோது
மங்கைநல்லாழு மடிதொழுது

யிந்தச் சாபமானதுதான்
எனக்கெப்போது தீருமென்றாள்
அய்யோத்தி நாடதிலே
அளகன் தசதரராசவும்
புத்திரர்களில் கீற்த்தி பெற்றேன்

---

**4183.** ஒருக்காலும்—ஒரு பொழுதும்

பிரபல்லியமா யாரிகோபாலர்
மாமுனி விசுவாமித்திரரும்
மன்னன் யிளைய பெருமாழும்
மூபேரும் முன்னுந் பின்னும்
முத்தி பெறவே வளிநடந்து

தாடகைப் பெண்ணாளைச் சங்கரித்து
தவமுனி வேள்வி தான்வளர்த்து
மிதுலை நகர் வளம் பார்ப்பதற்கு
மேகநிற வண்ணன் வாறபோது
மாயவர் பாதம் பட்டபோது

மங்கையரே மோச்சம் உண்டுனக்கு
என்று சொல்லி கவுதம மாமுனியும்
யின்பமுடனவர் தானுரைத்தார்
அன்று மாமுனியிட்டசாபம்
அச்சுத ராமரே தீர்ப்பாரென்றார்

கல்லுப்பெண்ணான காரணத்தை
கடுகச் சொன்னாரே மாமுனியும்
மாமுனியானவர் சொன்னபோது
மாயாவுதாரன் மனமகிள்ந்து
கௌதம முனிவரை வரவளைத்து

கன்னி அகலிகையைச் சேற்த்துவைத்து
அந்தவனக் காவு விட்டு
அடுத்தவனச் சோலைவிட்டார்

## காத்த வீரியன் அருச்சுனன் வரலாறு

நாடும்பலபல தேசம்விட்டு
ராமசந்திரமூற்த்தி வருகையிலே

கெந்துருவராசன்மக்கள் நூறுபெண்கள்
கிளிமொளிமார்களன்னேரம்
கெங்கை கரையிலே தானிறங்கி
கிறும்வையுடனவர் நீராட
காத்த வீரியனென்ற அருச்சுனனும்

கெங்கைக் கரையிலே தானும் வந்தான்
வாரும் பெண்ணே மடக்கொடியே
மங்கையரே சொல்லக் கேழு
எந்தனுடன் கலவி செய்ய
யேந்திளை மாதர்களே வருவீர்

---

4221. பிரபல்லியம்—பிரசித்தி; பெருமை

4225 முக்தி > முத்தி (பே.வ.மா)

4254. கலவி – உடலுறவு

அப்போது பெண்கொடிமார்
அன்பினுடனேது சொல்வார்
மாதா பிதாதானறிந்து
மணஞ்செய்து உமக்குத்தந்தால்
போதரவாக நாங்கழுந்தான்

புகழுடனே உமைச்சேர்வோம்
அல்லவென்ருல் உமைச்சேர்வதில்லை
ஆயிளைமார்களுந்தானுரைத்தார்
கடுக வெறிதானெழும்பி
காத்த வீரியனென்ற அருச்சுனனும்

கண்ணுரெண்டுஞ்சிவப்பேறி
காரிகை மார்களைச் சாபமிட்டான்
எந்தனக்கு ஆகாதபேர்
யிப்புவி ராசனுக்கு ஆக மாட்டீர்
கூன்குருடு நொண்டி சப்பாணி

குறையாகவே போவீரென்ருர்
யென்று சொல்லி காத்தவீரியன்
யேந்திளை மாரைச்சாபமிட்டான்
யிந்தச் சாபமானது தான்
எங்கழுக் கெப்போ தீருமென்ருர்

மனதிரங்கி காத்தவீரியன்
மறுத்து ஒரு சாபமிட்டார்
அய்யோத்தி ராமர்தான் பிறந்து
அளகுதிசதர ராசனுக்கு
புத்திரவாஞ்சை தான் தீர்ந்து

பெண்கொடி தாடகையைச் சங்கரித்து
அகலிகை சாபந்தான்தீர்ந்து
அரிராமசுவாமியுந்தம்பியுமாய்
மாமுனி விசுவாமித்திரரும்
வாய்த்த அரிராம சுவாமியும் வாறபோது

ராமசாமியைக் கண்டவுடன்
நாரியரேசாபந்தீருமென்ருர்
அப்படியே பெண் கொடிமார்
அரிராமரையடிதொளவே
அன்று தவிர்த்தசாபமது

அச்சுதராமரே தீர்த்தோமென்ருர்

### இராமர், தம்பி, விசுவாமித்திரர் களைப்பாறுதல்

அந்தஅதிசயம் பார்த்துகொண்டு

---

4260. போதரவு—பெருமை
4287. நாரியர்—பெண்கள்

அச்சுதராமருந் தம்பியரும்
மாமுனிவிசுவாமித்திரரும்
வளம்பெறவே வளிநடந்தார்

மிதுலாபுரிக் கோர்பிறமாய்
விரையத்திருவால மரத்தைக்கண்டார்
என்னுடைய தம்பி லெச்சுமணு
என்குருவே விசுவாமித்திரரே
அய்யோத்திதிசதரர் சொல்ப்படியே

அரக்கிதாடகையைச் சங்கரித்தோம்
அகலியர்சாபந்தனேத்தீர்த்தோம்
ஆயிளேமார் சாபந்தனேத்தீற்த்தோம்
யிந்ததிருவால மரமதிலே
யிருந்து தகையாறிப் போவோமென்ருர்

மாயன்ரெகுராமர் சொன்னபோது
மாமுனிவிசுவாமித்திரரும்
அந்தவரிவால மரமதிலே
அம்முனியானவ ரினிதிருந்தார்
தம்பியுடைய மடிதனிலே

தாமோதரனும் பள்ளிகொண்டார்

## *மிதிலேநகரில் இராமரைக் கண்ட பெண்கள் மோகம் கொளல்*

யிப்படியாகவே யிவரிருக்க
யேற்ற மிதுலாபுரிதனிலே
தெய்வமிதுலயை அரசாண்ட
தீரன்தினகர ராசாவும்

மலடிருந்து பெற்றமகள்
மாதுசூடாமணி லெச்சுமியாள்
பூலோக நாயகியாள்
பெட்டகத்தோடே பிறந்தமகள்
அவள்பிறந்த நாள்முதலாய்

அறுபதுபேர் தோளியர்கள்
தோளிமாரும் பாங்சியரும்
துடியிடை மார்கழுந் தான்கூடி
பந்தடிக்க வேணுமென்று
பாவையர்கள் தான்கூடி

பந்தடிக்கும் மேடையிலே
பாவையவர்க ளெல்லோரும்
யிருகையிலும் ஆள்பகுந்து
யேந்திளே சீதாலட்சுமியாள்
தலேபகுந்து தனேப்பாற்த்து

தானடித்தாள் லெட்சுமியாள்
சீதாலெட்சுமியடிக்கும்பந்து
சிறிராமர்தானறிந்து
திருவாலமரத்தின் கீள்தானிருந்த
திருமாலைப்பெருமாழும் யெழுந்திருந்தார்

மிதுலாபுரிவனம் பாற்த்துக் கொண்டு
விரைய அய்யோத்திக்குப் போகவேணும்
என்று சொல்லியந்தக் கோபாலர்
என்பெருமாள்தம்பிலெட்சுமணரும்
மாமுனி விசுவாமித்திரரும்

வளம் பெறவே வளி நடந்தார்
மிதுலா புரியானதிலே
மேலத்தெருவிலே ராமரவர்
எங்கிருந்துயிங்கே வந்தாரோ
யிப்படிஒருவரைக் கண்டதில்லை

காமனோ யிவர்வேலவனோ
காயாம்பு மேனியனோ
சீவகனோ நான்முகனோ
தெய்வேந்திரன் யிவர்தானோ
சந்திரனோ சூரியனோ

தாமோதரனோ பெருமாளோ
யிந்திரனோ யிறையவனோ
என் பெருமாள் கோபாலரோ
கையில் வரிவில்லைக் கண்டபெண்கள்
கடுகவெறியது கொண்டிடுவார்

திருநாமக்குறியைக் கண்டபெண்கள்
தியங்கிடுவார் மசங்கிடுவார்
முன்கையைக் கண்டபெண்கள்
மூற்ச்சையற்று தான்கிடப்பார்
பின்னளகைக்கண்டவர்கள்

பிறகாலே தான்துடர்வார்
அப்படியாகவே பெண்களெல்லாம்
அரிராமசுவாமியைப் பார்த்திருக்க
திரும்பிமுகம் பாராமலே
செண்கண் நெடுமாலுந் தம்பியரும்

அந்தத் தெருவீதி தான் பாற்த்து
அடுத்ததெருவிலே ராமர்வர
எட்டியெட்டிப் பார்ப்பாரும்

---

4348. சீவகன்—சீவக சிந்தாமணி என்னும் காப்பியத்தின் கதைத் தலைவன்

யேணிவைத்துப் பார்ப்பாரும்
அன்று வைத்த மண்சுவரை

அளித்தேறிப்பார்ப்பாரும்
திரும்பிமுகம் பாராமல்
செண்கண் நெடுமாலுந்தம்பியரும்

### சீதைபந்தாடல்

மாமுனி விசுவாமித்திரரும்
வடக்குத் தெருவீதிதன்னில் வந்தார்

பெட்டகத்தோடே பிறந்தமகள்
பூலோக நாசகி சானகியும்
வில்லோடே பிறந்தவள்தான்
வீரமகாலெட்சுமியாள்
அவள்பிறந்த நாள்முதலாய்

அறுபதுபேர் தோளியரும்
பந்தடிமேடையானதிலே
பைந்தொடிமார்கழும் பந்தடித்தார்
சீதாலட்சுமியடித்த பந்து
ஆகாசமுட்டியே கீள விழுமாம்

லெட்சுமி தேவியடிக்கும்பந்து
ஆரும் ஒருவர் பிடித்தறியார்
யிப்படியாகவே பந்தடித்து
யேந்திளை லெட்சுமி நிற்க்கையிலே
பச்சநிறம் போன்றவர்தான்

பள்ளிகொண்ட பெருமாளும்

### சீதை இராமர் மீது மோகங்கொளல்

லெட்சுமியாள் அடித்தபந்தை
ராமசுவாமியும் பிடித்துக்கொண்டார்
ராமசுவாமி தான்பிடித்தபந்தை
லெட்சுமி பேரிலே யெடுத்தெறிந்தார்

பந்துபிடிபட்ட வேளையிலே
பைந்தொடி சீதாலெட்சுமியாள்
நானடித்த பந்தைப்பிடித்தவர்தான்
எனக்கருமை கணவனுகுமென்றாள்
அருமைக் கணவனுகுமென்று

அன்னலெட்சுமி மசங்கிவிட்டாள்
அன்னந்தண்ணீர் குடியாமல்
அமுதேத்துங் கொள்ளாமல்

---

4377. நாயகி>நாசகி (பே.வ.மா)
4403. அமுதேத்து—உண்டல்

பந்துசனங்கள் அறியாமல்
பாக்கிலையும் அருந்தாமல்

வருந்தி மெத்தப்புலம்பிக்கொண்டு
மாதுமனோன்மணி யினிதிருந்தாள்

## தோழியர் சீதையின் நிலையை தினகரராசனுக்கு எடுத்துரைத்தல்

சீதையம்மாள் மசக்கங்கண்டு
சேயிழைமார் தோளிப் பெண்கள்
அரசாளும் மன்னவற்க்கு

அறிக்கையிட்டார் பெண்கொடிமார்
என்மகளே பொன்மகளே
யேந்திழையே சீதாலெட்சுமியே
அமுற்த கல்யாணி நீ பூலோகி
ஆயிழையே சீதாலெட்சுமியே

லெச்சுமிப் பெண்ணாள் தன் அருகிருந்து
நண்ணுதல்மார்கழுந்தான் புலம்ப
சேற்ந்துயிருந்ததோர் தோளியர்கள்
தினகர ராசனுக்குச் செய்தி சொல்வார்
மன்னவர்க்குத்துரை மன்னவனே

மகுட முடிதரித்த மன்னா
தென்னவர்க்குத் தென்னவனே
தினகரராசனே சொல்லக்கேழும்
உந்தன்மகள் சீதாலெட்சுமியும்
உற்றதோளியருந்தான் கூடி

பந்தடிக்கும் மேடையிலே
பந்தடிக்கிற வேளையிலே
சீதாதேவியடித்த பந்தை
தேசத்தில் ஒருவரும் பிடித்தறியார்
யிப்படியாகவே பந்தடித்து

யேந்திழை சீதையும் நிற்க்கயிலே
எங்கிருந்தோ ரெண்டு ராசாக்கள்
யியல்பெரிய முனியொருவர்
பச்சை நிறங்கொண்டவர்தான்
பள்ளிகொண்ட பெருமாளோ

---

4404. பந்து சனங்கள்—சுற்றத்தார்

4405 பாக்கிலை - வெற்றிலை பாக்கு

4417. நன்னுதல் என்பது நண்ணுதல் என்று எழுதப்பட்டுள்ளது.

லெச்சுமியாள் அடித்த பந்தை
ராசாவும் பிடித்துக்கொண்டார்
பந்துபிடிபட்ட செய்தியதை
பைந்தொடிமாதரெடுத்து ரைப்பார்
யென்று சொல்லயந்த தோளிப் பெண்கள்

யேற்ற தினகரராசாவும்
யென்மகளே நல்லபொன்மகளே
யேந்திழையே சீதாலெட்சுமியே
யென்ன ஆபத்து வந்துபோச்சு
யென்மகள் சீதாலெட்சுமிக்கு

மலடாயிருந்து மனமுருகி
மங்கையரே உனைக்கண்டெடுத்தேன்
அம்புபட்ட மான்போலே
அங்கமெல்லாம் வேறுபட்டு
உண்டை பட்டமான்போல்

உள்ளுடைந்து தள்ளாடி
வாடி மனங்கோடியல்லோ
மனங்கலங்கியிருக்கையிலே
பந்தாடுமேடையிலே
பந்தடித்துவிளையாடையிலே

எங்கிருந்தோ ரெண்டு ராசாக்கள்
யியல்பெரிய முனியொருவர்
லெச்சிமியாளடித்த பந்தை
ராசாக்கள் பிடித்துக்கொண்டார்
அடித்தபந்தை தான்பிடித்து

ஆயிழைபேரில்தானெறிந்தார்
நானடித்த பந்தைப் பிடித்தவர்தான்
எனக்கு நாயகராகுமென்றார்
என்றுரைக்கத் தோளிப்பெண்கள்
யேதுசொல்வார் தினகரரும்

அன்னந்தண்ணீர் குடியாமல்
அமுதேத்துங் கொள்ளாமல்
பண்ணுந்தமிள் ஓதாமல்
பாக்கிலையுமருந்தாமல்
திருந்தமலர் சூடாமல்

திருநீறும் பூசாமல்
வருந்திமெத்தப்புலம்பிக் கொண்டு
மங்கை நல்லாள் மசங்கி விட்டாள்
என்று சொல்லத்தோளியர்கள்
யின்பமுடன் தினகரரும்

---

4452. கோடி—வருந்தி
4466. அன்னம்—சோறு

சந்தோசமாய்க் களிகூர்ந்து
தானேதிகனர ராசாவும்
லெட்சுமியாளோடே பிறந்த
நல்லவரி வில்லானதையும்
அறுபதினுயிரங்கிங்கிலியர்

அசைக்கமுடியாத தெய்வவில்லே
தெய்வவரிவில்லே வளைத்தவற்க்கு
சீதையரை மணஞ்சூட்டிவைப்பேன்
சீதையரை மணஞ்சூட்டி வைத்து
தெய்வமிதுலயை ஆளவைப்பேன்

என்றுசொல்லி தினகரராசவும்
யின்பமுடன் தானுரைத்தார்
லெட்சுமிதேவியைக் கூட்டிக்கொண்டு
நல்லதினகரராசவும்
சிங்காசனமேடை தானேக்கி

தினகரராசாவும் லெட்சுமியும்
பந்தாடும் மேடைதான் கடந்து
பழுங்கி மண்டபந்தான் கடந்தார்
அம்பலமுஞ் சாவடியும்
அளகுமணிமேடைவிட்டு

உப்பரிகை மேடைவிட்டு
உசந்த கூடாரமேடைவிட்டர்
நாற்க்காலிக்கூடுதான் கடந்து
நடைசாலேசத்திரந்தான்கடந்தார்
முன்மணிமண்டபம் பின்மண்டபம்

முத்துமண்டபந்தான் கடந்து
கொலுவிருக்குஞ் சிங்காசன மேடையிலே
கொத்த வேந்தன் தினகரனும்
மந்திரி மார்களை வரவழைத்து
மகுடமுடிமன்னரெடுத்துரைப்பார்

## தினகர ராசா சீதையின் திருமணம் பற்றி அறிவித்தல்

லெட்சுமியாளோடு பிறந்த வில்லு
நல்ல கோதண்ட வில்லுதன்னை

---

4480. கிங்கிலியர் – ஏவலாட்கள்
4493. பழுங்கி — பளிங்குக்கல்
4494. அம்பலம் – சபைகூடுமிடும்
4494. சாவடி — அறச்சாலே
4496. உப்பரிகை — மேல்வீடு
4497. உயர்ந்த > உசந்த (பே. வ. மா)

அறுபதிணாயிரங்கிங்கிலியர்
அசைக்கவொண்ணாத தெய்வவில்லை
ஒருவனாக வில்லை யெடுக்கவேணும்

ஒருவனாக வில்லை வளைக்கவேணும்
வில்லை வளைத்திடும் பேர்கழுக்கு
வீரலெட்சுமியை மாலையிட்டு
மாலையிட்டு மணமுகித்து
வாய்த்த மிதுலாபுரியாளவைப்பேன்

என்று செல்லி தினகரரும்
யேத்தமந்திரி மார்க்கறிவித்தாராம்
அப்போது அந்தமந்திரிமார்
அன்பத்தாறு தேசத்துக்கறிக்கை செய்தார்
அன்பத்தாறுதேசத்து ராசாக்களை

அளகுமிதுலைக்கு வரவழைத்தார்
கோதண்டவில்லை வளைக்கவேணும்
கோதையரை மணஞ்சூட்டவேணும்
என்று சொல்லியந்த தினகரரும்
எல்லோர்க்குங் கட்டுரைத்தார்

எல்லோருங் கூடியிருக்கையிலே

## தம்பி இராமரிடம் வில்லை எடுத்துக் கொடுத்தல்

யிளையபெருமாளும் யேதுசொல்வார்
எந்தயெந்த வகையாலே
யேந்திழையை மணஞ்சூட்டிவைப்பேன்
அறுபதிணாயிரங் கிங்கிலியர்

அசைக்கவொண்ணாத தெய்வவில்லை
ஒருவனாக வில்லை வளைப்பதெங்கே
உத்தமியை மணமுடிப்பதெங்கே
தெய்வரிவில்லை வளைப்பதெங்கே
சீதையரை மணமுடிப்பதெங்கே

என்றுசொல்லி தேசராசாக்கள்
எண்ணாமல்யெண்ணிநிற்க
எங்கேயிருக்கிது தெய்வவில்லு
என்றுகேட்டாரே லெட்சுமணரும்
யிந்தாயிருக்குது தெய்வவில்லு

லெட்சுமியோடே பிறந்தவில்லு
என்றுசொன்னார் தினகரரும்
யேறிட்டுப்பாற்த்தாரிளைய பெருமாளும்
அறுபதிணாயிரங்கிங்கிலியர்
அசைக்க ஒண்ணாத தெய்வவில்லை

---

4519. அறிக்கை — அறிவிப்பு

மாயவர்தம்பியிளைய பெருமாழும்
வண்ணவில்லதை கயிலெடுத்து
அன்னேர(ம்)யிளைய பெருமாழும்
அரிராமசுவாமி கயில் கொடுத்தார்

### இராமர் வில் வளைத்தல்

வாங்கியே நந்தக் கோபாலர்

வைகுண்டராமருந்தான் வளைத்தார்
வில்லை வளைத்தவர்ஞானேத்தி
மெல்லியரோடே பிறந்த வில்லை
ராமருடை பாதம்பட்டபோது
லெட்சுமியோடே பிறந்தவில்லு

மடமடென்றும் திடுதிடென்றும்
வளையுதல்லோ தெய்வவில்லு
தெய்வவரி வில்லைத்தானெடுத்து
செண்கண்நெடுமாலும் முறித்துவிட்டார்
வற்ணராசனை வரவளைத்து

வகுத்துக் கொடுத்தாரே பாதிவில்லை
பச்சைமுகில் வண்ணர்கீற்த்திதன்னை
பாடிபடிப்பதற்குப் பாதிவில்லு
யிப்படியாகவேதான் கொடுத்தார்
யென் பெருமாள் நந்தக்கோபாலர்

தெய்வவரிவில்லை முறித்தபோது
தினகரராசன் மனமகிள்ந்து
சந்தோசமாகி களிகூர்ந்து
தன்மகளை மணஞ்சூட்டு மென்றார்

### இராமர் பெற்றோர்களைத் தன் திருமணத்திற்கு வரவழைக்க வேண்டல்

என்றுரைத்த மன்னன் தினகரர்க்கு
யேதுசொல்வார் நந்தக்கோபாலர்
என்அய்யாதிசதரர் வரவேணும்
என்தாயார் மூபேரும் வரவேணும்
தம்பி யிருபேரும் வரவேணும்
கார்குளலைமணஞ்சூட்டுதற்க்கு

---

4549. கையில் > கயில் (பே. வ. மா)
4563. இவ்வரியில் வில்லுப்பாட்டுப் பற்றிய குறிப்புஉள்ளது. வில்லுப்பாட்டு ஒரு நாட்டுப்புறக்கலை. இக்கலை திரு நெல்வேலி, குமரிமாவட்டத்தில் இன்றும் பேணப் பட்டுவருகிறது. வில்லுப்பாட்டுக்கலையில் வில் ஓர் இன்றியமையாத கருவி. இராமர் கதை வில்லுப்பாட் டாக பாடப்படும் என்பதனை இவ்வரி சுட்டுகிறது.
4572. அய்யா — தந்தை

மாதாபிதாக்களை யறியாமல்
மங்கையரை மணமுடிப்பதில்லை
என்றுரைக்க நந்தக்கோபலர்

### விசுவாமித்திரர் திசதரனுக்கு நீட்டு அனுப்பல்

யேத்த விசுவாமித்திரரும்
ஐயோத்தியாபுரி யானதிலே

அளகன் திசதர ராசனுக்கு
தாடகைப்பெண்ணாளைச்சங்கரித்து
தவமுனிவேள்விதாமுடித்து
அகலிகை சாபந்தான்தீற்ந்து
அளகுமிதுலாபுரிதனிலே

மிதுலாபுரிநகரானதிலே
வேந்தன் தினகரன் பெற்றமகள்
மலடிருந்து பெற்றமகள்
மாமயில் சீதாலெட்சுமியாள்
பெட்டகத்தோடே பிறந்தமகள்

பூலோக நாசகியாள்
அவளோடே பிறந்த வில்லை
அசைக்கஒண்ணாக் கோதண்டவில்லை
கோதாண்டவில்லைத் தான்வளைத்து
கோதையரை மணஞ்சூடுதற்கு

அய்ய திசதரர்வரவேணும்
அன்னை மூபேரும் வரவேணும்
மாமுனிவர் சொல்ப்படியே
மடக்கொடியை மாலைசூட்டுதற்கு
தம்பிமார்கள் வரவேணும்

தன்னுடசேனைத்தளங்கள் வரவேணும்
என்று சொல்லி திருநீட்டெழுதி
யேற்றதோர் ஒட்டன்கைகொடுத்தார்
திருநீட்டைத்தான்வாங்கி
சிறந்த ஒட்டன் வளிநடந்தான்

மிதுலா புரிதனைக்கடந்து
விரைவுடன் ஒட்டன் வளிநடந்தான்
நாடுபலபல தேசமிட்டு
நல்லஅய்யோத்தியாபுரியில் வந்தார்
அய்யோத்தியாபுரியானதிலே

### திசதரன் நீட்டினைப்பெறல்

அளகுதிசதரராசாவும்
சிம்மாசனத்திலிருக்கையிலே

---

4602 திருநீட்டு—திருமுக ஓலை (கடிதம்)

திருநீட்டு வாசகந்தன்னை வைத்தான்
திருநீட்டானதைக் கண்டபோது
சிறந்ததிசதர ராசாவும்

என்ன அபகேடுவந்து போச்சோ
என்னுடைய மக்களிரு பேர்க்கும்
மாமுனிவனுட பேச்சைக்கேட்டு
மதலைகளை நானும் போர்க்கு விட்டேன்
குலைவாளரக்கி தாடகையாள்

கொன்று போட்டாளோ பாலகரை
வல்லரக்கியந்த தாடகையாள்
மாயாவுதாரனைக் கொன்ருளோ
அறுபதினுயிரம் வருசமட்டும்
அய்யோத்திதன்னிலே மலடிருந்து

மலடிருந்து மனமுருகி
மாயாவுதாரனைப் பெற்றெடுத்தேன்
என்ன அபகேடு வந்து போச்சோ
என்மகன் நந்தக்கோபாலர்க்கு
என்று சொல்லி மன்னன் திசதரரும்

யேங்கி மறுகியே தானழுதார்
அளுத கண்ணீர் ஒளுகுதையா
அளகுதிசதர ராசாவுக்கு
மந்திரிமார் பிறதானிமாரும்
மார்போடே மன்னன்திசதரரை

தேறுதல்சொல்லியே மன்னவனை
சிறப்பாகவே நிறுத்திவைத்து
ஒட்டன் கொடுவந்த நீட்டுதன்னை
உடனேயவர் வாசிப்பாராம்
அய்யோத்தியாபுரியரசாழுந்

அய்யா திசதரராசாவுக்கு
என்னுடையஅய்யா திசதரரே
யிப்போ ஒருவார்த்தை சொல்லக்கேழும்
உம்முடைய வாக்குச்சொல்ப்படியே
ஒன்ருெடிஅரக்கியைச் சங்கரித்தேன்

தாடகைப்பெண்ணுளைச் சங்கரித்து
தவமுனி வேள்விதனைத் வளர்த்தோம்
அகலிகை சாபந்தனைத்தீற்த்து
அளகுமிதுலா புரிதனிலே
மிதுலாபுரியானதிலே

---

4616 அபகேடு – துன்பம்

4640-4657. இவ்வரிகளில் கடிதத்தில் எழுதப்பட்ட செய்தி அமைந்துள்ளது

வீரலெட்மியாளோடு பிறந்தவில்லு
அறுபதினாயிரங் கிங்கிலியர்
அசைக்க ஒண்ணாத தெய்வவில்லை
சிவமுனியானவர் சொல்ப்படியே
தேய்வவரிவில்லைத்தான் வளைத்தேன்

சீதையரை மணஞ்சூட்டுதற்கு
சிறந்தமிதுலைக்கு வரவேணும்
என்று சொல்லி திருநீட்டுதன்னை
யின்பமுடனவர் வாசிப்பாராம்
திருநீட்டுவாசகங்கேட்டபோது

சிறந்த திசதரராசாவும்
யேங்கியழுத திசதரரும்
யேந்திலை மார்களுஞ் சந்தோசமாய்
வந்து சொன்னதோர் ஒட்டனுக்கு
வரிசை பலதுந்தான் கொடுத்தார்

அட்டியலுஞ்சரப்பளியும்
ஆபரணமாலை வரிசையிட்டார்
முங்கை மோதாரியுடன்
மோகன மாலை வரிசையிட்டார்
ஒட்டனையுந்தானனுப்பி

### திசதரன் இராமருக்கு மணம் சூட்டப்புறப்பட்டுவரல்

உற்றதிசதரராசாவும்
மந்திரிமார்களை வரவழைத்து
மகுடமுடி மன்னன் திசதரரும்
மிதுலாபுரியானதிலே
வெண்ணையுண்டபெருமாழுக்கு

மணமாலைசூட்டவேணும்
வாய்த்த படைகளை யெழுப்புமென்றார்
சந்தோசமாகக் களிகூர்ந்து
தானே திசதரராசாவும்
பயணம் பயணமென்று

பாளையத்தையெழுப்புமென்றார்
அறுபதுனாயிரங்கன்னிமாரும்
அறுபதுனாயிரந்தேவிமாரும்
ஆனைபடையோடு குதிரைபடை
அதிலே ஒட்டிரெட்டி சேனைப்படை

---

**4665.** வரிசை—பரிசு

**4668.** முன்கை>முங்கை (பே. வா. மா)

**4668.** மோதாரி—மோதிரம்

பட்டத்துக்குத்தான் பெரிய
பாரவீரரெல்லாருந்தான்
வீரகேதகம்யென்றதொரு
வெள்ளானை தன்னையலங்கரித்தார்
ஆனைகழுத்திலே திசதரரும்

அய்யோத்தி மன்னவரேறுவாராம்
கோசலையாள் கைகேசி
கொடியிடையாள் சிமித்திரராசி
அறுபதுனாயிரம் மந்திரிமார்
அல்லோருமவர் பல்லாக்கிலே

ஆடலுடன் பாடலுமாய்
அளகுதிசதரராசாவும்
தெய்வமுதுலையை அரசாண்ட
தினகரரசனிடத்தில் வந்தார்
சந்தோசமாகிக்களிகூர்ந்து

தானே தினகரராசாவும்
மாயனரி கோபாலரும்
மன்னனிளைய பெருமாழும்
முகத்தோடே முகந்தைவைத்து
முத்தமிட்டார் திசதரரும்

அருமைப்பிள்ளாயென்மகனே
அய்யோத்தி நாட்டுக்கதிபதியே
தெய்வ அய்யோத்திக்கதிபதியே
செண்கண்னெடுமாலே வ(ா)ருமையா
மன்னன்திசதர ரிருக்கையிலே

மகுடமுடி மன்னன் தினகரரும்
தகைத்து வந்தமன்னவற்க்கு
தகனமது தீர்வதற்க்கு
பாலுபளம் சீனியுடன்
பளந்தேங்காய் சற்க்கரையும்

கானிலுள்ள தேனும்விட்டு
கருத்துடனன்ரு யமுதுமிட்டார்
உண்டு நன்ருய்க் கைவிளக்கி
உடனடைக்காய் தானருந்தி
தண்டருழுஞ்சிம்மாசனத்தில்

தானேயிருக்கிற வேளையிலே

### இராமர் சீதையின் திருமணத்திற்கு சோதிடம் பார்த்தல்

சோதிரியை வரவளைத்து

---

4698. மிதிலை என்பது முதுலை என்று எழுதப்பட்டுள்ளது.
4706. பிள்ளா — பிள்ளையே

சொல்ப்பொருத்தம் பாற்க்கலுற்றுர்
பாற்த்துமந்த சோதிருள்சி
பதிவினுடனேது சொல்வான்

என்னுடமன்னு தினகரனே
யிப்போ ஒருவாற்த்தை சொல்லக்கேழும்
உந்தன்மகள் சீதாலெட்சுமியை
உலகளந்த பெருமாழுக்கு
சீதையர்க்கும் அரிராமருக்கும்

சிறந்தஅசுபதி முகூர்த்தமென்று
அசுபதியில் மாலையிட்டு
அய்யோத்திப்பட்டணம்போய்ச்சேற்ந்தால்
வேதாவின் விதிப்படியே
மெல்லி நல்லாள் கூனிசாபத்தினுல்

பதினுலுவருசமட்டும்
பாரவனவாசம் போகவேணும்
வனவாச மானதிலே
வாய்த்த பற்ணக சாலையிலே
மாயாவு தாரனுந்தம்பியரும்

மங்கைநல்லாள் சீதாலெட்சுமியும்
பற்ணகசாலையானதிலே
பாவித்திருக்கிற வேளையிலே
அண்ணனுந்தம்பியும் யில்லாத நேரம்
அரக்கர் குலமென்ற வல்லரக்கன்

பத்துச்தலையுள்ள ராவணனும்
பைங்கொடியைசிறையெடுக்கவென்று
யேழுகடலுக்கும் அப்பாலே
யிலங்காபுரியென்றபட்டணத்தில்
அசோகவனமானதிலே

ஆயிளையை சிறையெடுக்கவேணு(ம்)
சீதாதேவிதானிருக்க
செங்கண் நெடுமாலவர்தான்
வாலிதன்னைச்சங்கரித்து
வான(ர)ங்களைச் சேற்த்துக்கொண்டு

அங்கதன்நீலன் சாம்புவனும்
அளகன்நல்ல சுக்கிறீபனும்

---

**4726-4771.** இவ்வரிகளில் சோதிடன் சோதிடம் பார்த்து பின் நடக்கவிருக்கும் செய்திகளை எடுத்துக் கூறுகிறுன்.

**4739.** பர்ணகசாலை—இலைகளால் வேய்ந்த குடில்

**4731.** அசுபதி — முதல் நட்சத்திரம்

சேனைத்தளங்களைச் சேகரித்து
தீரன்திருமாலும் வளிநடந்து
எண்ணிறந்தகோடி படைகளோடே

யிலங்கை மானகர்யிந்திரசெயித்து
ராவணசங்காரம் போர்முடித்து
நல்லஅரக்கர்குலம் வேரறுத்து
அரக்கர்குலம் வேரறுத்து
ராச்சதப்படைகளைத் தான்வதைத்து

தென்னிலங்காபுரி தனிலெழுந்து
சீதையரைச்சிறை திருப்பிடுவார்
தேவாதிதேவர்சிறைதவுர்த்து
தென்னிலங்காபுரி தானளியும்
யிப்படியாகவே சாஸ்த்திரங்கள்

யிருக்கிது மன்ன தினகரனே
என்றுரைத்து அந்தசோதிரிக்கு

## இராமர் சீதை திருமணம்

யேது சொல்வார்தினகரனும்
யெப்படித்தானிருந்தாலும்
யெந்தன் மகள் சீதா லெட்சுமியை

செப்பமுடனந்த கோபாலருக்கு
சிறந்த மணமாலை சூட்டவேணும்
மணமாலை சூட்டுதற்கு
வற்ணபந்தல் அலங்கரிப்பார்
கதலிக்குலைகளைநிறுத்திடுவார்

கமுகின் பூவால் அலங்கரிப்பார்
. . . . . . கொண்டு நாட்டிடுவார்
கூண்டமணிவிளக்கேற்றிடுவார்
ஒன்பது கால் பந்தலிட்டு
ஒரு காலில் பிரமனிட்டார்

யிந்திரலோகக்கச்சையிட்டு
சந்திரன் போலே அலங்கரித்தார்
பந்தலலங்காரஞ் செய்தபோது
பள்ளி கொண்டோனையலங்கரித்தார்
பள்ளிகொண்டோனை யலங்கரித்து

பைந்தொடிசீதயை அலங்கரித்தார்
மணவடயை அலங்கரித்தார்
மாயாவுதாரனைத்தானிருத்தி
மாயாவுதாரனை வலத்தேயிருந்தி
வாணுதல் சீதயையிடத்தேவைத்தார்

---

4792. மணவடயை—மணமேடையை

அப்போது நந்தக் கோபாலர்
அன்ன நடையாளைத் தான்பாற்த்து
வாராயோ யெந்தன் மங்கையரே
வாற்த்தை யொன்று சொல்லக்கேழு
விலைமதியாப் பணிகளெல்லாம்

மெல்லியரே பூண்டிருந்தாயே
நாகலோக மாலைகாணுதில்லை
நகரெற்றின மாலையைக் காணுதில்லை
என்றுரைக்க அந்தக் கோபாலர்
யேதுசொல்வாள் சீதாலெட்சுமியாள்

கானவன வாசமானதிலே
கல்லாய்க்கிடந்ததோர் அகலியைத்தான்
கன்ன புரானே உம்முடைய
கால்பாதமது பட்டவுடன்
கல்லாயிருந்தவள் தானெழுந்து

பெண்ணாக வந்தாளல்லோ
அப்படிக்குள்ள பொற்பாதம்
அடியாள் நானே அணிந்திருந்த
விலைமதியாப்பதைக்கனிலே
வெண்ணையுண்டோனே உம்முடைய

திருமேனியது பட்டபோது
தேன்மொளிமார்கள் பிறந்திடுவார்
என்னிலும் அதியப்பெண்கொடிமார்
யேந்திளைமார்கள் பிறந்ததுண்டால்
என்னைமுகம்பாராமல்

யேந்திளைமேலாசை கொள்வார்
என்றுநினைந்து நானடியாள்
யின்பமுடன் நான்மறைத்தேன்
தாலிச்சறடுதானெடுத்து
தாமோதரனுந் தாலி கெட்ட

வேதவேதியர் கீதம்பாட
விரவினுடனந்த கோபாலரும்
தாலிசறடதுதான் தரித்து
தாமோதரனுந் தானிருந்தார்
சீதனவகைகளான தெல்லாம்

---

4800. பணி—ஆபரணம்

4803. இரத்தினம் என்பது ரெற்றினம் என்று எழுதப் பட்டுள்ளது.

4814. பதைக்கல்—மார்பணி

4818. அரிய >அதிய (பே வ.மா)

4824. தாலிச்சறடு—தாலிக்கயிறு

சிறப்புடனேயவர்தான் கொடுத்தார்
மிதுலைப்பட்டணம் பேர்பாதி
விரையக்கொடுத்தாரோ கோபாலர்க்கு
எந்தன் யானை சேனையிலும்பேர்பாதி
என்றுசொல்லியவர்தான் கொடுத்தார்

சிம்மாசன மேடையிலே
திருமால்பெருமாளரசிருந்தார்
அரசிருக்கிற வேளையிலே
அளகுமுடி மன்னனேது சொல்வார்
என்மாமாதினகர ராசாவே

யேத்தஅய்யோத்திக்குப் போகவேணும்
அய்யோத்தியா புரிபோகவணும்
அம்மான் தினகரராசனே
என்றுரைக்க அந்தக்கோபாலர்
யேதுசொல்வாரந்த தினகரரும்

மந்திரிமார்களை வரவழைத்து
மகுடமுடி மன்னரேது சொல்வார்
அய்யோத்தியாபுரிக்குப்போகவேணும்
அளகுமந்திரிமாரேநீங்கள்
எழுப்பவேணும் பாளையத்தை

யேத்தஅய்யோத்திக்குப் போகவேணும்
ஆனையின்மேல் கோபாலரும்
அளகன்யினையபெருமாளும்
ஒட்டகைமேலேதிசதரரும்
உற்றதினகரருமேலுவாராம்

பெண்கொடிமாதர் பல்லாக்கேறி
புகள்பெறவே வளிநடந்தார்
தம்பிபரதன் சத்துருக்கன்
தானுமவர்கள்தேரேற
பேரிகைமத்தளந்தான் முளங்க

புகளுடனேவளிநடந்தார்
மிதுலாபுரி பட்டணந்தான்கடந்து
விரவினுடன்வளிநடந்தார்
கானவனவாசந்தான் கடந்து
கடுகபரசுராமன் வனத்தில்வந்தார்

### வழியில் பரசூரன் வழிமறிப்பு

வருகிறதோர் வேளையிலே
வந்துமறித்தானே பரசூரன்

---

**4832.** பேர்பாதி—நேர்பாதி
**4843.** அம்மான்—மாமன்
**4854.** ஒட்டகை—ஒட்டகம்
**4860.** பேரிகை, மத்தளம்—இசைக்கருவிகள்

யிருபத்தொரு மணிக்கோபுரமும்
என்பெருமாளே சொல்லக்கேழும்
என்தாயார் ரேகணியாள்

என்தகப்பன் சமதக்கினிபகவான்
பூசை நைவேத்தியஞ் செய்வதற்கு
பெண்கொடியாளந்த ரேணுகையும்
அவழுடைய கற்புநெறியாலே
ஆயிழையாள் ரேணுகையும்

செப்புக்குடம் போல்கெங்கைதன்னை
தேன்மொளியாள் திரட்டுவாளாம்
அப்படிசிலகாலம் ஆயிழையாள்
ஆயிழையாழுந்தான்வரவே
ஆயிரத்துரண்டாயிரங்கை

ஆனதோர் காத்தவீரியனும்
அந்தரமார்க்கமாய்த்தேர்நடத்தி
அவன்வருகிறவேளையிலே
கெங்கைதன்னில் தானிறங்கி
கிளிமொளி கெங்கைபைத்திரட்ட

கமுந்து கெங்கையைத்திரட்ட
காத்தவீரியன் நிணலைக்கண்டாள்
யிப்படியாயுள்ள மாமுனிவன்
யிருக்கிறுனேயிந்தப்பூவுலகில்
என்றுசொல்லி நினைத்தபோது

யேந்திழைக் கற்புத்தான்குலைந்து
கெங்கையதுதிரளாமல்
கிளிமொளியாளந்த ரேணுகையாள்
அம்புபட்ட மான்போலே
அங்கமெல்லாம் வேறுபட்டு

உண்டைப்பட்ட மான்போலே
உள்ளுடைந்து தள்ளாடி
வாடி மனங்கோடியல்லோ
மங்கைநல்லாள் ரேணுகையும்
கன்னமிடப்போகவில்லை

களவு செய்யவும் போகவில்லை
யிட்டபங்கு தானிருக்க
யிடும்புகள் நடத்தவில்லை
மாமுனிக்குவென்ன சொல்வேனென்று
மங்கை நல்லாள்ரேணுகயும்

---

4886 கவிழ்ந்து > கமுந்து (பே. வ. மா)
4887. நிழல் > நிணல் (பே. வ. மா)
4900. கன்னமிடல்—திருடும் முறையில் ஒன்று

உடுத்திருந்த சேலேதன்னில்
உள்முந்தி தலப்பதையும்
கெங்கைதன்னில் தானிறங்கி
கிளிமொளியாள் கொடுபோனுள்
கண்டான் சமதக்கினி பகவான்

காரிகையாள் ரேணுகையை
யித்தனேநாள்யிதுவரைக்கும்
யேந்திளேயாள் ரேணுகையாள்
செப்புக்குடம் போலேகெங்கைதன்னே
திரட்டிக்கொடு வாறரேணுகையாள்

யிந்தப்படியாக வந்ததென்ன
என்னேடே நீயுஞ்சொல்லு சொல்லு
என்றுகேட்டான் சமதக்கினிபகவான்
யேந்திளேரேணுகை யெடுத்துரைப்பாள்
என்னுடை மன்னுயென்கணவா

யிப்போது நான்சொல்லக்கேழுமையா
கெங்கைதன்னில் தானிறங்கி
கெங்கை திரட்டுகிற வேளேயிலே
யெங்கிருந்தோ ஒரு மானிடவன்
யீஸ்பரனுருட கயிலேநோக்கி

ஆகாச மார்க்கமாய்த்தேர்நடத்தி
அவன் வருகிறவேளேயிலே
கமுந்துநின்று கெங்கைதான்திரட்ட
காத்தவீரியன் நிணேலேக்கண்டேன்
யிப்படிப்பட்ட மாமுனிவன்

யிருக்கிருனேயிந்த பூவுலகில்
என்று சொல்லியந்த ரேணுகையாள்
யின்பமுடனவர்க்கெடுத்துரைப்பாள்
கற்பளிந்துபோனுய் ரேணுகையே
கண்ணில் முளியாதே அப்பாலேபோ

அறமளிந்துபோனுய் ரேணுகையே
ஆகாது எந்தனிடமதிலே
என்மகனேபரசூரா
யிப்போ ஒருவார்த்தை சொல்லக்கேழு
தாயென்றும் பாராதே

தாடாளா யென்மகனே
ஊருக்குவடபிறமாய்
உயர்ந்த கழுவன்திரடதிலே

---

**4907.** முந்தி—முந்தானே
**4942.** புறம்> பிறம் (பே. வ. மா)
**4943.** கழுவன்திரடு—கழுகுறையும்மேடு

வடமுகமாகத்தானிருத்தி
வாளாலிருதுண்டாய் வெட்டிடுவாய்

தந்தைசொல்லுக்கு மந்திரமில்லை
தானேயவர் சொல்ப்படிக்கு
தாயென்றும் பாராமல்
தாடாளன் பரசூரன்
பின்கெட்டாய்க் கெட்டிக்கொண்டு

பிறபல்லியமாய்த்தானடந்தான்
ஓடிநடவென்று சொல்லி
உற்றபரசூரன் தானடித்தான்
அடிபொறுக்கமாட்டாமல்
ஆயிழையாளந்த ரேணுகையும்

ஊருக்கு வடபிறமாய்
உசந்த கழுவன்திரட்டிலே
வடக்கேமுகமாயிருத்தி
வாளாலிருதுண்டாய் வெட்டுமுன்னே
தன்னுடைகையினாலே

தார்குளலாளந்த ரேணுகையும்
யிருபத்தொருகுத்துகுத்தி
யேந்திழையாள் தானிறந்தாள்
யிருபத்தொரு குத்தானதுதான்
யிருபததொரு பளியெனவே

உந்தனக்குவேலி நான்தருவேன்
ஒன்றோடியே யெனவுரைத்தான்
என்று சொல்லியெண்ணிக்கொண்டு
யேத்த பரசூரன் வளிநடந்தான்
தெய்வஅய்யோத்திப் பட்டணத்திலே

திசதரனைப்பளிவாங்குதற்கு
தெய்வலோகம் விட்டுகீளிறங்கி
சிறப்பாய் அய்யோத்திக்குவரும்போது
என்னுடைய போர்க்குஆத்தாமல்
யேத்ததிசதரராசாவும்

வருசத்துக்கு ஒரு பெண் வைப்பு வைத்து
மன்னன் திசதரர் தானிருந்தார்
வைத்த வைப்பு யிருக்கும் போது
வதைகள் செய்யவுங்கூடாது
பெண் பாவம் பொல்லா(த)து

பிள்ளைகள் வருமென்றுபரசூரன்
குளங்களை வெட்டி முறிப்பதிலும்
கொடிய பாவமல்லோ பெண்பாவம்

---

4966. வேலி—பலி

அந்தணரைக் கொன்ற பாவத்திலும்
அதிய பாவமல்லோ பெண் பாவம்

மாதாபிதாவையடித்திடிலும்
வாய்த்த குருவை மறந்திடிலும்
கோவில் பூசை குறைந்திடிலும்
குருக்கள் சம்பளம் பிடித்திடிலும்
குறமரக்கால் அள(ப்)பதிலும்

கொடிய பாவமல்லோ பெண்பாவம்
நிறையவிளைந்த சென்(ெ)னலிலே
நீர்ச்சாவி கலந்திடிலும்
பெண்பாவம் பொல்லா(த)து
பிளைகள் வருமென்று பரசூரன்

வைத்திருக்கும் அடக்கமதில்
வயிறெரியப்பண்ணிலும்
யிப்படிக்குள்ள பாவத்திலும்
எண்மடங்கல்லவோ பெண்பாவம்
எந்தச்சொல்லை மறந்தாலும்

என்பெருமாளே கோபாலா
யிருபத்தொருபளிதந்துவிட்டு
என்பெருமாளே நீ போவாய்
அல்லவென்றால் உன்னையும்நான்
அய்யோத்தி நாட்டுக்கு விடுவதில்லை

சீதைபெண்ணை விடுவதில்லை
திரும்பவிடுவேனே அய்யோத்திக்கு
என்றுசொல்லி பரசூரன்
என்பெருமாளை வளிமறித்தான்
யின்னம் ஒருகாரணந்தான்

யென்பெருமாளே சொல்லக்கேளும்
யிருபத்தொரு பளிதரவேண்டாம்
யேத்த அய்யோத்திக்கு நீ போவாய்
ஆயிரம்பேர் கிங்கிலியர்
அசைக்க ஒண்ணாத் தெய்வவில்லை

தெய்வவரிவில்லை வளைத்ததுண்டால்
செண்கண்நெடுமாலே நீபோவாய்

## இராமர் பரசூரன் வில்லைவளைத்தல்

தம்பியிளையோனைத்தானழைத்து
தரணியளந்த பெருமாளும்
பரசூரனுட வில்லுதன்னை

---

4993. சாவி—உள்ளீடற்ற நெல்

பாலன்யிளையோன் கொடுவருவாய்
அண்ணர்ரகுராமர் சொல்ப்படியே
அளகனிளைய பெருமாழும்
எங்கேயிருக்குதுதெய்வவில்லு
என்றுகேட்டாரே லெட்சுமணர்

தேர்வண்டிக்காலோடே
சேர்த்துவைத்தவில்லை தானசைத்தார்
மடமடென்றுந்திடுதிடென்றும்
வரிவில்லு அசைந்திடுமாம்
ஆயிரம்பேர்கிங்கிலியர்

அசைக்க ஒண்ணாத தெய்வவில்லை
மன்னனிளைய பெருமாழும்
வைபோகமாய்த் தானெடுத்து
ஒருகையாலே வில்வளைத்து
ஒருகையாலே ஞாணேத்தி

மண்டிபோட்டுத் தானிருந்துகொண்டு
மடமடென்றுவில்லைத்தான் வளைத்தார்

### பரசூரன் சரணடைதல்

வில்வளைத்த அதரத்திசத்தங்கேட்டு
விரைவாய்ப் பரசூரன் விழுந்தோட
ஓடாதே ஓடாதே நீ பரசூரா

உத்தவனமதில் ஓட வேண்டாம்
என்றுரைத்தாரந்த லெட்சுமணரும்
யிசைந்து பரசூரன் திரும்பிவந்தான்
பரசூரனவன் அடுத்து வந்து
பள்ளிகொண்டோரையடிதொழுதான்

நந்தக் கோவிந்தா சரணமையா
நரசிங்க முற்த்தியே சரணமையா
வேதப்பொருளே சுவாமி சரணமையா
விண்ணவர் கோபாலா சரணமையா
ஆள்ப்பாடிமாயவர் சரணமையா

அரிகிஷ்ண கோபாலா சரணமையா
பாலமுற்த முண்டோனே சரணமையா
பச்சைமுகில்வற்ணரே சரணமையா
மாவேலி ராசனை சிறையில் வைத்தாய்
மாயாவுதரனே சரணமையா

யிரணிய சம்மாரம் முடித்தோனே
என் பெருமாளே சரணமையா
தாடகை சங்காரம் போர்முடித்து

---

5038. அதரத்தி—அதிர்ச்சி

தரணியளந்தோனே சரணமையா
குன்றையெடுத்துக் குடைபிடித்தோனே
கோபால ராமா சரணமையா
சரணஞ்சரணம் நந்தக்கோபாலரே
தரணியளந்த பெருமாளே
சிறியோர்கள் செய்த குற்றமதை
பெரியோர்கள் பிழை பொறுக்க வேணும்
பிழை பொறுத்தால் பெரியோராவீர்
பேர்சிறந்தசுவாமி ரகுராமரே

*இராமர் பரசூரனுக்குப் பெயர் மாற்றல்*

என்று அடிதொழுத வேளையிலே
ரெகுராமசுவாமியும் யேது சொல்வார்
நம்முடனே தான் யெதுத்தவன் தான்
நம்மை வந்து அடிதொழுததினுல்
நாமும்யிப்போ அவன் தனக்கு
நல்ல பதவிமோச்சங் கொடுக்கவேணும்
உல்லாசமாகவே கெற்ச்சிதமாய்
உலகளந்த சுவாமி ரெகுபதியும்
பரசூரனைத்தான் பாற்த்து
பள்ளிகொண்டோன் தானுரைப்பார்
செந்தூரப்பொட்டுமிட்டு
திருச்சூரநல்லநாமஞ்சாத்தி
பரசூரனென்றபேர்மாத்தி
பரசுராமனென்று பேர்கொடுத்தார்
பாவினையாகவே பேர்கொடுத்து
பள்ளிகொண்டபெருமாளும்
கேள்க்கவேணும் பரசுராமா
கீற்த்திபெற்ற ஒருவசனம்
உன்னிடம்பிடுங்கின வில்லுதன்னை
உற்றவருண ராசனிடங் கொடுத்துவிட்டேன்
நீயுங்கேரளதேசஞ்சேரவேணும்
நீதியாயுனக்கு விடைகொடுத்தேன்
பரசுராமருக்கு விடைகொடுத்து
பச்சைமுகில் வற்ணரேதுசொல்வார்
எப்போதும்யென் பேர்சொல்லவேணும்
என்றுசொன்னுரே கோபாலர்
ஆகட்டுமென்றவனடிதொழுது
அப்போதவனுந்தான் போனுன்

*இராமர் சீதை அயோத்திக்கு வரல்*

பரசுராமருக்கு விடைகொடுத்து

---

**5074.** கெற்ச்சிதமாய்—சிறப்பாய்

பண்புடன் மாயவர்தான்போக
பாலைநிலமொடு முல்லைநிலம்
பளிங்குமலையதுதான்கடந்து
மாயன்வருகிற வளிதனிலே

மயிலன்னம் நின்றுஓலமிட
கொக்கு குயிலன்னந்தாருக்கள்
கோபாலராமரையடிபணிய
மாடம்பிருவுடன்மயிலன்னமும்
மாயன் ரெகுராமரையடிபணிய

சிட்டுக்குருவிகள்காகங்கழும்
திருமாலைப்பெருமாளைச் சேவிக்கவே
அந்தவனமதுதான் கடந்து
அளகு ரெகுபதியும் வாறபோது
நீலகிரியோடு நிமலமலை

நேசகிரிமலைதான்கடந்து
சொற்ணகிரியோடு வற்ணகிரி
துங்கமலைக்காவுதான் கடந்து
அந்தவனமிட்டு ரெகுராமர்
அடுத்த வனமதில் வாறபோது

பட்டமரமதுதான் தழுத்து
பள்ளிகொண்டோ(ர்)க்கு நிணலிடவே
புஸ்பவிருச்சமெல்லாம் பூச்சொரிய
பிரபல்லிய மாயரி கோபாலர்க்கு
காயாதமரங்கள்தான் காய்த்து

கன்னபிரானுக்குக் கனியுதிர
ஆயிரந்தலை நாகங்குடைபிடிக்க
அளகுராமர் கோபாலர்க்கு
அந்தவனங்கழுஞ் சோலைவிட்டு
அடுத்தமலைக்காவுந்தான் கடந்து

வாழும்அய்யோத்தி பட்டணத்தில்
மாயன்ரெகுராமர் வாறபோது
வந்தார்ரெகுபதிவந்தா ரென்பார்
வற்ணதெருக்களை யலங்கரிப்பார்
தெருக்களெல்லாம் அலங்கரிப்பார்

தெருவில்தோறணங்கெட்டிடுவார்
வாழைக்கரும்புகள் நாட்டிடுவார்
மல்லிகை முல்லைதூக்கிடுவார்

---

5101. ஓலம்—ஓசை
5104. புரு—பிரு (பே.வ.மா)
5120. காயாத—காய்க்காத

முல்லைநிலப்பச்சை தூக்கிடுவார்
முருக்கன் பூவால் அலங்கரிப்பார்

குலைவாழையது நாட்டிடுவார்
கும்பக்குடங்களை நிறுத்துவாராம்
வேப்பிலைதோற(ண)ங்கெட்டிடுவார்
விதம்விதமாய்க் கோலமிடுவாராம்
தெய்வஅய்யோத்தியை அலங்கரித்து

திருமாலளகிய கோபாலரும்
தம்பியிளைய பெருமாளும்
சானகிதாயார் சீதாலெட்சுமியும்
பள்ளியறைமேடையானதிலே
பாவினையாய் வந்தரசிருந்தார்

ராமருடன் தம்பிலெச்சுமணரும்
நல்லசிம்மாசனம் அரசிருந்தார்

## இராமருக்கு முடிசூட்டல் விழா

அரசிருக்கும் அந்த நாளையிலே
அன்னேரம் மன்னன் திசரதரும்
மாயன் அரிராமருக்கு

மகுடமுடியதுசூட்டவேணும்
மன்னன் திசதரராசாவும்
மகுட முடிபட்டந்தரிக்க வென்று
அன்பத்தாறு தேசத்து ராசாக்கள்
அன்பத்தாறு தேசத்து மந்திரிமார்

யாபேர்க்கும் நீட்டெழுதி
யேத்த நீலகண்டனை வரவழைத்து
திரு நீட்டதையுந்தான கொடுத்து
சிணத்தில்வாருமெனவுரைத்தார்
அப்போதுநீலகண்டன் ஓடிவந்தான்

ஆதரவாய்த்திசதர மகாராசா
தெய்வக்கம்மாளர் மாந்தையரை
சிறப்பாய் ராசனும்வரவழைத்து
மூவாயிரங் களஞ்சிதங்கமதை
முடிஞ்சிகொடுத்தானே திசதரரும்

---

5156. யாபேர்க்கும்—யா[illegible]க்கும்

5157. நீலகண்டன்—தூ[illegible]டன்

5159. சிணம்—சீக்கிரம்

5164. களஞ்சி—நிறுத்தல[illegible]வைப் பெயர். ஒன்றரை களஞ்சு ஒரு பவுன் ஆகும்.

5165. முடிந்து>முடிஞ்சி ([illegible]ப. வ. மா) — முடிப்பாகக் கட்டி

மகுடமுடியது சூட்டவென்று
மன்னன்திசதர ராசாவும்
தேசராசாக்கள் மந்திரிமார்
சிறப்பாய்த்தான் வந்துவீற்றிருந்தார்
தெய்வஅய்யோத்தியை அலங்கரித்து

தேசராசருமேதுரைப்பார்
தெய்வக்கம்மாளரிடங்கொடுத்த
சிறந்ததங்கத்திஞல்முடியை
சணப்பொழுதில் கம்மாளரிடத்தில்சென்று
தானேகொடுவரவேணுமென்று

உரைத்தஉத்தரவுப்படியேதான்
ஓடிநீலகண்டன் சொன்னவுடன்
தெருவித்த உத்தரவைத்தான்கேட்டு
தெய்வக்கம்மாளர் செய்துவைத்த
தங்கமுடியதைத் தானெடுத்து

தானேகொடுவந்தார் மாந்தையர்கள்
பட்டம் பதிஞறுபட்டம்வைத்து
பதிவுடன் முடிசமைத்திருந்தார்
முடியதை ராசன்பாற்த்தவுடன்
முளுது மனதில் சந்தோசங்கொண்டார்

வந்ததெய்வக்கம்மாளர்க்கு
வரிசையுடன் வெகுமதிதான்கொடுத்தார்
தாம்பூலம் அருந்தினபின்
தானங்கிருந்த ராசாக்கள்
அளகன் திசதரராசன் சொல்வார்

அசுபதி நக்ஷத்திரந்தனிலே
மகுடமுடியது சூட்டவென்று
மன்னன்திசரத ராசாவும்

## கூனியின் இடையீடு

யெண்ணிக் கொண்டிருக்கிறவேளையிலே
யேந்திழையாள்கூனி வெள்ளாட்டி

கூனிவெள்ளாட்டி தானறிந்து
கோதைகைகேசியிடத்தில் வந்தாள்
கைகேசிஅம்மாளிடந்தானும் வந்து
காரிகையாள் கூனியேதுரைப்பாள்
கேள்ப்பாயோ அம்மாகைகேசி

5173, முடி—மகுடமுடி
5178. தெரிவித்த என்பது தெருவித்த என்று எழுதப்பட்டுள்ளது.
5182. பட்டம்—பக்கம்
5187. வெகுமதி—பரிசு

கீற்த்திபெற்றதொரு வசனமதை
யின்னமுந்தான் நீ அறியலேயோ
யேந்திழையே அம்மாகைகேசி
அய்யோத்திபட்டணம் ஆள்வதற்க்கு
அளகன்திசதரராசாவும்

மாயோன் அரிராமருக்கு
மகுடமுடிசூட்டப்போறூராம்
எந்தவிதத்தாலும் முடிசூட்டிடுவார்
யேந்திழையே அம்மாகைகேசி
உந்தன்மகன் பரதன்தானிருக்க

உத்தராமருக்கென்னபட்டம்
என்றுரைத்தாளந்த கூனியவள்
யேதுரைப்பாளம்மை கைகேசி
எந்தன் பரதாள்வார்க்கு
ராமரிருக்க முடிசூட்டவேண்டாம்

என்றுரைத்தமொளி கூனிகேட்டு
யேண்டிகைகேசிபயித்தியக்காறி
உந்தன் மணவாளருங் கோசலையும்
உகந்துரதமேறிவரும்போது
தேர்வண்டி அச்சுதான் முறிய

சிறப்பாயுன் கரத்தினலேந்திக் கொண்டாய்
அப்போது உன்கணவன் தான் பாற்த்து
ஆயிழையே உனக்கென்னவரங்கேழுமென்றூர்
கேளுமென்று ராசனுரைத்த போது
கெம்பீரமாயுன் மகன் பரதாள் வார்க்கு

எந்தன் மகன் பரதாள்வானுக்கு
யேத்த முதப்பட்டங் கெட்டவேணும்
யென்று நீவரங் கேட்டபடி
யிசைந்து வரமது தந்து விட்டார்
அந்த வரஞ்சற்றும் நினையாமல்

ஆயிழைகைகேசி மறந்துவிட்டாய்
யிப்போபரதருக்கு முடிசூட்டவேணும்
ரகுராமர் வனம்போகவேணும்
என்றுகூனியவளுரைத்தபோது
யேந்திழைகைகேசி கேட்டுக்கொண்டாள்

## கைகேசி திசதரனிடம் வரம் கேட்டல்

கைகேசிக்குத்தேகசுகமில்லையென்று
கடுக மூடாங்குபோட்டு படுத்துக்கொண்டாள்
திசதரராசருந்தான் பாற்த்து

---

5218. மணவாளர்—கணவர்

5237. மூடாங்குபோட்டு—போர்த்திக்கொண்டு

தார்குளலே படுத்திருப்பதென்ன
திசதரராசருங் கேட்டபோது

தானுங்கைகேசி யேது சொல்வாள்
அக்காலங் கேட்டவரமதுதான்
அடியாழுக்கின்று தரவேணும்
எந்தன் மகன் பரதன்தானிருக்க
யிசைந்த ராமருக்கென்னபட்டம்

ஆண்டுபதினாலுவருசம்மட்டும்
அரிராமர்வனத்தில் போகவேணும்
பதினாலுவருசம் அவர்போக
பரதருந்தேசம் ஆளவேணும்
என்றுரைத்தாளம்மை கைகேசி

### திசதரன் பதிலுரை கூறல்

யேற்றமுடிமன்னர் திசதரரும்
உனக்குயில்லை யென்றுசொல்லாமல்
உத்ததிசதரர் கிலேசமுற்றார்
கிலேசமுற்றுக்கைகேசிதனைப்பாற்த்து
கெம்பீரமாய் திசதரராசாவும்

ஆனையதுயரசாழும் பட்டணத்தில்
பூனையதுயரசாள நீதியுண்டோ
அந்தவார்த்தைதனைக்கேட்டு கைகேசி
ஆதிதேசராசரைப் பார்த்தேதுரைப்பார்
ஆனையும் பூனையும் நீங்கள்தானே

அன்பாகப்பெற்ற பாலரவரல்லவோ
அசலார்பெற்ற பிள்ளையோஉரைக்கவேணும்
அப்படிக்கேள்க்கவும் நீதியுண்டோ
என்மன்னவரே அனிதியாயுரைத்தீரே
என்றுரைக்க ராசனுங் கைகேசியும்

யிப்படிதற்க்கிச்ச வசனமதை
ரெகுராமமூற்த்தியுந்தெரிந்து கொண்டார்

### இராமர் வனத்திற்குப் புறப்படல்

தெரிந்துகோசலை தாயாரிடம்
சிறப்பாய்ராமர் வந்தடிதொழுதார்
அடிதொழுதேன் அம்மயென்தாயே

ஆண்டுபதினாலுவருசமட்டும்
வனவாசஞ்சரித்து வாறேனம்மா
மாதாவேயென்தாயே சடைக்கவேண்டாம்
பதினாலுவருசமென்றுயெண்ண வேண்டாம்
பதினாலுநாள்தானம்மா யெந்தனக்கு

---

5262 அயலார் > அசலார் (பே.வெ.மா.)
5266. தற்க்கிச்ச — வாதமிட்ட

எனக்குவிடைதரவும் வேணும்அம்மா
என்றுரெகுபதிகேட்டபோது
யிசைந்துகோசலை விடைகொடுத்தாள்
யேற்ற ரகுராமரப்போது
வரமதுதாயாரிடம் பெற்றுக்கொண்டு

மற்ருெருவரறியாமல் அரசிருந்தார்
அரசிருக்கிறதோர் நாளையிலே
அத்தாராத்திரி சாமத்திலே
சீதைலெட்சுமணர் அறியாமல்
சிறிராமச்சந்திரரெழுந்தருள

வாழும் அய்யோத்தியாபுரியுமிட்டு
மையிருளானது நீங்குமுன்னே
வடவாமுகமதில் வந்திருந்தார்
மன்னன் சிறிராமசந்திரனும்
அன்றுகதிரோன் விடியுமுன்னே

அய்யோத்தி மானகரானதிலே
வாழும்அய்யோத்தி நகர்தனிலே
மங்கைமனோன்மணி சீதாதேவி
கற்ப்புக்கருதியே லெட்சுமியாள்
கன்னி மனோன்மணி முளித்தபின்பு

பள்ளியறை மேடையானதிலே
பாரளந்தாரைத்தான் பாற்த்தாள்
மாயவர்ராமரைக்காணமல்
மங்கைமனோன்மணி விசாரமுற்று
பள்ளியறைமேடை தேடிப்பாற்த்தாள்

பந்தடிமேடை தேடிப்பாற்த்தாள்
கடைகள் கடைத்தெரு தேடிப்பாற்த்தாள்
காரிகை சீதாலெட்சுமியாள்
தேடி ஒருவிடங்காணமல்
சீதை நாயகி பரதவித்தாள்

மாயன் ரகுராமரைக் காணமல்
மாதுமனோன்மணிதான் புலம்ப
கற்புச்சூடாமணிமாய்கையினல்
கார்வணராமரைக்கண்டுகொண்டாள்
கண்டவுடன் சீதைதாயாரும்

கார்வணர்சாமியை அடிதொழுதாள்
என்னைவிட்டு வனத்தில்வருவதற்க்கு
யேதுநியாயந்தான் என்சுவாமி

---

5283. அத்தா ராத்திரி—நடுஇரவு
5299. விசாரமுற்று—வருத்தமுற்று

வற்ணவரிவில்லைத்தான் முறிந்து
மாலையிட்டீர்கள் மணவாளரே

காரணமானதைச் சொல்லவேணும்
கன்னிசீதையுங் கேட்டபோது
கூனியிட்டதொருசாபத்திஞல்
கூண்டவனவாசம் நான்போறேன்
ஆண்டுபதிஞலுவருசமட்டும்

அதிகவனந்தனில் சஞ்சரித்து
வாழும்அய்யோத்தி பட்டணத்தில்
வருவேன் நான்தானும் லெச்சுமியே
பதிஞலுவருசமட்டும்
பண்பாய்அய்யோத்தியில் நீயிருப்பாய்

என்றுஉரைத்தாரே ரெகுபதியும்
யேதுரைப்பாள் சீதையம்மாள்
உங்களைவனத்தில்விட்டுவிட்டு
உற்றஅய்யோத்தியிலிருக்கமாட்டேன்
நானும் உங்களுடன் கூடிவாறேன்

நலமாயுரைத்தாளே லெட்சுமியும்
லெச்சுமித் தாயாருரைத்தபோது
யிடதுபிறமாய்ச்சேற்த்துக்கொண்டார்
அந்தவனத்திலிருக்கும்போது
அய்யோத்திமானகர்தனிலே

வாழும் அய்யோத்தி பட்டணத்தில்
மன்னர் லெச்சுமணப்பெருமாளும்
அண்ணார்ரகுராமர் அரண்மனையில்
அளகன்யிளையவர் வந்துபாற்த்தார்
ராமசுவாமியைக் காணுமல்

மன்னர்யிளையவர்தான் புலம்ப
அய்யோத்தியாபுரி நகர்முழுதும்
அன்பாயிளையவர் தேடிப்பாற்த்தார்
தேடிஒருவிடங்காணுமல்
திருமால்பேரில் விசாரமுற்ருர்

ரெகுராமசுவாமியைத்தான் தேடி
சிறந்தவனம் நோக்கிவளிநடந்தார்
வளிநடந்தார் சடுதியில்தான்
மாயாவுதாரரை வந்துகண்டார்
எந்தன் அண்ணரே ரெகுபதியே

ரெகுராமாராமா சரணமையா
நந்தக்கோபலா சரணமையா

---

5356. பத்மனுபா > பல்ப்பனுபா (பே. வ. மா)

நாதா தாணுவே சரணமையா
புண்ணியமூற்த்தியே சரணமையா
பெருமாள் ரகுராமரே சரணமையா

சிறிபல்ப்பஞபா சரணமையா
சிறிரங்க நாதா சரணமையா
வேதப் பொருளே சரணமையா
மேகநிற வற்ணு சரணமையா
ஆதி நாராயண சரணமையா

அச்சுதாகோபாலா சரணமையா
பள்ளிகொண்டோனே சரணமையா
பச்சைநிறமாயா சரணமையா
அடிதொழுதோர் வேனேயிலே
அரிஅரிநாராயணப்பெருமாள்

யிங்கேவா யிங்கேவாதும்பியரே
லெச்சுமணப் பெருமாளே யினையகோவே
வலதுபக்கத்தில் லெச்சுமணரை
மாயன்ரெகுராமர் சேற்த்துக்கொண்டார்
கண்ணில்கண்டானேகுகவேடன்

கார்வண ராமரை அடிதொழுதான்
எங்கள் பெருமாளே கோபாலரே
ரெகுராம சாமியே புண்ணியோனே
தெய்வஅய்யோத்திக்கு வரும்போது

## குகன் சந்தித்தல்

சிறந்தபுகள் தம்பி குகவேடா

உன்னுடை சொந்த வீடதிலே
உத்த அமுது பொசித்துத் தான் போவேன்
என்று உரைத்தாரே கோபாலசுவாமி
யேத்தபுகள் தம்பிகுகவேடன்
ஓடமானது கொண்டுவந்து

உலகளந்தோனுடன்மூவரையும்
ஓடமானதில் தானிருத்தி
உற்றநதியதை கடத்திவிட்டான்
அந்தவனங்கழுஞ்சோலைவிட்டு
ஆகமூபேரும் யெழுந்தருளி

கற்ப்புச்சூடாமணி மாய்கைதன்னுல்
கானவனவாசமானதிலே
அந்தவனத்தில் அவரிருக்க

## திசதரன் மரணம்

அய்யோத்தியாபுரிப்பட்டணத்தில்
மன்னன்திசதரராசாவும்

மறுநாள் உதயகாலந்தன்னில்
அன்னேர(ம)ந்த திசதரராசாவும்
அரிரகுராமரைப் பாற்த்தபோது
மாயன் ரெகுராமரைக் காணமல்
மன்னன் திசதரராசாவும்

மாயன்ரகுராமருடசங்கடத்தால்
மரணமாகிவிட்டார் திசதரரும்
ஐந்துகண்முனி சாபத்திஞல்
அன்னேரம்ராசன் உயிர் போனதுவே
திசதரராசன் உயிர் போனபின்பு

தானே புகள் பெற்ற பரதாள்வார்
தலேமேலோகையை தானும் வைத்து
தானேஅழுது புலம்பலுற்ருர்

## பரதர் தந்தை இறந்த செய்தி சொல்ல வனத்துக்கு வரல்

அண்ணர்க்குச் செய்திசொல்ல வென்று
அந்தவனத்திலே சென்றேறி

வாருரே தம்பிபரதாள்வார்
வரிசையுடன் ராமர்தனேத்தேடி
கானவனச்சோலேதானும் விட்டு
கல்லாறுபுல்லாறு தான் கடந்து
வனங்கள் யாவையுந்தான்கடந்து

வந்தார் குகவேடன் ஆறதிலே
ஆத்தங்கரைதனில் வந்துநின்று
அழுதாரே அண்ணு அண்ணுவென்று
அழுத குரலோசை குகன் கேட்டு
ஆத்தங்கரைதனில் வந்து பாற்த்தான்

குகவேடனவன் தான் பாற்த்து
கோபாலர் தம்பியரை பாற்த்துரைப்பான்
கேள்க்கவேணும் அண்ணுகுகவேடா
கீற்த்தி பெற்றதொரு வசனமதை
அய்யா திசதரர்யிறந்து போனுர்

அண்ணர் வனத்துக்கு வந்துவிட்டார்
அறிய அவருக்குச் சொல்லவேணும்
ஆத்தையிப்போ கடத்திவிடவேணும்
தம்பிபரதாள்வார் சொன்னபோது
தானே புகள் பெற்றகுகவேடன்

ஓடமானது கொண்டுவந்து
உலகளந்தோன் தம்பியை கடத்திவிட்டான்
அந்தவனச்சோலே தானும்விட்டு

அடுத்தமலைச்சார்வுதானும்விட்டார்
வடவாலமரமது தன்னருகில்

மாயன் ரெகுராமரை வந்துகண்டார்
அன்னேரந்தம்பி பரதாள்வார்
அரிராம சுவாமியை வந்துகண்டார்
கண்டபோது பரதாள்வான் அடிபணிந்து
காரணமானதை தானுரைத்தார்

அய்யாதிசதரராசா உயிர்பிரிந்தார்
அண்ணருக்கு யானுஞ் சொல்லவந்தேன்
பரதாள் வானுரைத்தவுடன்

## இராமர் பரதனைத் தேற்றல்

பச்சைமுகில் வண்ணர் ரெகுராமரும்
துக்கமடைந்து விசாரமுற்று

சுவாமிநெடுமாலுந்தானுரைப்பார்
கேள்க்கவேணுந்தம்பி பரதாள்வான்
கீற்த்தி பெற்றதொரு வாற்த்தை தன்னை
ஐயா திசதரராசாவை
அடக்கமானது செய்துவிட்டு

நல்லடக்கம் செய்துபோட்டு
நலமுடன் அய்யோத்தி பட்டணத்தை
ஆண்டு பதினலு வருசமட்டும்
அரசாண்டு தம்பிநீயிருப்பாய்
நீதி நெறியுடன் ஆண்டிருப்பாய்

நினைத்தபடிதம்பி தவருமல்
வருசம் பதினலுந்திகைந்தபோது
வாழும் அய்யோத்திக்கு நான் வருவேன்
என்றங்குரைத்தாரே ரெகுபதியும்

## பரதன் பதிலுரைத்தல்

யேதுரைப்பார் தம்பி பரதாள்வார்

தாங்கள் அய்யோத்திக்கு வாராவிட்டால்
தானே நானப்போ மாண்டிடுவேன்
மாண்டிடுவேனென்று சொனனபோது
மன்னன் சொல்வார் தேசம் ஆழுமென்று
தேசம் ஆளவேணுமானுக்கால்

சீர்பாதத்தில் பாத ரெட்சை தரவேணும்

---

5445. அடக்கம்—இறுதிச்சடங்கு
5452. திகைந்த போது—நிறைவுற்ற பொழுது
5461. பாதரெட்சை—செருப்பு; மிதியடி

தந்தால் அதை வைத்துப்பூசை செய்து
தானே பட்டணத்தை ஆள்வேன் சுவாமி
ஆண்டு பதினாலுஞ் சென்ற பின்பு
அடுத்த மறுநாள் வாராதிருந்தால்

அக்கினிவேள்விக்குளிதான் வளர்த்து
அந்தவேள்வியில் நானிறந்திடுவேன்
பரதாள் வானிப்படி உரைத்தபோது
பள்ளி கொண்டசுவாமியுஞ்சம்மதித்து
பாதரெச்சயைத்தானெடுத்து

பரதாள்வாரிடந்தான் கொடுத்தார்
தம்பிதேசமதைச்சுகமாக
தானேயரசாண்டு தானிருப்பாய்
என்றுவிடைகொடுத்தனுப்பி விட்டார்

### பரதன் அயோத்திக்கு திரும்பிவரல்

யேற்றரெகுராமரை அடிதொழுதான்

அடிதொழுது பரதாள்வாரும்
அந்தயிடமது தன்னைவிட்டு
குகனுடநதியுந்தான்கடந்து
குறைவில்லாத்தம்பி பரதாள்வார்
அய்யோத்திப்பட்டணம்தன்னில்வந்து

அய்யாதிசதரரை அடக்கஞ்செய்து
தீர்க்கடன்நீர்க்கடன் தானுஞ்செய்து
சிறந்தபுகள்தம்பி பரதாள்வார்
வாழும்அய்யோத்திபட்டணத்தை
வரிசைதவருமல் ஆண்டிருந்தார்

ஆறிலொருகடமை தானும்வாங்கி
அசையாததோர் மணியுங்கெட்டி
நீதிப்படிதானும் வளுகாமல்
நிலமையாய்த் தேசத்தையாண்டிருந்தார்

### இராமர் தம்பியிடம் பர்ணக சாலை அமைக்கச் சொல்லல்

வடவாலமரந்தன்னைவிட்டு

வைகுண்டராமர்யெளுந்திருந்து
தம்பியிளைய பெருமாளும்
சானகிதாயார் சீதாலெட்சுமியும்
சேத்து வாய்க்கரை ஓடைவிட்டு
சிறந்த பரமசிவன்தனை நினைந்து

மானிடர்வந்தணுகாத வனம்
வனந்தனில் சுவாமி வந்திருந்து

யிந்த வனமது நல்லதென்று
யிளைய பெருமாளைத்தானழைத்து
சித்தாதி சித்தனேயிளையோனே

சிறந்தபற்ணக சாலைகட்டு
பற்ணக சாலை நீ கட்டவேணும்
பண்பாயிளைய பெருமாளே
என்றுரைத்தாரந்த ரெகுராமரும்
லெச்சுமணப்பெருமாளுஞ் சந்தோசமாய்

## தம்பி பர்ணக சாலை அமைத்தல்

அண்ணர்ரகுராமர்சொல்ப்படி
அந்தவனவாசமானதிலே
பிரம்புக்கொடியது அறுத்துவந்து
பெரியபற்ணக சாலைகட்டி
அன்னஊஞ்சாலதுதான்போட்டு

அளகன்யிளைய பெருமாளும்
பற்ணகசாலையானதிலே
பள்ளிகொண்டோன் அரசிருந்தார்
அரசிருக்கிற வேளைதன்னில்
அளகன்லெட்சுமணப்பெருமாளும்

பச்சைமால்தம்பி கனிபறித்து
பண்பாய் அண்ணருக்குக் கொடுக்கும்போது
தம்பிபொசித்துத்தான் நமக்கு
தானே கொடுவந்தானென்ன நினைந்து
வாங்கிக்கனியதைப்பொசித்திடுவார்

மன்னன் சிறிராமருஞ்சீதையுமாய்
பொசித்துநெடுநாளாயிருக்கையிலே
பூலோகம் அளந்த மாயவரும்
ஒருநாளத்த வேளையானதிலே
உலகளந்தோருட தம்பியவர்

கனியதுபறிக்க வேணுமென்று
கானவனமெல்லாந்தான் திரிந்து
தேசவன மெல்லாந்தான் திரிந்து
சிவந்தகனியது கிடையாமல்
பற்ணக சாலையானதிலே

பண்பாக அரிராமரிடம்
யிளைய பெருமாளும் வந்து சேர்ந்தார்
யேறிட்டுப் பாற்த்தார் ரகுராமர்
யின்றைக்குப்பறித்த கனி தானுமெங்கே
யென்றுகேட்டாரே ரெகு ராமரும்

மாயன் ரெகு ராமர் கேட்டபோது
மன்னர் லெச்சுமணர்தானுரைப்பார்

தேடிவனமெல்லாந்தானலைந்தேன்
சிவந்தகனியொன்றுங்கிடைக்கவில்லை
தம்பிலெச்சுமணர் சொன்னபோது

தரணியளந்த சிறிராமரும்
பரமசிவனுரைத்தானினைந்து
பண்பாய் விண்ணதில் பாற்த்தபோது
ஆகாச மாற்க்கமாய் மூன்றுகனி
அப்போது ரெகுராமர் மடியில்விள

விளுந்த கனி மூன்றையும் ரெகுராமர்
மேகவண்ணர் கையால் தானெடுத்து
ரகுராமர் ஒருகனியைத்தான் பொசித்தார்
சீதைக்கொருகனிதான் கொடுத்தார்
சித்தம் மகிள்ந்துமே ஒருகனியை

தம்பி லெட்சுமணர் கையில் கொடுத்தார்
கொடுத்த கனியை வாங்கித் தெரியாமல்
மந்திரவாள் உறைக்குள்ளே போட்டுக்கொண்டார்
பற்ணக சாலையானதிலே
பச்சைமுகில் வற்ணர் அரசிருந்தார்

லெச்சுமிதேவியும் அரசிருந்தாள்
லெச்சுமணப்பெருமாழும் அரசிருந்தார்

### சூர்ப்பனகை பிள்ளைப்பேறு

வீற்றிருக்கின்ற நாளையிலே
மிக்கத்தென்னிலங்கா புரியில்

வல்லரக்கனுட தங்கையவள்
வாய்த்த சூர்ப்பனகையவழும்
விக்கிரசிங்கன் ஆனவன்தான்
மெல்லி நல்லாளை மணமுடித்தான்
மாலையிட்டு மணம் புரிந்து
வாள்ந்துண்டிருந்தார் சிலகாலம்

வாள்ந்துண்டிருக்கிற நாளையிலே
வாணுதலாளவள் கெற்ப்பமுற்றாள்
மாதம் பத்துந்திகைந்த போது
மதலை ஒரு ஆண்பிள்ளை பெற்றெடுத்தாள்
பிறந்த அந்த பாலனுக்கு

பேருமிட்டாளந்த சூர்ப்பனகை
குலைவாளரக்கன் என்று சொல்லி
கொம்பனையாள் பேருமிட்டாள்
பேருமிட்டுச் சூர்பனகை
பெண்கொடியாள் தான் வளர்த்தாள்

## சூர்ப்பனகையை கணவன் கறி வாங்கி வரவேண்டல்

யிருக்கிறதோரந்த வேளைதன்னில்
யேதுரைப்பானந்த விக்கிறசிங்கன்
கேள்க்கவேணும் பெண்ணே சூர்ப்பனகை
கீற்த்தி பெற்றதொரு வாற்த்தை தன்னை
உன்தமையனுட அரண்மனையில்

வேட்டைக்கறி வாங்கிவரவேணும்
விக்கிறசிங்கன் சொன்னபோது

## சூர்ப்பனகை தன் அண்ணன் வீட்டில் வந்து கறிவாங்கி வரல்

மெல்லியரும் அந்த சொல்ப்படியே
வல்லரக்கனுட அரண்மனையில்
வண்டோதரியுட யிடத்தில் வந்து

வேட்டைக்கறியது வாங்கிக் கொண்டு
விக்கிறசிங்கன் அவன் தனக்கு
ஆக்கி அமுதுகள் தான் கொடுத்து
ஆயிளையாளவள் தானிருந்தாள்
யிப்படியே பல நாளாக

யேந்திளையாளவள் வாங்கி வந்தாள்

## வண்டோதரி கறி தர மறுத்தல்

ஒரு நாளையத்தினம் ஆனதில் தான்
ஒன்றேடியாளந்த சூர்ப்பனகை
வண்டோதரியிடத்தில் வந்து கறிகேட்டாள்
மாதுதானப்போ யேதுரைப்பாள்

யேண்டிபெண்ணே மைத்துனியே
யேந்திளையே கறி தருவதில்லை
உன்னுடையகணவன் அண்ணரையும்
உற்றமலைவேட்டையாடச் சொல்வாய்
மலைவேட்டையாடினுக்கால்

மான்வரையாடுகள்பிடித்து வந்து
கறிசமைத்துநீயுங்கொடுக்கொண்ணுதோ
காரிகையே யெந்தன் மைத்துனியே
என்றங்குரைத்தாளே வண்டோதரி
யேந்திளையாளந்த சூர்ப்பனகை

விக்கிறசிங்கன் அரண்மனையில்
மெல்லிநல்லாழும் வந்துசேற்ந்தாள்

---

5603. மைத்துனி—கணவனின் தங்கை

### சூர்ப்பனகை அச்செய்தியினைக் கணவனிடம் கூறல்

என்னுடையமன்னா யென்கணவா
யேற்றபுகள்மன்னா கேள்க்கவேணும்
வேட்டைக்கறியதுகேட்டதற்கு

மெல்லிநல்லாளந்த வண்டோதரி
உங்களையிகள்ச்சியாய் சொல்லிவிட்டாள்
உத்தகாரியத்தை உரைத்துவிட்டேன்
அன்னேரம்அப்போ நானடியாள்
அசர்ந்துமிகநானுஞ் சோர்ந்துவிட்டேன்

என்றுரைத்தாளந்த சூர்ப்பனகை

### சூர்ப்பனகை கணவன் வேட்டைக்குச் செல்லல்

யேதுரைப்பான் அப்போவிக்கிறசிங்கன்
கேழுங்கேழும் பெண்ணேசூர்ப்பனகை
கீர்த்தி பெற்றதொரு வசனமதை
யின்றைக்குவேட்டைக்கு நான்போறேன்

யேற்றமான்களைக்கொடு வாறேன்
என்றுரைத்தஅந்த விக்கிறசிங்கன்
யெழுந்தானேவேட்டைதானாட

வாழும்யிலங்கா புரியுமிட்டு
வாறானேமலை வேட்டையாட

வல்லரக்கன் ராவணன் வரும்வளியில்
வாய்த்தபுகளந்த விக்கிறசிங்கன்
பாதாளத்தில் ஒருஉதட்டை வைத்தான்
ஆகாசத்தில் ஒருஉதட்டைவைத்தான்
ஒருமலைதன்னில் ஒருகாலும்

மறுமலைதன்னில் ஒருகாலும்
தலைகீழுங் கால் மேலாக
தானிருந்தானந்த விக்கிறசிங்கன்
யிருக்கிறதோரந்த வேளைதன்னில்

### ராவணனும் வேட்டைக்கு வரல்

யிலங்காபுரி நகரானதிலே
வாள்யிலங்காபுரியானதிலே
வல்லரக்கன் அந்த ராவணன் தான்
மலைவேட்டையது ஆடவென்று
வாறானே ராவணன் படைகளுடன்

### இராவணன் படைகளுடன் சூர்ப்பனகையின் கணவனிடத்தில் மாட்டிக் கொளல்

வாழும்யிலங்காபுரிதான் கடந்து

வல்லரக்கன் அந்தப்படைகளுடன்
விக்கிறசிங்கன்வாய்வளியாக
விரைவாய் ராவணன் சேனைபடை
சேனைபடையெல்லாம் ஒருமுகமாய்
சென்றார் விக்கிறசிங்கன் வயிற்றுக்குள்ளே

வயிற்றுக்குள்ளே வந்து புகுந்த போது
வாயைசிக்கென்று மூடிக் கொண்டான்
வாயை சிக்கென்று மூடிடவே
வல்லரக்கன் ராவணன் பரிதவித்தான்
அன்னேரம் அந்தராவணன்தான்

அத்தளிந்து அவன்பரதவித்தான்
யிங்கேயெந்தன் தேசமெங்கே
என்னுடைய தம்பிமார்களெங்கே
ஆசைத்தங்கை சூர்ப்பனகை
அண்ணன்கண்ணில் வந்துதான் முளிப்பாய்

என்மகனே கண்ணேயிந்திரசெயித்தே
என்றைக்குக்கண்ணில் முளிக்கப்போறாய்
என்றுரைத்துயந்த ராவணன் தான்
யிலங்கைவேந்தன்நின்று பரதவித்தான்
பரதவிக்கும் அந்தவேளைதன்னில்

பார்த்தானே அந்த விக்கிறசிங்கன்
யிந்த அபகீர்த்தி போதும்போதும்
என்றுநினைந்து விக்கிறசிங்கன்
வாயைத்திறந்தவன் ஊதிவிட்டான்
வல்லரக்கன் படைகளும் வெளியில்வந்தார்

தலைகீழுங்கால் மேலாக
தானுமப்பாலே போய்விழுந்தார்
யிருபது கைகளை கீளேஊன்றி
யிலங்கைராவணன் எழுந்திருந்தான்
யேறிட்டுப்பாராமல் ராவணன்றான்

யிலங்காபுரிநகர் தனைநோக்கி
படைகளுடன் கூடி தானும் வந்தான்
பத்துத்தலையுள்ள ராவணன்றான்
பாரச்சிம்மாசன மேடைதன்னில்
பாவினையாகவே யிருக்கையிலே

யிருக்கிறதோரந்த வேளைதன்னில்
யேத்த விக்கிறம சிங்கனவன்
வனவாசமானது தான் கடந்து
வாள்யிலங்காபுரி தன்னில் வந்தான்

---

**5647.** சிக்கென்று—இறுக

## சூர்ப்பனகை கணவன் அவளை மீண்டும் அண்ணன் வீட்டுக்குச் சென்று கறிவாங்கி வரக்கூறல்

என்னுடையபெண்ணே வாள்மயிலே
யேந்திழையே நானொன்றுசொல்லக்கேழு
மலைவேட்டையது ஆடப்போனேன்
மான்மறைகளொன்றுங் கிடைக்கவில்லை
உன்தமயனந்த ராவணன்தான்
உத்தமலைவேட்டைதானாடி

மான்மறைகள்ரெம்பக் கொண்டுவந்தான்
வாணுதலே பெண்ணேநீதானும்
வல்லரக்கன் ராவணனிடமதிலே
வாய்த்தவேட்டைக்கறி வாங்கிவாராய்
விக்கிறசிங்கன் சொன்னபோது

மெல்லியநல்லாளவள் தானும்வந்து
என்னுடைய அண்ணாசகோதரனே
யிப்போஒருவார்த்தை சொல்லக்கேழும்
என்னுடமன்னவர் உமதுமைத்துனர்
யேத்தமலை வேட்டையாடப்போனார்

வேட்டையானது பலிக்கவில்லை
விக்கிறசிங்கனானவற்க்கு
உம்முடயிடமதில் தானும்போய்
உத்தகறிவாங்கி வரவேசொன்னார்
என்றுரைத்தாளந்த சூர்ப்பனகை

## இராவணன், சூர்ப்பனகையிடம் கணவனின் தலையை அறுக்கக் கூறல்

யிலங்கை ராவணனேதுரைப்பான்
யிங்கேவாயிங்கேவா தங்கையரே
யிருபதுகையாலே சேர்த்தெடுத்தான்
என்னுடையதங்கை சூர்ப்பனையே
யேத்தமலை வேட்டையாடப்போனோம்

மலைவேட்டையாடினயிடமதிலே
வாணுதலே நான்பட்டபாடதெல்லாம்
பட்டபாடு சொல்லவேணுமானால்

---

5684. தமயன்—அண்ணன்
5694. மைத்துனர்—தங்கையின் கணவர்
5707. பட்டபாடு—துன்பம்

பனைஓலைதன்னிலும் அடங்காது
யிப்புவிதன்னில் பெரியோர்கள்

எழுதமுடியாது தங்கையரே
அண்ணன் பட்டபாடதுதான்
ஆயிளையே உனக்கேற்றிடுமோ
உன்கணவன் தன்னுடதலையறுத்து
ஒண்ணுதலேயிங்கே வந்ததுண்டால்

உன்மகன்குலைவாளரக்கனுக்கு
உற்றயிலங்கபுரிநகர் முழுதும்
யிலங்கை யெழுநூற்றுக்காதமெல்லாம்
யிலங்கை பட்டமது தரித்திடுவேன்
என்மகன் யிந்திரசெயித்தவனை

யேவல்ஆளாக நான்விடுவேன்
என்றுரைத்தானந்த ராவணனும்
யேந்திளையாள் தலையாட்டிக்கொண்டாள்

## *சூர்ப்பனகையின் சூழ்ச்சி*

அந்தவாற்த்தையது கேட்டுக்கொண்டு
ஆயிளையாழுங்கணவனிடம்

என்னுடமன்னவாயென்கணவா
யிப்போஒருவசனஞ் சொல்லக்கேழும்
என்னுடஅண்ணன் ராவணனும்
யிசைந்து மலைவேட்டையாடினதில்
மான்மறையானது கிடையாமல்

வல்லரக்கனவர் வந்துவிட்டார்
என்றுரைத்து அந்தசூர்ப்பனகை
யேந்திளையாழுந்தானிருந்தாள்
யிருந்துசிலநாள்களித்தபின்பு
யேந்திளையாளந்த சூர்ப்பனகை

மங்கைநல்லாளந்தசூர்ப்பனகை
மணவாளன் தன்னுடன்வசனஞ்சொல்வாள்
என்னுடையமன்னவரேயென்கணவ
யிசைந்துநானொரு மண்டலந்தான்
பதிராதவமது யிருக்கவேணும்

பண்பாகயானும் உரைக்கலுற்றேன்
மறுமனைதன்னிலிருக்கவேணும்
மணவாளரேயென்று தானுரைத்தாள்
என்றுரைத்த அந்தசூர்ப்பனகை
யிசைந்து கணவனுஞ்சம்மதித்து

---

5730. மரை > மறை (பே. வ. மா)—மான்வகைகளுள்ஒன்று
5739. ஒருமண்டலம்—நாற்பத்தொருநாள்

அங்கே மறுமனைதனில்போனாள்
அவளிருந்தாள்விரதம் ஒருமண்டலம்
நங்கைசூர்ப்பனகை தானிருந்தாள்
நாற்பத்திரண்டாம் நாள்தனிலே
வாணுதல் சூர்ப்பனகை நீராடி

வந்தாளே வெகுஉல்லாசமாய்
கொண்டைகோதிதான்முடிந்து
கொண்டைதனில் பிச்சிமாலைசூடி
நெத்திப்பிறையுடன் உச்சிப்பிறை
நேர்விளிரெண்டும் மையெழுதி

கொழுந்துகள் நன்றாய்ச்சூடிக்கொண்டு
குருவிரெத்தம்போல் வாய்சிவக்க
வாடைமணங்களைப்பூசிக்கொண்டு
வாணுதலாளந்த சூர்ப்பனகை
செப்புக்குடமது கையிலெடுத்து

தேன்மொளியாளவள்வரும்நேரம்
கண்ணில்கண்டானந்த விக்கிறசிங்கன்
காரிகையாள் வருங்கோலமதை
காமவெறியால்அரக்கனுந்தான்
காரிகையாளைவந்து சேற்த்தெடுத்தான்

ஆவிக்கெட்டியவன் சேற்த்தெடுத்து
அரண்மனைதன்னில் கொடுபோனான்
பள்ளியறைமேடையானதிலே
பாவினையாகவே தானிருக்க
மன்னவனும் அந்தமடக்கொடியும்

வாயால் சரசமதுபேசிக்கொண்டு
யிருக்கிறதோரந்தநேரமதில்
யேதுரைப்பாளந்த சூர்ப்பனகை
கேள்க்கவேணும் யெந்தன்மன்னவரே
கீற்த்திபெற்றதொருவசனமதை

உங்கள் உயிர்நிலையானது சொல்லவேணும்
உற்றபுகள் பெற்றமன்னவரே
உயிர்நிலையானது சொல்லாவிட்டால்
உங்கழுக்கு நான் பெண்டிருப்பதில்லை
காமமயக்கத்தால் விக்கிறசிங்கன்

கருத்தளிந்து தானேதுரைப்பான்

### சூர்ப்பனகையின் கணவன் தன் உயிர் நிலைபற்றிக்கூறல்

அப்போது அந்த விக்கிறசிங்கன்

---

5756. கொழுந்து—மரிக்கொழுந்து
5776. உயிர்நிலை—உயிர்நிலைபெற்றுள்ள இடம்
5779. பெண்டு—பெண்டாட்டி

ஆயினையாழுக்குயேதுரைப்பான்
என்னுடஉயிர் நிலையானதுதான்
யேந்திளையேபெண்ணே சொல்லக்கேழு

எண்ணைதேய்த்துதலைமெழுகி
யிசைந்த அமுதுதான்பொசித்து
அமுதுக்கறியதுதான் பொசித்து
ஆயிளையே நித்திரைசெய்கையிலே
ஆறுவருசத்துக்கு முன்னுள்ளவரகுவைக்கல்

ஆயிளையே பெண்ணேகயிலெடுத்து
நமசிவாயமென்ற அச்சரத்தை
நாவினுலேதானும் உச்சரித்து
தொண்டையில் வைக்கலைவைத்துவிட்டால்
துண்டுதுண்டாய் தலையத்துவிழும்

என்றுவிக்கிற சிங்கன்சொன்னபோது
யேந்திளையாளந்த சூர்ப்பனகை
காமவிகாரந்தான் தீர
கருத்தாய்விளையாடி விடியுமட்டும்
சரசலீலை சொக்கிவிளையாடி

தானிருந்தாரந்த அரண்மனையில்

### சூர்ப்பனகை தன் கணவனைக் கொலைசெய்தல்

யிருக்கிறதோரந்த வேளைதன்னில்
யேந்திளையாளவளேதுரைப்பாள்
என்னுட மன்னவாயென்கணவா
எண்ணை தேய்த்து மெழுகவேணும்

தலைமுளுகவேணுமென்று
தார்குளலாளந்த சூர்ப்பனகை
மலைபோல் அன்னமதுதான்சமைத்து
மதயானையேழுகறிசமைத்தாள்
பெரும்புலிபன்றி யெருமைகளை

பெண்கொடியானவள்தான் சமைத்து
சம்பங்கியெண்ணை கொண்டுவந்து
தலைமெழுகச் சொன்னாள் மன்னவற்க்கு
தலைமெழுகி நன்றாய் குளித்தபோது
சாதங்குமித்தயிடத்தில் வந்தான்

மாமலைபோலே அன்னம் நிற்க்க
வந்துபாற்த்தானே விக்கிறசிங்கன்
ஆயிரங்கோட்டை அரிசிசாதமதை

---

5790. வைக்கோல் > வைக்கல் (பே.வ.மா)
5812. சம்பங்கி—மருந்துப் பொருள்

ஐந்துபிடியாக உறுட்டிவிட்டான்
யிருண்டமலைபோலே நின்றமுதை

யேழுபிடியாக உறுட்டிவிட்டான்
குன்றுமலைபோலே நின்றமுது
கொதித்தகுடலுமோ நிறையவில்லை
அமுதுண்டுமேதான் கைவிளக்கி
அரசிருந்தானந்த விக்கிறசிங்கன்

படுத்துநித்திரை செய்கையிலே
பைந்தொடியாளந்த சூர்ப்பனகை
ஆறுவருசத்து வைக்கலதை
ஆயிழையாளவள் தானெடுத்து
நமசிவாயமென்ற அச்சரத்தை

நாவினுல்சொல்லிஉச்சரித்து
விக்கிறசிங்கன் அவன்கழுத்தில
மெல்லிநல்லாளவள் போட்டுவிட்டாள்

### சூர்ப்பனகை தன்கணவன் தலையை எடுத்துவரல்

அரக்கனுடைய சிரசதுதான்
அறுபட்டுரெண்டு துண்டானபோது
மன்னவன்தன்னுடசிரசதையும்
வல்லரக்கன் ராவணன்அரண்மனையில்
எடுத்துவந்தாளே சூர்ப்பனகை
விக்கிறசிங்கனுட சிரசதையும்
ராவணன்சிங்காசனமீதில்

நண்ணுதலாளவள் கொண்டுவைத்தாள்

### இராவணன் சூர்ப்பனகையைப் பழித்தல்

கண்ணில்கண்டந்தராவணனும்
கணவன்தன்னுடசிரசதனை
அறுத்துப்போட்டாயே பாதகத்தி
என்அருகில் நில்லாதே அப்பாலேபோ

என்னுடகண்ணில் முளியாதே
என்றுரைத்து ராவணன் முடுக்கிவிட்டான்

### சூர்ப்பனகை தன்மகனிடம் அண்ணன் தலையறுக்க தவம்செய்யச் சொல்லல்

அப்போதுஅந்த சூர்ப்பனகை
ஆயிழையாளவள் தானழுதாள்
சண்டாளப் பாதகாராவணனே

---

5844. பாதகத்தி—கொடுமைக்காரி

சற்பனைகள் செய்துபோட்டாயே
என்மன்னவனை நானும்யிளந்தேனே
யேந்திழைமாபாவியானேன்
யினிமேலினக்காருதுணை
என்றுபரிதவித்துத் தான்புலம்பி

யேங்கியழுதவள் தானிருக்க
யேந்திழையாளவள் மனையில்வந்தான்
மனையில் வந்திருக்கும் வேளையிலே
மாதுமகனைப் பார்த்தேதுரைப்பாள்
என்மகனே குலைவாளரக்கா

யினிமேல் நானொன்று சொல்லக்கேளு
வாய்த்த தவமதுதான் புரிந்து
மந்திரவாளது வாங்கவேணும்
மந்திரவாளது வாங்கிவந்து
உன்மாமன் ராவணன் தலையறுக்கவேணும்

என்றுரைத்து அந்தசூர்ப்பனகை
யேந்திழையாளும் எழுந்திருந்து
வாள்யிலங்காபுரி தன்னைவிட்டு
வாய்த்தவனங்கழுஞ் சோலைவிட்டு
வடவாலமரமது அருகில்வந்து

வந்திருந்து அப்போயேதுசொல்வாள்
என்மகனே குலைவாளரக்கா
யிந்தவனமதில் தவம்புரிவாய்
வடவாலமரமானதிலே
வல்லரக்கன் தவமதுதான் புரிந்தான்

ஆண்டவரே சுவாமி பராபரனே
அரக்கன்ராவணன் தலையறுக்கவேணும்
மந்திரவாளது தரவேணும்

## சூர்ப்பனகை மகன் தவமிருத்தல்

வல்லரக்கன்தலை யறுப்பதற்கு
என்றுரைத்துக் குலைவாளரக்கன்

யீஸ்பரரை நோக்கித் தவசிருந்தான்
யிருக்கிறதோரந்த நாளையிலே
யீஸ்பரனும் மனதிரங்கி
மந்திரவாளதை யனுப்பிவிட்டார்
வருகுதல்லோ மந்திரவாளதுதான்

வாழுங்கயிலாசமேர்வு விட்டு
மரதகவல்லி வனமதிலே
வல்லரக்கிமகன் தவநிலையில்

---

5851. சற்ப்பனைகள்—வஞ்சனைகள்

மந்திரவாளதுதான்வரவே
மந்திரவாளதைக் கண்ணில் கண்டார்

## சூர்ப்பனகை மகன் அழிந்து படல்

மன்னன்லெட்சுமணப் பெருமாழும்
கோப(ா லர்தம்பி ஒருகைநீட்ட
குலை வாளரக்கன் ஒருகைநீட்ட
யிருபேர்கரமதைக்கண்டபோது
யீஸ்பரர் அனுப்பிவிட்டமந்திரவாள்

திரும்பிசிவனிடம் போனபோது
செப்புவார்மந்திரவாளைப் பாற்த்து
வந்தகாரணம்யேதெனவே
மகதேவருங்கேட்டபோது
யிருபேர்கரமதை நீட்டினார்கள்

யாருட கைதனில் போயிருக்க
முன்னுடிநீட்டினவன் கைதனில்போய்
முக்கியமாய் நீயுங்குடியிருப்பாய்
என்றுமகதேவர் விடைகொடுக்க
யேற்றமந்திரவாள் தான்வரவே

லெச்சுமணப் பெருமாள்கைதனிலே
வந்துயிருந்ததுவே மந்திரவாள்தான்
மந்திரவாள்தனைக் கையில்பிடித்து
வடவாலமரம் விட்டுக்கீளிறங்கி
ஆலமரம் விட்டுக்கீளிறங்கி

அளகன் லெட்சுமணப் பெருமாழும்
மந்திரவாள் கூர்மை பாற்க்கவேன்று
வடவால மரத்தையும் வீசிவிட்டார்
ஆலமரம் ரெண்டுதுண்டாக
அரக்கிமகன் ரெண்டுதுண்டாக

ரெத்தங்குருதி ஆருயோட
நீலவண்ணர்தம்பி கண்ணுல்கண்டார்
கண்ணில் கண்டாரே ரெகுராமரும்
கார்வாண ராமருமேதுரைப்பார்
ராவண சங்காரமுடிப்பதற்கு

நாம்பெலியானது செய்தோமென்று
லெச்சுமணப்பெருமாழும் சந்தோசமாய்
நீலவண்ணர்கையில் கனிகொடுத்தார்
கார்வண ராமரிடங்கொடுத்தார்
கனிதன்னைநெடுமாலும் புசித்திருந்தார்

பற்ன்னக சாலையானதிலே

---

5894. கரம்—கை

பச்சைமுகில்வண்ணர் அரசிருந்தார்

### சூர்ப்பனகை மகனின் தவநிலை காணவரல்

அரசிருக்குமந்த நாளையிலே
அப்போதுலங்கா புரிசூர்ப்பனகை
மகனுடதவநிலை பாற்க்கவென்று

வாணுதலாளந்தசூர்ப்பனகை
வாளும்யிலங்காபுரி தன்னைவிட்டு
வனங்களெல்லாந்தான்கடந்து
மரகதவல்லிவனத்தில் வந்தாள்
வந்துபாற்த்தாளந்த சூர்ப்பனகை

மகனுட படுகளந்தன்னைக்கண்டாள்

### சூர்ப்பனகை அழுது புலம்பல்

என்மகனே குலைவாளரக்கா
யினிமேல் நானென்ன செய்யப்போறேன்
மன்னவர்மகனையும் நானிளந்தேன்
மகனே மகனே என்றுபரதவித்தாள்

பெற்றவயிற்றினில் யென்மகனே
பெருந்தணலை வாரியிட்டாயே
என்றுசொல்லியந்த சூர்(ப்)பனகை
யேந்திழையாள் கீளேவிழுந்தளுதாள்
யென்மகனைக் கொன்றவனையும்நான்

யிப்போதந்தபாவியை விடமாட்டேன்
செத்துயிறந்த மகன்தனக்கு
செய்யுங்சடங்கெல்லாந் தானுஞ்செய்து
வனவாசமானதுதான் தனித்து
வாருளேயந்த சூர்ப்பனகை

கானவனமெல்லாந் தான்தேடி
காரிகையாளவள் வாறபோது
பற்னகசாலையைக் கண்ணில்கண்டு
பைந்தொடியாளவளோடி வந்து

### சூர்ப்பனகை இராமரிடம் தன்னையும் மனையாளாக்கவேண்டல்

பச்சைமுகில் வண்ணரிடமதிலே
பள்ளிகொண்டோரிடமேதுரைப்பாள்
சடைத்துமுகம்வாடியிருபேரும்
தானேவனத்தில் யிருப்பதென்ன

---

5942. தணல்—தீ
5957. சடைத்து—சோர்ந்து

என்றுசூர்ப்பனகை கேட்டபோது
யேதுசொல்லுவார் அரிகோபாலர்

கானவனத்திலே குடியிருக்கும்
கனத்தவேடுவர் நாங்களென்றார்
யென்றுசொல்லவேதான்கேட்டு
யேதுசொல்லுவாள் சூர்ப்பனகை
மன்னுயென்னையும் யிடமிருத்தி

வரிசையுடனரைசாழுமென்றார்

### இராமர் மறுத்துரைத்தல்

அந்தஉரைகேட்டு ரெகுராமர்
ஆதரவாகவே யேதுசொல்வார்
மனையாளினக்கொரு பெண்ணிருக்க
மாலையிடுவது நீதியில்லை

தம்பிவனமதில் போனவன்தான்
தானேமாலையிடுவானுன்னை
அந்தவனமதில் போவெனவே
அனுப்பிவிட்டாரே மாயவரும்

### சூர்ப்பனகை இராமர் தம்பியைத்தேடிவந்து தன்னைமனையாளாக்க வேண்டல்

சிந்தைமகிள்ந்ததோர் சூர்ப்பனகை

தேடிவாறாளே வனமதிலே
யிளையபெருமாள் கனிப்பறிக்கும்
யேற்றவனத்திலே வாறாளையா
வந்து யிளையோனைக் கண்ணில் கண்டு
வாற்த்தை சொல்லுவாள் சூற்ப்பனகை

உமக்கு மூத்தோர் வேடரென்னை
உம்மை மணஞ்செய்யச் சொல்லிவிட்டார்
சிந்தை மகிள்ந்து நீரெந்தனையும்
சிறந்தமணமது முடியுமென்றாள்
என்று அரக்கியுஞ் சொன்னபோது

### இராமர் தம்பி பதிலுரைத்தல்

யிளையபெருமாளும் யேது சொல்வார்
அண்ணரிடத்திலே யெழுத்து வாங்கி
ஆதரவாகவே வந்தாயானால்
திண்ணமுடனே நானுந்தனையும்
சிறந்த மணமதுசெய்வேனென்றார்

---

5969. மனையாள்—மனைவி
5987. எழுத்து—கடிதம்

## சூர்ப்பனகை உறுப்புக்கள் அறுபடல்

அந்த உரையதுதனைக்கேட்டு
அவள் நடந்தாளே சூர்ப்பனகை
பஞ்சவடிவென்ற வனமதிலே
பச்சைமாலுட முன்னேவந்தாள்
வந்துநின்றுமே சூர்ப்பனகை

வாற்த்தை சொல்லுவாள் ராமரோடே
உம்முடையதோர் கையெழுத்து
உடனேவாங்கி வரவுஞ்சொன்னூர்
கையெழுத்து நீர்தாருமென்று
காட்டரக்கியுங் கேட்டாளையா

கேட்டபொழுதிலே கோபங்கொண்டு
கிருஷ்ணசுவாமியும் யேதுசெய்தார்
ராமபாணத்தைக் கையிலெடுத்து
நல்லஅரக்கிதன் முதுகிலே
மூக்குந்தனத்தையும் அறுப்பாயென்று

முதுகிலெழுதினுர் ரெகுராமர்
காடுவனங்கழுந்தான் கடந்து
காட்டரக்கியும் வாருளையா
மாயோன் தம்பிமுன்பதிலே
வந்துநின்றுதான் வல்லரக்கி

யிளையபெருமாளை முகம்நோக்கி
யேதுசொல்லுவாள் வாளரக்கி
மூத்தவேடன்எழுத்துதான்
என்முதுகிலே யிருக்குதென்ருள்
யிருக்குதென்று சொன்னபோது

யிளையபெருமாழும் பாற்த்தாரையா
அரக்கிமுதுகை பாற்க்கும்போது
அளகனிளைய பெருமாழும்
மூக்குந்தனங்களை யறுப்பாயென்று
முதுகிலெழுதியிருக்குதைய்யா

கண்ணில்கண்டாரிளைய பெருமாழும்
கையில்எடுத்தாரே மந்திரவாள்
மந்திர வாளதைக்கையிலெடுத்து
மன்னனிளைய பெருமாழும்
முன்னேநின்ற அரக்கியையும்

மூக்குந்தனத்தையும் அறுத்தாரைய்யா
அறுத்தபோதிலே வல்லரக்கி
அபையமுறையமிட்டளுதாளையா

6028. முறையம்—முறையீடு

சோரையாகவே வல்லரக்கி
துள்ளித்துடித்து அழுதாளையா

காட்டரக்கியழுங் குரலோசை
கடுவாய் புலியெல்லாங் கலைந்தோட
வானிலிடி போலே குரலோசை
வனத்தில் ராமரும் சீதைக்குமே
கேட்டபோதிலே யிருபேருந்தான்

கீற்த்தியுடனே யேதுரைப்பார்
நமக்குகனியது பறிக்கப்போன
நல்லயிளையோனுக்கென்னயிடைகூறோ
பாற்த்து வரவேணுமென்று ராமர்
பத்தினி சீதையும் வாறாரையா

வேடர்வனமது தன்னில்வந்து
வீரனிளையோனைக் கண்ணில் கண்டார்
கண்டுமனமது மிகமகிள்ந்து
காட்டரக்கியுட வளமையெல்லாம்
நன்றாய் விசாரித்து மூபேரும்

நல்லகனியது தான் புசித்து
மாயன் ரகுராமரும் சீதையுமாய்
மன்ன(னி)ளையோனும் வீற்றிருந்தார்

## சூர்ப்பனகை தன் துன்பத்தினை
## அண்ணனிடம் முறையிடல்

யிப்படியிருக்கிற வேளையிலே
யேது செய்தாளந்த சூர்ப்பனகை

என்னை அபகீற்த்தி செய்துவிட்டாய்
யினிமேல் உன்னை நான் விடுவதில்லை
என்று சொல்லியந்த சூர்ப்பனகை
யேற்றவனந்தனில் ஓடிவாறாள்
கரத்தூசணனுட அரண்மனையில்

காட்டரக்கியவள் ஓடிவந்து
என்னுடைய அண்ணா கரதூசணா
யேந்திளை நிக்கிற கோலத்தைப்பார்
மூக்கைப்பாரும் அண்ணாதனத்தைப்பாரும்
முன்பிலிருக்கிற கோலம் பாரும்

யிப்படிச்செய்தார் ரெண்டுமானிடவர்
என்று சொல்ல கரதூசணன் கோபமானான்

---

6038. யிடைகூறு—இடையூறு; துன்பம்
6051. அபகீற்த்தி—இகழ்ச்சி

நாலுமுளமுள்ள மானிடவர்
நம்முடதங்கை யென்றறிந்து
யிப்படிச்செய்தகாரணம் யின்னதென்று

என்னுடையதங்கையே சொல்லுமென்ருன்
கரதூசணன்கேட்டபோது
காரிகை சூர்பனகை தானுஞ்சொவல்லாள்
எங்கிருந்தோ ரெண்டுமானிடவர்
யேற்றபன்னக சாலையானதிலே

யிருவருடன் ஒருபெண்ணுமாக
யிருக்கிறகோலத்தை சொல்லவொண்ணுது
பார்க்கப்பதினுறு கண்ணுவேணும்
பச்சைக்கிளி போலிருக்கிருர்
அண்ணர் கரதூசணர்க்காகுமென்று

ஆயினை நானுரைத்துவிட்டேன்
ஆகுமென்று நானுரைத்தபோது
அறுத்தானே பாவியிக்கோலமதாய்

## சூர்ப்பனகை அண்ணன் கரதூசணன் இராமர், தம்பியுடன் முறையீடு

அந்தவாற்த்தையது கேட்டவுடன்
அபகீற்த்திசெய்த மானிடனை

அரச்சணந்தன்னில் கொல்லவேணும்
ஆர்பாரத்துடனிருக்கும் நேரம்
மர(த)கவல்லி வனந்தனிலே
வல்லரக்கனுட படைகளுமாய்
படைகள்மிகுதி[யை]யாக் கொண்டவனும்

பாரவீரைப்போலே வந்தார்
அப்படியிருக்கிற வேளையிலே
அரிரகுராமருங் கண்டுகொண்டார்
கண்டுகொண்டார் ரகுராமருமே
கனகலெட்சுமணரும்இருக்கும் நேரம்

யிளையப்பெருமாளைத்தான் பாற்த்து
யேதுரைப்பானந்த கரைதூசணன்
அரக்கன் தங்கையென்றுபாராமல்
அபகீற்த்திசெய்தாயே மானிடவா

## கரதூசணன் இராவணனிடம் செய்தி கூறல்

யிவர்களிடம் போருசெய்ய

நம்மாலே ஆகாதென்று
கரதூசணனப்போது
கடுகவிரவாய்ஒடிவாருன்
ஓடிவந்து கரதூசணன்
உத்தராவணனிடமதிலே

கரைதூசணனப்போது
காட்டில் நடந்தசெய்திதன்னை
ராவணனுடன் முன்பதிலே
கருத்துடனவனுக்குரைக்கலுற்றான்

### இராவணன் சீற்றமடைதல்

உரைத்த மொளியதுதனைக்கேட்டு

உற்றராவணன் கோபங்கொண்டான்
அபகீற்த்தியானது செய்ததற்கு
அருந்துதியைச் சிறையெடுக்கவேணும்
என்னுடையமாமா மாரீசனே
யிப்போ ஒருவசனமுரைக்கக்கேழும்

பொன்மானாக வடிவுகொண்டு
போகவேணுமந்த வனந்தனிலே
பன்னகசாலைமுன்பாக
பதிவுடன் விளையாடவேணும்
மான்பிடித்துப் போவார்மானிடவர்

வாணுதலாளை சிறையெடுக்கவேணும்
வாணுதலாளை சிறையெடுத்து
வாழும்யிலங்கைக்கு கொடுவரவேணும்
என்றுரைத்தானந்த வல்லரக்கன்

### மாரீசன் இராவணனுக்கு அறிவுரைகூறல்

யேதுசொல்வானந்த மாரீசன்

மன்னவர்க்குதுரை மன்னவனே
வல்லரக்காகேழும் ராவணனே
நாலுமுளமுள்ள மனிதரென்று
ராமசுவாமியை யெண்ண வேண்டாம்
ராமர்பிறந்த அவதாரத்தை

நாட்டினில் யெண்ணத்துலையாதே
அவ்விடந்தன்னில் போனதுண்டால்
அரிரகுராமருங் கொன்றிடுவார்
மாரீசனவன் உரைத்தபோது
வல்லரக்கனவன் கோபங்கொண்டு

வனவாசமானதில் போகாவிட்டால்
மாரீசா உன்னைநான் வெட்டிடுவேன்
வல்லரக்கன் ராவணன் சொன்னபோது

### மாரீசன் மான் வடிவமெடுத்தல்

மாரீசனவன் யேதுரைப்பான்

---

6108. அருந்துதி—சீதை

மானென்று நானும் வடிவுகொண்டால்

மன்னர் ரெகுராமர் கொன்றிடுவார்
மாட்டேன் நானென்றுரைத்தால்
நீயும்மியிங்கேதான் கொன்றிடுவாய்
என்னுடையதோர் தேசமிட்டு
நானுந்தான் அங்கேபோய்விடுவேன்

என்றுரைத்து அந்த மாரீசன்
யின்பமுடனொரு மானுனன்
பொன்மானுக வடிவுகொண்டு
போர் வனந்தன்னில் ஓடிவந்தான்
வாழும் யிலங்காபுரி தானும்விட்டு

மரதகவல்லி வனமானதிலே
மரதகவல்லி வனந்தனிலே
வாய்த்த பன்ன(க)சாலே தன்னில்
பன்னகசாலே தன்னருகே
பதிவுடன் மானும் வந்தவுடன்

துள்ளித்துள்ளிமான்தானேடே
சூள்ந்த பன்னகசாலே முன்பில்

### சீதை இராமரிடம் மானைப்பிடித்துத் தரக் கேட்டல்

மானது நின்று விளையாட
மங்கை சீதையுங்கண்ணில் கண்டாள்
கண்ட உடனந்த லெட்சுமியும்

கார்வணர்சுவாமிக்குயேதுரைப்பார்
மான்பிடித்துச் சுவாமி தரவேணும்
வாழும் அய்யோத்திக்கு கொடுபோக
சீதாலெட்சுமி உரைத்தபோது
சிறந்தரெகு ராமரேதுரைப்பார்

மானல்லயிது மாதுமையே
வல்லரக்கனுட உபாயமிது
அரக்கனுட மாய்கை யிதுதானும்
ஆதிமனேன்மணி லெட்சுமியே
என்றங்குரைத்தாரே கோபாலர்

யேதுரைப்பாளந்த லெட்சுமியாள்
யிந்தமானைப்பிடித்துத்தாராதே போனல்
யிப்போதடியாள் உயிர்விடுவேன்
என்றங்குரைத்தாளே சீதைதாயார்
என்பெருமாளந்த கோபால சுவாமி

### இராமர் தம்பியைச் சீதைக்குக்காவல் இருக்கப் பணித்தல்

என்னுடையதம்பி லெட்சுமணரே

யிளையபெருமாளேயென்கோவே
மானைப்பிடித்து நான்வருமளவும்
மங்கைலெட்சுமியை காத்திருப்பாய்
யிளையபெருமாளைக்காவல் வைத்து

ரெகுராமசுவாமி யெழுந்திருந்து
பன்னகசாலைதனைக் கடந்து
பள்ளிகொண்டோரும் வளிநடந்தார்
துள்ளிதுள்ளிப்போனமானதுதான்
சிறந்த வனந்தனில் விழுந்தோட

அன்னேரம் அந்தரெகுராமர்
அச்சுத நாராயணப்பெருமாள்
ராமபாசக்கனை கையிலெடுத்து
ராமசாமியுந் தொடுத்துவிட்டார்
விட்டசரமது பட்டுருவி

விழுந்துதல்லோ பொன்மானதுதான்
ராமர்க்கபயம் அபையமென்று
நல்லவனந்தனில் மான்விளவே

## சீதை இலெட்சுமணனை, இராமருக்கு ஆபத்து எனக்கூறி அனுப்பல்

காதில்கேட்டாளே சீதையம்மாள்
கார்வண்ணர் தேவியுந்தானுரைப்பாள்

யிளையபெருமாளைத்தான் பாற்த்து
யேந்திழை சீதையுந்தானுரைபபாள்
மாயவர்க்கபாயம் வந்துபோச்சு
மன்னுயிளையோனை பாற்த்துவாரும்
உங்களண்ணன(ர்)க்கபாயம் வந்துபோச்சு

உலகளந்தோரை பாற்க்கவேணும்
என்றுரைத்தாள் மகாலெட்சுமியாள்
யிளையபெருமாளுந்தானுரைப்பார்
என்தாயே மகாலெட்சுமியே
என்னை ஆதரித்த மாதாயே

அண்ணர்க்கபகேடொன்று வாராதம்மா
ஆயிழை தாயே அம்மா பதறவேண்டாம்
யிளையபெருமாளும் உரைத்தபோது
போனவர்கானியிருந்தவர்க்கோ
புகள்வாற்த்தை லெட்சுமுணு சொல்வந்தீர்

யினிநானென்ன சொல்லப்போறேன்
யேந்திழை சீதையும் பரிதவித்தாள்
பரிதவிக்கிற வேளையிலே

---

**6193.** அபாயம்—ஆபத்து

## இலெட்சுமணர் அண்ணரைத் தேடிவரல்

பண்பா லெட்சுமணரேதுரைப்பார்
என்தாயே அம்மா லெட்சுமியே

என்னை ஆதரித்த மாதாவே
அஞ்சவேண்டாந்தாயே பதறவேண்டாம்
அண்ணரை நானும் பாற்த்துவாறேன்
அண்ணர் தனைபாற்த்து வருமளவும்
ஆதிமஞேன்மணித் தாயாரே

யேழுகோடது தான்கீறி
யிளைய பெருமாழுந்தானுரைப்பார்
பன்னக சாலையானதிலே
பத்தினிதாயே அம்மா அரசிருப்பாய்
ஆதி லெட்சுமணர்வளிநடந்து

ஆயன் திருமாலைக்காணவென்று
வனமென்றவனமெல்லாந்தான் கடந்து
மானிட வரூடாடாதவனம்
மான்கள் விளையாடும் வனந்தனிலே
வந்து கண்டாரே ரெகுராமரை

## இராமர் இலெட்சுமணரைக் கோபித்தல்

அன்னேரம் அந்த ரெகுராமர்
அளகன் லெட்சுமணரைத்தான் பாற்த்து
என்னுடைய தம்பி லெட்சுமணு
யேந்திழை சீதயைத்தனியே வைத்து
வனவாசமானதில் தனியேவைத்து

மன்னன் யிளையோனே யேனடாவந்தாய்
கடுவாய் புலியது கொடுபோச்சோ
காட்டானைமிருகங் கொடுபோச்சோ
சண்டாளப்பாதக லெட்சுமணு
சதிவுசெய்தாயே தம்பியரே

என்றுரைக்க அந்தரெகுராமரும்
என்பெருமாள் கோபாலரரசிருந்தார்
அரசிருக்கிற வேளைதன்னில்

## இராவணன் உருமாறி வரல்

அன்றிலங்கா புரியானதிலே
வல்லரக்கனந்த ராவணன் தான்

---

6216. கோடு—வரை

6223. ஊடாடாத—புகுந்திராத

6225. சதிவு—சதி

வேசமாறியே அவன்தானும்
கைதனில் சுரைக்கூட்டைதானெடுத்தான்
காவிவேட்டியும் உடுத்துக்கொண்டான்
திருப்பிரம்பானதைக் கையிலெடுத்தான்
சிறந்தபுலித்தோல் தோளிலிட்டான்

சன்னியாசிபோலே வடிவுகொண்டு
தானேவந்தான் யிலங்கைராவணனும்
பாதாளத்தேரிலேறிக் கொண்டு
பத்துத்தலையுள்ளோன் தேர்நடத்தி
பாதாளத்தேரை நிறுத்திவிட்டு

பண்டாரச்சன்னியாசியேதுரைப்பான்
பிச்சைபோடுதாயே பிச்சைபோடு
பெண்கொடியேதாயே பிச்சைபோடு
வனவாச மானதிலிருப்போர்க்கு
என்னபிச்சையிடப் போறேனென்றாள்

என்றுரைக்க அந்தலெட்சுமியாள்
யேதுரைப்பானந்த சன்னியாசி
காய்கனியானது யிருந்தாலும்
காரிகையே அம்மாபிச்சையிடு
பண்டாரச்சன்னியாசி உரைத்தபோது

பத்தினிதாயாரும் யேதுரைப்பாள்
காய்கனிதன்னை கையிலெடுத்து
பிச்சையிடதாயார் வந்தபோது
வாசல்நடையது தான்கடந்து
வாணுதலே பிச்சையிடு

வாசல்நடைக்ககம் தானும்நின்று
மாதுதாயார் பிச்சையிட்டாள்
ஓரடிக்கடந்து நீ பிச்சையிட்டால்
உடயவர்கயிலாசம் போயிருப்பாய்
யீஸ்பரர் கயிலாசம் போயிருப்பாய்

என்றுரைத்தாரந்த பண்டாரம்
வலதுகையாலே ஓடெடுத்தான்
யிடதுகையாலே யிசங்கொடித்தான்
யிதையின்னதென்று நீசொல்லவேணும்
யிப்படிப் பண்டாரஞ் சொன்னபோது

---

6241. வேசம்—உருவம்

6251. பண்டாரம்—பிச்சைக்காரன்

6266 நடைக்ககம்—நடையினுள்ளே

6272. ஓடு—திருவோடு (பிச்சை வாங்கும் பாத்திரம்)

## இராவணன் சீதையைக் கடத்திச் செல்லல்

அரக்கன்ராவணன் மாய்கைசெய்து
ஆக(ா)சத்தேரதைக் கொண்டுவந்து
ஆரும் ஒருவருக்குந் தெரியாமல்
சீதையிருப்பிடம் பூமியுடன்
சேற்த்துதேருக்குள் வைத்தேறிக்கொண்டு

என் கையில்யிருப்பது பேர் சொல்லவேணும்
என்று பண்டாரம் உரைத்தபோது
யிடதுகை தனிலிருப்பதுதான்
யிசங்கென்று அம்மை உரைத்துவிட்டாள்
வலதுகை தனிலிருப்பதுதான்

மங்கை ஒடல்லவோ பண்டாரம்
ஓடென்று சீதை உரைத்த போது
ஓடுதல்லோ ஆகாசத்தேரதுதான்
ஆகாசத்தேரது ஓடிடவே
ஆதிலெட்சுமித் தாயார் பரிதவித்தாள்

யிறையவரே சுவாமியேழைபங்கா
யேழையடியாளிந்தப் பாடுபட
எழுதினாரோ முன்னாள் பிரமதேவன்
என்றுரைத்துத் தாயார் சீதையரும்
நாகங்களே சிறுதாருக்களே

ரகுராம மூற்த்திக்குச் செய்தி சொல்லும்
கரடி புலியே சிங்கங்களே
கார்வணர் சுவாமிக்குச் செய்தி சொல்லும்
தேரில் ஒருபெண்பிள்ளைபோறாளென்று
திருமால் சுவாமிக்குச் செய்தி சொல்லும்

என்றுபுலம்பி அம்மை சீதையரும்
என் பெருமாளுக் கடையாளம் போட்டாள்
உடுத்த முந்தாணிச்சேலையதில்
ஒருமுளமானது தான் கிளித்து
மாயவர்க் கடையாளந்தானும் போட்டு

மனோன்மணிசீதை அம்மையுந்தான்
யிப்படியிருக்கிற வேளையிலே
யிசல்வாய் ராவணன் தானுமப்போ
தேரை நடத்தியே ராவணன்தான்

---

6276. மாய்கை—மாயஜாலம்

6295. நாகம்—பாம்பு
6295. தாரு—வாத்துக்கோழி
6303. முந்தானை > முந்தாணி (பே. வ. மா)
6304. ஒருமுளம் – கையில் முட்டிலிருந்து நடுவிரல் நுனி வரை உள்ள பகுதி

### இராவணனைச் சடாயு வந்து தடுத்தல்

தென்னிலங்கைக்குப் போகலுற்றான்

வருகிறதோரந்த வேளைதன்னில்
வாய்த்த வனங்கழுஞ்சோலைவிட்டு
சடாயு தேவனுட வனந்தனிலே
தானே ராவணன் தேர்வரவே
வலதுசிறகதை வீசிவிட்டான்

வாய்த்தசடாயு கீளேவிழுந்துவிட்டார்
சடாயுராசன் கீளேவிழுந்தவுடன்
சானகிஅம்மாளுஞ் சாபமிட்டாள்
மாயாவுதாரர் யிங்கேவருமளவும்
மாதுதாயார் லெட்சுமியுஞ் சாபமிட்டாள்

வதைத்து வதைத்து நீ கிடப்பாயென்று
மாதுலெட்சுமித் தாயார்சாபமிட்டாள்
சாபமிட்டு மகாலெட்சுமியும்

### இராவணன் சீதையை சிறைவைத்தல்

சானகிதேவியுந்தான் வாழும்
சடாயுவாள்வனந்தான் கடந்து

தானேராவணன் தேர்நடத்தி
வாழும்யிலங்கா புரியானதிலே
வல்லரக்கன் ராவணன்தானும் வந்தான்
செண்பகப்பூங்கா வனம்தனிலே
சீதைதேவியை சிறையில்வைத்தான்

சுத்தில்அரக்கியரை காவலில் வைத்தான்
திருச்சடையாளைத் துணையாய்வைத்தான்
பண்பாயரக்கன் சிம்மாசனத்தில்
பத்துமுடி ராவணன் வந்தரசிருந்தான்

### இராமர் சீதையைக்காணாமல் வருந்தல்

மரதகவல்லி வனந்தனிலே

மான்பிடிக்கபோன ரெகுராமரும்
மரதகவல்லி வனமதிலே
வாய்த்தபன்னக சாலைதன்னில்
பள்ளிகொண்டோர் வந்துபாற்த்தபோது
பரக்கப்பரக்கத்தான் முளித்தார்

---

6313. சடாயு—ஒருபறவை

6331. சுத்தில்—சுற்றுப்புறத்தில்

6340. பரக்கபரக்க—அங்கும்இங்கும்

லெச்சுமிதேவியைக் காணுமல்
யிராம சுவாமி பரதவித்தார்
அழுதாரே அப்போது ரெகுராமரும்
அருந்துதியாளைக் காணுமல்
எந்தனுடனே பிறந்ததம்பி

யிப்போதுயிங்கே தானிருந்தால்
தம்பிலெட்சுமணரிருந்ததுண்டால்
தரணியில் அவனையும்வைப்பாஞே
வனத்தில்வாழும் பச்சிபறவைகளே
மான்மறையாகிய மிறுகங்களே

வாணுதல்சீதயைக் கண்டீர்சளா
வருத்தத்துடன் ரகுராமருந்தான்

### இராமரும் தம்பியும் சாடாயுவைக் காணல்

யிப்படிப் பரதவித்துயிருக்கும்நேரம்
யேந்திளை சீதையம்மைதனைத்தேடி
வனங்களெல்லாம் பாற்க்கவேணும்

மாயவர்சுவாமியும் வளிநடந்தார்
துய்யவனவாசஞ் சோலைவிட்டு
சுவாமி நாராயணப்பெருமாள்
சடாயுராசன் வனந்தனிலே

தார்குளல் சீதைதுயிலைக்கண்டார்
வனத்திலிருபேரும் வாறபோது
வாய்த்தசடாயுவைக் கண்ணில்கண்டார்
அன்னேரம் அந்தசடாயுராசன்
அரிரகுராமர்க்கு யேதுரைப்பான்

### சடாயுநடந்த செய்தி கூறல்

எந்தன்பெருமாளே கோபாலரே

யேளைபங்காளனே புண்ணியோனே
சீதைதாயாரை சிறையெடுத்து
தென்னிலங்கை ராவணன்கொடுபோனுன்.
ஆகாசத்தேரின் மேலேவைத்து
அரக்கன்ராவணன் கொடுபோருன்

அன்னேரம் நான்விடமாட்டேனென்று
அரக்கன் ராவணனேடு சண்டைசெய்தேன்
அப்போது அந்தராவணனும்
அவனும் என்னேடோரு வாற்த்தைசொன்ஞன்
உயிர்நிலைச்சொல்லிப் பொருதவேணும்

உண்மையுள்ளசடாயுவே யென்ருன்
என்னுடைய உயிர்நிலைதான்
யேற்றவலதுசிறகென்றுரைத்தேன்

---

6350. மிருகம்>மிறுகம் (பே.வ.மா)
6360. துகில்>துயில் (பே.வ.மா)—துணி

அப்போது அந்தராவணனும்
அவன்வலதுசுண்டு விரலென்றுரைத்தான்

யிப்படியாகவே சொல்லிக்கொண்டு
யிருபேரும் போர்பொருதோம்
ஆகாசந்தன்னில் தான்பறந்து
அரக்கன் உரைத்த விரலைக்காத்தலுற்றேன்
ஆனதினால்தான் நானடியேன்

அரக்கன் மந்திரவாள்தனையெடுத்து
வலதுசிறகதையறுத்து விட்டான்
அன்னேரந்தாய் மகாலெட்சுமியும்
மாயவர்க்குச் செய்தி சொல்லுமட்டும்
வதைத்து வதைத்துக் கிடப்பாயென்று

மகாலெட்சுமித்தாயருஞ் சாபமிட்டாள்
ஆனதினால் நானடியேன்
அழுந்துகிறேனிந்த வனந்தனிலே
சடாயுதேவனுரைத்த போது
தரணியளந்த பெருமாளும்

அந்த வாற்த்தையேது கேட்டபோது
அச்சுதராமரே துரைப்பார்

### சாடயு இறந்துபடல்

சிறகதுதன்னைத் தழுக்கவைத்து
சிறந்தஉயிரைத் திருப்புகிறேன்
பட்டதழும்பை நானும்ஆத்திவைப்பேன்

பண்பாய்சடாயுவேயெழும்பிடுவாய்
என்றுரைக்க அந்தகோபாலசுவாமி
யேதுரைப்பான் அப்போசடாயுதேவன்
வடுப்பட்டால் எங்கள்குலமதுதான்
வையகங்கள்தன்னிலிருப்பதில்லை

மாயவர் ரெகுராமகோபாலரே
மாயானம் யில்லாதயிடந்தனிலே
மாயவரே யென்னை அடக்கஞ் செய்வீர்
வருந்தி சடாயுமோதானுஞ் சொன்னர்
அடக்கமானது செய்துவிட்டு

அச்சுத ரெகுபதி நீர் போவி(ரெ)ன்றார்

---

6404. வடு—காயம்

6405. வையகம்—உலகம்

6407. மாயானம்—இறந்தவரை அடக்கம்செய்த இடம்; புதைகுழி

## இராமர் சடாயுவை அடக்கஞ்செய்தல்

சடாயுதேவருரைத்தபோது
தரணியளந்த பெருமாளும்
யீரேழு பதினாலுபுவனமெல்லாம்
எங்கும் மாயானமாய்த் தெரியக்கண்டு

வைகுண்ட நாரயணப்பெருமாள்
வலதுதிருத்துடையைத்தான்கீறி
திருத்துடையானதுதான்கீறி
சிறந்தசடாயுவை அடக்கஞ்செய்தார்
சாடாயுதேவனையடக்கஞ்செய்து

தரணியளந்தோன் யெழுந்தருள
வாருரேநந்தக்கோபாலர்
வனமென்றவன மெல்லாந்தானுமிட்டு
வடவால மரமானதின்கீள்
மாயன்ரகுராமர் அரசிருந்தார்

மாயன்ரகுராமருடன்கூடி
மன்னர்லெட்சுமணர் அரசிருந்தார்

## இராமர் இலெட்சுமணரிடம் நடந்த செய்தி கேட்டல்

அரசிருக்குமந்த நாளையிலே
அளகர்தம்பியைத்தான் பாற்த்து
என்னதான்சீதை உரைத்தாளென்று

யேந்திழையைத்தனியே வைத்து நீபோனாய்
உள்ளவாற்த்தையை உரைக்கொண்ணுதோ
உரைத்தவாற்த்தை சொல்லுந்தம்பியரே

## இலெட்சுமணர் பதிலுரைத்தல்

உலகளந்தோனவர் கேட்டபோது
மானைத்துரத்தி நீங்கள்போனீர்கள்

மானதுஅம்பினால் பட்டவுடன்
ராமர்க்கபயமென்று (ெ)வழுந்த சத்தம்
கற்புச்சூடாமணித்தாயார் கேட்டுக்கொண்டு
எண்ணுயகர் (க்)கபகேடம் வந்துபோச்சு
லெச்சுமணரேபோய் பாற்த்துவாரும்

---

6414. புவனம்—உலகம்
6417. தொடை > துட (பே. வ. மா)
6439. என்னுயகர் என்பது எண்ணுயகர் என்று எழுதப்பட்டுள்ளது.

என்றுரைத்த தாயார்தன்னைப்பார்த்து
எங்கள் தாயா(ர்)க்கு தெளிவு சொன்னேன்
அண்ணர்க்குபகேடம் வந்ததுண்டால்
ஆயினதாயே கதிரோனொளி மங்கிவிடும்
என்றுபதிலடியேனுரைத்தபோது

போனவர்காணரி யிருந்தவற்க்கோ
யென்றுநினைந்து நீர்தற்க்கஞ்சொன்னீர்
யிப்படிஉரைத்த வாற்த்தையதால்
யான்பொறுப்பேனோ அண்ணாசுவாமி
ஆனதால்நான் பொறுக்கமாட்டாமல்

அடியேன்நானுங்களைத் தேடிவந்தேன்
யிப்படியிளையேனுரைத்தபோது

## இராமர் இலெட்சுமணர் தவறினைச்சுட்டிக் காட்டல்

எங்கள்நெடுமாலேது சொல்வார்
யிம்மட்டுந்தானோடா அவழுரைத்தாள்
யின்னம்யேதாவது உண்டோஅப்பா

உன்னைத்துணையாகத் தானும்வைத்து
உகந்துமான்பிடிக்க போனபோது
என்னதான் அவள் சொன்னாலும்
யேந்திளையை விட்டுப்பிரியலாமோ
நீயும் பிரிந்துவிட்டதாலே

யேந்திளை சீதையை யிளக்கலாச்சே
யிப்படி செய்ததம்பி லெச்சுமணரே
என்கண்ணில் முளியாதே அப்பாலேபோ
யிப்படி ரெகுபதி உரைத்தபோது

## இலெட்சுமணர் தன் உயிர்விடத்துணிதல்

என்கண்ணில் முளியாதே அப்பாலேபோ

யிசைந்து மறுமொளி உரைக்கலுற்றார்
அங்கே தானுரைத்த வாற்தையது
அரைநாளிகை உயிர்வைத்திருக்கொண்ணாது
யிங்கே சுவாமி உரைத்ததினால்
யிந்தச்சணமே நானிருக்கொண்ணாது

அவிடத்துக்கும் யிவிடத்துக்கும் யிணையாக

---

6454. யிம்மட்டும்—இவ்வளவு

6457. உகந்து—விரும்பி

6470. யிந்தச்சணமே—இப்பொழுதே

ஆதவர் சுவாமி யிப்போ வாள் நாட்டி
எந்தன் உயிரையிப்போ விட்டிடுவேன்
என்றுரைத்து லெட்சுமணர் வாள்நாட்ட

### இராமர் அவரைத்தேற்றல்

மன்னவாலெட்சுமணப் பெருமாளே

என்றுரைத்துரகுராமர் தம்பிதனை
எடுத்துகரத்தினுல் சேர்த்தணைத்து
தம்பிமுகத்தையுந்தான் தடவி
தான்சொரிந்த கண்ணீரையுந்துடைத்து
லெச்சுமணரேதம்பியரே நீர்தானும்

யாதொருகவலையும் வைக்கவேண்டாம்
என்று அரசிருந்தாரிருபேரும்
அரசிருக்குமந்த நாளையிலே
ஆதவர்ரெகுபதி கோபாலசுவாமி
லெட்சுமணப்பெருமாள் மடிமீதில்

மாயாவுதரனும் பள்ளிகொண்டார்

### அனுமான் வந்து அடி தொழுதல்

பள்ளி கொண்டிருக்கிற வேளையிலே
பாரில் நமது துரை வாளனுமான்
அளகுள்ள நமதுதுரை வாளனுமான்
வடவால மரத்தில் யேறி கனிப்பொசிந்து

கண்ணில்கண்டானே வாளனுமான்
ஆலின்யிலையதை தான் பறித்து
அரிராமர் பேரில் எடுத்தெறிந்தான்
மாயவர் பேரில்யெடுத்தெறிந்தான்
மன்னர்யிளைய பெருமாழுங்கண்டார்

செங்கை வில்லுக் கொடியாலே
ஆலிலையானதையகற்றி விட்டார்
வெளிப்பாற்த்தாரே யிளையோரும்
மெய்ப்பாய் அனுமானைக் கண்ணில் கண்டார்
கார்வணர்தம்பியுங் கோபங்கொண்டு

கையில்வில்லெடுத்துஞாண் பூட்டிடவே
கார்மேகவண்ணர் முளித்துவிட்டார்
மன்னர்லெச்சுமணரைக் கண்ணில்கண்டு
மறுமொளிசொல்லுவார் ராமசுவாமி
பெற்றபிள்ளைதானே வாளனுமான்

---

6472—6473. வாள் நாட்டி உயிரைமாய்த்துக் கொள்ளுதல்
தற்கொலை முறைகளில் ஒன்று

6486. பள்ளி—துயில்; தூக்கம்

பேர்பெரியதம்பி லெட்சுமணரே
யேற்றின வில்லே கீளிறக்கு
யிளையபெருமாளே தம்பியரே
அப்போது அனுமன் தூதுவனும்
ஆலமரம்விட்டுக்கீளிறங்கி
அரிராமரை அடிதொளுதான்

## அனுமான் நடந்த செய்தி கேட்டலும், இராமர் பதில் கூறலும்

நந்தக்கோபாலா உன்சரணமையா
நரசிங்கமூர்த்தியே உன்சரணமையா
பள்ளிகொண்டோனே உன்சரணமையா
அடிதொழுதந்த அனுமானும்
அரிராமர்முன்பில் யேதுரைப்பான்
யிருபேரும்நீங்கள் கன்றதுபோல்
யிந்தவனத்தில் வந்ததென்ன
அனுமராசனுங்கேட்டபோது
அரிரகுராமருந்தானுரைப்பார்
கூனிவிட்டதோர் சாபத்தினுல்
கூண்டவனவாசம் வந்துவிட்டோம்
பன்னகசாலையானதிலே
பாவித்திருந்தோஞ் சிலகாலம்
வாள்ந்திருக்கிற நாளதிலே
மான்வேட்டையது ஆடவென்று
வனவாசமானதில் போனவுடன்
மங்கைமனேன்மணி லெட்சுமியை
வல்லரக்கன் ராவணன் சிறையெடுத்தான்
தேரிலேற்றியே லெட்சுமியை
தென்னிலங்கைதன்னில் கொடுபோனுன்
ஆனதினுலந்த வனமதிலே
ஆதிலெட்சுமியைத் தான் தேடி
தேடிவனமெல்லாந்தான் திரிந்து
தீரங்கனுமானே வந்தோமென்ருர்
மாயன் ரெகுராமருரைப்தபோது

## அனுமான் இராமரிடம் வாலிசுக்கிரீவன் சண்டையினை எடுத்துக்கூறல்

வாளனுமானு மேதுரைப்பான்
யிலங்காபுரியை ஒரு கையினுல்
லெச்சுமி தாயை ஒரு கையினுல்
எடுத்துதான் வரசமர்த்து உண்டு

6540. சமர்த்து—சாமர்த்தியம்

எங்கள் பெருமாளே கோபால சுவாமி
ராவணசங்கார முடிப்பதற்க்கே
ரெகுராம மூற்த்தியே கோபாலரே
கலிகவர்ந்த நாடதிலே
கார்வண ராமரே புண்ணியோரே

வாலியென்றும் சுக்கிறீபனென்றும்
வாய்த்த அமுறதங்கடைய வென்று
அமுறதங் கடைந்தாரிரு பேரும்
அளகு சமுந்திர மானதிலே
வாலிகடைந்த அமுறதமதில்

வந்துபிறந்துதே கழுதையது
சுக்கிறீபன் கடைந்த அமுறதமதில்
சுந்தரி தாரகை பெண்பிறந்தாள்
தாரகை பெண்ணது பிறந்தபோது
தானே வாலியனெடுத்துக் கொண்டான்

ஆனதினாலவரி(ரு)பேரும்
அமர்பொருதார் வெகு காலமதாய்
ஒன்றுக்கொன்று தோர்வையில்லாமல்
யுத்தம் செய்கிறாரிருபேரும்
என்னுடையமாமன் வாலிதன்னை

என்பெருமாளே நீர்தானுங்கொன்று
தாரகைப் பெண்ணை சிறைதிருப்பி
தானே சுக்கிறீபனுக்குக் கொடுத்தால்
சிறந்த வானரப்படையதுதான்
எழுபதுவெள்ளம் சேனைபடை

யிருபத்தினாலுப்படைத்தலைவர்
வானரப்படைகளை சேற்த்துக்கொண்டு
வாளிலங்காபுரிதன்னில் சென்று
ராவணசம்மாரமுடித்திடலாம்
ராமாவுதாரரே புண்ணியரே

அனுமந்தராசனுமுரைத்தபோது

## இராமருந்தம்பியும் சுக்கிரீவனுக்கு உதவிக்கு வரல்

அரிரகுராமருமேதுரைப்பார்

---

6553. கம்பராமாயணத்தில் தாரை என்று குறிக்கப்பட்டுள்ள பெயர் இங்கு தாரகை என்று காணப்படுகிறது.

6557. அமர்—போர்

6558. தோர்வை—தோல்வி

6565. வெள்ளம்—பேரெண்

கேழும்பிள்ளாதுரை பே(ர)ரனுமான்
கேட்டுவாராய் சுக்கிறீபனிடமதிலே
வாறானேதுரை போரனுமான்

வந்தான்சுக்கிறீபன்தன்னிடத்தில்
என்னுடைய மாமாசுக்கிறீபா
யிப்போதொரு வசனமுரைக்கக்கேழும்
ராவணசங்கார முடிப்பதற்கு
ரகுராமர்தானிப்போ வந்திருக்கிறார்

உம்முடைய அண்ணன் வாலிதன்னை
ஒருநொடிதன்னில் கொன்றுவிட்டு
தாரகைபெண்ணாளை சிறைதிருப்பி
தாமோதரர் தானுந்தந்திடுவார்
என்றுரைத்தானந்த பே(ர)ரனுமான்

யேதுரைப்பானந்த சுக்கீறீபன்
என்னுடைய வாலியவன்றனக்கு
யிறைக்கிறையேளானைப் பலமுடையோன்
எதிர்த்தவன்பிலத்தில் பாதியுடையோன்
யேற்றபுகள்பெற்ற வாலியவன்

அரக்கியென்ற ஒருதுந்துமியாள்
அந்தத்துந்துமி யென்றவள்காலெலும்பை
தூக்கினானேயவன் கறண்டைமட்டும்
யிப்படிப்பட்ட வாலியல்லோ
என்றுசுக்கிறீப னுரைத்தபோது

திரும்பியனுமானும் ராமரிடம்
வந்துவரலாறு உரைத்தபோது

### சுக்கிரீவன் வந்து இராமரை வணங்கல்

மாயாவுதாரருந்தம்பியரும்
தரணியளந்தோனும் வந்தபோது
தான்வந்து சுக்கிறீபன் தெண்டனிட்டான்
தெண்டன்ஞ்செய்தவனடிவணங்கி
திருமால்முன்பாக நிற்கும்போது

துந்துமியாழுடயெலும்பதைத்தான்
திருமால்ரகுராமர் கண்ணில்கண்டார்
திருமாலுஞ்செங்கைவில்லினாலே

---

6582. நொடி—காலஅளவை
6591. துந்துமி—ஓர் அசுரப்பெண்
6593. கறண்டை—கணுக்கால்
6600. தெண்டனிட்டான்—வணங்கினான்

தட்டித்தூரே புரட்டிவிட்டார்
தானேபாற்த்தான் சுக்கிறீபன்
யின்னமும் சாமியொருயோசனைதான்
யிருக்கிதுசுவாமியே ரெகுபதியே
பாலாஊறணிக்கரைதனிலே

பலாமரம் யேழுநிற்குதையா
என்பெருமாளே சுவாமியெய்துவிட்டால்
யேந்தினே சிறையதுதிருப்பிடுவீர்
மாயவரேசுவாமி யெய்துவிட்டால்
வாலிதன்னையுங் கொன்றிடுவார்

சுக்கிறீபனவன் சொன்னபோது
திருமாலளகிய பெருமாளும்
பாலாஊறணிக்கரையதிலே
பள்ளிகொண்டசுவாமி வந்துபாற்த்தார்

## இராமர் வாலியைக் கொல்லல்

ஆதிசேடனுட முதுகுதன்னில்

அதிகபிலாமரம் யேழு நிற்கக்கண்டார்
என்பெருமாள் நந்தக் கோபாலர்
ராமபாசக்கணை கையிலெடுத்து
அரவத்தின் படத்தினில் வைத்தபோது
அந்தமரமது நிமிர்ந்திடவே

ஆதிசேடனும் நிமிர்ந்தபோது
அரிரகுராமருங்கணை தொடுத்தார்
யேழுபலாமரமும் ஒருசரத்தால்
யென்பெருமாள் கோபால ரெய்துவிட்டார்
கண்ணில்கண்டானே சுக்கிறீபன்

காற்வண ராமரையடி தொழுதார்
அடிதொழுதந்த வேளைதன்னில்
அச்சுத ராமருமேதுரைப்பார்
கேட்டருள்வாய் நீயுஞ் சுக்கிறீபா
கீற்த்திபெற்றதோர் வசனமதை

உன்தமயனந்தவாலியோடே
உற்ற போரது நீ பொருவாயா
என்றுரைப்பார் சுவாமி ரெகுபதியும்
யிசைந்து வாலியுடன் போர் பொருதான்
யெதிராடிப்போரது பொருதார்கள்

---

**6610.** ஊருணி>ஊறணி (பே.வ.மா)
**6620.** ஆதிசேடன்—பாம்பு
**6621.** பலா>பிலா (பே வ.மா)
**6624.** அரவம்—பாம்பு

எதிர்த்த வாலியுஞ் சுக்கிறீபனும்
கண்ணில் கண்டாரே ரெகுபதியும்
கார்வண நாராயணப் பெருமாள்
சுக்கிறீபன் படையத்தனைக்கும்
திருநாமமது சாத்திவிட்டார்

அன்னேரம் அந்த சுக்கிறீபன்
ஆதரவாய்ப்போர்தான் பொருதார்
ராம பாசக்கணை கயிலெடுத்து
ரகுராமசுவாமியுந் தொடுத்துவிட்டார்
வாலிதன்னுட மார்பு தன்னில்

வந்து பாய்ந்துதோ ராமபாணம்
மார்பில் ராமபாணம் பாய்ந்தபோது
வாலிதானவனேதுரைப்பான்
நிமிசமுடன் நெஞ்சில்பட்ட அம்பை
நெடுங்கையாலேயவன் பிடித்துக் கொண்டான்

வஞ்சகன் ராமனென்று சொல்லி
மனதினிலவன் உச்சரித்து
துணிந்துயென்னெதிராக நின்று
சொல்லிக்கொண்டுகணையெய்வீரானால்
பஞ்சில் பட்ட தீப்போலே

பறக்குமேயுந்தன் ராமபாணம்
நடையென்றுரைத்தந்த வாலியவன்
ராமபாணத்தைப்பிடித்துக் கொண்டு
மறுபக்கத்திலும் அம்புதைத்த போது
மடிந்து விழுந்தானே வாலியவன்

வாலிமகனவன் அங்கதனும்
மாயன் கோபாலரையடி தொழுது
மாயவரையடி தொழுதபோது
மாயாவு தாரருமேதுரைப்பார்
உன்தகப்பனந்த வாலிதன்னை

உத்தஅடக்கமது செய்துவாடா
மாயாவுதரன்சொன்னபடி
வாலிதன்னையுஞ் அடக்கஞ்செய்தான்

## இராமர் வாலிமகனுக்குப் பட்டஞ்சூட்டல்

தீர்க்கடன் நீர்க்கடன் செய்தபின்பு
சுவாமி வாலிக்குமோச்சங் கொடுத்துவிட்டார்

வாலிமகனவன் அங்கதனும்

---

6654. நிமிசமுடன்—உடனடியாக

6657. உச்சரித்து—சொல்லிக்கொண்டு

மாயவர்சுவாமியை அடிதொழுதரன்
வாலிமகன் வந்துஅடிதொளவே
மாயாவுதரனும் யேதுரைப்பார்
மகுடபட்டமது சூட்டிவைப்பேன்

வாய்த்ததாரகைப்பெண்ணவளை
சிறையது திருப்பித்தான் கொடுத்து
தீரன்ரெகுபதி அரசிருந்தார்

## வானரப்படைகள் போருக்குப் புறப்படல்

அரசிருக்கிற வேளைதன்னில்
அரிரெகு ராமருமேதுரைப்பான்

வாரும் பிள்ளா அடாசுக்கிறீபா
வானிலங்கைக்குப் போக வேணும்
யிலங்கபுரிக்கு நீபோகவேணும்
என்றுரைத் தாரந்த பாளையத்தை
மாயவர்சுவாமி விடைகொடுக்க

வானரப்படையெல்லாம் யெழுந்தருள
எழுபதுவெள்ளம் சேனுபதி
யிருபத்திஞலுபடைத்தலைவர்
அங்கதன்நீலன் குமுறத்தனுடன்
அனுமான்னின்று குரவைபாட

கிர . . . . பறுதமானதிலே
கிஷ்ணசுவாமி வந்தரசிருந்தார்
அரசிருக்குமந்தவேளைதன்னில்

## இராமர் அனுமனை இலங்கைக்கு அனுப்பல்

அரிரகுராமருமேதுரைப்பார்
வாரும் யிள்ளாய் துரை போரனுமான்

வானரப்படைத் தலைவாநீ
தென்னிலங்காபுரிக்குப்போய் வருவாய்
தீரனே நீ போரனுமானே
மாயவர் ரெகுராமர் தூதுவனும்
வாளனுமானும் யெழுந்தருள

திருவாளி மோதிரமுங் கையில் வாங்கி
திருமால் விடுந்தூதுவன் தான்
அனுமந்த ராசனும் யெழுந்தருள
அந்தத்திருவாளி தானுங் கொண்டு
காதில்க்கவசம் பளபளென

கழுத்தில்மணிகள் கலகலென்ன
வாலில்சதங்கை கலகலென்ன

---

6689. பாளையத்தை—சேனகளை

மாயவரை நினைந்து பாய்ந்தனுமான்
எளும்பிக்குதித்தானே வாளனுமான்
யிலங்காபுரிக்கோட்டை வாசல்வந்தான்

முதல்கோட்டைவாசல் காத்திருக்கும்
மொய்குழலாளந்த யிலங்கண்ணியும்
யிலங்கண்ணிதன்னையுங் கொல்லவென்று
யியலனுமான்சடைக்குள்ளேதான்
அரிகோபாலசுவாமியை மனதிலெண்ணி

அவன்தண்டாயுதத்தைக் கயிலெடுத்தான்
தெண்டாயுதத்தைக் கயிலெடுத்து
மண்டைமுக்குருஞ்சிதற அடித்துவிட்டான்
வல்லரக்கியிலங்கண்ணி மடிந்துவிட்டாள்
யிலங்கண்ணியவள் பட்டபோது

அரக்கன்தன்னுட மனைதனிலே
ஆதிலெட்சுமியைத் தேடிப்பாற்த்தான்
தேடிஒருவிடங் காணாமல்
திகைத்துநின்றாரந்த வாளனுமான்
தண்ணீர் கிணற்றங்கரைதனிலே

தானேவந்தானந்த அனுமாரும்
யிப்படியிருக்கிற வேளையிலே

### அனுமான் இலங்கையில் சீதையைத் தேடல்

யிலங்கபுரி நகரானதிலே
அன்னேரம் அந்த அரக்கியர்கள்
ஆயிழைமார்களேதுரைப்பார்

எங்கிருந்தோஒரு பெண்ணதைத்தான்
யிலங்கைராவணன் சிறையெடுத்து
செண்பகப்பூங்கா வனந்தனில்
சிறைவைத்திருக்கிறான் ராவணன்
என்றுரைத்தாரந்த அரக்கிப்பெண்கள்

யேந்திழைமார்கள் பேசினதை
அரக்கிபெண்களுரைத்த வாற்த்தை
அனுமன்தூதுவருங்காதில் கேட்டார்
காதில்கேட்டார் அனுமாரும்
கவிகைமன்னவரோடிவந்தார்

வாளிலங்காபுரித்தெருவோட
மாயவர்தூதுவனும் வாறபோது
ராவணன் தம்பி விபூசணப் பெருமாள்
லெச்சுமி தேவியைச் சிறைவைத்த நாள் முதலாய்
மனதில் நேரக்த் திறமில்லாமல்

---

6745. கவிகை—கவிந்தகை

மாயவர் ரெகுபதியைத் தானினைந்து
மாயவ ரெகுபதியைத்த(ா)னினைந்து
வாய்த்த விபூசணர் தானிருந்தார்
யிந்தச்செய்தியனுமானறிந்து
செண்பகப் பூங்கா வனத்தில் வந்து

சிறந்த அனுமான் தேடினானே
சீதா தேவியைத்தான்தேடி
திகைத்தங்கிருந்தவன் தான் முளித்தான்

### *அனுமான் சீதையைக் காணல்*

திரும்பிபார்க்கிற வேளைதன்னில்
சீதாதேவியைக் கண்ணில்கண்டான்

கண்ணில்கண்டனுமானுமிருக்கயிலே
கன்னிலெட்சுமிஅழுதுபரதவித்தாள்
அழுத சீதை அம்மயைத்தான் பாற்த்து
ஆயிளை திருச்சடையேதுரைப்பாள்
அதிகக் கணையாளிதனை முடிந்து

அனுமன் தூதுவன் தானும் அப்போ
காவலவனந்த அனுமானும்
கன்னி சீதைதான் முன்பாக
சீதைதேவியையம்மை மடிதனிலே
சிறந்த கணையாளிதன்னை விட்டான்

கணையாளி தன்னையுங்கண்டபோது
கார்வணர் ரெகுராமர் தேவியவள்
முத்திக்கொண்டாளம்மைமுகந்துகொண்டாள்
முகில்வற்ணன்கணையாளிகண்டபோது
எங்கள்சீதையம்மை கண்டபோது

யேறிட்டுப்பாற்த்தாள் சீதைதாயாரும்

### *அனுமான் சீதைஉரையாடல்*

யிப்படியிருக்கிறவேளையிலே
யியலாகஅனுமாரைக் கண்ணில்கண்டாள்
வாரும்பிள்ளாய்துரைபே(ா)ரனுமான்
வந்தவகையேதுசொல்லுமென்றாள்

சீதைதாயருங் கேட்டபோது
திருமால்விட்ட தூதன்அனுமானும்
ஆலமரம்விட்டு கீளிறங்கி
அடிதொழுது அனுமார் நமஸ்கரித்து
என்தாயே அம்மாலெட்சுமியே

---

6758. திகைத்து—தடுமாறி
6773. முத்தி—முத்தம் கொடுத்து
6784. நமஸ்கரித்து—வணங்கி

என்னை ஆதரித்தமாதாவே
யெண்ணியெட்டு நாளைக்குள்ளே
என்பெருமாளிங்கு வந்திடுவார்
என்றுரைத்தாரந்த அனுமாரும்
யேந்திழை லெட்சுமியேதுரைப்பாள்

கேள்க்க வேணுந்துரை போரனுமான்
கீர்த்தி பெற்றதொரு வசனமதை
எட்டுநாளைக்குள் வாராதேபோனல்
யிலங்கையில் நான் உயிர்விட்டிடுவேன்
மாயவற்குச் செய்தி சொல்லவேணும்

வாணுதலாளம்மை சீதையாரும்
சூடாமணி மாலையைத்தான் களத்தி
திருமால்க் கடையாளந்தான் கொடுத்தான்
மைத்துனர் லெட்சுமணர்க்குரைக்க வேணும்
மாமியார் மூவர்க்குரைக்க வேணும்

சூடாமணிமாலை கையில் வாங்கி
சீதாதேவியை தான் தொழுதான்
என்தாயே அம்மா போய் வாறேன்
என்றுரைக்கத் தாயார் விடைகொடுத்தாள்

## அனுமான் திரும்பி வரல்

வருகிறதோரந்த வேளைதன்னில்

வாளிலங்காபுரியானதிலே
அசோக வனமென்ற சோலைதன்னில்
அனுமன் தூதனும் போய்சேர்ந்து
அந்த மரங்களைக் கிளித்தெறிந்த போது
அரக்கன் ராவணன் தான் பாற்த்து

அனுமாருட பராக்கிரமத்தை
ராவணசூரனுங்கேட்டபோது
இலக்கண குமாரனைத்தானழைத்து
யிப்போது அந்த வனக்குரங்கை
பிடித்து கட்டிமகனே கொடுவாடா

என்று சொல்லவே ராவணசூரன்

## அனுமான் இராவணன் மகன் போர்

அப்போது அந்தலக்கணகுமாரன்
அவனுடைய படைதன்னுடனே

---

6811. பராக்கிரமம்—வலிமை; வீரம்

6813. இலக்கண குமாரன்—இராவணனின் மகன்

அந்தஅசோக வனத்திலே வந்தான்
அன்றனுமாரையுங் கண்ணில் கண்டான்

ஆனதோர் லக்கணக்குமாரன்அவன்
அனுமாரைப் பாற்த்துமவனேதுரைப்பான்
யேண்டா குரங்கே அனுமானே
யிலங்காபுரிக்கு நீ வந்ததென்ன
யிருபேர்திறத்தையும் பாற்க்கவேணும்

என்றுரைத்தானந்த அரக்கன்மகன்
எட்டுமலையும் யிடிவெட்டினாப்போல்
யீரேழுலோகமும் நடுநடுங்கி
அன்னேரந்துரை போரனுமான்
அதிகோ(ப)மது தானுங்கொண்டு

தண்டாயுதத் தடிகையிலெடுத்து
மண்டையில் மூளைகள் தான்சிதற
வாளனுமானவர்தான் தானடித்தார்
யிலக்கணக்குமாரன் படையத்தனையும்
மூளைசிதற அடித்து கொன்றுவிட்டான்

அன்னேரந்துரைபோரனுமான்
அடித்துக்கொன்று விட்டா(ன்)னுமாரும்
அரக்கன்மகன் லக்கணகுமாரனையும்
யிலக்கணகுமாரன் பட்டபோது
நல்லனுமான் குரவையிட்டான்

யிலக்கண குமாரன் படைப்பட்டசெய்தி
ராவண சூரனுந்தான் தெரிந்து
யிந்திரசெயித்தை வரவழைத்து
யிந்தக்குரங்கைப் பிடித்துவாருமென்று
மகன்யிந்திரசெயித்தை யனுப்பிவிட

வாருனேயந்த வனந்தனிலே
அசோக வனமதுதான் தேடி
அன்றனுமாரைக் கண்ணில் கண்டான்
கண்ணில் கண்டானே யிந்திரசெயித்து
காட்டரக்கன் மகனேதுரைப்பான்

யேண்டா குரங்கே நீ அனுமானே
என்னுடதம்பியை யேண்டா சொன்றாய்
ஒருநொடிதனிலே கொல்கிறேன்பார்
என்றுரைத்து அந்தயிந்திரசெயித்து
யிசலனுமானுடனே பொருதான்

சாணுக்குச்சாண்பறியவில்லை
தட்டளியயிருபேரு ⁵·பேர்பொருதார்

6857. தட்டளிய—நிலைகுலைய

ஒருவர்க்கொருவர் தான் தோராமல்
உலகளந்தோன் தூதுவேரேதுரைப்பார்
கேள்க்க வேணும் யிந்திரசெயித்தே நீ

கீர்த்தி பெற்றதொரு வசனமதை
வில்லில் பெரியவன் உன்னைப்போலில்லை
மல்லில் பெரியவன் என்னைப் போலில்லை
ஒருமரந்தன்னில் நானிருந்து
மறுமரந்தன்னில் தாவுமுன்

ரோமத்துக் கொருகணைதான் தொடுத்து
மறுத்தொரு கணை தொடுப்பாய(ா)கில்
வல்லரக்கா உன்கையில்லகப்படுவேன்
என்று அனுமாரும் உரைத்தபோது
மந்திரவித்தையால் யிந்திரசெயித்து

ரோமத்துக்கொரு கணைதான்தொடுத்து
மறுத்தும் ஒருகணைதொடுத்து விட்டார்
யிடுப்பில் சங்கிலிதான் பூட்டி
யிந்திர செயித்தவன் கையில் கொடுத்தான்
வாழும் அனுமானையும் பிடித்துக்கொண்டு

வல்லரக்கன் மகன் கொண்டு வந்தான்

### *இராவணன் மகன் அனுமானை பிடித்துவரல்*

வாளிலங்காபுரியானதிலே
வல்லரக்கன் மகன் வந்தபோது
ராவணசூரன் முன்பதிலே
நல்லனுமானையுங் கொண்டுவிட்டான்

அனுமன்தூதனைக்கண்டபோது
அன்றரக்கனந்த ராவணனும்
ராவணசூரன் கோட்டைதன்னில்
ராவணசூரன் அரசிருந்தான்
யிருக்கிறதோரந்த வேளைதன்னில்

என்பெருமாள் விட்டதூதுவரும்
தன்னுடைய தோரந்த வாலினாலே
தனக்கு மேல் சிம்மாசனமாய்
அரக்கன் ராவணனுக்கு மேலாக
அன்றனுமானவர் உக்காந்தார்

யிருக்கிறதோரந்த வேளைதன்னில்
யேறிட்டுப் பாற்த்தானே ராவணனும்
வல்லரக்கனவன் பாறத்த போது
மன்னன் ராவணனுமே துரைப்பான்

---

6858. தோராமல்—தோல்வியடையாமல்

## இராவணன் அனுமானை வினவலும் அனுமான் பதிலும்

ஆரடாவிட்ட தூதனட(ா)

அடுத்திருக்கும் அனுமானே சொல்லு சொல்லு
வல்ரக்கன் ராவணன் கேட்டபோது
ரகுராமர் விட்டதூதனடா
நல்லனுமான் யென்பேரடா
ரெகுபதிவிட்ட தூதனடா

லெட்சுமித்தாயாருட தூதனடா
லெச்சுமணப்பெருமாழுட தூதனடா
ராமசுவாமியுடதூதனடா
பச்சைமால் கிஸ்ணன்தூதனடா
பாரஅனுமனடா யென்பேரு

யேறிட்டுப்பாற்த்தானே ராவணனும்

## இராவணன் அனுமானைத் தண்டித்தல்

யிலங்கை ராவணனேதுரைப்பான்
ராவணன் தூதுவரைவரவழைத்து
நல்ல அபகீற்த்தி செய்யவேணும்
மந்திரிதன்னை வரவழைத்து

வல்லரக்கன் ராவணனுமேதுரைப்பான்
யிந்த அனுமானைக் கொல்லவேணும்
என்றுரைத்தானந்த ராவணனும்
ராவணனுரைத்த வாற்த்தை கேட்டு
நகலுவாராமந்த மந்திரியும்

தூதுவந்தவரைக் கொல்லலாமா
சுவாமியெந்தன் ராவணரே
கொல்லாமல் அபகீற்த்தி செய்வீர்
என்று கூறிடுவாரந்தமந்திரியும்
மந்திரிஉரைத்த வாற்த்தைகேட்டு

வல்லரக்கன்தூதுவரை வரவழைத்து
யிலங்கை தேசத்திலுண்டான்துயிலை யெல்லாம்
யியல்வாகதூதுவரேகொடுவருவீர்
உரைத்தமொளியது தானுங்கேட்டு
உத்ததூதர்களேது செய்தார்

கோலமலைபோலே துயிலையெல்லாம்
கொண்டு வந்து குவித்தார்கள்

---

6906. யேறிட்டு—நிமிர்ந்து; உற்று
6915. நகலுவார்—சொல்லுவார்

அன்னேரம் அந்த ராவணனும்
அன்றரக்கானவனே துரைப்பான்
கொப்பரை தன்னில் யெண்ணெகளை

குடங்குடமாகவே கொண்டு வந்தார்
சீலைகளை எண்ணெயில்தான் துவைத்து
சுத்தச்சொன்னான் அனுமான் வாலதிலே
வால்தனில் சீலைகளைச்சுத்தச்சுத்த
வாளனுமான் வாலை நீட்டலுற்றான்

யேதுரைப்பானந்த ராவணனும்
சீதைதுயில் கொடுவாருமென்று
திறம்பட ராவணனுரைத்தபோது
சீதை தாயாரென்று உரைத்தபோது
தீரன் அனுமான் வாலைசுருக்கிக் கொண்டான்

அன்னேரம் அந்ததூதுவர்கள்
அரக்கன் ராவணன் முன்பில்விட்டு
வால்தனில் அக்கினிதான் கொழுத்தி
வாளனுமானையும் விட்டுவிட்டார்

### அனுமான் இலங்கையைத் தீக்கிரையாக்கல்

அன்னேரந்துரைபோரனுமான்

அன்றிலங்காபுரித் தெருவோடே
மாயவர்சுவாமி உத்தரவில்லாமல்
வாளிலங்கைதீக்கொழுத்தலாமோ
என்று சந்தேகித்து வரும்போது
யேந்திழை அ(வ்)வைத் தாயாரும்

தடியும் ஊன்றியவளிருமிக் கொண்டு
தானே வந்தாள(வ்)வைத் தாயாரும்
வருகிறதோரந்த வேளைதன்னில்
வாளனுமானவர் ஓடிவந்து
அ(வ்)வைத்தாயாரைத்தான் பாற்த்து

சேட்டை சொல்ல அ(வ்)வைத்தயாரும்
சுடு குரங்கே நீயென்றுரைக்க
யிதுதான் ரெகுபதிவாக்கெனவே
யியல்பாக அனுமார் தீக்கொழுத்தலுற்றார்
வாள்யிலங்காபுரிநகர் முழுதும்

மன்னன் அனுமார் தீக்கொ(ளு)த்தலுற்றார்
யிலங்கையெழுநூற்றுக் காதமெல்லாம்
எரிநீருகப் போய்விட்டதுவே

---

6930. கொப்பரை—வாய்அகன்றபாத்திரம்
6943. அக்கினி—தீ

அன்னேரந் தெய்வக் கம்மாளர்
அவர்கள் வந்தங்கேவீடெழுப்ப

தெய்வக்கம்மாளர் வீடெழுப்ப
சிறிராமதூதுவருங் கண்டுகொண்டார்
தெய்வக்கம்மாளரைக் கண்டுகொண்டு
திருமால்தூதுவரேதுரைப்பார்
வாருமையா தெய்வக்கம்மாளரே

வரலாறுசொல்லக் கேளுமையா
அனுமக்கொடியது நான்தாறேன்
அதிகப்புகள் பெற்றகம்மாளரே
வீடெழுப்பயினிக்கூடாது
விரைவாய் அனுமாருரைத்தபோது

அன்னேரம் தெய்வக்கம்மாளர்
ஆதரவாகவே நல்லதென்றார்
மாந்தையரப்படி உரைத்தபோது
வாளனுமார் தீக்கொளுத்தலுற்றார்
மண்டபமடப்பள்ளி வேகுதையோ

கடைகள் கடைத்தெருவேகுதையா
கரிந்து போகுதே யிலங்கைதேசம்
அப்போது தெய்வக்கம்மாளர்
அனுமாரிடத்தில் தானும்வந்தார்
உலகளந்தோருட தூதுவனே

உத்தவரிசைதாரும் எங்களுக்கு
என்றுகேட்டமாந்தையர்க்கு
யேதுசெய்தாரன்னேரம்
உலகளந்தோன் தூதுவரும்
உத்தஜந்திரியில் பூனூல்தன்னை

யிதுதான்அனுமக் கொடியினவே
யேத்தகம்மாளர் தோளில்போட்டார்
கடுகஒருபணமுந்தாம்பூலமும்
கம்மாளர்கையில் கொடுத்துவிட்டார்
அன்னேரந்தெய்வக்கம்மாளர்

அனுமாரேயத்துப் போட்டாரென்று
வாளிலங்கா புரியானதிலே
மாந்தையர் வீடெழுப்பலுற்றார்
சற்றும் வீடது யெழும்பவில்லை
தானே திகைத்தார் மாந்தையர்கள்

கைக்கூலிக் காசைப் பட்டதினால்

---

6993. பணம்—ஒரு நாணயம்
7001. கைக்கூலி—இலஞ்சம்

கம்மாளர் வித்தை பறிபோச்சோ
என்றுரைத்து அந்த மாந்தையர்கள்
யிலங்கை நகரதில் தானிருந்தார்
யிருக்கிறதோரந்த வேளைதன்னில்

என் பெருமாள் விடுந்தூதுவரும்

## அனுமான் இராமனை வந்து கண்டு செய்தி கூறல்

யிலங்கை நகர் முழுதுஞ்சுட்டளித்து
வாருனேதுரை போரனுமான்
மாயவர்சுவாமி முன்பதிலே
மாயவர் அரிராமர் முன்பில்

வந்தானே துரைபோரனுமான்
சூடாமணி மாலைமுன்பில் வைத்து
சுவாமி நெடுமாலையடி தொழுதான்
அடிதொழுதாரந்த பே(ா)ரனுமான்
அரிரகுராமருமேதுரைப்பார்

போனகாரியம் விபரமாக
புகள்ந்திடுவாயெந்தன் அனுமானே
தாயார் சீதைஉரைதவருமல்
தானே யனுமானுமே உரைத்துவிட்டான்
எட்டு நாளைக்குள் போகாவிட்டால்

என்தாயார் சீதை உயிரைவிட்டிடுவாள்
வாளனுமானும் உரைத்தபோது

## இராமர் படை இலங்கைக்குப் புறப்படல்

மாயன் ரெகுபதி கோபாலர்
மனமதிலேயவர் கோபமுற்று
வைகுண்ட நாராயணப்பெருமாள்

எழுபது வெள்ளம் சேனைபடை
யிருபத்திளுலுபடைத்தலைவர்
வாலிமகன் அங்கதனும்
வாலிதம்பியவன் சுக்கிறீபனும்
யிப்போ யிலங்கைக்குப் போகவென்று

என்பெருமாழும் எழுந்தருள்
வாருர்சுவாமி நந்தக்கோபாலர்
மன்னர் லெச்சுமணப் பெருமாழும்
வனமென்ற வனமெல்லாந்தான் கடந்து
வானரப்படையுடன் தான் வரவே
படைகழுடன் ரெகுராமர் கோபாலர்

---

7016. காரியம் – நோக்கம்; செய்கை

பண்பாக சமுத்திரக் கரையோரம்
மாயவர் ரெகுபதி அரசிருந்தார்
மன்னன் யிளையவர் தானிருக்க

## இலங்கைக்குப் போக அணைகட்டல்

தென்னிலங்கைக்கு நாம் போகவேணும்
திருவணையானது கட்டவேணும்
வாய்த்ததிருவணை கட்டுதற்கு
வரவழைத்தார் தெய்வக்கம்மாளரை
மாயவர் கோபாலசுவாமியுடன்
மலைகளையெல்லாம் உடைப்பீரென்று

உத்தரவை மாந்தையர் தான்கேட்டு
உடனேமலைகளை உடைத்தார்கள்
வானரப்படைகளை வரவழைத்து
மலைக்கல்லுகொடு வாருமென்றார்
எழுபதுவெள்ளம் வானரமும்

யிசைந்தமலைகளைத்தான்பிடுங்கி
அன்னேரஞ்சுவாமி கோபாலர்
அக்கினி அஸ்த்திரக்கணையைவிட்டு
அக்கினி அஸ்த்திரக்கணையினாலே
அக்கடல் நீரதை வாங்கச்செய்தார்

வாளனுமான் வாரித்தான்கொடுக்க
மாந்தையர்திருவணைகட்டுவாராம்
அன்னேரந்துரை பே(ா)ரனுமான்
அவன் கையால் மலைபிடுங்கிக் கொண்டுவர
மலைகொண்டு அனுமான் வாறதுகண்டு

மாந்தையர்களெல்லாம் பின்வலிக்க
மாந்தையர்கள் கீறின கல்லுகளை
மற்றும் வானரங்கள் கொண்டுவர
நீலன்குமுற்தனக்கம்மாளருடன்
நிமிசம் மலைகொண்டுதான் கொடுக்க

யேறிட்டு பாற்த்தார்கோபாலசுவாமி
என்பெருமாளவர்தானுரைத்தார்
வாளனுமான்கல்லை தூக்கிவைக்க
மாந்தையர்திருவணைக்கட்டிட்டவே
பள்ளிகொண்டசுவாமி திருவணைபாற்த்து

பரமசிவத்தைதானினைந்து
உறுதியாயிருக்கவேணுமென்று ரைத்தார்

---

7055. வாங்க—விலக

7061. வலிக்க—விலக
7062. கீறின—உடைத்த

உலகளந்தபெருமாழும்
திருவணைக்கட்டி தீறத்தவுடன்
தெய்வக்கண்ணாளர் தேவாரம்பாட

தேவாதிதேவர்குரவைப்பாட
தெய்வமடவர்கள் பூச்சொரிய
பொன்மாரி பூமாரிதான் பொளிய
பூலோகம் அளந்த பெருமாழுடன்
அனுமார் நின்று குரவை பாட

அங்கதன் வெஞ்சாமரைவீச

## இராமர்படை இலங்கைக்கு வரல்

மாயாவுதரரும் எழுந்தருள
மண்ணதிர அப்போவிண்ணதிர
திருவணையதுவளியாக
வாளிலங்காபுரியானதிலே

பள்ளிகொண்டசுவாமி வந்தபோது
பாளையக்கூடாரந்தானடித்து
பச்சைமுகில்வற்ணர் கோபாலசுவாமி
சுத்துப்படைகளுந் தளகத்தரும்

அஞ்சனையாள்பெற்ற பே(ா)ரனுமார்
அரிராமரும் அரசிருந்தார்
அரசிருக்குமந்தவேளையிலே

## இராவணன் வேவுபார்த்துவர ஆள் அனுப்புதல்

அன்றிலங்காபுரியானதிலே
வல்லரக்கனென்ற ராவணன்தான்

வந்துதலைமுடிங் கோபுரம்போல
யிருண்டமலைபோல் ராவணனும்
யிருபதுகைழும் கரும்பனைபோல
கோபுரங்கள்போலே தலைகள்பத்தும்
குன்றுமலைகள்போலே கால்கள்ரெண்டும்

அரிராமர்படை அதற்ச்சைகேட்டு
ஆரென்றுபார்த்துவா சிவதரனே
மந்திரிசிவதரன் அவன்தானும்
வளமையுடனவனோடிவந்தான்
பவளமாமலையானதிலே

---

7075. கண்ணாளர்—கம்மாளர்
7077. மடவர்கள்—பெண்கள்
7090. தளகர்த்தர்>தளகத்தர் (பே.வ.மா)
7101. அதிர்ச்சி>அதற்ச்சை (பே.வ மா)

பாவினையாகவேயேறிப்பாற்த்தான்

## வேவுபார்த்து சிவதரன் வந்துசெய்தி கூறல்

வாதுக்குவந்தபடை யெல்லாங்கண்டு
வல்லரக்கன் ராவணனிடத்தில் வந்தான்
கேள்க்கவேணுஞ்சுவாமி ராசாவே
கீற்த்திபெற்றதொரு வசனமதை

உன்னுடையதங்கை சூர்ப்பனகை
ஒன்ருேடியை மூக்குந்தனமரிந்தான்
அறுத்தவனவனுட தமயனுமாய்
அனேகம்படைகளைக் கூட்டிக்கொண்டு
அவர்களிருபேர் வந்திருக்கிருர்

பவளமலையானதிலே
பாவித்திருக்கிருரிருபேர்கள்
என்றுரைத்தானந்த சிவதரனும்
யிலங்கைராவணன் கோபங்கொண்டு
பாற்த்துவரச் சொல்லிவிட்டதற்கு

பண்பிளிவுவாற்த்தை சொல்லவந்தாய்
என்றுராவணனே கோபங்கொண்டு
யிசைந்தமந்திரவாள் கையிலெடுத்து
மந்திரவாளைக்கையிலெடுத்து
வாழும்யிலங்கையாழும் ராவணனும்

வாளாலிருதுண்டாய் வீசிவிட்டான்
மந்திரிசிவதரன் பட்டபோது

## இராவணன் போருக்கு வரல்

ஆகாசத் தேரதைக் கொண்டு வந்து
அலங்கரித்தானந்த ராவணனும்
தேரிலேறிக் கொண்டு ராவணனும்

தேரைநடத்தியே போகலுற்ருன்
தென்னிலங்காபுரிதன்னைவிட்டு
சிறந்த மலைபூங்காவு தன்னில் வந்தான்
தேரைத் தானங்கே நிறுத்தி போட்டு
சிறந்த மலைபூங்காவனமும் விட்டு

பவளமாமலை வந்து கண்டான்
பாற்த்தான் லெச்சுமணப் பெருமானை
அஞ்சாமல் சற்றுங்கெவுனியாமல்

---

7107. வாது—சண்டை

7133. காவு—சோலை

7138. கெவுனியாமல்—கவனிக்காமல்

அரக்கன்தங்கையென்றும் பாராமல்
அபகீர்த்தி செய்தாயே மானிடவா

ஆனதினாலுன்னை விடுவதில்லை
அரச்சணந்தன்னிலே கொல்லுகிறேன்
என்றுரைத்தானந்த ராவணனும்
லெச்சுமணப் பெருமாழுங்கோபங்கொண்டு
யிலங்கை ராவணன் தன்னுடனே

லெச்சுமணப் பெருமாழும் போர்பொருதார்
அன்னேரம் அந்தராவணனும்

## இரவணன் தோல்வியடைந்து திரும்பிச் செல்லல்

ஆத்த மாட்டாமலேதுரைப்பான்
வாலி ராவணன் பொருபொருத்த மராவும்
வலிய வில்லெடுத்த பேரும்

தாரணிமவுபலிபத்தும்
சங்கரன் கொடுத்தவாழும்
நாரத முனிவோர்க்கெல்லாம்
நயம்பட உரைத்த நாவும்
வீரமுங்களத்தில் போட்டு

வெறுங்கையாலிலங்கைச் சேற்ந்தான்
வாளிலங்காபுரியானதிலே
வந்தானே அந்த ராவணனும்
வரிசை தவறியே ராவணனும்
வந்தான் விபூசணனருகில்

## விபீசணன் இராவணனுக்கு அறிவுரை கூறல்

எளப்படை யாண்டராவணரோ
யிலங்கை யாழும் புகள்வல்லரக்க
நாலுமுளமுள்ள மனிதரென்று
ராமசுவாமியை யெண்ண வேண்டாம்
ராமர் பிறந்ததோர் அவதாரத்தை

நாட்டினில் எண்ணத் துலையாது
பிலத்துப் போர்செய்யமுடியாது
பெண்ணாகி ஆணாகிநின்றவர்தான்
ஆலிலைமேல்ப்பள்ளிகொண்டவர்தான்
ஆதிசீதயை விட்டுவிடு

---

7148. ஆத்தமாட்டாமல்—தாங்க முடியாமல்
7152. சங்கரன்—சிவன்
7159. வரிசை—முறை

மாவெலியைச்சிறை வைத்தவர்தான்
வாய்த்தயிரணியசம்மார முடித்தவர்தான்
அவருடையதோர் லெச்சுமியை
அண்ணேராவணு நீ சிறையில் வைத்தாய்
அறியாமல்மோசஞ் செய்தேனென்று

அரிராமர்சீதையை விட்டுவிடு
விட்டுவா அண்ணு சீதாலெச்சுமியை
வீணுசைகொள்ளாதே அண்ணுவே
கற்புக்கருந்துதி சீதைதாயை
காற்வணர்தேவியை விட்டுவிடு

சீதையம்மை சிறையிருந்ததுண்டால்
தென்னிலங்காபுரிக்கு மோசம்வரும்
சிற்றுமுடிபத்தும்யிளக்கப் போருய்
தென்னிலங்கை வாழும்ராவணனே
தம்பிவீபூசணருரைத்தபோது

## இராவணன் சீற்றமடைதல்

தானேராவணன் கோபங்கொண்டான்
கெட்டபாவி விபூசணரே
கெடுமதிஎன்னுடன் சொல்லவந்தாய்
நாலுமுளமுள்ளவனைப் பெரியோனென்ருய்
நம்மைச்சிறியவனென வுரைத்தாய்

யேற்றபதரேயிச்சணமே உன்னை
எப்படியாகிலும் வதைகள்செய்வேன்
வல்லரக்கனவனுரைத்தபோது

## விபீசணன் இராமரிடம் வரல்

வாய்த்தவிபூஷணரேதுரைப்பார்
நல்லவற்க்குபுத்தியது உரைத்தாக்கால்

நல்லபுத்தியென்றவர் கேட்டுக்கொள்வார்
பொல்லாதவற்குப் புத்திஉரைத்தாக்கால்
வாராதொரு நாழுமவர்க்குப்புத்தி
ராமர்கணையதாலிறக்கிறவனே
நம்முடையபுத்தி கேள்ப்பானே

என்றுரைத்து அந்தவிபூஷணரும்
யிலங்காபுரியது தன்னைவிட்டு
வந்தாரேதம்பி விபூஷணரும்
பவளமாமலையானதிலே
மாயவர் ரெகுராமர் முன்பில்வந்து

---

7188. கெடுமதி– கெட்டபுத்தி

7192. வதை—உயிர்வதை

7195. புத்தி—அறிவு

வல்லரக்கன்தம்பி அடிதொழுதான்
நந்தக்கோபாலசுவாமி சரணமையா
நாராயணதாணுவே உங்கள் சரணமையா
விண்ணவர்கோவே உங்கள் சரணமையா
வேதப்பொருளே உங்கள் சரணமையா

சிறிபல்ப்ப நாபா உங்கள் சரணமையா
சிறிரங்கநாத உங்கள் சரணமையா
ரகுராமா கோபாலாசரணமையா
நாதனே அடைக்கலந்தாருமையா
ஐபேரையன்றைக்கு காத்தது போலே

அடியேனை தற்காக்க வேணுமையா
பொல்லாதவன் கூடப்பிறந்தவன்தான்
பெருமாளே காப்பாற்ற வேணுஞ்சுவாமி
அடிதொழுதாரந்த விபூசணரும்
அரிரகுராமருமேதுரைப்பார்

எந்தவிதத்தாலே நம்புவது
யேற்றபுகள் பெற்றவிபூசணரை
என்று கோபால சுவாமி உரைத்தபோது

## அனுமான் விபீசணருக்காகப் பரிந்துரைத்தல்

யேதுரைப்பான் துரைபோரனுமான்
எங்கள் பெருமாளே கோபாலசுவாமி

ரெகுராமரே புண்ணியோரே
சீதைதாயைச்சிறைவைத்த அன்றே
தென்னிலங்காபுரியானதிலே
யிலங்காபுரியானதுதனிலே
யேற்ற விபூஷணர் அரண்மனையில்

வீட்டில் விளக்கது யேத்தவில்லை
வென்னீர் தண்ணீருமருந்தவில்லை
எப்போ சுவாமி வருவார் வருவாரென்று
என்பெருமாள்பேரில் ஒருநினவாய்
அன்னந்தண்ணீரது அருந்தாமல்

அரிராமா ராமா ராமா வென்று
யிவரை அடைக்கலங்காற்க்க வேணும்
என் பெருமாளே கோபால சுவாமி
மன்னன் அனுமான் உரைத்தபோது

---

7208. தாணு—சிவன்
7215. ஐபேர்—பஞ்சபாண்டவர்
7217. பொல்லாதவன்—இராவணன்
7234. நினைவு>நினவு (பே.வ. மா)

## இராமன் விபீசணரை ஏற்றுக்கொள்ளல்

மாயவர் அரிகோபால சுவாமி

விபூஷணரென்றபேர் மாத்தி
விபூஷணப்பெருமாளென்று பேருமிட்டார்
என்னுடைய தம்பி விபூஷ(ண)ப் பெருமாளே
யிப்போ ஒரு வசனஞ் சொல்லக்கேளும்
யிலங்கை எழுநூற்றுக் காதமெல்லாம்

யேற்ற விபூஷணப் பெருமாளே உனக்கு
அரசாள மகுட முடி சூட்டிவைப்பேன்
அரிரகு ராமர் விடை கொடுத்தார்
அரிரகுராமர் விடைகொடுத்து
அடைக்கலமாகவே சேர்த்துக்கொண்டார்

விபூஷணப்பெருமாள் அடைக்கலஞ்சேர்த்தபோது
மேகவண்ணர்கோபாலசுவாமி
பவளமலையானதுதன்னிலே
பள்ளிகொண்டசுவாமி வந்தரசிருந்தார்

## இராவணன், மகோதரன் உரையாடல்

அரசிருக்கு மந்தவேளையிலே

அன்றிலங்காபுரியானதிலே
வல்லரக்கனந்த ராவணனும்
யிலங்கை ராவணனேதுரைப்பான்
என்னுடையமந்திரி மகோதரனே
யினிமேல்நானென்ன செய்யப்போறேன்

எல்லாப்படைகளும் பட்டுப்போனார்
என்றுவல்லரக்கன் பரிதவிக்க
மன்னன்ராவணன் தன்னைப்பார்த்து
மந்திரிமகோதரன் தானுரைப்பான்
கயிலாசமலையை நீரெடுப்பீர்

கரைக்கண்டர்யீஸ்பரனைக் கொண்டுவந்தீர்
அறுத்தசிரசது முளைப்பதற்கு
அமுற்தகலசம் சிரசில்தரித்தீரா
அந்த வலுவும்பிலமும்யிருக்க
அரக்கன்ராவணரே மயங்குவதேன்

உந்தன்மகன் அதிகாயனுண்டும்
உத்தமகன்யிந்திரசெயித்தும் உண்டு
ஒருநொடிதன்னில் வரவழைப்பாய்
உடனேராவணன் சேனைகளை
யிந்திரசெயித்தவன் வந்தாக்கால்

---

7269. வலு—வலிமை

யாவரையும அதம்செய்திடுவேன்
மந்திரிமகோதரனுரைத்தபோது
வல்லரக்கன் ராவணன் சடவுநீங்கி
மறுத்துராவணனேதுசெய்வான்

## இராவணன் மகனுக்கு நீட்டு அனுப்பல்

மகன்தனக்கு திருநீட்டெழுதுவானும்

திருநீட்டு வாசகந்தானெழுதி
தென்னிலங்கை ராவணனேதுரைப்பான்
சிறந்ததூதனை வரவழைத்து
திருநீட்டுத்தானதை கைக்கொடுத்தான்
திரிநீட்டுத்தானதை கையில்வாங்கி

சிறந்தஓட்டனவனேது செய்தான்
வல்லரக்கன்ராவணனையடிதொழுது
வளிநடந்தானந்த தூதுவனும்
வனமென்றவன மெல்லாந்தான்கடந்து
வந்தானே அக்கினி பகவான் மண்டபத்தில்

அக்கினி பகவான் மண்டபமுமிட்டு
ஆதித்த பகவான் மண்டபமுமிட்டான்
தெய்வலோக மானதுதனிலே
சிறந்த தூதுவனும் வந்தபோது
அன்னேரம்யிந்திரசெயித்தவனும்

அரக்கன் ராவணன் திருமகன்றன்
கொலுவிலே யிருக்கிற வேளையிலே
கொற்றவரை தூதுவன் கண்டபோது
திருநீட்டை முன்பிலேதானும் வைத்தான்

## இராவணன் மகன் வருத்தமடைதல்

திரு நீட்டு வாசகம் பாற்த்தனனே

என்னுடஅய்யாவே ராவணரே
மந்திரி மாரெல்லாம் பாட்டாரோ
அரக்கர் படைகழும் பட்டாரோ
யிலக்கணகுமாரனும் பட்டானோ
என்னுடையதம்பி அதிகாயன்

ஆயுதபாணிகள் அத்தனையும்
அய்யாவே பறிகொடுத்தீரோ
யிளையபெருமாள் பறித்துக்கொண்டாரோ
என்னதான் நானுஞ்செய்யப்போறேன்
மானைப்பிரிந்த கலையதுபோலே

---

7276. அதம்--அழிவு
7278. சடவு—சோர்வு
7307. பறிகொடுத்தீரோ—இழந்தீரோ
7310. கலை—ஆண்மான்

மறுகிபரிதவித்துத்தானழுதான்

### இராவணன் மகன்புறப்படல்

அன்னேரம்யிந்திர செயித்தவனும்
அரக்கன்திருமகனேதுரைப்பான்
ஐயாதிருநீட்டெழுதிவிட்டார்
அப்போது அந்த யிந்திரசெயித்து

பொக்கிசப்புரையதுதான்திறந்து
ஆபரணமாலை யெடுத்தணிந்தான்
சாதிலிங்கவேட்டி கொய்துடுத்தான்
உருகதலைப்பாவும் சிரசில்கெட்டி
உத்தயிந்திரசெயித்தவனும்

அம்புஅம்புருத்துணியதுதனிலே
அம்புசரங்களைத் தெரிந்தெடுத்தான்
பிரமஅஸ்திர(ம்)விஷ்ணுஅஸ்திரம்
பிலம்பெறவேயவன்தானெடுத்து
நாகபாசக்கணை தானெடுத்து

ராவணன் மகனும் எழுந்தருள
படைகழுடன் சேனைதான் திரட்டி
பாவினையாகவோ தானுமவன்
ஆரபாரத்தோடே யிந்திரசெயித்து
அரக்கன் திருமகனெழுந்தருள

தெய்வ லோகந்தன்னைவிட்டு
தெய்வமலைகாவுந்தான்கடந்து
அந்தமலைக்காவுஞ்சோலைவிட்டு
அன்றிலங்காபுரிதன்னில் வந்தான்
வாளிலங்காபுரியாலே

வல்லரக்கன் மகன்வந்தபோது

### இராவணன் மகனிடம் நடந்த செய்தி கூறல்

கண்ணில் கண்டானே ராவணனும்
காட்டரக்கன் மகனேதுரைப்பான்
யிங்கேவா யிங்கேவாஎன்மகனே
யிந்திா செயித்தே என்பாலகனே
யிருபதுகையால் சேர்த்தெடுத்து

---

7316. பொக்கிசம்—விலைஉயர்ந்த பொருட்கள்

7316. புரை—அறை

7319. தலைப்பாவும்—தலைப்பாகையும்

7321. அம்புருத்துணி—அம்புவைக்கும் உறை

7325. கணை—அம்பு

யிலங்கை ராவணன் கொடுபோனன்
பாரசிம்மாசன மேடைதன்னில்
பார்த்து மகனுடன் அரசிருந்தான்
தீனிக்குப்பாலுடன் சற்க்கரையும்

தீவிரமாய்ராவணன் தான்கொடுத்தான்
யிருக்கிறதோரந்த வேளைதன்னில்
யிலங்கைராவணனேது சொல்வான்
என்மகனே அப்பாயிந்திரசெயித்தே
யீன்றெடுத்தமகனே பருவரைமேல்

பன்னகசாலையானதுதன்னிலே
பாலன்லெச்சுமணப் பெருமாழும்
உன்னுடையமாமி சூற்பனகை
ஒன்ருேடியாகத்தான் பிடித்து
மூக்குந்தனமது அவன்தானரிந்து

முறைகேடுசெய்தானே ராமன்தம்பி
அஞ்சாமல்சற்றுங் கெணியாமல்
அரக்கன்தங்கைபென்று பாராமல்
அபகீற்த்திசெய்தானே லெச்சுமணனும்
ஆனதிஞல்ராமன் தேவிதன்னை

அசோகவனமதில் சிறைவைத்தேன்
ராமன்லெச்சுமணன் யிருபேருடன்
நாட்டுக்குரங்கெல்லாஞ் சேற்த்துக்கொண்டு
பவளமலையது தன்னில்வந்து
பாளயஞ்செய்தாரே யவர்கழுந்தான்

யின்றைப்போருக்கு நீ பொருவாய்
என்மகனே அப்பாயிந்திரசித்தே
யிலங்கை ராவணனுரைத்தபோது

## இராவணன் மகன் பதிலுரைத்தல்

யேதுரைப்பானந்த யித்திரசெயித்து
என்னுடயஐயா ராவணரே

யிப்போதொரு வாற்த்தசொல்லக்கேழும்
நாலுமுளமுள்ள மனிதரென்று
ராமரை நீர்தானும் யெண்ணவேண்டாம்
கற்ப்புக்கருந்துதி லெட்சுமியாள்
காற்வணரிடத்தில் விட்டுப்போடும்

யிந்திரசெயித்த வனுரைத்தபோது
யிலங்கை ராவணன் கோபங் கொண்டு
கெட்டாயேநீ யிந்திர செயித்தே

---

7345. தீனி—உணவு
7350. பருவரை—மலை

கெடுமதி யென்னோடே பேசவந்தாயா
நாலுமுளமுள்ள மானிடவன்

ராச்சதன் குலத்தில் நீபிறக்கவில்லே
உன்னுடைய சித்தப்பன் விபூசணன்தான்
உலகளந்தோனுடன் சேற்ந்து கொண்டான்
நீயுமவனுடன் சேற்ந்துரைத்தாயே
நில்லாதே என் கண்ணில் முளியாதேபோ

என்றுரைத்த மொளிதன்னேக்கேட்டு

## இராவணன் மகன் போருக்கு வரல்

எப்படியும்நான் பேர்செய்வேன்
மந்திரிதன்னேயும்விட்டு நாம்போய்
மாயன் ரெகுபதிக்கு வாற்த்தைசொல்லி
தெய்வலோகமதில் வீற்றிருந்த

தீரன்யிந்திர செயித்து பொருதவாருர்
தெய்வதாசி தன்னே யாடச்சொன்னுன்
திருநடனமது புரியச் சொன்னுன்
அரம்பையரைக் கூத்தாடச் சொன்னுன்
அருவையரைகும்மி பாடச் சொன்னுன்

மேளதாளங்கள் முளங்கச் சொன்னுன்
வெடி வாணங்கள் முளங்கிவர
வெங்கலத்தம்பட்டங் கொட்டிவர
வீரயெக்காளம் ஊதிவர
விருது கொடியது தான் பிடிக்க

மேகநாதன் யிந்திரசெயித்தவனும்
விருது கொடியது தான் பிடிக்க
பச்சவற்ண தடிகாறர்கழும்
பாவினேயாகத்தான் வரவே
யீட்டி வல்லயக்காறரெல்லாம்

யாவரும் ஒருப்போலே வந்துவிட்டார்
மந்திரதந்திரம் படித்தவர்கள்
நாட்டியகாறருமவரும் வந்துவிட்டார்

---

7382. சித்தப்பன்—சின்ன தந்தை
7391. பொருத—போர் செய்ய
7395. கும்மி—கைகொட்டியாடும் ஆட்டம்
7398. தம்பட்டம்—இசைக்கருவி
7399. யெக்காளம்—இசைக்கருவி
7402. விருது—வெற்றி
7405. யீட்டிவல்லயம்—போர்க்கருவி
7306. ஒருப்போலே—ஒன்றுசேர்ந்து

கவுண்டர்யாவரும் வந்துவிட்டார்
பன்னகர்சிங்களர் வந்துவிட்டார்

வாய்த்தஅரபியர் வந்துவிட்டார்
மாமுடிதேசத்ரா வந்துவிட்டார்
துலுக்கர்மலுக்கர் வந்துவிட்டார்
கருநாட்டுத் தேசத்தார் வந்துவிட்டார்
காளிங்கதேசத்தார் வந்துவிட்டார்

முன்னேயேறிட்டுப் பாற்க்கும்போது
முப்பத்திமுக்கோடி தேவாதிகள்
நாற்பத்தெண்ணுயிரமரிசிகன்னுடர்
தம்புரு நாதருடனேதான்
அட்டதிக்கு பாலர்கழும்

பன்னிரண்டு ஆதித்த பகவான்கழும்
பாற்க்கவே அறுபதுகிரகங்கழும்
யிருபத்தேழு நஷத்திரபகவான்கழும்
பதினெட்டுத்தெய்வ மூற்த்திகழும்
நாற்பத்தெண்ணுயிரமரிசிமார்கழும்

யிசமதற்மராசாவும்
யிந்திர மூற்த்தி பகவானும்
மகேஸ்பரசுவாமி பகவானும்
சதாசிவசுவாமி பகவானும்
உந்திகமலத்தில் வீற்றிருக்கும்

தெய்வேந்திர மகாராசாவும்
சிறந்தபாண்டவர்குலத்துதித்த
தற்மபுத்திரமகா ராசாவும்
யாபேருங்காச்சி கொடுத்தார்கள்
யிலங்கை யிந்திரசெயித்து எழுத்தருள

சேனைபடைகழும் எழுந்தருள
ஆயிரமணிமுடித்தேர்தனிலே
அரக்கன் யிந்திரசெயித்து எழுந்தருள

---

7409. கவுண்டர்—சாதிப்பெயர்
1410. சிங்களர்—ஈழநாட்டார்
7411. அரபியர் - அரபுநாட்டவர்
7413. துலுக்கர்—துருக்கிநாட்டவர்
7414. கருநாட்டு தேசத்தார்—கருநாடகத்தவர்
7415. காளிங்கதேசத்தார்—கலிங்கநாட்டவர்
7420. அட்டதிக்கு—எட்டுதிசை
7422. கிரகங்கழும் – கோள்களும்
7426. யிசமதற்மராசா —எமதர்மராஜா
7434. காட்சி > காச்சி (பே. வ. மா)

யிமையகிரிமலை தன்னைவிட்டு
உத்தபடுகளந்தன்னில் வந்தான்

படுகளந்தன்னில் வாறபோது
பத்துதலை ராவணன் திருமகனும்
தாரதம்பட்ட முளங்கிவிட்டான்
தம்புரு ஓசை கைபட்டபோது

## இராமர் விபீசணரிடம் போர்ச்செய்தி கேட்டல்

தரணியளந்த பெருமாழும்

பவளமாமலையானதிலே
பள்ளிகொண்டவர் மாயவர் பெருமாழும்
அன்னேரமந்தக் கோபாலசுவாமி
அச்சுத நாராயணப் பெருமான்
மாயவர் அரிகோபாலசுவாமி

வைகுண்ட கேசவரேதுரைப்பார்
என்னுடைய தம்பி விபூஷணப் பெருமான்
யின்றையப் போர்களத்தில் வந்தவர்யார்
வந்தவர்யாரெனவே ராமர்கேக்க

## விபீசணர் பதிலுரைத்தல்

வாய்த்த விபூஷணரேதுரைப்பார்

எங்கள் பெருமாளே நந்தக்கோபாலா
ரெகுராமசந்திர பகவானே
என்னுடைய அண்ணன் மகன்தானையா
யிருளைப் பறக்காத தொளில் பாடமுண்டு

கூடுவிட்டு கூடுபாய்ந்திடுவான்
யிவனையும் யிவன்படையுங்கொன்றோமானல்
யிலங்கையில் வேறுபடையுமில்லை

## இராமர் இலெட்சுமணரை போருக்கு அனுப்பிவைத்தல்

விபூஷணப் பெருமாழும் உரைத்தபோது
அரிரகுராமருந்தானுரைப்பார்

என்னுடையதம்பிலெட்சுமணரே
தீற்க்கமுள்ளதம்பிசேவகனே
செல்வத்துரைதம்பி லெச்சுமணு

---

7443. தாரதம்பட்ட — இசைக்கருவிகள்
7444. தம்புரு — அசைகருவி
7454. கேட்க > கேக்க (பே. வ. மர)
7460. ரெம்ப — நிரம்ப
7467. தீற்க்கமுள்ள — தைரியமுள்ள

யின்றைப்போருக்கு நீ போவாய்
யிந்திரசெயித்தை நீ வென்றிடுவாய்

ரெகுராமசுவாமியும் விடைகொடுக்க
லெட்சுமணப்பெருமாள் அடிதொழுதார்
அய்யாசுவாமிஉங்கள்சரணம்
சிறிரங்கநாதஉங்கள்சரணம்
திசதரரா(மா)உங்கள்சரணம்

சரணம் சரணம் நந்தக் கோபால
தரணியளந்த பெருமாளே
அடிதொழுது யிளய பெருமாழும்
அளகன் லெச்சுமணரெழுந்தருள
திருநாமமது சாத்தி

சிறந்த செந்தூரப் பொட்டுமிட்டு
செங்கையால் கோதண்டவில்பிடித்து
தீரன் யிளைய பெருமாழும்
அட்டியல் சரப்பளி எடுத்தணிந்தார்
ஆபரணமாலைபூண்டு கொண்டார்

கைக்கு தங்கக்கடயமிட்டார்
கணையாளி மோதிரம் எடுத்தணிந்தார்
சாதிலிங்க வேட்டிகொய்துடுத்தார்
சருகைதலப்பாவும் சிரசில் வைத்தார்
ஆனைசெவியம்புகையில்லெடுத்தார்

பிரமவிஷ்ட்டுணு அஸ்திரங்கையிலெடுத்தார்
பிரபலமாகவேயெடுத்துக் கொண்டார்
லெச்சுமணப் பெருமாழும் அப்போது
பாசுபதக்கணை கையிலெடுத்து
பாவினையாகவேயெழுந்தருள

எழுபதுவெள்ளம் சேனபதியும்
யிருபத்திநாலுபடைவீரரும்
அபிந்தன்நீலன் சாம்புவன்செயிந்தன்
நீலநெடுமால் தன்சேனைபடை
தீரன்யிளையோரும் எழுந்தருள

அஞ்சனையாள்பெற்ற வாளனுமான்
அனுமராசனுமெழுந்தருள
ராமசெயம் அரிராமசெயம்
ராமரைதோத்திரம் பண்ணிக்கொண்டு
மாயாவுதாரரை தோத்தரித்து

---

7480. சாத்தி—இட்டு
7489. சரிகை > சருகை (பே. வ. மா)
7490. செவி—காது
7504. தோத்திரம்—வணக்கம்

வானராதிப்படையெழுந்தருள
தேவாதிதேவர்கள் குரவைபாட
தெய்வமடவார்கள் பூச்சொரிய
வானராதிப்படை சோபனம்பாட
மன்னர்லெச்சுமணர் வாறபோது

திருநாமப்பொட்டுடன் போராளர்
திருச்சூரன்நாமமது துலங்க
அரிரகுராமர் கிருபையதால்
ஆதூரலெச்சுமணப் பெருமாழும்
கோதண்டம் கையிலெடுத்துக்கொண்டு

சவ்வாது பலதுங்கமகமென
சாம்பிருணிவாசமதுதான்வீச
சற்ப்பனையாகவே லெச்சுமணரும்
ரகுராமகோபலரை அடிதொழுதார்
அடிதொழுத லெச்சுமணப்பெருமாழுக்கு

அரிரகுராமரும் விடைகொடுத்தார்
மன்னவரெகுராமர் விடைகொடுக்க
மாயவர்தம்பி சரந்தொடுத்தார்
வருகுலைபாணம் நெறுநெறுநெறென
மண்ணதிரவிண்ணதிர வருகிறது

## இலெட்சுமணன் இந்திர செயித்து போர்

அன்னேரம் யிந்திரசெயித்தவனும்
ராமனுனடய தம்பியோநீ
லெச்சுமணனேதான் உன்பேரு
உலகளந்தோனுட தம்பியோநீ
வாய்த்த பன்னகசாலை தன்னில்

பன்னகசாலைய(ா)னது தனிலே
பாவினையாக லெட்சுமணனேநீ
என்னுடைய மாமி சூற்பனகை
யிளமயிலாளவள் தன்னைப்பிடித்து
மூக்கரிந்தாயா நீயுந்தனமரிந்தாயா

ஆனதினுலுன்னை விடுவதில்லை
அரச்சணந்தனிலுன்னைக் கொல்கிறேன்பார்
ஆகயிருபேரும் போர்பொருதார்
என்னுடதிறமும் உன்திறமும்
யிருபேர்திறத்தையும் பாற்க்கவேணும்

---

7509. சோபனம்—வாழ்த்து
7516. சவ்வாது—நறுமணப் பொருள்
7517. சாம்பிருணி—நறுமணப் பொருள்
7518. சற்ப்பனை—வஞ்சனை

நாட்டரக்கன் மகன் போர்பொருதான்
எட்டுமலையும்யிடிவெட்டினாப்போல்
அரக்கன்மகனும் லெச்சுமணரும்
ஆகயிருபேரும் போர் பொருதார்
மண்டிபோட்டுயிருந்து கொண்டு

வாமாறியீட்டி எறிவார்சுளற்றி
அனுமானுடனே அங்கதனும்
சேர்ந்துலெச்சுமணரும் போர் பொருதார்
கோளிப்போரது பொருதாப்போலே
கொக்கரித்து படைக்களத்தில் பொருதார்

தக்கவீரரும் சமர் பொருதார்
சாணுக்கு சாணதுபறியாமல்
தட்டளியா அவர்போர்தொடுத்தார்
அன்னேரந்துரைபோரனுமாரும்
அரியானதூது வரோடிவந்தார்

தண்டாயுதத்தடி தானெடுத்து
விரட்டியடித்தார்துரை பே(ா)ரனுமார்
மண்டைகள் மூளைகள்தான்சிதற
வாளனுமான் விரட்டிஅடித்தான்
மொளியதுமுறிந்து போச்சுதென்பார்

மூளைகள் தான் சிதறிப்போனோமென்பார்
அபையம் அபயம் அனுமார்க்கென்று
அவர்கள் கூக்குரல் போட்டிடுவார்
வல்லரக்கன் சேனைமடிந்தபோது
வந்துகாகங்கள் குருதியுண்ண

அன்னேரம் யிந்திரசெயித்தவனும்
அரக்கன்திருமகனேதுரைப்பான்
மந்திரவித்தையது யிந்திரசாலம்
வல்லாரக்கனுட திருமகனும்
மாயாவினோத வித்தை செய்யவென்று

அரக்கன் அஸ்திரக்கணையெடுத்து

---

7546. வாய்மாறி > வாமாறி (பே. வ. மா)
7550. கொக்கரித்து—பேரொலிசெய்து
7552. பறியாமல்—விலகாமல்
7553. தட்டளியா—நிலைகுலையா
7560 மொளி—எலும்புமூட்டு
7563. கூக்குரல்—பேரொலி
7565. குருதி—இரத்தம்
7571. அஸ்திரக்கணை—ஒருபொருட்பன்மொழி

அவன்யிந்திரசெயித்துதொடுத்துவிட்டான்
அக்கினியாஸ்திரந்தொடுத்தபோது
அரிரகு ராமருடன் சேனைபடை
காந்தல பொறுக்கமாட்டாமல்

கைகுலத்தார்கள் அபயமிட்டார்
ஆழுக்கொரு மலைதான்பிடுங்கி
அரக்கன்பேரில்யெறிந்திடவே
அன்னேரம்ராஷதப்படைகளெல்லாம்
அரக்கனிடத்தில் முறயமிட்டார்கள்

அப்போதுயிந்திரசெயித்தவனும்
யீரேழுலகமும் நடுநடுங்க
உன்னைநான்யினி விடுவதில்லை
உன்திறமும் என்திறமும் அறியவேணும்
யிருவர்திறத்தையும் பாற்க்கவேணும்

என்றுமேயவர் படைபொருதார்
தக்கவீரரும் சமர்பொருதார்
சாணுக்குசாணது பறியாமல்
தட்டளிய அவர்போர்பொருதார்
அன்னேரந்துரை போரனுமான்

அரியானதூதுவரோடி வந்தார்
தண்டாயுதத்தடிதானெடுத்து
விரட்டியடித்தார் துரைபோரனுமார்
மன்னடையில் மூளைகள்தான்சிதற
வாளனுமான் விரட்டியடித்தான்

மொளியதுமுறிந்து போச்சுதென்பார்
மூளைகள்தான் சிதறிப்போச்சு தென்பார்
அபயம் அபயம் அனுமார்க்கென்று
அவர்கள் கூக்குரல் போட்டிடுவார்
வல்லரக்கன் சேனை மடிந்தபோது

வந்து காகங்கள் குருதியுண்ண
அன்னேரம் யிந்திர செயித்தவனும்
அரக்கன் திருமகனேதுரைப்பான்
யிந்திர செயித்தவன் கோபங் கொண்டு
அரக்கன் திருமகன் கணை தொடுத்தான்

மூன்று முனைக்கோடி அம்பெடுத்து
முகில் வண்ணர் பேரில் தொடுத்துவிட்டான்
தொடுத்த அம்பதை தான்பாற்த்து
துடிதுடித்து லெச்சுமணர்பிடித்துவிட்டார்
அப்போதுயிந்திர செயித்துத்தான் பாற்த்து

## இந்திர செயித்து வெற்றி

யினிமேல் நானென்ன செய்யப்போறேன்

---

7575. காந்தல்—எரிச்சல்

என்றுவல்லரக்கன் யிந்திரசெயிந்து
நாகபாசகணைதானெடுத்து
ராவணன்திருமகன் தொடுத்துவிட்டான்
வருகுதையோ நாகபாசமது

மண்ணதிரவிண்ணதிர வருகுதையோ
நாகபாசக்கணை பட்டபோது
ராமபாளையமெல்லா மயங்கிவிள
லெச்சுமணரும் மயங்கிகீளவிழுந்தார்
யிந்திரசெயித்தவன் குரவையிட்டான்

வீரகுரவையைப்பாடிக்கொண்டான்
ஆகாசத்தேர் மீதிலேறிக் கொண்டு
அரக்கன் யிந்திர செயி(த்)து தேர்நடத்தி
தேரை நடத்தியே யிந்திரசெயித்து
தென்னிலங்கா புரிதன்னை நோக்கி

படுகளமானது தன்னைவிட்டு
பாற்த்துயிலங்காபுரிதன்னில்வந்தான்
வல்லரக்கன் மகன் வந்தபோது
வரவுகண்டந்த யிலங்கை வேந்தன்
கண்ணில் கண்டானே ராவணனும்

காட்டரக்கன் மகனோடி வந்து
யிருபது கையால் சேற்த்தெடுத்து
யிலங்கை ராவணன் கொடுபோனான்
பத்துதலைவன் மகனுடன்அரசிருந்தான்
அரசிருக்கிற வேளையிலே

அன்றரக்கனந்த ராவணனும்
மகன்யிந்தி செய்த்து அவன்தனக்கு
வாய்த்ததாகமுந்தான் தீற்த்து
உண்டு நன்றுயவன் கையலம்பி
உடனே யிருந்தான் யிந்திரசெயித்து

யிருக்கிற தோரந்த வேளையிலே
யிலங்கை ராவணனேது ரைப்பான்
அருமைமகனே எனதுபாலகனே
யிந்திர செயித்தே யென்மகனே
ஆரையெல்லா மகனே கொன்றுவந்தாய்

ஐயாமகனே நீயுரைப்பாய்
வல்லரக்கன் ராவணன் கேட்டபோது
அன்னேரம்யிந்திர செயித்தவனும்

---

7615. குரவை—மகிழ்ச்சியொலி

7626. படுகளம்—போர்க்களம்

7639. கையலம்பி—கையினைச் சுத்தமி செய்து

கேள்க்க வேணுமையா யென்சுவாமி
கீற்த்தி பெற்ற தொருவசனமதை

யின்றைக்கு படுகளமானதிலே
யெழுபதுவெள்ளம் வானரப்படையும்
லெச்சுமணர் தன்னையுங்கொன்றுவிட்டேன்
ராமர் தனித்துயிருக்கிறன்
நல்லயிலங்கையாழும் ஐயாவே

நாளைப் போர்க்களமானதிலே
ராமரைச்சம்மாரஞ் செய்து வாறேன்
சீதாதேவியை விடவேண்டாம்
என்றுயிந்திர செயித்துச் சொன்னபோது
யிலங்கை ராவணன்சந்தோசித்து

யிங்கேவாயிங்கேவா என்மகனே
எடுத்துமடிமீதில் தூக்கி வைத்து
பேர்பெரிய மகனே யிந்திர செயித்தே
என்மகனே அய்யா யிந்திரசெயித்தே
யினிமேல நாமொன்று உரைக்கக்கேழும்

யிலங்கை எழுறூற்றுக் காதமெல்லாம்
யிளையபெருமாளைக் கொன்றேமென்று
எழுபது வெள்ளம் வானரமுங் கொன்றேமென்று
யிலங்கைதனில் பறைசாத்தவேணும்
வல்லரக்கன் ராவணன் விடைகொடுக்க

வாளிலங்காபுரி நகரதிலே
வல்லரக்கன் ராவணன் சொன்னபடி
நன்றுய்ப்பறையது சாத்திவிட்டார்
யிலங்கையில் பறையது சாத்திடவே
யிலங்கை ராவணன் திருமகனும்

சிம்மாசன மேடையானதிலே
தீரன்யிந்திர செயித்து அரசிருந்தான்
அரசிருக்குமந்த வேளைதன்னில்

## இராமர் மனம் வருந்தல்

அ . . .க பவளமலையானதிலே
பள்ளி கொண்ட ராமரேதுரைப்பார்

யின்றைப் போர்க்கள மானதிலே
லெச்சுமணப் பெருமாழும் போர்க்குப்போனர்
என்ன அபகேடு வந்துபோச்சோ
லெச்சுமணப் பெருமாளைக்காணுதில்லை
தம்பியைத்தானுங் காணுதில்லை

7657. சம்மாரம் – உயிர்வதை
7669. சாற்ற—சாத்த (பே.வ.மா)

தானதுநிலமணி பூஞ்சோலையிலே
அனுமாருடைய ஆரபாரமில்லை
அங்கதன்குரவை சத்தமில்லை
தம்பிக் கபகடமது வந்துபோச்சு
சுவாமி ரெகுபதி நின்று பரிதவித்தார்

அம்புபட்டதொரு மானதுபோல்
ஆதவர்ரகு ராமர் பரிதவித்தார்
மானைபிரிந்த கலையதுபோல
மறுகி மறுகியே பரிதவித்தார்

## விபீசணன் இராமரைத் தேற்றல்

அவதிப் படுகிறதுயரங்கண்டு

அரக்கனது தம்பியந்த விபூசணரும்
அப்போது ராமர் முன்பில்வந்து
அரிரகுராமரை யடிதொழுதார்
எங்கள் பெருமாளே கோபாலசுவாமி
மாயவர் அரிராமா கோபாலரே

வைகுண்ட ராமரே கோபாலரே
கொல்லவில்லை சரங்குறைக்கவில்லை
அந்தயிந்திர செயத்து சரமது தான்
நாகபாசக்கணைதன்னைவிட்டு
விபூஷணப் பெருமாழுரைத்தபோது

## இராமரும், விபீசணரும் இலெட்சுமணரை வந்து காணல்

அச்சுத நாராயணப்பெருமாள்
என்மனசுசற்றுந்தேருது
யிப்போது பாற்த்து வாதம்பியரே
பச்சை முகில் வற்ணர் எழுந்தருள
பார விபூஷணப்பெருமாழும்

ரகுராமசுவாமியும் எழுந்தருள
பவளமலையது தன்னைவிட்டு
உற்றபடுகளந்தன்னில் வந்தார்
படுகளநதன்னில் வந்தபோது
பச்சை மால்பரிதவித்து நின்றார்

அரக்கன் யிந்திரசெயித்து மாய்கையதால்
ராமரும் விபூஷணருங் காணமல்
காணமல் நின்று பரிதவித்து
கரங்குவித்துச் சிவத்தை உச்சரித்தார்
உச்சரித்து நின்ற வேளைதன்னில்

---

7694. மறுகி—தேம்பி
7695. அவதி—துன்பம்
7719. கரம்—கை

உத்தண்டஅரக்கன் மாய்கை தானீங்கி
திக்குதிசையும்யிவர்கள் தெரியக்கண்டு
ரெகுராம மூற்த்திபடைகளையும்
கண்ணில் கண்டு ரகுராமர்தான்பாற்க்க
வனந்தனில் லெச்சுமணர்படையுடனே

படைகளுடன் தளகத்த ரெல்லோரும்
பண்பானநீலன்குமுறத்தன் சாம்புவனும்
மற்றும்யாவரும் தளகத்தரும்
பே(ா)ரனுமானவன் தன்னுடனே
எழுந்துநின்று அடிதொழுதார்கள்

யிசைந்த படைதளகத்தரெல்லோரும்
மாயவர் ரெகுராமர் உங்கள் சரணமையா
ரெகுபதி கோபாலா சரணமையா
தரணியளந்தோனே உங்கள் சரணமையா
சுவாமிரெகுபதியே உங்கள்சரணமையா

மாவேலியை சிறையில்வைத்தோனே
மாவேலிராசன் அவர்தனக்கு
வருஷத்துக்கொருதரம் லோகம்பதினலும்
காற்த்திகை மாசம்ஆனதில்தான்
காற்த்திகைநக்ஷத்திரந்தனிலே

நகர்சோதனை வந்துபாற்பதற்க்கு
நன்ருய்விடைகொடுத்தவரே சரணமையா
அடிமைகளைக்காத்து ரெட்சித்தவரே சரணமையா
யிப்படித்தேவாரம் உரைத்தவற்க்கு
யிருக்கும்படி விடைதான் கொடுத்தார்

கொடுத்து யாவரும் நிற்கும் போது
கோலநெடு மாலவர்தன்னருகே

### விபீசணன் ஆலோசனை கூறல்

அப்போது விபூஷணப்பெருமாளும்
அரிரகு ராமரை பாற்த்துரைப்பார்
அரக்கனுட மாய்கையதுதானும்

அல்ப்பமாய் சற்றேயிருக்குதையா
நாகபாசமாய்கை யறுப்பதற்கு
நலமுடன் கெருடனை யழைப்பதற்க்கு
தெய்வகயிலாச மலையதிலே
செந்தலைக் கெருடாள்வான் யிருக்கிருன்

---

7726. தளகர்த்தர்>தளகத்தர் (பே. வ. மா) படைத்தலைவர்

7738. ஒருதரம்—ஒருமுறை
7743. ரெட்சித்தவர்—பாதுகாத்தவர்

7754. தேவாரம்—வணக்கம்;

ஆதிசிவன் பேரில் ஒரு நினவாய்
அன்புடனே நாமளிருந்ததுண்டால்
யிருந்தால் கெருடனையனுப்பி வைப்பார்
என்று விபூஷணர் தானுரைக்க

## செந்தலைக் கருடன் வருகை

அரிராமச்சந்திரன் ஒரு நினவாய்

ஆகாச விண்ணதைப்பாற்க்கும்போது
அப்போது யீஸ்பரன் மனதிரங்கி
அருமையுடனவரேது செய்தார்
நமதுமைத்துனர் நாராயணர்
நம்மை நினைந்து துதித்துக் கொண்டார்

என்று சொல்லியே பரமசிவன்
யேத்த கருடாள்வாரை வரவழைத்தார்
ஆதிபரமசிவம் வரவழைத்தார்
அங்கே தேவர்கள் தானறிய
தேவாதி தேவர்கள் தானறிய

திருக்கூட்ட(த்)தாருந் தானறிய
ஆதிபரமசிவம் அனுப்பிவிட்டார்
வாருரே செந்தலைக் கெருடையாள்வார்
வரிசையுடையதோர் சிவனருளால்
ஆதிபரனையடி தொழுது

அந்தக்கெருடனும் எழுந்தருள
கயிலாசமலையுமிட்டு
கரைக்கண்டனுர் சொல்ப்படிக்கு
போர்க்களமான யிடமதிலே
ராமசந்திர பகவானுட நேராக

ஆகாசமதி(ல்)அந்தரமாற்க்கமாக
செந்தலைக் கெருடன்வந்து வட்டமிட்டார்
வட்டமிட்டுக்கெருடன் நிற்பதையும்
மாயவர்ரெகுபதி கண்டுகொண்டார்
வாய்த்த விபூஷணருங்கண்டுகொண்டார்

கெருடாள்வாரும் ரெகுராமரை
கிட்டவந்தவர் தோத்தரிக்க
போர்க்களமெல்லாங் கெருடாள்வார்

---

7761. அல்ப்பமாய் (மலையாளவழக்கு)—கொஞ்சமாய்
7761. ஆகாயம்>ஆகாசம் (பே. வ. மா)
7761. விண்—வானம்
7778. கரைக்கண்டனுர்—சிவனுர்
7781. அந்தரம்—வான்
7787. தோத்தரிக்க—வந்தனம் செய்ய

புகள்ந்து வட்டமது தான்போட
மூன்றுதரம் வட்டம் சுற்றினபின்

அரக்கன்குறமாய்கை யதுபோச்சு

### *மயங்கிய வீரர்கள் எழுதல்*

மாயவர்தம்பி லெச்சுமணரும்
வானரப்படைதளகத்தரும்
தளகத்தர்படைதலைவர் யாபேரும்
தாராளமாக யெழுந்தருள

மன்னன் அனுமார் தூதனுக்கு
வல்லரக்கன் குறமாய்கைவிட்டு போச்சு
கயிலாச லோகமானதிலே
கற்த்தர் பரமசிவன் முன்பாக
திருக்கூட்டம் யாவருந்தானறிய

சிவசக்திதாயார் தானறிய
தெய்வக்கெருடன் போய்ச்சேற்ந்தான்
அப்படியிருக்கிற வேளையிலே

### *விபீசணன் யாவரையும் அயோத்திக்குப் போக வேண்டல்*

அரக்கன் ராவணன்தம்பியான
விபூஷணப் பெருமாள் ராமர் முன்பில்

வந்துகை கெட்டி நின்று கொண்டு
வடிவாகத்தான் பணிந்து தெண்டஞ்செய்து
யிந்திரசெயித்தவன் மாய்கையெல்லாம்
யிப்போதுசுவாமிதீற்ந்து போச்சு
படைகள்தளகத்தற்யாபேற்க்கும்

பண்பாய்சுவாமிகளைதீற்ந்து போச்சு
அரக்கன் மகன்யினிஒளிந்து கொள்வான்
அய்யோத்தியாபுரிக்குபோகவேணும்
அனுமார் நின்றுகுரவைபாட
அங்கதன் வெஞ்சாமரை[ே]யதுவீச

மாயவர் பேரில்கும்மிபாட
வாய்த்த அனுமார்தானுமப்பே(ா)
கும்மியடித்துகுரவைபாட
கோபாலர் பேரில்சோபனம்பாட
ராமசெயம் ராமசெயமெனவே

---

7791. குறமாய்கை—கள்ளத்தனமான மாயாஜாலம்

7799. கற்த்தர்—இறைவன்

7801. சிவசக்தி சிவனின்மனைவி

7811. களை — அயர்வு

ராமர் பாளையந்தான்வரவே
உற்றபடுகளந்தனையுமிட்டு
உற்றவனங்களுஞ் சோலைவிட்டு
பவளமாமலைதன்னில் வந்தார்
பச்சைமுகில்வற்ணர் அரசிருந்தார்

அரசிருக்கிற வேளையிலே
அப்போதுவிபூஷணப் பெருமாளும்
அரிரகுராமரைத்தான் பாற்த்து
அரக்கன்மகன் யிந்திரசெயித்தவனும்
மேகபடலமதில்தான் மறைந்து

மேலானகயிலாச லோகமதில்
மறைந்துகொள்வான் யிந்திரசெயித்து
வல்லரக்கன்ராவணன் யிப்போவரமாட்டான்
யிப்போநாமும்படைவீரருடன்
எல்லாபேர்களுந்தான் சேற்த்து

அய்யோத்தியாபுரிதன்னில் சென்று
யிருக்கவேணுஞ்சுவாமி யென்றுரைக்க
ராமசந்திரபகவான் தான்கேட்டு
எல்லாப்பேர்களும் ஒருமனமாய்
அய்யோத்தியாபுரிக்கு போய்விடலாம்

யிப்படியிருக்கிறவேளையிலே

## இராமர் அனுமானை இலங்கைக்குச் சென்று பழிவாங்கச் சொலல்

யேதுசொல்லுவார் ராமருந்தான்
போரனுமாரை வரவழைத்து
புகள்ந்துஒரு வாற்த்தைதானுரைப்பார்
அரக்கனையுமவன் படைகளையும்

அத்தனைபேரையும் அதம்செய்வேனென்றுய்
யிப்போதுநீதான் யிலங்கைசென்று
ராச்சதனை அதஞ்செய்து வருவாயென்றுர்

## அனுமான் இலங்கையில் போர்புரிதல்

உரைத்தஉடனந்த பே(ா)ரனுமான்
விசுவரூபங்கொண்டு யெழும்புகையில்

மெய்க்கவே ராமருடன் படைகளுமாய்
உற்றபவளமலையானதிலே
உற்றகோபாலர் வந்தரசிருந்தார்

---

7830. மேகபடலம் — மேகமண்டலம்
7850. விசுவரூபம் — உலகமெல்லாம் அடங்கிய பெருவடிவம்

அரசிருக்கிறவேளையிலே
அனுமார் தண்டாயுதத்தடியுடனே

யிலங்கைதனில் போய்ச்சேர்ந்து
யிசமராசனைப்போல் ஆர்ப்பரித்தவுடன்
ராவணன்மகன் அதிகாயனைத்தான்பாற்த்து
நல்லமகனே அய்யா உரைகேளு
என்தங்கைஉன்மாமி சூர்ப்பனகை

வனத்தில்போன உன்மாமிதன்னை
மானிடர்முக்குந்தனமும் அரிந்துவிட்டார்
அரக்கன்தங்கையென்றும் பாராமல்
அபமரியாதை செய்துவிட்டார்
யிப்போதுமானிடர்தூதன்தானும்

யிங்கேயுத்தரு செய்யவந்திருக்கிறான்
அவனை நீ சென்றுபிடித்துவாடா
அய்யா அதிகாயா போர்வீராஎன்றார்
அப்போது அதிகாயன் தானெழுந்து
அவனுடையானைத் தளத்துடனே

வந்துஅனுமாருடன் போர்பொருதான்
அனுமானும் அதிகாயனுமாய்
அதிகமாய்ப்போரதுதான் பொருதார்
ஆதிசேடனுடமுடிகுலுங்க
மல்யுத்தமது தானுஞ் செய்து

வரிசையாகவே பொருதார்கள்
பொருதுகிக்கிறநேரமதில்
போரனுமான் தண்டாயுதத்தடியோடு
ஆனைப்படைத்தளந்தன்னில் வந்து
அடித்தானே சண்டமாருதம்போல்

ஆனைத்தளங்கள் முனைதான்சிதற
ஆனைகளெல்லாம் மடிந்தபோது
அரக்கன் ராவணன் மகன் தானெதிர்த்தான்
எதிர்த்துச்சென்று அதிகாயனும்
யேறிட்டு அனுமார்தன்னைப்பாற்த்து

என்னுடதளங்களை நீ கொன்றுவிட்டாய்
யின்னம்ஒரு வசனமுரைக்கக்கேளு
உன்னுடையயிசமான்ரண்டு மானிடவர்
உற்றஎன்மாமி சூர்ப்பனகைதன்னையும்
அஞ்சாமல் சற்றுங்கெணி[illegible]மல்

---

7857. ஆர்ப்பரித்த—பேரொலிசெய்த
7864. அபமரியதை - இழிவு
7880. சண்டமாருதம்—பெருங்காற்று
7888. எசமான் > யிசமான்

ராவணன்தங்கை யென்றும்பாராமல்
மூக்கரிந்துவிட்டார் தனம்அரிந்துவிட்டார்
முறமைகேடது செய்துவிட்டார்
அவர்களையும் லேசாய் விடுவேனோ
அனுமானே உன்னைக் கொல்கிறேன்பார்

என்றுரைக்க அனுமார் கோபங்கொண்டு
எதிர்த்துச்சீறிதானெழும்பி
தண்டாயுதத்தடி லகயிலெடுத்து
தாண்டிஎதிர்த்துத் தானெழும்பி
அதிகாயன் தன்னுடசிரசதிலே

அடித்தானே தண்டாயுதத்தடியாலே
தானேசிரசு தேங்காய் பிளந்ததுபோல
தானும் மூளைகள் சிதறிடவே
மூளைகள் சிதறிடவே குருதிபாய
மூடன்அதிகாயன் தான்விழுந்தான்

விழுந்து அதிகாயனும் பட்டவுடன்

## இராவணன் வருந்துதலும் மந்திரி தேற்றுதலும்

வெத்திசங்கு அனுமார்பாடிடவே
வெத்திசங்கோசை ராவணன் கேட்டு
வெகுன்றங்கெழுந்தவன் தானழுதான்
அழுதகுரல் மகோதர மந்திரிகேட்டு

அப்போது ராவணன் முன்பில் வந்து
யேன்அய்யா கிலேசப் படுகிறீர்கள்
யென்றுமே மந்திரி ஓடிவந்து
வரும்விதிதானும் வந்தாக்கால்
வாய் திறந்து கத்தவும் நீதியுண்டோ

தைரியம் வீரியம் வேண்டாமோ
தங்கள்மகன் யிந்திரசெயித்திருக்க
யிப்படிக்கிலேசம் வைக்கக்கூடாது
என்றுரைத்தார் மகோதரமந்திரியும்

## இராவணன் இந்திரசெயித்தை போருக்கனுப்பல்

அப்போது ராவணன் மனந்தேறி

அவன்மகன் யிந்திரசெயித்தை வரவழைத்து
அனுமக்குரங் கையுமவன் கூடவந்த
அடுத்தமானிடர் யிருவரையும்
மூவரையும் யிப்போ யுத்தகளத்தில்
பெருஞ்சண்டையது தானுஞ்செய்து

---

7894. லேசாய்—எளிதாக
7899. தாண்டி—குதித்துத்தாண்டி
7907. வெற்றி>வெத்தி (பே.வ.மா)
7916. வீரியம்—வீரம்;பலம்

பிரபலமாய்க்கொன்று வரவேணும்
ராவணன் உத்தரவு தவருமல்
நபின்று வருமந்த வேளையிலே
பவளமலையந்த சார்[ா]வுதன்னில்
படைகழுடன் அரசிருந்த திருமாலும்

அனுமார் வெத்திச்சங்கோஷை கேட்டு
வீரன் அனுமானுரைத்த வரலாறெல்லாம்
யிந்திரசெயித்து பெருஞ்சண்டை செய்யவாருன்
யிப்போது அந்தரமாயுத்தஞ்செய்ய
என்ன அனுமாரும் உரைத்தபோது

யிசைந்து ராமச்சந்திரன் கேட்டுக்கொண்டு
சந்தித்து யாவரும் ஒன்றுபோலே
தானே பவளமலைச்சாரலில் அரசிருந்தார்
அரசிருக்கிறதோர் வேளையிலே
அப்போ யிந்திரசெயித்தவனும்

பவளமலைச்சார்வு ஆனதிலே
பாங்குடனே வந்து வீற்றிருந்தார்
வீத்திருக்கின்றதோர் வேளையிலே
மேகவண்ணர் கோபாலர்சமுகமதில்
வாய்த்தஅனுமார்வந்து தெண்டஞ்செய்து

மாயவரே யிந்திரசெயித்து யுத்தஞ்செய்ய
படைகழுடனவனும் வந்துவிட்டான்

## இந்திர செயித்துப்போர்

பண்பாயடியேனுக்கு விடையருள்வீர்
என்றுரைத்துவிடைகேட்டபோது
யேகினர்ராவணன் மகன்முன்பதிலே

மாயஞ்செய்துசீதை யென்றுவேசமிட்டாய்
யிந்திரசெயித்தே உன்சேவுகத்னத
யிப்போதுதிறமையைப் பாற்ப்பமோடா
என்னுடன்உன்னுல் எதுக்ககூடுமோடா
லெச்சுமணர[க்க]ம்புக் கிரையாவையோடா

ரெகுராமரிடம் உன்னுல் எதுக்கஆகுமோடா
அடாஅடா உன் அத்தை மூக்கரிந்தார்டா
யின்னம்உனக்குச் சொல்லவேணுமோடா

7927. உத்தரவு—கட்டளை
7928. நபின்று—செய்து
7944. சமுகமதில்—முன்னிலையில்
7952. சேவுகம்—வீரம்; தொழில்
7958. யின்னம்>மேலும்

சந்திரனைப் பாற்த்து நாய்குலைக்குமோடா
குலைத்தாலவர்க்கினம் கோணுமோடா

வந்துஉன் ஊரை தீக்கொழுத்தினதறிவாயோடா
மந்திரத்தால் மாங்காய் விழுமோடா
வில்லெடுக்கவில்லாளி நீதானோடா
வீராதிவீரஞ்செய்ய விபூசணரும்
எப்போதேயிங்கு வந்திருக்கிறானடா

யிப்படிஅனுமார் உரைத்தவீரியம்
லெச்சுமணப்பெருமாள் கேட்டுக்கொண்டு
அனுமாரைக் காப்பற்றவேநினைக்க
அரக்கன்யிந்திரசெயித்துடன் அமர்பொருதார்
கச்சியாகஅனுமாரை வாகனமாய்

கனமாய் எழுந்தருளி தான் பொருதார்
சிங்கம் ஆயிரங்கொண்டதேரில்
தீரன்யிந்திரசெயித்து வந்து பொருதான்
ஆயிரங்கோடி அம்பு முன்னால்யெய்தான்
லெச்சுமணர் அவன்விடும் அம்பைப்பொடியாக்கினார்

அரக்கன் அர்த்தசந்திரக்கொடியெ(ய்)தான்
லெச்சுமணர் அர்த்த(கு)சந்திரக்கொடிவிட்டறுத்தார்
கலியாஸ்திரக் கொடி அரக்கன்விட்டான்
கெசனாஸ்திரம் லெச்சுமணர் விட்டறுத்தார்
நாணாஸ்திரம் அரக்கன் கோடியெய்தான்

காளாஸ்திரம் லெச்சுமணர் விட்டறுத்தார்
யேறயேற அரக்கன் தேரையெல்லாம்
லெச்சுமணர் பாணத்தால் தேரைபொடியாக்கினார்
அரக்கனுடபடைகள்வந்துசெரும
குரங்குவெள்ளப்படைகளைக் கொன்று போட

அரக்கன்தளகத்தர்முகங்க் கொண்டு முளிக்க
அனுமார் தளகத்தர்கூடி மண்டையுடைக்க

---

7959. இவ்வரியில் ஒருபழமொழி இடம் பெற்றுள்ளது.

7859. குரைக்கும் > குலைக்கும் (பே. வ. மா)

7960. கோணும்—வளையும்

7961, கொழுத்தினது—எரித்தது

7969. அமர்—போர்

7976 அர்த்த - பாதி; அரை

7978—7991. இவ்வரிகளில் பல அம்புகளின் பெயர்கள் குறிப் பிடப்பட்டுள்ளன.

7984. செரும—நெருங்கி நிறைய

மறுநாள் சூரியபகவான் உதித்தபின்பு
வல்லரக்கன் யிந்திரசெயித்து மாய்கை செய்தான்
மாய்கை செய்து நாகப்பாசக்கணை தொடுத்தான்

வல்லரக்கன் பாசத்தால் லெச்சுமணரை
மாயம் செய்தவனுக்குக்கதிர் மாய
லெச்சுமணர் பாசங்கொண்டு தட்டிவிட்டார்
நாகப்பாசம் விட்டசெய்தி ராமர் தானறிந்து
கைலாச தெய்வலோ(க)ம் வீத்திருக்கும்

பரமசிவன் பாற்பதியைத்தான் நினைந்து
சடாயுதேவரைதியானிக்கவே
தம்புரர் சடாயுதேவன் சிறகு தட்டி
யெழும்பி ஆகாசந்தன்னில் யேவி
யிசைந்து போர்களத்தில் ஆகாசமாய்

ஆகாச மாற்க்கமாய் சடாயுராசன் வந்து
ஆதவர் லெச்சுமணருக்கு நேராக
அந்தரந்தன்னில் வட்டமிட்டார்
முக்கால வலஞ்சுத்தி வட்டமிட்டு
முகுந்தா முகுந்தாகோபாலாயென்று

வட்டமிட்டான் நாக பாசமதை மாய்க்க
அத்துப்பொடிநீருய்ப் போனவுடன்
ஆதவர் லெச்சுமணர்தானெழும்பி
யெழும்பியெழுந்துதிருமாலிடம்
யிசைந்து பாதம் அடிபணிந்தார்

சடாயுதேவருமப் போது
ராமசந்திரர்துடையில் வந்தடைந்தார்
யிப்படியிருக்கிற வேளையிலே
பள்ளிகொண்ட பெருமாளும் லெச்சுமணரும்
பாரவிபூஷணப் பெருமாள் தன்னுடனே

தளகற்றரெல்லாப்பேர்கழுடன்
தானே வானரப்படைகழுமாய்
பே(ா)ரனுமானுந்தன்னுடனே
புகள்ந்து பவளமலைச்சாரலில் அரசிருந்தார்
அரசிருக்கிறதோர் வேளையிலே

விபூஷணப்பெருமாள்தானுரைப்பார்

---

7997. தியானிக்க—இடைவிடாது நினைக்க
7998. தம்புரர்—தலைவர்
8004. முக்காலம்—மூன்றுமுறை
8006. மாய்க்க—அழிக்க
8007. நீருய்—சாம்பலாய்

என்சுவாமி ரெகுராமகோபாலரே
என்னை ஆதரித்த சிவ(ப்)பொருளே
யிப்போ ஒருகாரணம் உரைக்கிறேன்
காரணமானது தானுமையா

கவனித்து நன்றாய் கேள்க்கவேணும்
அனுமாரே நீறுங்கேள்க்கவேணும்
ஆனபடை தளகத்தாரெல்லாங் கேள்க்கவேணும்
தெய்வலோக மானதிலே
எல்லாபேர்கழுங்கேள்க்கவேணும்

மாயவித்தை மந்திரமும்
மாறாட்டங்களெல்லாந் தானுஞ்செய்து
ஆருமொரு வருக்குந் தெரியாமல்
அவன்யிந்திர செயித்து யேதுசெய்தான்
மறைந்து தானவனிருந்து கொண்டு

மாயநிகும்பல் வேள்விவளக்குறான்
வேள்விவளத்து முடித்துவிட்டால்
வேறொருவராலு முடியாது
யிப்போ அவன் வேள்வியை அளிக்கவேணும்
வேள்வியைத்தானும் தானளித்து

விரைவாய் யிந்திர செயித்தவனை
பிடித்திங்கே கொண்டு வரவும்வேணும்
யிந்த பிறகாரஞ் செய்வதற்கு
யிசைந்த பே(ா)ரனுமானை யனுப்பவேணும்
அனுப்பினாலுஞ் சுவாமி போராது

அதற்குத்தந்திரமாய் போகவேணும்
போகிற காரணம் விபரமதாய்
எல்லாபேர்கழுங் கேள்க்கவேணும்
என்னுட அண்ணன் மகன்யிந்திர செயித்து
யிங்கேசண்டசெய்யத்தான் பயந்து

ராவணனிடத்தில் முறையிட்டான்
அப்போது ராவணர் கோபங்கொண்டு
அவனை வெட்டுவேனென்று யெழும்பிவந்தான்
ராவணன் கையில் வாளைக்கண்டவுடன்
நல்லமகனுந்தான் பயந்து

---

8027. நீறும்—நீவிரும் (முன்னிலை உயர்வு ஒருமை)
8032. மாறாட்டம்—உருவ மாற்றம்
8035. வளக்குகிறான்—வளர்க்கிறான்
8043. யிந்தப்பிறகாரம்—இந்தப்படி
8045. போதாது>போராது (பே.வ.மா)
8047. விபரமதாய்—தெளிவாய்

அரக்கன் மனசுக்குயிசைந்தபடி
யிந்திர செயித்தவன் போருக்குவந்தான்
மூன்றுதரம் அவன்வந்து பொருதும்
முக்கியமாய் பின்னடையுங் காரணங்கள்
ஞானவான் ஆனதால் தெரிந்துகொண்டான்

யிப்போ யிந்திர சித்தனவனும்
நிகும்பல் வேள்வி முடிக்கவேணுமென்று
ஆகாசமேக மண்டலந்தான்
அடுத்தநச்சத்திர மண்டலத்தில்
சூரிய மண்டலந்தான்கடந்து

சந்திரபகவான்மண்டலந்தான் கடந்தான்
தெய்வலோகமானதிலே
மாயவித்தைமந்திரமும்
மாருட்டமெல்லாந்தானுஞ்செய்து
ஆருமொருவருக்குந் தெரியாமல்

மறைந்தானவனிருந்து கொண்டு
புண்ணியரே ராமச்சந்திர பகவானே
யிந்திரசெயித்தைக்காண வேணுமென்றால்
அவன் எடுத்துமறைத்திருக்கும் மாய்கையிது
அறுபட்டு வெளிச்சம் ஆகவேணும்

ஆதிநாராயணரே உங்கள் கிருபைவேணும்
அனுமாரை உங்கள் அனுமாரை வரவழைத்து
ஆதிவிபூதி நாமஞ்சாத்தி
அரக்கன் மாய்கையத்தனையும்
அற்றுப்போக வேணுமென்று

என்றனுமார் முகம்நீர்பாற்த்து
யிப்படிவிடை கொடுத்தனுப்புமையா
என்றுவிபூஷணப் பெருமாழுரைத்தபோது
எம்லாப்போர்கழும் ஒருமனமாய்
ராமச்சந்திரபகவானுமனுப்பிவிட்டார்

அனுப்பினஉடனந்த பே(ா ரனுமான்
அப்போதுவிசுபருபங்கொண்டு
அந்தரமாய் ஆகாசந்தாவிப்போக
எல்லா மண்டலமுந்தாவிப்போக
தெய்வலோகத்தில் சேற்ந்தஉடன்

---

8059. பின்னடையும்—தோல்விடையும்

8060. ஞானவான்—அறிவுடையவன்

8078. விபூதி—திருநீறு

8078 நாமம்—வைணவர் நெற்றியில் இடும் குறி

8081 நீர்—முன்னிலைப் பெயர் (உயர்வு ஒருமை)

யிந்திர செயித்து செய்தமாய்கையது
அத்துப்போனபின் வெளிச்சமாகி
அனுமார் சகலதும் பாற்த்துகொண்டார்
அப்போவேள்வியில் தவசிருந்தான்
தவசின் மகிமயை அனுமார் பாற்த்து

தானே ஒருசிற்றுப்பெலந்தானுங்கொண்டு
தவசிருக்கும் யிந்திரசெயித்துநேராக
அனுமான் அந்தரமாய் நின்றுகொண்டு
ராமா ராமா ராமா என்றுரைத்து
நாடிச்சாடிநேராய்யிந்திரசித்தவன்மேல்

சாடியரக்கனைத்தானடித்து
தலைவேள்வியைத் தானளித்தான்
அப்போது வேள்விதானளிய
அரக்கன் அடியதுபட்டபோது
அவனு மதிமசங்கி யிருக்கலுற்றான்

யிருக்கிறபோது போரனுமான்
யிந்திரசெயித்தைப் பாற்த்தேதுரைப்பான்
யிந்திரசித்தே தத்திரவித்தை செய்யவேண்டாம்
உந்தன்நிகுல்பல் வேள்வியது
ஒளித்துச் செய்கிறாய் பூசையடா

ஒளிக்குஞ் சேவகனுந்தனக்கு
முகத்தில் யேந்தான் வீசையடா
முந்தி யென்தாயார் சீதையைப்போல்
ஒருமாய் சீதை செய்து கொண்டாயோடா
முருக்கா அய்யோத்தியில் சென்றாயோடா

பந்தலைந்தவனே நீகெட்டாயோடா
பதராசனையும் நீவென்றாயோடா
ராவணனுக்கு வீரியம் உண்டோடா
உன் அங்கம் வைத்திருக்க ஆகுமோடா
உன்வாணலை வைத்திருக்க ஆகுமோடா

---

8093. சகலதும்—அனைத்தும்

8096. சிற்று—மாயவித்தை

8113. முந்தி—முன்னர்

8115. முருக்கா—இளையோனே

8117. பந்தலைந்தவனே—பற்றற்றவனே

8117. பதராசன்—சூரியன்

8119. அங்கம்—உடல்

8120. வாழ்நாள் > வாணல் (பே. வ. மா)

வச்சிராயுதம் வேலாயுதம் போடுஅடா
சக்கிருயுதம் சூலாயுதம் போடுஅடா
உன்நாகாஸ்திரம் பிரமாஸ்திரம்போடுஅடா
ஆடுமாடுபூனேபோல முளிக்கிருயோடா
ஆடெடுத்தக்கள்ளனேப்போல முளிக்கிருயோடா

அருண்டுருண்டு முளிக்கிருய்பாவியடா
பரிதவித்துஉந்தன் நிகும்பல்வேள்வி
பாழுஞ்சுடலேயாச்சுதடா
கருதிஎமதற்மர் வந்துவிட்டாரடா
உன்காலமும் முடிஞ்சுபோச்சுதடா

சிறைப்பட்டயிந்திரர் வந்துவிட்டார்
செல்லலெட்சுமணர் கொல்லவந்துவிட்டார்
யிப்போ நீயெழுந்து வாடா
என்றுரைத்து அரக்கனேத்தான்பிடித்து
பிடித்த பிடியுடனே விட்டுதள்ளி

பவளமாமலே சார்வுதன்னில்
படுகளமானதோர் போர்க்களத்தில்
அரக்கன்யிந்திர செயித்துடனே
அனுமராசனும் வந்து சேற்ந்தார்
சேற்ந்தவுடனேயிந்திர செயித்தவனும்

தீரன் விபூசணரைப் பாற்த்துரைப்பார்
சித்தப்பா உன்ஞலே யெந்தனக்கு
தீங்குரைத்து நீயுமனுப்பிவிட்டாய்
யிப்படிஅரக்கனும் உரைத்துநிற்க
யேறிட்டுராமச்சந்திர பகவானும்

தம்பிலெச்சுமணரை அருகழேத்து
தானேயிந்திரசெயித்துதனேகொண்டுவாரும்
கொண்டுவாருமென்றுரைத்தபோது
கோபாலசுவாமி சமுகமதில்
எல்லாபேர்களும் தானறிய

என்தகப்பன் ராவணன்சம்மதிகேட்டு
சம்மதிகேட்டு நான்வாறேன்சுவாமி
தயவாய்யிந்திர சித்துகேட்டபோது
அனுப்பிவிட்டார் சுவாமிகோபாலர்
ராமசுவாமியிடம் விடைபெற்றுக்கொண்டு

யிலங்கை ராவணனிடத்தில் வந்தான்

---

8125. எடுத்த—திருடிய
8126. அருண்டுருண்டு—மயக்கமுற்று
8128. சுடலே—சுடுகாடு
8152. சம்மதி—ஒப்புதல்

வந்து ராவணனைத்தான் பாற்த்து
அய்யா ராவணா என்றல்சண்டை செய்ய
ஆகாது முடியாதுயென் சுவாமி
என்னுட சமற்தை யெல்லாம் தோற்றுவிட்டேன்

தெய்வபிலனில்லை எந்தன் அய்யாவே
என்றுரைத்த யிந்திர செயித்தை பாற்த்து
ராவணன் சீறிமிக்க கோபங்கொண்டு
வாளெடுத்து வெட்டுவதற்கு ஓடிவந்தான்
வந்ததை யிந்திர செயித்துத்தான் பாற்த்து

மகிழ்ச்சையாய்ப் பள்ளி கொண்ட சுவாமியிடம்
வந்துஅடிபணிந்து தெண்டஞ் செய்து
மகாதேவாளனை வதைக்க சரந்தொடுக்க வேணும்
என்றுயிந்திர செயித்து உரைத்தபோது
யிசைந்து கோபாலர் தான்கேட்டு

தம்பிலெச்சுமணரை அருகே வரவழைத்து
ஒருவசனம் தம்பி உரைக்கக்கேழும்
யிந்திரா செயித்து அவன்தனக்கு
முன்னடக்குங் பின்னடக்குங் காரணங்கள்
முக்கியமாயவன் தனக்கு தெரியுமப்பா

வானத்திலும் வனம்மறை வானப்பா
வந்தயிடத்திலுங் காணமாட்டார்
என்று ரகுராமருரைத்த போது
யிருந்த விபூஷணப் பெருமாழும்
அப்போது கோபாலர்தனைப் பாற்த்து

அடியேன் வசனமது கேள்க்கவேணும்
உங்கள் முன்பாக அடியேனை
ஒழுங்கின குறைவாயுரைத்தான்
ஆனல் அவனுக்கு தயவுசெய்து
அடியேனுக்காக மோச்சம் அருளவேணும்

கூடுபோட்டு மோச்சம் அடையும்படி
கோபாலசுவாமி கிருபை செய்யவேணும்
என்று உரைத்தபடி அருளவென்று
யிசைந்து ரெகுராமரேதுரைப்பார்
லெச்சுமணரை அருகில் வரவழைத்து

யிப்போது யிந்திர செயித்துபேரில்
பாணம் போட்டிடுவாய் தம்பியே நீ
பண்பாக உத்தரவு பிறந்தவுடன்

## இந்திர செயித்து இறத்தல்

வில்லில் அம்புசரந்தான் பூட்டி

---

8160. சமற்தை—பலத்தை
8183. ஒழுங்கின குறைவாய்—இழிவாய்

மெய்க்கவே லெச்சுமணர் தொடுத்து விட்டார்

தொடுத்தகணை யிந்திர செயித்து பேரில்
தொகுப்பாய் கிரசதை யறுத்திடவே
சிரசதுபட்டவுடன் உயிர்தானும்
தெய்வலோகமாதில் வீற்றிருந்தார்
தவறுபடாதிடிகழுக் குந்தலைவலிக்கும்

தலையணை மாற்றிவிட்டாய் போலே என்ன
உவமையிது எனமகவாற்த்தை கேளாமல்
உவழும் ராவணனை விட்டான் ஊரைவிட்டான்
கவனமோசா யிரங்கிதிரை கொண்டதேர்மேல்
கூடல்படையுமதான போர்க்களத்தில் வந்தான்

பவனமெனும் லெச்சுமணர் அம்புபாய
பாய்ந்திட்டான் யிந்திர செயித்து மாய்ந்திட்டானே
யிந்திர செயித்தவன் மடிந்தவுடன்

## இராவணன் புலம்பல்

ராவண சூரன்தான் தெரிந்து
படுகளந்தன்னில் வந்து சேற்ந்து

பண்பாகமகன் பேரில்தான்விழுந்து
விழுந்துமுகத்தோடே தானறைந்து
மேவி படுகளத்தில் விழுந்தழுதான்
மந்திரியே என்துரை என் மகனே
மகனேமகனே என்பான் ஒருவாயால்

யிந்திரசித்தே யிந்திாசித்தே என்று
யிரைந்தழுவானவன் ஒருவாயால்
யிகத்தினில் என்னையுந்த விக்கவிட்டு
யிறந்தாயோ யென்பான் ஒருவாயால்
மனிதன் அம்புக்கணை பாய்ந்தோஉந்தன்

மனப்பிணியோ என்பான் ஒருவாயால்
பாய்ந்தோ யிந்திரன் முடிமேல்மகனே
பறித்தமணிமாலையென்பான் ஒருவாயால்
மானு(ட)ங்காலில் விளஆச்சேயிந்த
மானிலத்தில்என்பான் ஒருவாயால்

பிள்ளைமனிதன்கை அம்பால்பட்டு
பிரண்டாயோயென்பன் ஒருவாயால்
பாசமதுதானுந் தீண்டிவிட்டோ
பதறியழுவானவன் ஒருவாயல்
அரனையுமாயனையும் வெல்லாதிருக்கில்

---

8203. உவழும்—துவளும்; நடுங்கும்
8229. பதறி—பதற்றமுற்று

அஸ்ட்டகோசங்களைத்தானும் வென்று
நாணுக்குதோத்திட ஆச்சோயிந்த
நாளில்என்பான் ஒருவாயால்
யிப்படிராவணன் அழுங்குரலோசை
யிசைந்தமகோதர மந்திரிதான் கேட்டு

ராவணன் சமுகந்தன்னில் வந்து
நல்லவாற்த்தையுரைத்தான் தான்தேறி
சடமதையிப்போ அடக்கஞ்செய்து
தான் முடித்திட வேணும் மகாராசாவே
என்றுரைக்க ராவணன் தான்கேட்டு

யிசைந்து வண்டோதரியைத்தானமத்தி
எல்லாருஞ்சேற்ந்து ஒருமனதாய்
அடக்கந்தான் செய்துமுடித்தபின்பு
எல்லாபேரையுமர வணைத்து
வண்டோதரியுடன் பெண்களைத்தானமத்தி

மகிள்ச்சையாயிலங்கையில் வாள்திருந்தான்
ராவணனும் மகோதரமந்திரியும்
நயந்துயாபேரும் வீத்திருந்தார்

## கும்பகர்ணனை எழுப்பல்

வீற்றிருக்கிற வேளைதன்னில்
விளம்புவார் மகோதர மந்தியும்

கூண்ட படைகளைக் கொண்டு வந்து
கும்பகற்ணனை யெழுப்பச் சொன்னார்
சேனைபடைகளை வரவழைத்து
செப்புவாராம் மகோதரரும்
நித்திரை செய்யும் கும்பகர்ணனை

நிமிசத்தில் எழுப்பி வாருமென்றார்
வாற்த்தை கேட்டந்த தளகத்தரும்
வரிசையுடனவர்தான் கூட்டி
உருட்டிப்பிரட்டியே யெழுப்பிப்பாற்த்தார்
ஒருவிதத்திலுமுளிக்க வில்லை

ஆனைத்திரள்களைகொண்டு வந்து
அரக்கன்முதுகிலே மிதிக்கச்சொன்னார்

---

8238. சடம்—உடல்
8241. அமத்தி—தேற்றி
8250. விளம்புவார்—சொல்லுவார்
8051. கூண்ட—கூட்ட
8261. திரள்—கூட்டம்

குதிரைத் திரள்களைக் கொண்டு வந்து
உறுட்டித்தலையில் மிதிக்கச்சொன்னார்
ஆனாலுமந்த கும்பகற்ணன்

அசையவில்லை உருளவில்லை
மாட்டுநிரைகளைசாய்த்து வந்து
வயிறு முதுகுமாய் மிதிக்கச் செய்தார்
யிடி விழுந்தமரம்போலே
யிறந்துபோனானென பாரும்

மகோதரமந்திர வந்துநின்று
வாற்த்தைவிபரஞ்சொல்லுவாராம்
செம்மேரி ஆட்டுப்பத்தங்களை
சேற்த்துக் கொடுவாருமென்றார்
ஆட்டுப்ப(த்)தங்களைக் கொணடுவந்து

அவன்மேலே சாய்த்துவிட்டார்
கும்பகற்ணன்காதுக்குள்ளே
குளம்புகொண்டு மிதித்திடுமாம்
தீக்கணையது பாய்ந்தாற்போல
செவிக்குருத்தில் மிதித்திடுமாம்

கூண்டுசெம்மரிமிதித்தபோது
கும்பகற்ணன்தானெழுத்தான்
நெளித்துமுளித்தவனெழுந்திருந்தான்
நெடியமலைபோலேகும்பகற்ணன்
முளித்துநெளித்தந்தகும்பகற்ணன்

முத்தராவணன்முன்பில் வந்தான்

## இராவணன் கும்பகற்ணனைப் போருக்கு அனுப்பல்

அப்போதுஅந்த ராவணனும்
அருமைத்தம்பியைத் தழுவிக்சொல்வான்
படைபொருது ராமரிடம்
பட்ட செய்தியைத் தானுரைப்பான்

யிந்திர செயித்து பட்டசெய்தி
எடுத்துரைத்தான் ராவணனும்
செய்திவாற்த்தைகள் கேட்டபோது
தீக்கணைபோலேகண் சிவக்க
நாலுமுளமுள்ள மானிடவன்

8267. நிரை—கூட்டம்
8273. செம்மரிஎன்பது செம்மேரி என்று எழுதப்பட்டுள்ளது.
8273. பத்தம்—கூட்டம்
8280. செவிக்குருத்து—காதின் உள்ளே உள்ள மென்மையான பகுதி

நம்மோடேவந்து எதுத்தானே
எதுத்தவன்பிலத்தை யிப்போதுபாரும்
எறும்பைப்போலவே நசுக்கிடுவேன்
வாரும்பிள்ளாய் மகோதரனே
வாய்த்தபடைகளை திரட்டுமென்றார்

ஆனைத்திரளோடு குதிரைத்திரள்
அதிர்வெடிகாறர்யீட்டிக்காறர்
வில்லெடுத்தார்ரசரமெடுத்தார்
விரைவாய்தேரின் மேலேறிக் கொண்டார்
கும்பகற்ணன் படைநடத்த

கொடிய ராவணன் தேர்நடத்த
யிலங்கை தேசமான தெல்லாம்
எங்கும் நிரம்பவே அரக்கர்படை
படைவருகிற அதிர்ச்சிகண்டு
பாராழு முடிமன்னவருமா

தம்பிலெச்சுமணப் பெருமாளுடன்
சகலப்படைகளை எழுப்பிவிட்டார்
சக்கிறாயுதங்கையிலெடுத்து
தானெடுமாலும் பிறப்படவே
அப்போது அந்த வாளனுமான்

அரிநெடுமாலைத்தான் தொழுதான்
எவ்வளவுயிடை கூறுவாராமல்
என்பெருமாளே காத்துக் கொள்ளவேணும்
யிங்கே ராவணப் படையதுதான்
எங்கும் ஒருப்போலே வருகுதையா

மந்திரி மாரோடு சேனைப்படை
மன்னனந்த கும்பகற்ணனும்
தந்திரமாய் படைகளை கூட்டியே
தாண்டும் பரிகளும் ஆளுமாய்
வந்துராவணன் கோட்டை கடந்துதான்

முந்திவந்த முகில் நிறவண்ணரும்
மூலமான படைகளையேவினார்
தம்பிலெச்சுமணரும் அனுமாரும்
சாம்புவனுமுகுற்தனும் அங்குதனும்
வெம்பி வானரவெள்ளம் எழுபதும்

---

8312. சகலப்படை—எல்லாப்படை
8314. புறப்படவே>பிறப்படவே (பே.வ.மா)
8324 பரி—குதிரை
8330. வெம்பி—வேகமுற்று
8334. புறத்தார்>பிறத்தார் (பே.வ.மா)

வீரன்சுக்கிறீபன் முதலாகவே
ராமருடைய படைகளுந்திரள்களும்
ராவணன் படைகள் தானும்ஒக்கவோ
நேமமாக யிருபிறத்தார்படை
நெருங்கிமெத்தப் பொருதார்களத்திலே

அருவி ஆறுபரந்தெங்கும் நின்றுப்போல
அந்த நல்லக்களமது தன்னிலே
உருதியெங்கும் நிரந்துபரக்கவே
உத்தமன்னர் பொருதாரிருவரும்
வானரப் படையானதுதான் சென்று

மலைகள் தன்னை பிடுங்கிஎறியுதாம்
சேனைராச்சதன் சென்றம்பும்வில்லும்
சேர்ந்த ஆயுதம் கொண்டு பொருதவர்
அனுமான் அங்குதன்நீலன் குமுந்தனும்
ஆதிசுக்கிறீபனுடன் சாம்புவனும்

தனுவரையில் பிலத்த வரங்கொண்டு
சாடி அவரைஅடித்துநொறுக்கினர்
மன்னர் ராவணனும் மந்திரிமார்களும்
வாய்த்த கும்பகர்ணனும் மற்றுள்ளோரும்
தந்திரமாய் கணைதொடுத்தேகிட

தம்பி லெச்சுமணரும் அறுக்கவே
மறுத்து லெச்சுமணருங்கணைவிட்டிட
மன்னன்கும்பகர்ணன் அறுக்கவே
முட்டியே படைதட்டியே பொரும் நேரம்
முழுதும் வானரம் அப்பாலே நிக்கவே

வெட்டிச்சென்று அனுமார் பொருதிட
வேகியே ராவணனும் படையோடே
ஓடியேதலையாலடிபட்டப்போ
ஒக்கவேதலைமூளைசிதறவே
ஓடிசாம்புவன் வில்லினில் பட்டதை

ஒத்து வானரங்கள் சிறந்து மகிளவே
தேக்கரிய பெரியயானைத்திரள்களும்
சேர்ந்துஅனுமானும் அங்குதன்சாம்புவன்
அடிக்கமாய்ச்சென்று அடித்துநொறுக்கியே
அந்தரக்கூளாகவருட்டினர்

---

8338. உருதி—இரத்தம்
8355. அப்பாலே—தூரத்தில்
8355. நிற்கவே>நிக்கவே (பே. வ. மா)
8357. வேகி - சினத்து
8362. தேக்கரிய—நிறைந்த அருமையான
8364. அடிக்கமாய்—நெருங்கி

வந்தகும்பகற்ணன் மந்திரிமாரையும்
மற்றுமுள்ள கரிபரிசேனையும்
அந்தமுள்ள அனுமார்முதலுள்ளோர்
அடித்துவிண்ணிலவருயிர் போக்கவே
யீஸ்பரனூர்கொடுத்தவர(த்)தாலே

யேகிலெச்சுமணருங் கணைவிட்டி(ட)
வாரமான பிலத்துள்ள கும்ப[ற]கற்ணன்
மார்பில் பட்டுருவியவன் மாண்டான்
அந்தரத்துள்ள தேய்வார்கள்கூடியே
அகமகிள்ந்து குரவையிட்டாடினூர்

## மயில் ராவணன் கதை

கும்பகற்ணன் பட்டபோது
கொடிய ராவணனேது செய்தான்
என்ன செய்வேனுனென்று சொல்லி
யேங்கிராவணன் நிற்க்கும் நேரம்
மூலபலசேனை தளகத்தனூர்

மூர்க்கன் அரக்கனவனேடிவந்து
தன்னுலேயிவனுலோசித்து
தானேராவணன் முன்பில்வந்து
உம்முடையசிறிய தாயார்மகன்
உற்றபாதாளதேசம் ஆளும்

பாதாளதேச ம்)ஆளுகின்ற
பண்பானமயில் ராவணன்தான்
யிருக்கிறுர்சத்தபலம் உள்ளவராய்
யிப்படியவரிருக்கும் போது
அவருடனே ஒருவரும்சண்டைசெய்ய

ஆண்டவனே முடியாதுயென்சுவாமி
அவரைத்தானிங்கே வரவழைத்தால்
அச்சுதராமரையுந் தம்பியையும்
வென்றிடலாம் ஒருநிமிசமதில்
வேந்தனேராவண மகாராசனே

யிப்போதுஎன்னிடம் எழுத்துதந்தால்
யானும்கொடுபோய்த்தான் கொடுத்து

---

8367. கரி—யானை

8372. வாரமான—திறமையான

8374. தெய்வார்கள்—தேவர்கள்

8382. தன்னுலே—தன்னைத்தானே
8384. சிறியதாயார்—சித்தி
8388. சத்தபலம்—ஆற்றலுடையபலம்
8397. கொடு—கொண்டு

அழைத்துவருகிறேனென்றுரைக்க

## இராவணன் மயில் ராவணனுக்கு நீட்டெழுதல்

அப்போதுராவணன் சந்தோசமாய்
கிறுபையுடன் மயில்ராவணனுக்கு

கீற்த்தியாய்வசனம் எழுதலுற்றான்
எழுதினான் வாசகமதுதானும்
யிங்கேபடையுந்தளக(ர்)தர்களும்
மக்களாகதூசணன் லக்கண்குமாரன்
மறுத்தொருமகன் அதிகாயன்

அதிகாயனுடனிந்திரசித்து
அரக்கன்தம்பி கும்பகற்ணன்
யாபேருமாண்டசெய்திதானெழுதி
யிசலுடன்ராவணனப் பொழுது
யேற்றதங்கை சூர்பனகையை

லெச்சுமணர் மூக்குதனம் அரிந்ததும்
எல்லாச் செய்தியுந்தானெழுதி
எழுதிமுத்திரை தானுஞ்செய்து
வச்சிரதந்தன்கையில்தான் கொடுத்து
மறுத்துஒருவசனமும் செப்புவாராம்

பாதாளலோகம் போகும்போது
பண்பானதம்பி மயில்ராவணன்
அவனுடகோட்டை வாசல்காற்க்கும்
அரக்கர்ரெண்டு லெஷம்பேரிருப்பார்
அல்லாமல்யின்னுமொரு காரணந்தான்

அறியச்சொல்கிறேன் நானுமிப்போ
துலாயேந்திரமங்கேதானுமுண்டு
தொடுப்பாய் திராசுதட்டுப்போட்டிருக்கும்
யாராவதுஒருவர் போனாக்கால்
யிந்தத்திராசி தட்டில் தானும் வைத்து

சமானுகக்கோலதுதான்பிடித்து
தானே நிறை பாற்த்துவிடுவார்கள்
அதற்கெல்லாம் நீயும் தந்திரமாய்
அருமையாய் மொளியுரைக்க வேணும்
வச்சிரதந்தனே நீர் தாமும்

---

8413. முத்திரை—அடையாளம்

8419. லெஷம்—எண்ணுப்பெயர்

8422. துலா—ஏற்றம்போன்ற ஒன்று
8422. இயந்திரம்—யேந்திரம் (பே. வ. மா)
8423. தராசு>திராசு (பே. வ. மா)

மயில் ராவணன் தமயன் ஆனவர்தான்
யிலங்காபுரிதேசம் ஆளுகின்ற
ராவண மகாராசன் தம்பியற்கு
கடிதமதுதந்து விட்டார்கள்
கருத்துடன் நானும் வந்துவிட்டேன்

என்றறிந்த வசனமுரைத்தாக்கால்
யாதொருதடைசெய்யமாட்டார்கள்
என்றுரைத்துயந்தக்கடிதமதை
யியல்பாக கொடுமென்று தானுரைத்தான்

### வச்சிரதந்தன் நீட்டுகொண்டுவரல்

நீட்டதை வச்சிரதந்தன் தானெடுத்து

நிமிசமுடன் யாத்திரை தானெழுந்தான்
எழுந்து பொற்த்தாமரைத்தண்டுவளி
யேகிவச்சிரதந்தன் வரும்போது
அரக்கர்வச்சிரதந்தனைப்பாற்த்து
ஆரடநீயிங்கேவந்தாயென்றார்

அப்போது அந்தவச்சிரதந்தன்
அரக்கன் ராவணனுரைத்தவசனமதை
ஆதவன் தூதனும் அப்போது
அவர்களிடத்திலே உரைத்துவிட்டான்
விட்டுவிட்டாரந்த காவற்காரர்

விரைவாய் வச்சிரதந்தன் வரும்போது
துலாயேந்திரம் யிருக்கும்யிடந்தனிலே
துருசமுடன் வச்சிரதந்தன் வரும்போது
துலாயேந்திரம் அருகாகவே
ரெண்டுலெக்ஷம் பேர் காவல்க்காறர்

வச்சிரதந்தனை தானுங்கண்டு
மாய்கைசெய்து வந்து விட்டானென்று
துலாயேந்திரத்திராசில் தூக்கிவைத்து
நிறைபாற்க்க வேணுமென்றார் சிலர்
யிப்படிச்சொல்லியேநிற்கும் நேரம்

யிசைந்து வச்சிரதந்தனுரைக்கலுற்றான்
உரைக்கிறேநானொரு வசனமதை
உறுதியுடனுகக் கேட்டருள்வீர்
யிலங்காபுரிதேசம் ஆளுகின்ற
ராவண மகாராசன் என்னிசமான்

பாதாள தேசமதையாளுகின்ற
பண்பான ராவணன் தம்பியற்க்கு

---

8453. துரிதம்>துருசம் (பே. வ. மா)

தம்பிமயில் ராவணசுவாமியற்க்கு
தானேதிருநீட்டுத் தானெழுதி
கொடுத்துவாருமென்றுரைத்தபடி

கூறும் அண்ணர்களே வந்தேனுன்
என்றுவச்சி ரதந்தனுரைத்தபோது
யிசைந்து துலாயேந்திரக்காவல்க்காறர்
போகும்படி உத்தரவு செய்துவிட்டார்
புகழுடன் வச்சிரதந்தன் தானும்போனுன்

எல்லா காவல்கழுந் தான்கடந்து
யிசலுடன்மயில் ராவணனிடத்தில் வந்தான்
வந்துநீட்டதைத்தானெடுத்து
மயில்ராவணனிடங் கொடுத்துவிட்டான்

### மயில்ராவணன் இராவணனிடம் வரல்

கொடுத்தவுடனந்நீட்டைப்பாற்த்து

கூண்டமயில் ராவணன்தானுமப்போ
பாற்த்துமயில் ராவணன் விசாரமுற்று
பண்பாக ஒருவருக்குஞ்சொல்லாமல்
சொல்லாமல் அவன்விள்ளாமல்
சூக்ஷமாய் ரரத்தி(ரி)காலமதில்

வடபத்திறகாளிகோவில் தனிலேவந்து
வாய்த்தமயில் ராவணன்தான்
அம்மா பத்திரமாகாளியே
அடியேன்உத்தேசித்துப்போற காரியம்
போறகாரியஞ் செயமானுக்கால்

பொருந்தஉனக்குயென் தங்கைபெற்ற
சிறந்தபாலகன் தன்னையுந்தான்
சிரசையறுத்து உனக்குவைப்பேன்
என்றுரைத்துமயில் ராவணனும்
யிசைவாய்தங்கை பெற்றமகன்தனையும்

பண்பாகஅடைக்கலமென்று சொல்லி
பத்திரகாளி சன்னதியில் வைத்துப்போனுன்
பிறப்பட்டுவந்தான் மயில்ராவணனும்
பிரதானயிலங்க புரிநகர்தனிலே
பத்துத்தலை ராவணன் முன்பதிலே

---

8482. விசாரமுற்று—வருத்தமுற்று
8484. விள்ளாமல்—பேசாமல்
8485. சூக்ஷமாய்—இதமாய்
8486. பத்திறகாளி—நாட்டுப்புறத் தெய்வம்
8489. உத்தேசித்து—எதிர்நோக்கி
8490. செயம்—வெற்றி

பரிவுடன்மயில் ராவணன்தானும் வந்தான்

### இராவணன் மயில் ராவணனிடத்தில் முன்நடந்த செய்தி கூறல்

வந்தமயில் ராவணன் தன்னையுமோ
மார்வோடே ராவணன் சேற்த்தணைத்து
அணைத்து சிம்மாசனந்தனிலிருத்தி
அன்பாக தம்பி மயில் ராவணற்க்கு
அன்னபோசனமுந்தான் கொடுத்து
அடைக்காய் தாம்பூலந்தான் கொடுத்தான்
நீட்டில் எழுதிடும் வரலாறெல்லாம்
நிமிசத்தில் தானுரைக்கக் கேட்டுக்கொண்டான்
எட்டு நாளைக்கு முன்யென்னுடனே
யிந்தவசனந்தெரிவித்தாக்கால்
மானிடருவரையும் வெட்டிடுவேன்
வல்லுயிர்களை நான்வாங்கிடுவேன்
என்று மயில் ராவணனுரைத்த போது
யிசைந்து ராவணனேது சொல்வான்
யிப்போ ராம லெச்சுமணரிருவரையும்
யிசைவாயுனதுட மாய்கைதன்னால்
எடுத்துப் பாதாள லோகத்துக்கு
யிசைவாக தம்பி நீ கொடுபோவாய்

### மந்திரி மகோதரன் அந்தரங்கம் தெரிந்து சொன்னல்

யிப்படிபேசியவரிருக்கும் போது
யிசைந்த மகோதரமந்திரிதானறிந்தார்
அப்போது மகோதர மந்திரியும்
அருகிலிருக்கும் மயில் ராவணன் தனைப்பாற்த்து
எந்தஊரையா யெந்ததேசம்
என்றுரைக்க மயில் ராவணன்
என்னுடைய அண்ணரிந்த ராவணற்க்கு
யிவருடைய தம்பி கும்பகற்ணன்
மாண்டுபோன செய்தி தானறிந்து
விசாரித்துப் போகால மென்று சொல்லி
விரைவுடனுலும் யிங்குவந்தேன்
உரைத்துமயில் ராவணனை மாய்கை செய்து
உத்தமகோதரன் கண்காண
பிறப்பட்டு போனுன் மாய்கையினுல்
போய்விட்டான் மயில் ராவணனும்
அப்போது மகோதர மந்திரியும்

---

8503. மார்பு>மார்வு (பே. வ. மா.)

அந்தரங்கமெல்லாம்தெரிந்துகொண்டார்

### மகோதரன் அந்தரங்கச் செய்தியினை விபீசணருக்கு அறிவித்தல்

தெரிந்துவெளியே தானெழும்பிவந்து
தீரன்மகோதர மந்திரியும்
உற்பனமாயொரு தூதனிடம்
உடனேரகசிய வாற்த்தையாக

சொல்லும்படிசெய்தார் விபூஷணருக்கு
சிறந்தஓட்டனவன் தானோடி
உடனந்த ஓட்டன் விபூஷணர்க்கு
உற்றகாரியந் தெரிவிக்கவே

### விபீசணர் இராமர் உரையாடல்

அறிந்து விபூஷணப்பெருமாளும்

அரிரகுராமரிடத்தில் வந்து
பாதாளதேசம் ஆழுகின்ற
பண்பானமயில்ராவணனும்
யிலங்கையில் வந்திருக்கிறனும்
யிப்போது உங்கள் யிருவரையும்

ராத்திரிகாலங் கொடுபோகவென்று
வந்திருக்கிறன் சுவாமி யிலங்கைதன்னில்
தப்பித்துக் கொள்வதற்கு யென்சுவாமி
தானேயேதாவது செய்யவேணும்
என்று விபூ(ச)ணர் தானுரைக்க

யேற்றரகுராமர் தான்கேட்டு
வருகிறதெல்லாம் பரமசியலினவே
வாற்த்தைதான் பகற்ந்துகோபாலர்
மயில்ராவணன் மாய்கையதால்
மாயமாய்க்கொடுபோக யிடமில்லாமல்

உங்களிருவரையும் ஓரிடத்தில்வைத்து
நானும்உங்கழுக்கு காவலாக
பே(ா)ரனுமானை வரவழைத்து
பூமிமுதல் ஆகாசந்தானுமுட்ட
பொருத்தமாய் அனுமானுடவாலாலே

புகளுடன் கோட்டைபோடவேணும்
என்றுவிபூஷணர்தானுரைக்க
யேற்றரகுராமர் சம்மதித்தார்
சம்மதித்து மூபேரும் ஓரிடத்திலிருந்து

### அனுமார் வால்கோட்டை அமைத்தல்

தானந்த அனுமாருங் கோட்டையிட்டார்

---

8557. செயல்>சியல் (பே.வ.மா)

புகள்ந்து அனுமான் விண்ணும் மண்ணும்
புகழுடன் அனுமான் வாலினுல் கோட்டையிட்டான்
வளைந்தவன் அனுமான்வாலை வளைக்குமுன்மயில் ராவணன்
நுழைந்தவனிருந்தானுள்ளே நுளப்ப மாய்த்தேரைபோலே
களைந்தங்கே யிரவில் சாமம் கடுகிய வேளைதன்னில்

ஆச்சரிய மேடைதன்னில் அனுமாரும் பள்ளிகொண்டார்
வாலினுல் அனுமான் கோட்டையிட்டு
மகிள்ச்சையாய் நித்திரை செய்கையிலே

### *மயில்ராவணன் இராமர் இலட்சுமணரைக் கடத்திச் செல்லல்*

கோட்டைக்குள்ளிருந்த மயில் ராவணன்
கொடுமையாய்விபூஷணர்தனைப்போலே

வடிவுகொண்டங்கே தானெழுந்து
மாயருடன் தம்பியையுங்கக்கமதில்
கக்கமதில் மாய்கையாயிடுக்கிக்கொண்டு
கனத்த அனுமாரிடந்தானும் வந்து
உறங்கி விடாதே என்றுரைத்து

உச்சிதமாய் யெச்சரிக்கை தானுஞ் செய்து
வெளியே போய் வரவேணுமென்று
விருப்பமாயனுமாரிடத்தில் உரைத்தபோது
வலதுசெவியால் வழியைத்தான் திறந்து
வாய்த்த அனுமாரும் வெளியில் விட்டார்

வெளியில் வந்து மயில் ராவணனும்
விரைவாய்ப்பாதாள தேசமதில்
பத்திர காளியுட கோவில் தன்னில்
பண்பாக வாசலைத்தான் திறந்து
அரக்கன் மயில் ராவணன் அறையில் வைத்து

அப்போதுபூட்டுமேதான்பூட்டி
முத்திரை முகருந்தரனும்வைத்து
முயற்சியாயவன் மண்டபத்தில்
மண்டபத்திலிருக்கும் வேளைதன்னில்

### *மயில் ராவணன் மனைவி இடித்துரைத்தல்*

வாய்த்த மயில் ராவணன் தேவியவள்

---

8574. நுளப்பமாய்—மறைவாய்
8574. தேரை - தவளை போன்ற ஒன்று
8575 கடுகிய—நெருங்கிய
8582. கக்கம்—உடலுக்கும் மேல் கைக்கும் இடையிலான பகுதி; (அக்குள்)
8584. கனத்த—மேன்மை பொருந்திய
8586. உச்சிதமாய்—உயர்ச்சி

என்னுடகணவரே மன்னவனே
யிசைந்த உமது தங்கை பாலனையும்
யிர வு பாதிச்சாம வேளைதன்னில்
எடுத்துக்கொண்டுபோய் காளியிடம்
வைத்தவுடன் உமதுதங்கையரும்

மறுகி மறுகியே விழுந்தழுதாள்
அழுதகுரலோசை தான் கேட்டு
அடுத்தவீட்டுகோதையவளமத்திவிட்டாள்
யிப்படியனியாயஞ் செய்தீரே
யின்னமொரு காரணஞ்சொல்லுகிறேன்.

யேந்திளையடியாள் நானிருக்க
யினக்குஅந்தரந் தெரியாமல்
உம்முடையதமயன் யிலங்கையாழும்
உத்தயிலங்கையாழும் ராவணனும்
பள்ளிகொண்டோன் தேவிதன்னை

பத்தினிசீதை யென்றறியாமல்
அறியாமல்அவன் போய்சிறையெடுத்து
அவன்கொடுபோனன் மாபாவி
கொண்டுபோய் வைத்தயேதுவினல்
கொடிய அரக்கன் முடிபத்துவும்

அதுமாண்டு போவதறியாமல்
அசாத்தியஞ்செய்தானே ராவணனும்
யிலங்கை பட்டணமத்தனையும்
ரகுராமர் தன்னுட திருவருளால்
விபூஷணப்பெருமாள்க்கு ஆள்கைசெய்வார்

விரைவுடனே யவள்தானுரைத்தாள்
பின்வருங்காரியம் அறியாமல்
பிசகுசெய்தானந்த ராவணனும்
அரக்கன் ராவணன்துற்ப்புத்தியை
அனியாயமாய் நீருங்கேட்டுக்கொண்டு

படியளந்து யாவரையுங் காத்தவரை
பச்சைமாலென்று நினையாமல்
சற்றுமே மனதில் நினையாமல்
தரணியில் பாதிச்சாம வேளையிலே
எடுத்துதான் கொண்டு வந்தீரே

---

8612. அந்தரம்—உட்கருத்து
8619. யேது—காரணம்
8622. அசாத்தியம்—செய்யக்கூடாதது
8628. பிசகு—தவறு
8629. துற்ப்புத்தி—இழிந்த எண்ணம்

யினிமேல் நடக்குங் காரணங்கள்
உமதுபாதாள லோகமெல்லாம்
உந்தன்தங்கை தூரதண்டிமகன்
பட்டந்தரித்தவன் ஆள்வான்காண்
பைங்தொடி உன்தங்கை கற்பதினல்

ராவணசங்காரஞ் செய்வதுபோல்
உன்னுட சிரசத்து விளப் போகுதுகாண்
அப்படிக்கெல்லாம் வாராமல்
ஆதிரகுராமரையுந் தம்பியையும்
அவர்கள் யிருந்த [யிருந்த] யிடந்தனிலே

அன்பாகக்கொண்டு சேற்த்திடுவீர்
என்றுதேவியவளுரைத்தபோது
யிசம்பலுற்ருன் மயில்ராவணனும்
போடிசதிகேடி சண்டாளி
பொல்லாத வாற்த்தைபகரலுற்ருய்

போடி சண்டாளி யென்றுரைத்து
பொல்லாதவாற்த்தை பறைந்துவிட்டான்

## இராவணன் மகிழ்ச்சிப்பெருக்கு

யிப்படியிருக்கிற வேளைதன்னில்
யிலங்கைராவணன் ராத்திரியில்
விரைவாய்தீவெட்டி தான்பிடித்து

விருதுகுடையதுதான் பிடித்து
மேளதாளமது முளங்கச்செய்து
வெத்திச்சங்கோசை முளங்கிடவே
வெத்திச்சங்கோசை முளக்கமதை

## விபீசணன் அனுமான் உரையாடல்

விபூஷணப்பெருமாழுந்தான்கேட்டு

கேட்டுஅருண்டு தான்முளித்து
கெம்பீரமாய் அப்போயெழுந்திருந்து
யிலங்கை அரக்கன்ராவணனும்
யிந்தஆரபாரத்தொனி செய்தானே
அனுமானுடவால் கோட்டைக்குள்ளிருந்து

---

8649. கேடி—கேடு நினைப்பவள்
8652. பறைந்து(மலையாளவழக்கு) - சொல்லி
8655. தீவெட்டி—தீப்பந்தம்
8656. விருது—வெற்றி
8662. கம்பீரம்>கெம்பீரம் (பே.வ.மா)
8664. தொனி—ஓசை

ஆதவன்விபூஷணர் அனுமாரிடம்
யேதுகாரணம் பே(ா)ரனுமானே
யிப்படிஅசட்டையாய் உறங்குகிறீர்
என்றுவிபூஷணர் தான்கேள்க்க
யிசைந்தனுமாரேது சொல்வார்

நீரும்என்னிடம் தானும்வந்து
நிமிசநொடிநேரத்துக்கு
வெளியேபோய்வரவேணுமென்று
வேந்தனேயென்னை முளிக்கச்செய்து
என்னுடசெவிவாசல் வளியாக

போனீரோவேந்தரே நீர்தாமும்
பின்புயெப்படிக்கோட்டைக்குள்ளே
எந்தவளியாகத் தானும்வந்தீர்
என்றுஅனுமாருந்தான் கேட்க்க
யேற்ற விபூஷண ரேதுசொல்வார்

நானும் வெளியே போகவில்லை
நாடிமயில் ராவணன் மாய்கைசெய்து
யிங்கே அவனுமோதானும் வந்து
யெல்லோரையும் யேமாத்திப்போட்டானே
ஆனதினால் யிலங்கை நகர்முளுதும்

அளகுடன் தீவெட்டி வெளிச்சமது
பாரும் உம்முட கண்ணதினால்
பாற்த்து யிருவரும் ஒன்றுபோலே
பள்ளி கொண்டோனையுந்தம்பியையும்
பாற்த்தார்கள் அந்தக்கோட்டைக்குள்ளே

பண்பாகயிருவரையும் காணாமல்
பரிதவித்தாரவரப்போது
காணாமல்யிருவரும் பரிதவித்து
கனவான் அனுமாருந்தானழுதார்
தங்க விபூஷணருந்தானழுதார்

தரணியளந்தோனைக் காணாமல்
அளுதகுரல்கேட்டு வானரப்படைகள்
அல்லோருந் தானங்கே தானழுதார்
கூவென்ற படைகளெல்லாம்
கூண்டராமரோடு சிறந்த தம்பிதனையுங் காண(மல்)

ஒவியம் போலே நின்று ஒருவரை ஒருவர் பாற்த்து
பாவியாய் போனோமென்று பரிதவித்தழுதுநின்றார்
அப்படியிருக்கிற வேளையிலே

---

8668. அசட்டையாய்—கவனமற்று
8698. அல்லோரும்—எல்லோரும்
8699. கூ –ஒலிக் குறிப்புச் சொல்

ஆனவிபூஷணப் பெருமாளும்
அனுமார் தன்னுடயிடமதிலே

அருமையாகவே யேதுசொல்வார்
பாதாளலோகம் நீருஞ்சென்றால்
பள்ளிகொண்டோரைக் கொடுவரலாம்
எப்படினான் போவேனென்று
யிசலருமானுங்கேட்டபோது

சிவகெங்கை பொய்கையானதிலே
செந்தாமரைத்தண்டுவளியாக
செந்தாமரைத் தண்டு தன்வளியாய்
தீரன் அனுமானே போய் வருவீர்

### அனுமான் பாதாள இலங்கைக்கு வரல்

அப்போது அனுமார் ஆங்காரத்துடன்

அலறிப்பதறியே சாடுவானும்
தண்மையுடனந்த அனுமாரும்
தாமரயைஅவர்வந்துகண்டார்
அங்கேயிருபதினாயிரம் ராக்ஷதர்கள்
அதற்ச்சையுடனே காத்திருந்தார்

காத்திருந்த அந்தக்காவல்ரை
கடுங்கோபங்கொண்டு அனுமாரும்
போர்பொருது அவர்வென்றுகொண்டார்
புகளுடன் அனுமார்தானும்அப்போ
தவளையாக வடிவுகொண்டு

தானேசெந்தாமரைத்தண்டுவளி
செந்தாமரைத் தண்டுவளியாக
சிறந்த பாதாள லோகம் போனார்
சென்றங்கே தான்போக அனுமாரும்
திலா யேந்திரந் தன்னைக்கண்டு

திகைத்துப் பரிதவித்து நிற்க்கும் நேரம்
திலாயேந்திரத்துக்குக் கீள்புறமாய்
பெருங்கிணறு தானிருக்கக்கண்டு
பெரும்பாலும் வானரப் பாலன் போலே
கிணற்றங்கரை தனில் அனுமாரும்

கிறுவையுடனவர் தானிருந்தார்
யிந்தக்கிணத்தங்கரையதிலே
யிதமுடனுமுமிருந்ததுண்டால்
யிந்தப் பாதாளலோகமதில்
யிருக்குஞ்செய்தி களறிந்திடலாம்

---

8730. துலா என்பது திலா என்று எழுதப்பட்டுள்ளது.

கிணத்தங்கரைதனில் அனுமாரும்
கீர்த்தியாயவர் தானிருந்தார்
யிருக்கும் போதந்தவேளையிலே
யிசைந்த அனுமாரும் அப்போது
அக்கினிக்கோட்டையைத்தானுங் கண்டார்

அதனருகேஅனுமார் போய்ச்சேர்ந்தார்
அந்தயிடத்திலே உள்ளவர்கள்
அனுமானைத்தானப்போ கண்டுகொண்டார்
அப்போது அனுமாரும்அருகேவந்தார்
அரக்கர்கள்யாவரும் ஒன்றுகூடி

குரங்குதானிங்கே வந்ததனல்
குரங்கைபிடியுங்களென்றுரைத்தான்
பிடிக்கவேணுமென்று ராக்ஷதரர்கள்
பெருமையுடன் வந்துவளைத்தார்கள்
வளைந்தவுடன் விஸ்வரூபங் கொண்டு

வல்லரக்கரை தன்னுட வாலினலே
அடித்துக்கொன்ருனே அனுமானும்

## அனுமான் மச்சவல்லபன் போர்

அப்படியிருக்கிற வேளையிலே
மச்சகற்ப்பன்கேட்டுமனம் பதைத்து
வாய்த்த அனுமானே டெதிர்த்தான்

எதிர்த்துச் சண்டைகள் தானுஞ்செய்து
யிருபேரும் போரு செய்யும்நேரம்
தண்டாயுதத்தடி கையிலெடுத்து
தானே ஓங்கியடிக்கலுற்ருன்
அப்போ மச்சகற்பகன் கோபங்கொண்டு

ஆரடா குரங்குப்பதரே நீ
என்று தண்டாயுதத்தைப் பிடுங்கிக்கொண்டு
யேங்க அடித்தானும் மச்சகற்பகன்

## அனுமான் மச்சவல்லபன் உரையாடல்

அப்போது அனுமார் தோர்வையாகி
அந்தமச்ச வல்லவனைத்தான் பார்த்து

கேழும் பிள்ளாய் மச்சவல்லபனே
கீர்த்தியானதொரு வசனமதை
உன்னைப்பெற்றதோர் த்கப்பன் ஆ(ர்)
உன்தாய் பெயரென்ன அதையினக்கு
தெரியும்படி சொல்லுசொல்லு யென்றுகேள்க்க

8769. தோர்வை – தோல்வி
8773. யார் > ஆர்(பே.வ.மா)—வினப்பெயர்

தேறிமச்சவல்லபன் கூறுகிறான்
சாதிகுலங்கேட்க்க வந்தாயோடா
தாய்தகப்பன்பேர் கேட்க்க வந்தாயோடா
கேழுந்தம்பி மச்சவல்லபனே
கிருபையுடனே பேர் கேட்டதுதான்

அனேகஞ்சீமையில் நானோடி
அனேகம் பேரிடஞ் சண்டைசெய்தேன்
என்னிலும் பிலசாலிகள்தான்
யிம்மூன்று மண்டலத்திலும்யில்லேதம்பி
அப்பேர்க்கொத்த மகாசுத்தவீரன்

அருமைதம்பியுனக்குத்தூஞ்சிவிட்டேன்
என்னுடசீவன் உன்கையினால்
எடுபட்டுப்போமென்று தோணுதுகாண்
ஆனதினால்தற்க்குமுன்னதாக
அறிந்துசாவோமென நினைந்து

மறுகியனுமாருரைத்திடவே
மச்சவல்லபன் மனதிரங்கி
தஞ்சமென்றவரைக் கொல்லக்கூடாதென்று
தானேமச்சகற்ப்பன் நினைந்துகொண்டு
கேழும்வானரசிகாமணியே

கிருபையாய்த்தாய் தகப்பன்பேரதையும்
அஷ்டதிக்குப்பாலரையும் வென்றுகொள்வார்
அதிகமும்மூற்த்திகளை வெல்லுவார்காண்
சாவில்லாமல்சிரஞ்சீவி பெற்றவர்காண்
சாச்சாதிசிவபெருமான் தூதுவனாய்

ஆரபாரமுள்ளவர்தான்
அனுமாரென்று சொல்லுவார்கள்
என்தாயார்திமிதி யென்ற மச்சம்
என்தகப்பனைப் பெற்றவர் வாயுபகவான்
என்பேர் மச்சவல்லபனென்றுரைக்க

யேற்ற அனுமாருந்திகலடைந்து
யென்னைத்தவிர வேறு அனுமாருண்டோ
யில்லை நானும் ஒருவன் தானே

---

8784. மூன்றுமண்டலம்—விண், மண், பாதாளம்
8787. சீவன்—உயிர்
8788. எடுபட்டு—எடுக்கப்பட்டு
8798. மும்மூற்த்திகள்—சிவன், விஷ்ணு, பிரமா
8800. சாச்சாதி சிவபெருமானே
8806. திகலடைந்து—அதிர்ச்சியடைந்து

ஒருநாழுங்கற்பு நானளியவில்லை
உலகளந்த பெருமாள் தூதனுதந்நான்

பிள்ளை வந்த காறணம்யின்னதென்று
புதுமையுடனவரறிய வென்று
வாரைருமயாமச்சவல்லபரே
என்வாற்த்தையைத்தள்ளாதே ஐயாவே
யின்னம் ஒருவிசேசங் கேள்க்குகிறேன்

என்றுரைக்க மச்சவல்லபனும்
முன்னங்குளந்தையாயிருக்கும் போது
முக்கியமாய் வாய்வு பகவானினக்கு
முத்தி பெற்றவரந்தான் கொடுத்தார்
வரங்கொடுத்தனுப்பினாரப்போது

அப்போதொரு யோசனைசெய்திருந்தேன்
யிந்தபதினாலுலோகம் அடங்கலுமே
செயிக்கவேணுமென்று கருதிக்கொண்டேன்
அப்போதிந்தமயில்ராவணனும்
அவன்பிறப்பட்டு யென்னிடத்தில்வந்து

நாளும்பாதாள தேசமதை
காற்க்க ஒருவரும்யில்லையிப்போ
நீயிருந்து காற்க்கவேணுமென்று
நிமிசமுடனவனுரைத்து விட்டான்
அன்றுமுதலின்று வரை நானும்

அருமையுடன் காத்து வருகிறேனான்
யிப்போதெப்படி நான்விடுவேன்
நீரும் தரும சாஸ்திரங்களறிவீரே
உம்முடைய மனதுக்கு தக்கபடி நடவுமையா
என்று மச்சவல்லபன் வணங்கி சொல்ல

அனுமார்மச்சவல்லபனைப்பார்த்து
அருமையுடனவனோது சொல்வார்
யினக்குவரும் அபகேடுஉனக்கல்லவே
என்அருமைமகனேயிப்போது
அப்போது மச்சவல்லவனும்

அவசரமாயேது சொல்லுகிறான்
நான் உயிரோடிருந்து மயில்ராவணற்க்கு
உற்றதுரோகங்கள் செய்யமாட்டேன்
ஆனாலும்உம்முடவிபரமதை
அறிந்துசொல்கிறேன் நீயுமிப்பே

நீர்வரும்போது தாமரைக்கமலத்திலே
ரண்டாயிரம் பேர் ராக்ஷதரர்யிருந்தார்களே

---

8822. அடங்கலும்—முழுமையும்
8843. துரோகம்—தீங்கு

அவர்களைக் கொன்றளித்து வந்தீரோ
அல்லது சும்மா வந்தீரோ
சொல்லுமையா வென்றுதான் கேள்க்க

வென்று வந்தேனென்று அனுமார்சொல்ல
அப்போது மச்சவல்லபனும்
ஆனால் செயமது படைவீரர்காண
நான் உம்மைச் சும்மாவிடக்கூடாது
ஒருதந்திரஞ்சொல்கிறேன் கேள்க்கவேணும்

என்னை நடுமார்பில் குத்தி விடுவீராகில்
நானும் மூர்ச்சையாய் விழுவே சுவாமி
என்னுடையஉயிர்நிலை அதுதானையா
என்றுமச்சவல்லபனுரைத்துவிட்டான்
அவ்விதஞ்செய்து நீங்கழுந்தான்

அப்புறம்நீங்கள் போங்களென்றான்
அனுமார்தான் அங்ஙனேதான்யோசித்து
பள்ளிகொண்ட பெருமாளைத்தான்பூசித்து
பூசித்துப் பரமசிவத்தைத்தானினைத்து
துயர்படுகிற அனுமார்

மச்சவல்லபன் தானறிந்து
மறுத்து அனுமாரோடேது சொல்வார்
யிப்படி நீரிருந்ததுண்டால்
நாளிகை தாமதமாகுமையா
உமதுபிலமெல்லாம் சேர்த்துக்குத்தும்

என்றுரைத்துத்தனது மார்பைக் காட்ட
யேற்ற அனுமார் வருத்தத்துடன்
ஐந்துவிரலையுஞ் சேர்த்துக்கொண்டு
மச்சவல்லபன் மார்பில்குத்திவிட்டான்
அந்தக்குத்தினால் மச்சவல்லபனும்

கீழேவிழுந்து மூர்ச்சைதானடைந்தான்
அனுமாருந்தன் குமாரருக்கு
வலித்துதேவென்று மனவிசாரமுற்று
மகனையேந்தி மடியில்வைத்து
மச்சவல்லபன் மார்பில் தான்தடவி

பரமசிவம் பாற்பதியைத் தானினைந்து
சுகமாயிருப்பா யென்றுரைத்தார்

## அனுமான் பல கோட்டைகளைக் காணல்

ராமர் லெச்சுமணரைத்தான் துதித்து
பாதாள யிலங்கையில் தான்மிதித்து
ராஷதன்மயில் ராவணனெங்கேயென்று

---

8862. அங்ஙனே (மலையாளவழக்கு)-அவ்வண்ணமே
8876. மூர்ச்சை—மயக்கம்

நிர்டியவருள்ளே தானுஞ்சென்று
அங்கேமுதக்கோட்டை செங்கலினுல்

அப்பாலேதான் வரப்போகும்போது
நாலுலெஷம் ராக்ஷதர்கள்
நல்லஆயிதத்துடனே யிருந்தார்கள்

அவர்களை அனுமார்தான்பாற்த்து
அங்கேஒரு பெருமரத்தைக்கண்டார்
உடனே பெருமரத்தினை பிடுங்கி
உத்தஅனுமாரும் தானடித்தார்
அடித்த உடனந்த ராக்ஷதர்கள்

ஆயிதங்கொண்டவர் பேரிலெறிந்தார்கள்
அதுகண்டு அனுமாரஞ்சாமலே
அவர்கையிலிருந்த விருஷமதால்
மூர்க்கமுடனவர் தானடித்தார்
முடுகியடிபட்டு அரக்கர் மாண்டார்

அப்புறம் அனுமாருந்தான்கடந்து
அடுத்தபித்தளைக் கோட்டைதன்னில்
யேளாயிரம் பேர் ராஷதரர்கள்
யிருப்பதையவர் கண்டுகொண்டார்
கண்டபொளுதினில்அனுமாரும்

களித்துப்பூரித்து ஆர்ப்பரித்து
தண்டாயுதத்தடிதானெடுத்து
தானேமூளைகள்தான்சிதற
அடித்தார் அனுமாரும்அப்போது
அடிபட்டு மாண்டாரெல்லோரும்

யாவருமாண்டுவிட்டாரென்று
யேற்ற அனுமாரும் கெற்ச்சிதமாய்
அனுமாரும் அங்கே போகும்போது
அங்கே வெங்க(ல)கோட்டைதோன்றிடுமாம்
அந்தக்கோட்டை நகரானதிலே

அதிலே லெட்சம் ராஷதரர்கள்
யிருந்ததையனுமார் தானுங்கண்டு
யிரும்புத்தண்டாயுதத்தடியினுலே
யிதமுடன்அனுமார்தானும்ப்போ
அனுமார்தானந்த ராக்ஷதரை

அகோரத்துடனவர் தானடித்தார்
அடித்தஅடிபட்டு ராக்ஷதரர்கள்

8887. முதல்கோட்டை>முதக்கோட்டை (பே.வ மா)
8898. விருஷம்—மரம்
8906. களித்துப் பூரித்து—மிக்க மகிழ்ச்சியுற்று
8912 கெற்ச்சிதமாய்—திறமையாய்

அந்தயிடந்தனில் மாண்டுவிட்டார்
யிப்படியரக்கர்மடிந்தபின்பு
யாரும்ஒருவரும் யில்லாமல்

யிருப்பதைஅனுமார் தானுங்கண்டு
அந்தயிடமதுதானுமிட்டு
அப்போது அனுமார் போகும்போது
பொன்கோட்டையது தோன்றிடுமாம்
பொன்கோட்டைதன்னிலே தான்

புகள்ச்சையாய் அய்யாயிரம் ராக்ஷதரர்கள்
புகளுடன்யிருந்ததை அனுமார்கண்டு
தண்டாயுதத்தடி கையிலெடுத்து
தானேஅடித்தார் அனுமாரும்
அப்போது அங்கிருந்த ராக்ஷதரர்கள்

அல்லோரும் மாண்டுபோனார்கள்
மாண்டஉடனந்தபோரனுமான்
மறுத்து அப்புறம் போகும்போது
பகளக்கோட்டை யதுதோன்றிடுமாம்
பகளக்கோட்டை தன்னிலே தான்

அங்கேயிருந்ததை அனுமார் கண்டார்
பவுசியாய் அனுமார் வாறபோது
பாரராக்ஷதர் அய்யாயிரம்
அய்யாயிரம் பேர் ராக்ஷதர்கள்
கண்டபோதந்த போரனுமான்

கையிலிருந்ததோர் தடியெடுத்து
அடித்தானே போர்முடித்தான்
ஆங்காரத்துடனந்த அனுமாரும்
முடித்துதான் அரக்கர் தன்னையெல்லாம்
முக்கியமாய் அடித்து கொன்றுவிட்டான்

கொன்று போட்டுத்தான் அனுமாரும்
கொஞ்ச தூரம் கடந்து போகையிலே
அப்போது அனுமார் கீளிறங்கி
அந்தயிடத்திலொரு மண்டபந்தான்
மயில்ராவணன் ஆனவன் தான்

நாட்டியம் பார்க்கும் நடன மண்டபம்
மயில் ராவணன் வீற்றிருக்கும் மேடைதன்னில்

---

8921. அகோரம்—சீற்றம்
8939. பகளம்—பவளம்
8941. பவுசி—பெருமை
8956. நாட்டியம்—நடனம்

மன்னன் போரனுமபன் வீற்றிருந்தான்

## மயில் ராவணன் தூரதண்டியை தண்ணீர்க்கு அனுப்பல்

யிப்படி அனுமாரும்யிருக்கும்போது
யேற்றமயில்ராவணன் அந்தவேளை

மாதாங்கியுடனே சரசஞ்செய்து
மகிள்ந்து உறங்கித்தான முளித்து
நச்சேத்திரம் உச்சந்தான் பாற்த்து
நளினத்துடனவனேது செய்தான்
யிப்போது நாளிகையிருபத்திரெண்டு

யினிசும்மாயிருக்கக்கூடாதென்று
பாதாளயிலங்கை தனிலிருக்கும்
பத்திரமாகாளி அம்மனுக்கு
ராமலெச்சுமணனை வெலிகொடுக்க
நல்லசமயம்யிது வென்று சொல்லி

யின்னமும் பொழுதுதான் விடிய
எட்டு நாளிகையிருக்குதென்று
யிதற்க்குள்ளே அபிசேகத்திற்க்கு
என்னசெய்யவன் போறேனென்று
தண்ணீர்கொண்டுமே வருவதற்க்கு

யாரையனுப்புவோம் யெனநினைந்து
தன்னுடதங்கையானவளை
தூரதண்டியை வரவழைத்து
என்னுடதங்கை தூரதண்டியே
யிப்போதுஉதியாவனத்திற்ப்போய்

தண்ணீர் கொடுவாயென உரைத்து
உடனேமயில் ராவணன் தன்னிடத்தில்
உரைத்தாள் தூரதண்டிதானுமப்போ
என்மகன்தன்னையும் நீர்தானும்
யிப்போது சிறையில் வைத்தீரோ

என்னையும்யிப்போ கொல்லவென்ரே
யிப்போதுதண்ணீர்க்குப் போகச்சொன்னீர்
உடனேமயில் ராவணனும்
அப்படிநீ யாதொன்றும் நினைக்கவேண்டாம்
ஆனல்உரைக்கிறேன் கேழுதங்கை

யின்னம்ஒருகாரியம் யிருக்கிறது

---

8963 உச்சம்—உயரம்; அமைவிடம்
8964 நளினம்—இங்கிதம்
8973. அபிசேகம்—திருமுழுக்கு

உங்களைநானுங் கொல்லமாட்டேன்
அஞ்சாமல் தண்ணீர்க்குப் போய்விடம்மா
அடுத்தவரைக் கெடுக்கமாட்டேனம்மா
அண்ணேயிந்த அத்தராத்திரியில்

தண்ணீர்யெப்படி நான்கொண்டுவர
என்றுதூரதண்டி யுரைத்தபோது
யிசைந்துமயில் ராவணனேது ரைப்பான்
கேளும்யென் தங்கைதூரதண்டி
கீர்த்தியானதொரு வசனமதை

ராவணனுக்குச் சத்துராதியான
ராமலெச்சுமணன் யிருவரையும்
நமதுபத்திர மாகாளிக்கு
நலமுடன்வெலியது கொடுக்கவேணும்
வெளியே ஒருவரோடு சொல்லாதே

விரைவாய்த் தண்ணீர் கொடுவருவாய்
யிப்படியவன் சொன்னபோது
எழுந்துநடந்தாளே தூரதண்டி

### தூரதண்டி அனுமானைக்கண்டு செய்தி கூறல்

போகும்போதவள் கிலேசமுற்று
பொருமிப் பொருமியவள்தானழுது

தெய்வமேயிப்போ நான்தானும்
என்ன அனியாயஞ் செய்தேனோ
பரமசிவமே தெய்வமேநான்
ராமலெச்சுமணனை ராக்காலத்தில்
கொண்டுவந்தவன் வைத்துக்கொண்டு

கொல்வேனென்றவன் சொல்லுகிறான்
யிந்தவாற்த்தை யென்காதில்கேள்க்க
என்தலையில் விதிவசமோ சுவாமி
விபூஷணப் பெருமாளானவர்தான்
விரைவாய் ராமலெச்சுமணனை

கொண்டு போகமலிருப்பதென்ன
கொடும்பாதகனைக்காணமல்
என்மகனையுஞ் சிறையில் வைத்தான்
என்னையுந்தண்ணீருக்குப் போடியென்றான்
அவதிப்படுத்துறானே தெய்வங்களே

---

9001. சத்துராதி—பகைவன்
9010. பொருமி—விம்மி
9014. ராக்காலம்—இரவு

ஆதிபரமசிவமே பாற்பதியே
என்றுதூரதண்டிகை தானுமப்போ
யேங்கிபரிதவித்து நிற்க்கும் போது
மறைந்திருந்த அனுமாரும்
மகிள்சையுடனே கேட்டுக்கொண்டார்

ஆகாசவாணித்தாயாரும்
அசனீசவாக்காகச் சொன்னதுபோல்
கீற்த்தியுடன் அனுமார் தானுமப்போ
கேழும் பெண்ணே தூரதண்டி
உன்மகனுக்கென்னயிடைகூறென்றுர்

ராமலெச்சுமணுள்க்குமிப்படியே
வந்தகாறணஞ் சொல்லுயென்று
வலுவுடன்அனுமாருங்கேட்டபோது
மனிதர்உரைத்தவாக்கதுபோல்
கேள்க்கிறதென் றுதானினைந்து

மயில்ராவணன்நம்மைப்பாற்த்து
மறுத்தொருவரிடம் அந்தரங்கம்
அந்தரங்கம் நீ சொல்லக்கூடாதென்று
அரக்கன் உரைத்தானே மகாபாவி
அனுமார்தானும் பாற்த்துக்கொண்டு

அவளிடம் போய்பேசவேணும்
துருசமுடணவஞேடி வந்து
தூரதண்டியருகில் அனுமாரும்
கிணத்தினருகே வந்துநின்று
கேழுஅம்மா மாதுசிரோன்மணியே

ராமலெச்சுமணுள்க்கும் உன் மகன் தனக்கும்
வேறுகதியில்லேயென்றுரைத்தாயே
அந்த விபூஷணர் தன்னே நிந்தித்தாயே
அந்தவிபூஷணரென்னே யனுப்பிவைத்தார்
நானும் யிப்போதே வந்தேனம்மா

ராமலெச்சுமணுள்க்கும்யிப்பேற்தான்
உந்தன் மகனுக்கும்யிப்பேற்தான
அனுமாந்தனுகிய நான்உனக்கு

---

9031. ஆகாசவாணி—ஆகாயத்திலுறைபவள்

9032. அசனீச—அசரீரி

9032. வாக்காக—சொல்லாக

9042. அந்தரங்கம்—இரகசியம்

9050, சிரோன்மணி—தலேயில் அணியும் மணி

9053. நிந்தித்தாய்—பழித்தாய்

அனுஷ்ட்டியாய்க் கெதியாக்கி நான்கொடுப்பேன்
அப்படிக்கொத்த அனுமாரல்லே

ராமலெச்சுமனுள் என்றுரைத்தாயே
யிந்தகடவுளிருவரும் யெங்கேயம்மா
அந்தக்கடவுள் யிருக்குமிடம்
அம்மாதயவு செய்து சொல்லவேணும்
என்றுரைத்து அனுமார் கேட்டபோது

யேதுசொல்வாளந்த தூரதண்டி
அனுமாரைத்தான் பாற்த்து உரைக்கலுற்ருள்
அய்யா அனுமாரே யென்னருகில்
வாருமையாவென்று தானழைக்க
வரிசையுடனந்த அனுமாரும்

அவளருகேவந்து நிற்கலுற்ருர்
அப்போது தூரதண்டியானவழும்
அனுமாரிடம் வரலாறுதான்கேட்டாள்
வாரும்அப்பா அனுமாரேநீர்
வாற்த்தையொன்று நீர்கேழும்

அனுமாரென்று உரைக்கிருயே
அருமையுடனே சொல்லுகிறேன்
குரங்கு சாதியல்லோ மனுசரைப்போல்
கூறியே நீயும் பேசுகிருய்
உன்னையெப்படி நான் நம்புவது

உறுதியுடன் தூரதண்டி தானுரைக்க
வாரும் அம்மா தூரதண்டிகையே
வரலாறு கேழும் யென்னிடத்தில்
அப்படிநீயும் பயப்படாதே
அறுபத்திநாலுப்பாசை நானறிவேன்

சகல சாஸ்திரமும் நீதிநூலும்
நயன பாசையுந் தெரியும் அம்மா
என்று அனுமாருரைத்தபோது
யேது சொல்லுவாள் தூரதண்டி
குளந்தைப்பிள்ளைகள் போலிருந்தால்

குணமுடன் மதிப்பேனே அய்யாவே
ஆனுல் உம்முட விஸ்வரூபம்
அன்புடன் காணவேணுமென்றபோது
காண்பிக்க வேணுமென்றபோது
கடுகஅனுமாரேது சொல்வார்

---

9059. அனுஷ்ட்டி—தீர்ச்சை
9059. கெதி—நல்வாழ்வு
9087. நயனபாசை—கண்சாடை

அந்தச்சுருபம் நீ பாற்த்தால்
அதிசெயமுடனே பயப்படுவாய்
பயப்படுவாய் நீ யென்றுரைக்க
பண்பாய் தூரதண்டி உரைக்கலுற்றாள்
எவ்வித சுருபம் நீர் காட்டினாலும்

எப்படியும் பயப்படமாட்டேனையா
மயில் ராவணனுட மாய்கைகளை
கண்டுதெளிந்தவள் நானுமையா
பயந்தோற்றதுயினக்கு அய்யா
விசுவரூபமதைக் காட்டுமையா

என்றுதூரதண்டி உரைத்தபோது
யேற்றஅனுமார் பாரென்றுரைத்தார்
மேகமண்டலம் வாய்வுமண்டலம்
சூரியமண்டலம் சந்திரமண்டலம்
நக்ஷத்திரமண்டலமானதெல்லாம்

ஒருப்போலவேதான்வளர்ந்தார்
தூரதண்டிலகை தானும்பாற்த்து
பயந்துநடுங்கிக்கிடுகிடென்று
ஆஞ்சநேயரை பாற்த்துரைப்பாள்
அனுமாரேஉம்முட சுருபம்பாற்க்க

பயங்கரமாயிருக்கிறது அய்யாவே
நானேஉம்முட சுருவம் பாற்க்க
தக்கவளில்லை போதும்அய்பா
அனுமார்அந்த சுருவந்தானும்விட்டு
தூரதண்டியே பயப்படாதே

என்றுதயிரியந்தானுரைத்து
உன்காலிலேவிலங்கு வந்தகாரணந்தான்
அடாதகாரியம் நீயென்னசெய்தாய்
சுமங்கலியென்றுன்னைப் பாராமல்
உன்மங்கிலியத்தை யிப்போகாணேமே

உன்புசருன்தானும் யிருக்கிறானே
யில்லையோ வென்றுதான்கேள்க்க
ராமலெச்சுமணுள் உயிரோடே
சுகமாயிருக்கிறார்களோ யிப்போது

---

9096. சுருபம்—வடிவம்
9114. ஆஞ்சநேயர் – அனுமார்
9122. விலங்கு—மாட்டபடும்தளை
9123. அடாத—தகாத
9124. சுமங்கலி— மங்கிலியப்பெண்
9125. மங்கிலியம்— திருமாங்கல்யம்;தாலி
9126. புருசன்—கணவன்

உளக்குவிலங்கு போட்டகாறணம் யின்னதென்ன

சொல்லுஅம்மா வென்றுதான் கேள்க்க
என்னையும் என்மகனையும் மாபாவி
விலங்கிலேபோட்டான் நாங்கள்திருடவில்லை
அள்ளவில்லை துன்பம்செய்யவில்லை
அவனுரைத்த காரியந்தட்டவில்லை

அந்தப்பாதகன் ஆங்காரத்திறல்
அருமைக்கணவனைத்தானுங் கொன்றான்
என்னையும் என்மகனையும் அன்னீதமாய்
யேற்றவிலங்கது பூட்டிவிட்டான்
அவ்வசனங்கேட்டுப் பே(ா)ரனுமான்

காலையுங்கையையுந்தான் பிடித்து
அந்தசண்டாளனிட்ட விலங்கிதுதானே
கனத்தவிலங்குகளை ஒடித்துவிட்டான்
தூரதண்டி மனமகிள்ச்சைகொண்டு
துருசமுடனவளேது செய்தாள்

அஞ்சலிசெய்து யிருகைநீட்டி
அவளும்அப்போது அடிபணிந்தாள்
தூரதண்டியே நமது தெய்வமான
ராமலெச்சுமனுள் யெங்கேயிருக்கிறார்
மயில் ராவணன்யெங்கியிருக்கிறான்

அவன்புசபலபராக்கிரமந்தானுமென்ன
எல்லாம் அறிவாய்நீ சொல்லுமென்று
அனுமான்தூரதண்டியிடங்கேள்க்க
கேழும் அய்யா பே(ா)ரனுமானே
அதோபாரும் ஒருகோட்டையது

அந்தவாசலில் துலாயேந்திரம்
கட்டியிருப்பதைப்பாரும் அய்யா
என்றுசொல்லியே தூரதண்டி
யெல்லாவிபரமுஞ்சொல்லுவாளாம்
கேள்க்கவேணுந்தூரதண்டிகையே

யினக்கொரு உவகாரஞ்நீயுஞ்செய்வாய்
அந்தக்கோட்டைவாசல்க்கப்பாலே
என்னை நீ கொண்டுவிட்டிடுவாய்
என்றுஅனுமாருந்தானுரைக்க
தூரதண்டிகையேதுசொல்வாள்

---

9135. தட்ட—மறுக்க
9138. அன்னீதமாய்—அநீதியாய்
9146. அஞ்சலி—வணக்கம்
9161. உவகாரம்—உதவி

## அனுமான் தூரதண்டிகை உதவியால் கோட்டைக்குள் வரல்

உம்மையெப்படி நான்கொடுபோவேன்
உரைத்தமொழி கேட்டுஅனுமாரும்
தண்ணீர்குடமதைத்தானெடுத்து
தலைமீதில்நீயும் வைத்துக்கொள்வாய்
மாவிலைக்கொத்தில்ஈப்போலே

மகிழ்ந்துயிருந்திடுவேன் வெண்குடத்துக்குள்ளே
நிறைகோலுக்கருகாகத்தான்போனாள்
நிறைகோலில் ராக்ஷதர்குடந்தனையும்
தூக்கித்திராசதில் தானும்வைத்து
பார்க்கத்திராசிகோல் சாய்ந்திடவே

ராக்ஷதர்திடீரென்றுதான்பயந்து
அண்ணாந்தவர்கழும் பாற்க்கும்போது
சத்துருவையாருங்காணாமல்
தூரதண்டிகையைத்தானுடங்கண்டு
கத்தியைஉருவிக்கொண்டு ராக்ஷதரர்கள்

தூரதண்டிகைக்கு முன்னேசென்று
யிங்கேநில்லடியென்றுரைக்க
கிடுகிடென்று பயந்துநிற்கலுற்றாள்

## அனுமான் அரக்கர் போர்

அனுமார்தானும் அந்தச்சமயமதில்
மாவிலைக்கொத்தில் தானிருந்து

ஆகாசம்பூமி பாதாளம்வரை
யேகசுரூபமான விசுபரூபம்
எடுத்துகீழே குதித்துராக்ஷகரை
அடித்து சம்மட்டிதான்கசக்க
அனேபேர்ராக்ஷதரைக் கொன்றுவிட்டான்

அனுமார்போர் செய்தநியாயமாதை
ஆராலுஞ்சொல்லமுடியாமல்
தூரதண்டியே யிப்போது
நடந்தயுத்தக் களரியைப் பாற்த்தாயே
தூரதண்டி மகனேநீலமேகன்

நீலமேகனை அனுமார்தான்பாற்த்து
அவனுக்குப்போட்டிருந்த விலங்கதையும்
அப்போது அனுமார் நொறுக்கிவிட்டார்
நீலமேகம்யிடந்தனிலே
நின்றஅனுமாரும் யேதுசொல்லார்

---

9189. சம்மட்டி--மிதித்து

ராமலெச்சுமணுள் யிருக்கும்யிடம்
என்றுஅனுமாருங் கேட்டபோது

## நீலமேகன் அனுமானிடம் இராமர் இலெட்சுமணர் இருக்குமிடம் கூறல்

அங்கேவடபத்திரகாளி கோவிலிலே
அங்கேஒரு அறையில் தானும்வைத்து

அடைத்துவைத்துப்பூட்டி வைத்திருக்கிருனேயா
என்று நீலமேகனுரைத்தபோது
யேற்றஅனுமாரும் ஓடிவந்து
பத்திரகாளிகோவில் கதவதையும்
பூட்டைநொறுக்கியே பாற்க்கும்போது

ராமலெச்சுமணரிருவரையும்
கண்டுகொண்டானந்தபே(ர)ரனுமான்
அருகினில்ஒரு அறைப்பெட்டிதானும்
அங்கேயிருந்ததைஅனுமார்கண்டு
அப்போதுஅவர்களிருவரையும்

நித்திரைகுலையாமல் பெட்டிக்குள்ளே
வைத்துப்பூட்டியேதானெடுத்தான்
மகிள்ச்சையாயெடுத்துவெளியில்வந்து

## அனுமான் தூரதண்டிக்குத் தைரியம் உரைத்தல்

தூரதண்டியைத்தான் பாற்த்து
பயப்படாமலிரு யென்று சொல்லி

அப்போது அந்த தூரதண்டிகையும்
அனுமார் பாதத்தில் அடிதொழுதாள்
பாதகன் மயில் ராவணன் பாற்த்தவுடன்
பண்பாக என்னையும் என்மகன்தனேயும்
வளாலிருதுண்டாய் வெட்டிடுவான்

நாங்களுங்கூட வாருேமென்ருள்
நீங்கள் என்கூட வரவேண்டாம்
மயில்ராவணன் உங்களிடம்
வந்து சறுகிருல் நீங்கழுந்தான்
மலையாமல் ரெகுராமரைஉள்ளமதில்

நினைத்துதித்து யென்னை நீங்கள்
மனதில் கருதி நினைத்தவுடன்
வந்துமயில் ராவணனைக் கொன்றிடுவேன்

---

9216. நித்தரை—தூக்கம்

9216. கலையாமல் > குலையாமல்(பே வ.மா)

9230. மலையாமல்—அஞ்சாமல்

என்றுஅனுமாரும் உரைத்தபோது
யிருபேரும் அப்போதானிருந்தார்

பெட்டகத்தை கையிலெடுத்துக்கொண்டு

## அனுமான் இராமலெட்சுமணர் இருக்கும் பெட்டியினைப் பூமாதேவியிடத்தில் ஒப்படைத்தல்

போரனுமாரும் வாறபோது
மலையினருகே வாறபோது
மண்டபம் ஒன்றுயிருக்கக் கண்டார்
அங்கே பூமாதேவி தானிருக்க

அனுமார்கண்டு ஓடி வந்தார்
அம்மாதாயேபூமாதேவி
உன்னுடைய பற்தா ஆனவர்தான்
யிதோயிருக்கிறார் ரெகுராமரும்
என்றுரைத்து அப்போஅனுமாரும்

அவருடைய தம்பி லெச்சுமணரும்
யிருவரையும் யெடுத்துப் பெட்டகத்தில்
உன்னுடைய சமுகத்தில் கொண்டுவந்தேன்
பின்பு நானிந்த பெட்டகத்தில்
யிரு(க்)கின்ற பள்ளிகொண்டோன் தம்பியையும்

நானெடுத்துக் கொண்டுபோமளவும்
நீ வைத்துப் பாதுகாத்துயிருக்க வேணும்
நான்வந்துகேள்க்கும்போது நீதானும்
என்னிடம்ஒப்புவிக்க வேணும்அம்மா
என்றுஅனுமாரும் உரைத்தபோது

யேற்றபூமாதேவி ஒப்புக்கொண்டாள்
ஒப்புக்கொண்டவளிருக்கும்போது
உத்தபூமியது கவரமதமாய்
கவரமதாய் வெடிப்புத்தான் தோன்றி
கருதிப்பூமாதேவிதானுரைப்பாள்

உரைத்துஅனுமாரைத்தான் பாற்த்து
படீரென்றுவெடித்த வெடிப்பதனை
பண்பாகபூமிதேவிகாட்டலுற்றாள்
அப்போதுஅனுமார்தான் பாற்த்து
ஆனந்தங்கொண்டு களிகூர்ந்து

வெடிப்புக்கவரமதில் பெட்டக(ம்)தன்னை
வைசதுக்கவர(ம்)தன்னை மூடிக்கொண்டாள்

---

9254. ஒப்புவிக்க—ஒப்படைக்க
9258. கவரம்—கிளை
9259. வெடிப்பு—சிறுஇடைவெளி

ஆனதினலே அனுமாரும்
அன்பாய்களிகூர்ந்து திரும்பிவிட்டார்

### *மயில் ராவணன் வேவுகாறரை அனுப்பி செய்தி அறிதல்*

திரும்பிவருகிற வேளைதன்னில்

அப்போதுமயில் ராவணன் ஓடிவந்தான்
அந்தசமயத்தில் அனுமாரும்
தூரதண்டி நீலமேகனுடன்
பேசிக்கொண்டு அனுமார்தானிருந்தார்
யிப்படியிருக்கிற வேளைதன்னில்

யேற்றமயில் ராவணன்தானெழுந்து
யெழுந்துவேவு காறர்தனைப்பாற்த்து
தூரதண்டிநீலமேகனிருவருந்தான்
எங்கேயிருக்கிருர்கள் பாற்த்துவாரும்
என்றுமயில் ராவணன்தானுரைக்க

வேவுகாறர் போய்த்தான்பாற்த்து
வேவுகாறர் போய்பாற்க்கும்போது
அனுமார் அருகிருக்க கண்டார்கள்
அப்போது வந்தவர் தானுரைத்தான்

### *மயில்ராவணன் தூரதண்டி, நீலமேகனை கட்டிக் கொண்டுவர ஏவல்*

மயில்ராவணன் வெகுகோபத்துடன்

ஆயிரம்ராக்ஷதர்கள் தன்னுடனே
நீலமேகன்தூரதண்டி யிருவரையும்
பின்கட்டாத்தானும் பிடித்துக்கட்டி
கொண்டுவாருங்களென வுரைத்தான்
அப்போதுவேவுகாற ராக்ஷதர்கள்

தூரதண்டி நீலமேகன்தனைப்பாற்த்து
சத்துருவைக்கொண்டு விட்டீர்களே
என்றுமுடுகிச்சேற்த்து கெட்டுமென்ருர்
யிவ்வார்த்தைதான் கேட்டுதூரதண்டி
அனுமாரிடத்தில் முறையிடவே

எங்களிருவரையும் காத்தருளும்
என்றுஅனுமாரிடம் உரைத்தபோது

---

9277. வேவுகாறர்—ஒற்றர்

9288. பின்கட்டா—கை இரண்டினையும் உடலின் பின்பக்கத்தில் வைத்துக்கட்டி

### அனுமான் தூரதண்டி நீலமேகனை பாதுகாத்தல்

யேற்ற அனுமாரும் ஓடிவந்து
அஞ்சவேண்டாம் நீங்கள்பதறவேண்டாம்
அரக்கர்தனையிப்போ கொன்றிடுவேன்

என்று அனுமாரும் நிற்கையிலே
அனுமார் விசுவரூபங்கொண்டெழுந்து
அப்போது தண்டாயுதத்தடியெடுத்து
ரகுராமர்கோபாலரை மனதில்வைத்து
அரக்கர்ராக்ஷதர் மேல்தான்பாய்ந்து

அடித்தான் மண்டையில் அனுமாரும்
அடிபட்டுராக்ஷதர் மடிந்தார்கள்

### மயில்ராவணன் கடகன் மூலம் படைகளை திரட்டல்

அப்போதுமயில் ராவணன்தானறிந்தான்
அதிகோபத்துடன்கடகனிடம்
ஆருயிரம்ராக்ஷதப் படைகளையும்

கூட்டிக்கொண்டு வாடாவென்றான்
சொல்லிக்கடகனை தூதுவிட்டார்
அப்படியேகடகன் நல்லதென்று
ஓட்டமாகவே ஓடிவந்தான்
ராக்ஷதரைத்தானிவன் கூட்டிக்கொண்டு

மயில்ராவணனிடத்தில் ஓடிவந்தான்
தேரைச்சிங்காரித்து வரவுஞ்சொன்னான்
தேரதுசிங்காரித்து வந்தவுடன்
தேரதில்மயில் ராவணனேறிக் கொண்டான்
படைதளகத்தருடன் யெல்லோரும்

பண்பாகஒருமித்து வந்துசேற்ந்தார்

### மயில்ராவணன் அனுமான் போர்

சேற்ந்து யாவரும் போர் பொருதார்
போர் பொருததோர் வேளையிலே
தூரதண்டி நீலமேகனையும்
வாலைக்கோட்டையாய் வளைந்துகொண்டு

அந்தராக்ஷதப்படைகளைத்தான்
அடித்துநொறுக்கிக் கொன்றுவிட்டான்
அப்போதுமயில் ராவணன்தேரதையும்
ஒளுக்கறைக்குண்டதனைத்தானெடுத்து
ஓங்கி யெறிந்துவிட்டான் தேரின்மேலே

---

9329. ஒளுக்கறைக்குண்டு—இரும்புபோன்ற உலோகத்தால் ஆனஉருண்டைவடிவானது

எறிந்த உடனந்ததேரதுதான்
நொறுங்கி பொடி பொடியாய்ப்போக
தேரது நொறுங்கிப் போனவுடன்
தீரன் மயில் ராவணன் தவறி கீளேவிழுந்தான்
விழுந்த மயில் ராவணன்தானும் அப்போ

வேறுமாய்கையாய் ஓடிவிட்டான்
அப்படியிருக்கிறவேளைதன்னில்
அனுமார் மயில்ராவணன்தனைத்தேடி
காணுமல்அரக்கன்பேரில் கோபமீறி
மயில் ராவணனுட மாய்கையினுல்

மாயமாய் சூத்திரஞ் செய்துகொண்டு
மறைந்துயிருக்கிருனே யெனநினைந்து
சிந்தையில் நினைத்து ரெகுராமரை
தேடிப்பே(ா)ரனுமார் பாற்க்கும்போது
ஆலவிருக்ஷம் ஒன்றுயிருக்கக்கண்டார்

அந்தமரத்தின் கீள்ஒரு வளியாய்
அங்கே ஒரு வளியிருக்கக் கண்டார்
அந்த வளியது தன்னிலே தான்
ஆரணியயாகஞ் செய்திருக்கக் கண்டார்
யிவனை நாம் போய் பிடிக்க வேணுமாஞல்

யீச்சிரூபமாய் வடிவெடுத்து
போனுக்கால்நாமும் செயிக்கலாமே
யீசர்பாற்பதியம்மனையும்
ராமலெச்சுமணுள்யிருவரையும்
கற்ப்புடையசீதை தாயாரையும்

தேவாதிதேவர்யாவரையும்
யாவரையும் மனதில்நினைந்துகொண்டு
யீச்சிரூபமாகப்போய் சேற்ந்தான்
யாருக்குந்தெரியாமல்விசுபரூபம்
எடுத்துவாலால்மயில்ராவணனை

வாலால்யிறுக்கித்தானுங்கட்டி
கட்டியவனுடவேள்விதன்னை
அளித்துகடுங்கோபங்கொண்டேகி
அந்த மயில் ராவணனை வாலினுலே
சுளத்திப் பூமியில் தானடிக்க

அப்போது கரமதுதான் விள்வே
தண்டாயுதத்தடிகயிலெடுத்து
தானே சிரசில்தானடிக்க

---

9346. வளி—பாதை
9351. யீச்சி—ஈ

சிரசில்தானடிப்பட்டவுடன்
மூளைசிதறிரெத்தம்ஓடிடவே

மாயாசுருபஞ்செய்து மாண்டுவிட்டான்
மாண்டஅரக்கன் மறுரூபங்கொண்டு
பொடிபட்ட அவன் திரேகமெல்லாம்
பொருந்தச்செய்தவன் மாய்கையதால்
யெங்கேபோயொளித்துக் கொண்டானே

என்றுபரிதவித்து நிற்கும்போது
யிப்படி அனுமார் நிற்கும்நேரம்
யேற்றமயில் ராவணன் மாய்கையதை
தூரதண்டியிடம் வந்து கேட்டான்
கேட்டபோது தூரதண்டியானவளும்

கெறுவிதமாய் மயில் ராவணன் மாய்கைதன்னை
வரலாறு யாதென்று தெரியாதையா
என்றுதூரதண்டி உரைத்து விட்டாள்
அப்போது அனுமாரும் பரிதவித்து
யினிமேல்யென்னயோசினை செய்திடலாம்

தெய்வசியலால் அவனைக்கொல்லவேணும்
என்றுஅனுமாருந்தானினைந்து
யிசலுடன் அனுமாரும்யேதுசெய்தார்
பரமசிவபாற்பதியிருவரையும்
பண்பாகமனதினில் உச்சரித்து

ராமர்லெச்சுமணர்தனைநினைத்து
மயில்ராவணன்தன்னை நான்செயிக்க
அவனிருக்கும்யிடமதை நான்காணும்படி
கிருபைசெய்யவேணுஞ்சுவாமி யென்று
என்றுஎன்மனதில் உச்சரித்து
உச்சரித்துநிற்கிற வேளைதன்னில்

## பூதத்தின் தோற்றம்

மயில் ராவணனுட மாய்கையதால்
வந்ததுவே ஒரு பூதமது
பூதமதுஅனுமார் முன்பில்வந்தபோது
பூதத்தை அனுமார் தான்பாற்த்து

எங்கேவந்தாய் நீ பெரும்பூதமே
மாண்டுபோகயென்முன் வந்தாயே
உன்னைநானிப்போ கொன்றிடுவேன்
என்றுஅனுமார்தானுரைக்க
அப்போது அந்தபூதமது

9373. திரேகம்—உடல்
9385. யோசனை > யோசினை (பே வ. மா)

அதினுடவாயைப் பிளந்தபோது
அக்கினிச்சுவாலையாய் நின்றதுவே
பாற்த்தபோதந்த அனுமாரும்
பண்பாய் சீதைத்தாயார் தன்னை
கற்புடைய சீதயைஉள்ளந்தனில்

மனதில்உச்சரித்துத் தான்துதித்து
அக்கினிபகவானைத் தான்துதித்து
அனுமாரும் பரிபூரணமாய்
யிந்தப்பூதமது தானும்யிப்போ
எந்தவிதமாக வந்ததென்று

ஆகாசவாணி பூமாதேவிதன்னை
அன்பாக அனுமார் உச்சரித்து
உச்சரித்துத்தியானித்து நிற்கும்போது

*அசரீரி உரை மொழி*

ஆகாசவாணியும் அக்கினிபகவானும்
அசனீசவாக்காக உரைத்திடுவார்

அனுமார் ரெகுராமர் தூதுவரே
அன்பாக யெங்களைத்தானினைந்தீர்
நினைத்துக்கேட்ட காரியஞ்சொல்லுகிறோம்
நீதியுள்ள போரனுமாரே
மயில்ராவணனொரு வேள்வியது

வளமுடனவன் வளர்க்கிறான்
அந்தவேள்வி தனிலிந்தபூதம்
அன்பினுடனே பிறந்தபோது
உன்னைமோசஞ் செய்ய அனுப்பிவிட்டான்
அந்தப் பூதமதைவெல்லவேணுமானல்

அரக்கன் மயில் ராவணன் செய்யுமந்த
வேள்வியை நீர்தானும் அளித்துவிட்டால்
மெய்யான பூதமது உம்மையுந்தான்
வணக்கஞ்செய்துகொண்டுபோய் விடுங்காண்
அப்பால் அரக்கன் பிலங்குறைந்து போகும்

அங்கே நீர்போகவேணுமானல்
அரக்கன் தந்திர மொன்றுதானுரைப்போம்
அந்த ஆலவிருக்ஷமதை
மூட்டோடே வேருடன் பிடுங்கிவிட்டால்
மூற்க்கன் மயில் ராவணனைக்கண்டுகொள்வீர்

---

9406 அதனுட>அதினுட (பே.வ.மா)
9407. சுவாலை—சுடர்

என்றுரைத்தவாற்த்தை தான்கேட்டு
கேட்டுக்கொண்டந்தயிடத்தில் வந்தார்

### அனுமான் ஆலமரத்தினைப்பிடுங்கி மயில் ராவணன் மீது போடல்

கெம்பீரமாய் ஆலமரத்தையும்
வேரோடே அனுமார்தான்பிடுங்கி
வேள்விசெய்த மயில் ராவணன்மேல்போட்டான்

அப்போது பயந்துநடுநடுங்கி
பயந்துஒளித்துமாய்கை செய்து
பண்பாய் மயில் ராவணன் ஓடிவிட்டான்
யெங்கும் தேடிப்பாற்க்கும் போது
யேற்றமயில் ராவணன் மறைந்துவிட்டான்

யிப்படியிருக்கிறவேளையிலே
மறைந்து வாசுபகவானிடமதிலே
வந்துவரலாறு தானுஞ் சொன்னான்
வாய்த்த மயில் ராவணன் தானுமப்போ
வாசுபகவானிடம் யிருக்கையிலே

### அனுமானுக்கு வாயுபகவான் உதவல்

வாசுபகவானும் அப்போது
என்மகனே சிரஞ்சீவியனுமானே
கோபாலரெகுராமர் தன்னுடைய
கிருபைதானிப்போதானிருந்தால்
யிப்போதுயென்முன்னே வரவேணும்

என்று வாய்வு பகவான் நினைத்தபோது
அனுமார்க்கு அசனீசவாக்குப்பிறந்ததுவே
அப்போது விசு(வ)ரூபங்கொண்டெழுந்து
வாய்வுபகவான் முன்வந்து சேற்ந்தான்
வந்து பிதாவையுந்தெண்டஞ்செய்து

மயில்ராவணனைக்கண்டு கோபங்கொண்டு
வாலினால் மயில்ராவணனைக் கட்டிக்கொண்டு
தண்டாயுதத்தடி கையிலெடுத்து
மயில்ராவணன் சிரசில்தானடிக்க
மண்டயதுதான் பிளந்திடுமாம்

அடித்துப்பொடி பொடியாய்த் தானொறுக்கி
யெலும்புகளெல்லாம் பொடியாக
பொடியாக சதைத்துக் கொன்றுபோட்டார்
புகள்சிறந்த போரனுமாரும்
அப்போது பிதாவையும் அடிதொழுது

---

9456. வாயு>வாசு (பே. வ. மா)—காற்று
9473. சதைத்து—நையச்செய்து

அடிபணிந்து அனுமார் தெண்டஞ்செய்து
வாய்த்த அனுமாரும் அப்போது
வாய்வு பகவானிடம் அரசிருந்தார்
அப்போது அந்த மயில்ராவணன்
மாய்கைசெய்து அவன் திரேகமெல்லாம்

திரட்டிஉயிருண்டாக்கி ஒளித்துக்கொண்டான்
ஒளித்த மயில்ராவணன் அப்போது
உகந்த மதயானை ரூபமானுன்
அப்போது தூரதண்டி தானுங்கண்டு
அனுமாரிடத்தில் சாடைசெய்தாள்

சாடை செய்திட போரனுமார்
அப்போதுயானயைக் கண்டுகொண்டார்
கண்டவுடன் அனுமார் கோபங்கொண்டு
கனத்தயானையைத் துடர்ந்துவந்து
வந்துயானையத்தான் பிடித்து

மண்டை பிளக்கத்தானடித்தார்
அப்போதுமயில் ராவணனேது செய்தான்
யிருபரியந்தம் நாம் யிருபேரும்
மாய்கையாயிருந்து யுத்தஞ்செய்து
நான்உன்னைலேசாய் விடமாட்டேன்

என்று மயில்ராவணன் தானுரைக்க
உரைத்த வாற்த்தையை அனுமார்கேட்டு
பாபபிரம சொருபத்தைத் தானினைத்து
பெரியோர்கள் யாவரையுந் தான்மதித்து
கதியேதுணையென்று நிற்க்கும்போது

கடுகஅரக்கன் மயில்ராவுணனும்
அனேகசரங்கள் தொடுத்துவிட்டான்
அதுகண்டு அனுமார்தானுமப்போ
அரிராமர் கிருபையால் கணைதொடுத்தார்
யிப்படியிருவரும் சரந்தொடுக்க

ஒருவர்க்கொருவர் தோர்வையில்லை
யிப்படியிருக்கிற வேளையிலே
விசுபரூபந்தானெடுத்து
பூமிஆகாசமுட்ட தானெழும்பி
சாடினுன் மயில்ராவணன் பேரில்

தடியினுலவனைத்தானடித்து
சத்துரு சங்கார வேலவரை
வேலவர்கந்த சுவாமியைத்தானினைத்து

9485. சாடை—கண்சாடை

9512. வேலவர்—முருகன்

வேலாயுதத்தை யெடுத்துயெய்துவிட்டார்
வேலாயுதமது தானுஞ்சென்று

மெய்ப்பாக அரக்கன் மார்வைப்பிளந்ததுவே
பிளந்து திரும்பி அனுமாரிடம் வந்ததுவே
வந்தவுடனந்த மயில் ராவணன்
மாண்டு போனவன் உயிரெழும்பி
வந்துநின்றதை அனுமார்கண்டு

### அனுமான் தூரதண்டியிடம் மயில் ராவணன் மாய்கைபற்றிக் கேட்டல்

அப்போது தூரதண்டியிடம்
அருகே சென்றந்த அனுமாரும்
தூரதண்டியைத்தான் பாற்த்து
கேள்க்கவேணுந் தூரதண்டிகையே
யிந்த மயில்ராவணன் தன்னையுமோ

யேழுதரம்நானுங் கொன்றுபோட்டேன்
மாண்டுபோனவன் உயிர்தேறி
வந்துவிடுகிற மாயமென்ன
அவனுடைசூத்திர மாய்கைதன்னை
யின்னவிதமென்று தெரியுதில்லை

உன்னுடைய தமயனல்லோ மயில்ராவணன்
உனக்குஅவன்வரலாறு தெரியாதோ
என்றுஅனுமாருந்தான் கேள்க்க

### தூரதண்டி செய்தி கூறல்

நேற்றிரவில் நானும் விசாரமுற்று
நித்திரை செய்திருந்தேன் சுவாமி

பூரணநித்திரை சமையமதில்
புகள்ந்து என்னுட மணவாளர்
என்னருகே வந்துயிருந்து கொண்டு
உரைத்த காரியம் அத்தனையும்
உண்மையாயுரைக்கிறேன் கேட்டருளும்

எனது பத்தினியே தூரதண்டி
யேது கிலேசம் உந்தனக்கு
கிலேசம் ஒன்றும்நீ நினைக்கவேண்டாம்
உன்னுடைய அண்ணன் மயில்ராவணன்
என்னையும்வெட்டிக்கொன்றனே

யிப்போது அவனுடைய மாய்கை தன்னை
உரைக்கிறேன் நீயுங்கேட்டுக்கொள்வாய்
ஆதிநாளையிலந்த மயில் ராவணன்
ஆதிபரமசிவன்தன்னிடத்தில்
வரம்பெறவேணும்மெனநினைத்து

பரமசிவனுக்காகத் தானிருந்து
பண்பாகத்தவசிருந்தானவனும்
மகாதேவர் அரக்கனைத்தான் பாற்த்து
வல்லரக்கா மயில்ராவணனே
யேதுக்காக நீ தவசிருந்தாய்

என்று மகாதேவர் கேட்டபோது
வல்லரக்கன் மயில்ராவணனும்
மகிள்ந்து கேட்டவரமதனை
உரைக்கிறேன் எனது பத்தினியே
என்னுடன்சத்துராதிவந்தெதிர்த்தால்

என்னைச்செயிக்க முடியாமல்
வரந்தர வேணும் மகாதேவா
என்று அரக்கன் கேட்டபோது
மகாதேவர் சுவாமிமனதிரங்கி
வல்லரக்காமயில் ராவணனே

நீகேட்டபடிவரம் வேணுமானல்
கிருபையுடன்நானுமுரைக்கிறேன்
விந்தியாசிலபறுபதத்தில்
ஐந்துகுகையதுயிருக்கிறது
ஐந்துகுகைக்குள் நடுவாக

ஐந்து துவாரமதுயிருக்கிறது
ஐந்து துவாரத்துக்குள்ளேதான்
ஐந்து வண்டு களானதுதான்
யிருக்கிறது காணந்த வண்டுகழும்
அந்த வண்டுகள் யிருக்கும்வரை

உனக்குசத்துராதி தானும்யில்லை
என்றுமகாதேவர் தானுரைக்க
மயில்ராவணன் வரம் பெற்றுக்கொண்டு
பாதாளயிலங்கைக்குத் தானும்வந்தான்
யிப்படியிருக்கிற நாளையிலே

யிசைந்து தூரதண்டி பற்தாவும்
தூரதண்டியிடஞ் சொற்பனமாய்
உரைத்த வசனமதை விபரமாக
ராமச்சந்திரபகவான் யிடமதில்போய்
உரைத்திடுவாயெந்தன் தேவியரே

என்றுரைத்த சொற்பனந்தான் கேட்டு
ரெகுராம தூதரிடம் வந்துசொன்னள்

---

9568. விந்தியாசில—மலையின் பெயர்
9573. வண்டு—ஒரு பூச்சி
9582. சொற்ப்பனம்—கனவு

## அனுமான் மீண்டும் மயில்ராவணனை தாக்கல்

ரெகுராமர்தூதன் கேட்டுக்கொண்டு
அம்மாதூரதண்டிகையே
அரக்கன் தனையிப்போக் கொன்றிடுவேன்

என்றுரைத்து அனுமாருந்தானெழும்பி
யேற்ற மயில்ராவணனருகே வந்து
அடடா ராக்ஷதப்பயலே நீ
ஒடிப்போகலாம் யெனநினைந்து
நிற்கிறுயோடா யென்றுரைத்து

வாலினாலே ராக்ஷதனைத் தானுங்கட்டி
ராமச்சந்திர பகவானையும்
கற்புடைய சீதைத்தாயாரையும்
கருத்தில் நினைத்து உச்சரித்துக்கொண்டு
விந்தியாசல பறுபதத்தில்

பறுபதத்தில் அனுமார் வலதுகாலை
அரக்கன் மயில்ராவணன் நெஞ்சதிலே
யிடதுகாலைப் பிலத்துடன் மிதித்தனுமான்
பறுபதத்தில் ஐந்து குகைகண்டு கொண்டார்
அதன் மத்தியில் யிருக்கிறதுவாரத்தையும்

துவாரத்தையும் அனுமார் கண்டுகொண்டார்
அந்தத்துவாரம் ஐந்தையுந்தான்
யிடதுஉள்ளங் கையால் மூடிக்கொண்டு
வலதுகையை துவாரத்துக்குள் புகுதவிட்டு
தடவிப்பிடிக்கையில் வண்டுகளைந்தும்

ஆஞ்சநேயர் கை வருவதைக்கண்டு
வெளியே பிறப்பட்டு போவோமென்று
வாசலில்வந்துபாற்க்கும் போது
வாசல்மூடிருப்பதைதானுங்கண்டு
வெளியே போகாமல்தான்பயந்து

உடனேஒளித்தங்கேயிருந்ததுவே
அனுமார் உபாயஞ்செய்து விரலினாலே
பிடித்துநகத்திலே கோற்த்துக்கொண்டு
ரண்டாந்துவாரம்யிருக்கும் வண்டதனை
விரல்நகத்தினுல் பிடித்துக்கோர்த்துக்கொண்டு

---

9605 மத்தியில்—நடுவில்
9609. புகுத—புகும்படி
9617. உபாயம் — வழிமுறை
9618. கோற்த்து—நுழைத்து; செருகி

மூன்றும் நான்காம் தூவாரத்தில்
அதிலிருந்த வண்டுகள்தன்னையுமே
ஐந்தாந் துவாரத்திலிருந்த வண்டதையும்
அனுமார்க்கரத்தினால் பிடித்துக்கொண்டு
ஐந்து வண்டையும் நசுக்கிமாய்த்துப் போட்டார்

## மயில் ராவணன் மடிதல்

மயில் ராவணனைத் தேடிவந்து
அவனுட திரேகத்தில் பிரவேசிக்க
மயில் ராவணனுட பிராணமது
தன்னுடலில் புகுந்ததுவே
புகுந்ததை அனுமார்தான் பாற்த்து

மயில்ராவணன் சிரசையறுத்துவிட்டான்
உடனேமாண்டுதான் போனானே

## அனுமான் நீலமேகனிடம் மயில்ராவணனுக்கு இறுதிச்சடங்கு செய்ய கூறல்

யிப்படியிருக்கிற வேளையிலே
யிசலுடன் அனுமாரேது செய்தார்
தூரதண்டி நீலமேகனையும்

துருசமுடனவர்தானழைத்து
உடனேயிருவரும் வந்து சேற்ந்தார்
நீலமேகன்தனைப்பாற்த்து
அடேதம்பி வாடா நீலமேகா
மயில் ராவணனுக்கு உத்தரகிரிகை முதல்

எவ்வண்ணம் முடிக்க வேண்டுமோநீ
அவ்வண்ணம் முடித்து நீ வருவாய்
சூரிய உதயமாகு முன்னே
ராம லெட்சுமணனைக் கொடுபோகவேணும்
பின்பு ராவண சம்மாரஞ்செய்யவேணும்

ரூபவதி யென்கிற பெண்ணையுமோ
உந்தனக்கு விவாக முடிக்கவேணும்
பட்டாபிசேகஞ் செய்துதரவேணும்
தாகமதுதான்செய்து ஆஞ்சநேயர்
அரண்மனைதன்னில் போய்ச்சேற்ந்தார்

---

9625. மாய்த்து—கொன்று
9628. பிராணம்—உயிர்
9632. மாண்டு—இறந்து
9640. உத்திரகிரிகை—இறந்தபின் செய்யும் சடங்கு
9647. விவாகம்—திருமணம்
9648. பட்டாபிசேகம் — முடிசூட்டு

## நீலமேகன் மயில்ராவணனுக்கு இறுதிச்சடங்கு செய்தல்

அப்போது நீலமேகனவன்
ராக்ஷதபிருமணனைவரவழைத்து
மயில் ராவணன் அவன்தனக்கு
அக்கினிநமஸ்காரந்தானுஞ்செய்து
நீலமேகனுந்தூரதண்டியுமாய்
தானஞ்செய்துதான் முடித்து
அரண்மனையில் வந்து நீலமேகன்
ஆஞ்சநேயரை அடிதொழுதான்

## அனுமான் நீலமேகனுக்குப் பட்டம்சூட்டல்

ஆஞ்சநேயர் தானுமப்போ
மாதங்கியைத்தான் பாற்த்து
வாரும்அம்மா மாதங்கியே
ஆகாசவாணி சொன்னவாக்குப்படி
உன்குமாரத்தியை நீலமேகனுக்கு
விவாக முடித்துவையுமென்றுரைக்க
சுவாமிஉங்களிஸ்டப்படி
செய்கிறேனென்றும் உறுதிசொன்னாள்
ரூபவதியை அழைத்துக்கொண்டுவந்து
ஆபறணங்களையலங்கரித்து
சிறந்த மணிமேடைப்பந்தல் செய்து
சிங்காசனமதில் தானிருத்தி
சிறப்பாய் விவாகமது முடித்துவைத்தார்
அப்போது ஆஞ்சநேயர்தான் பாற்த்து
வாரும்பிள்ளா நீலமேகனே
உனக்கு பாதாள யிலங்கைதன்னை
ராச்சியபரிபாரம் செய்யும்படி
மகிடமுடியது தரித்துவிட்டேன்
சுகமாயிருந்து நீ ராமமூற்த்தியை
நினைத்துநீ யெப்போதும்நீ துதித்தால்
சிரஞ்சீவியாய் வாள்வாயென்று
சிறந்த அனுமாருரைத்து விட்டார்

---

9652. ராக்ஷத பிராமணன்—ராக்ஷதர்க்கு சடங்கு முறைகள் செய்யும் பாாப்பனன்

9663. குமாரத்தி—மகள்
9673. பிள்ளா—சிறியோரை அழைக்கப் பெரியோர் பயன்படுத்தும் ஒரு சொல்
9675. ராச்சியம்—தேசம்
9675. பரிகாரம்—நிருவாகம்
9676. மகிடமுடி—மணிமுடி (தலையணி)
9679. சிரஞ்சீவி—நெடுங்காலம் வாழ்வோன்

## அனுமான் பரிசுகள் பெறல்

அனுமார் தூரதண்டியைப் பார்த்து
நீகேட்டபடி நீலமேகனுக்கு
பட்டமது கெட்டிவைத்தேனிப்போ
அப்போது அனுமாரானவரும்
யினக்குசிலவு கொடுமெனவுரைக்க

அப்போது தானந்ததூரதண்டி
பொக்கிஷத்தை யவள்தான் திறந்து
புகழுடன் அனேக திரவியத்தை
குவித்துத் தெண்டஞ்செய்து அடிதொழுதாள்
அப்போது அந்த அனுமாரும்

கண்டேன் களிகூர்ந்தேன் பண்பாக
யிந்தக்கூட்டத்தார் யாவருந்தானறிய
எடுத்து வந்தபொக்கிசந் தனிலேதான்
எடுத்துக் கொடுபோய் வையுமென்றார்
எடுத்ததிரவியத்தை பொக்கிசத்தில்

கொண்டுபோய் வைத்தார் அப்போது
குளிர்ச்சையாய் தாயுமகனுமாக
கெம்பீரமாய் ஆஞ்சநேயரிடம்
அன்பாக அவர்கள் நிற்கும்நேரம்
அப்போதுதானந்த அனுமாரும்

அன்பாக விடைகொடுத்துயிருக்கும்படி
உத்தரவு செய்தார் அனுமாரும்
உடனே மச்சவல்லபன் தன்னிடத்தில்
யிந்தப்பாதாள யிலங்கை பட்டணத்தை
உன்னுடன் ஒப்புவித்தேன் யிப்போது

நீலமேகனுட சொல்ப்படிக்கு
மந்திரியாகத் தானிருந்து
பாதுகாத்து வருவாயென்றுரைத்தார்
ராமலெட்சுமணனை வைத்திருக்கும்
யிடத்தில் வந்தார் அனுமாரும்

## அனுமான் பூமாதேவியிடத்தில் வந்து இராமர் இலெட்சுமணர் இருக்கும் பெட்டியினைப்பெறல்

பூமாதேவியே அம்மாநீ
ராமலெச்சுமணனைத்தடையில்லாமல்
கொடுமென்றவருமுரைத்திடவே

---

9683. கட்டி>கெட்டி (பே.வ.மா)
9685. செலவு>சிலவு (பே.வ.மா) —தனக்காகிய செலவுகள்
9688. திரவியம்—நிதி;பொருள்;பொன்
9697. குளிர்ச்சையாய்—மனக்குளிர்ச்சியுடன்

பூமாதேவிதான் பார்த்து
அனுமார் கையில்பெட்டகத்துடன்

தூக்கிக்கொடுக்க அனுமார்வாங்கிக்கொண்டு
பெட்டியுடன் அனுமார்போகலுற்ருர்

### *அனுமான் பெட்டியுடன் புறப்பட்டுவரல்*

போகவே பாதாளயிலங்கைவிட்டு
தாமரைத் தடாகத்துக்குள்ளேவந்து
அவ்வளித்துவாரத்தைத்தான் பார்த்து

அனுமார் கையில்பெட்டகத்துடனே
பாற்கையில் மூடப்பட்டிருந்ததுவே
அடுத்தபக்கம் காவலாயிருக்கின்ற
வாய்வுபகவானைக்கண்டு அனுமாரும்
கிட்டஅருகில்வந்து தெண்டஞ்செய்து

வளிவிடவேணுமென்றுரைக்க
அனுமார்வந்துவிட்டாரென்று வளிவிடவே
அனுமார் பெட்டகத்தையெடுத்துக்கொண்டு
அந்தத்தாமரைத்தண்டுவளியாக
அதிசீக்கிரமாகத் தானெழும்பி

வாயுவேகமாய் வரும்போது

### *அனுமானை யாவரும் வரவேற்றல்*

சுக்கிறீபன் அங்கதன் நீலன் நளன்
சாம்புவன் விபூஷணப்பெருமாழுடன்
யாவருஒன்ருய்க்கூடிக் கொண்டு
பாற்த்திருக்கும் அந்தவேளைதன்னில்

அனுமார் வருவதைக்கண்டார்கள்
அனைவரும் யெதிர்சென்று அழைத்துக்கொண்டு
கூட்டமாகவந்துசேர்ந்தார்கள்
ஆஞ்சநேயர் பெட்டியுடன்
சிறிராம லெச்சுமணனை அசையாமல்

எப்போதும் முன்னிருந்தயிடமதிலே
வைத்துப் பிரதெட்சணமாகவந்து
விபூஷணர் யாவருந்தான்சேர்ந்து
யிடம்புரி வலம்புரியாகவந்து
தோத்திரஞ்செய்து நிற்கையிலே

சூரியபகவானுதயமாகி வந்தார்

---

9742. பிரதெட்சணமாக வந்து — வலமாகச் சுற்றிவந்து
9744. யிடம்புரிவலம்புரி — இடப்புறமாகவும் வலப்புறமாகவும்

## இராமலெட்சுமணர் நித்திரை தெளிந்தெழுதல்

உடனேசிறிராமலெச்சுமணுளை
வைத்திருந்தப்பெட்டி யானதுதான்
மாயம(ா)ய்கண்ணுக்குத் தெரியாமல்
மறைந்துபோனதே அப்போது

சிறிராமலெச்சுமணுள் அப்போது
நித்திரைதெளிந்து யெளுந்தார்கள்
ஆகாசமார்க்கத்தில் தேவரெல்லாம்
புஸ்ப்பமாரிபொளிந்தார்கள்
மங்களவாள்த்துப்பாடினுர்கள்

நாலுமாதர் நடனமாடினுர்கள்
தேவகணங்கள் கூத்தாடினுர்கள்
ராமரும்லெச்சுமணரும் அப்போது
ஆருடன்போர்செய்தோமென்றுரைத்தார்
சாம்புவர்தானும் அப்போது

ராத்திரிகாலம் நடந்தபுதுமைகளை
நன்ருய்விவரித்துச் சொல்லலுற்ருன்
உரைத்துராமச்சந்திர பகவானைப்பாற்த்து
யினிமேல்சும்மாயிருக்கக்கூடாது
ராவணசம்மாரஞ் செய்யவேணும்

என்றுசாம்புவருரைத்தபோது
யாவருஞ்சந்தோச மடைந்தார்கள்

## இராவணன் வேவுகாறர்களை அனுப்பி செய்திஅறிதல்

அப்போது தானந்தவேளையிலே
யிலங்கைப்பட்டணமானதிலே
ராவணன்ஸ்திரிகளுடனேதான்

சரசஉல்லாசமாய்ச் சிரித்துக்கொண்டு
யிருக்கும்போது சூரியஉதயகாலம்
சூரியபகவன் உதித்தவுடன்
தேவர்கள்வேடிக்கைபாற்பதுவும்
மேளவாச்சியமுளங்குவது

---

9754. புஸ்ப்பமாரி—பூமழை
9756. மாதர்—பெண்கள்
9757. கணங்கள்—கூட்டம்
9757. கூத்து—நாடகம்
9770. ஸ்திரி — பெண்
9771. உல்லாசமாய் — மகிழ்ச்சியாய்
9775. வாச்சியம் — இசைக்கருவிகள்

முக்கியமாய்த் தேவாரம் பாடுவதும்
யிந்தத்தொனியது யாவ(ற்)றையும்
ராக்ஷதஸ்திரிகள் கேட்டுக்கொண்டு
ராமலெச்சுமணுள் யிருவரையும்
மயில்ராவணன் அவன்தானும்

பாதாளலோகங் கொடுபோயிருந்தான்
யிதனைசந்தோசமுஞ்சவுரியமும்
யிப்போது வரக்காரணம்யின்னதென்று
மனதில்உச்சரித்து ராவணனும்
வேவுகாறர் நால்வரை வரவழைத்து

பாதாளயிலங்கைக்கு நீங்கள்சென்று
விசாரித்துவாருங்களென்று அனுப்பிவிட்டார்
அரக்கன் ராவணனுரைத்தபடி
ஓடிவேவுகாறர் தானுஞ்சென்று
பாதாளயிலங்கைக்கு போகாமல்

வானரச்சேனைகள் யிருக்கும்யிடம்
வந்துவிசாரிக்கும் வேளையிலே
ராமலெச்சுமணுள் யிருவர்களும்
சுகமாய் இருப்பதைத்தானும்பாற்த்து
சீக்கிறம்வேவு காறர்திரும்பிவந்து

ராவணன்முன்பில் வந்துநின்றூர்கள்
வந்துநின்று வேவுகாறர்களும்
வாய்த்த ராவணனோடுரைக்கலுற்றூர்
யிலங்கைக்கதிபதியே மகாராசனே
சிறிராமலெச்சுமணுள் யிருவர்களும்

சுகமாயிருக்கிறூர்களென்று ரைக்க
ராவணனும் அப்போதுகிலேசமுற்று
மயில்ராவணனைக் கொன்றுவிட்டார்களோ
என்னமாயமோ தெரியுதில்லை
அல்லதுஅந்த மயில் ராவணனும்

ராமலெச்சுமணுள் யிருவரையும்
கொண்டுபோகாமல் அவன்தானும்
யிப்படிப்பலபல விதமாக
ஆலோசனைகள் தானுஞ்செய்து
யெட்டுபேர் வேவுகாறர் தனையழைத்து

நீங்கள் சீக்கிறமாகத்தானும்
பாதாயிலங்கை தன்னில்சென்று
மயில்ராவணனுட வரலாறெல்லாம்

---

9784. உச்சரித்து—எண்ணி
9795. சீக்கிறம்—விரைவில்

அறிந்துவாருங்க யென்றுரைத்தான்
வேவுகாறர்விடை பெற்றுக்கொண்டு

போய்விட்டார் வேவு காறரப்போ
தாமரைக்குளத்தண்டருகே வந்தார்
வந்தவர்கள் அங்கே பாற்க்கும்போது
ராக்ஷதர் ஒருவரும் யில்லாமல்
நீலமேகனையுங் கண்டார்கள்

மயில்ராவணன் யெங்கே யென்றுகேட்டார்கள்
காவலரவருந்தான் கேட்டு
ஆரடா நீங்கள் தூதுவரோ
யிலங்கைராவணன் பேச்சையுந்தான்
உரைத்தகாறணம் யின்னதென்று

கெற்ச்சிதமாய்ப் பல்லுகளைத்தான் கடித்து
கடித்துப்படபடென்றே யெழுந்து
கருதிக்கோபமது தானுங்கொண்டு
பிடரியைப்பிடித்து தள்ளுமென்றார்
உரைத்த வாற்த்தையைத்தான்கேட்டு

உத்தவேவு காறரெட்டுப்பேரும்
காவல்செய்திருந்தவர்கழுடன்
காலில்விழுந்து தெண்டஞ்செய்து
எழுந்துநடுநடுங்கித்தானேடுங்கி
சொல்லுவார்கள் அதைதூதுவர்கள்

அய்யாகாவலர்களே யெங்கழுக்கு
அந்தமயில்ராவணன் தன்னுடைய
விரத்தாந்தமதை உரைக்கவேணுமையா
வாருங்கள்வேவுகாறர்களே
ஆஞ்சயநேயர் மயில்ராவணனை

அதஞ்செய்து வதைத்துவிட்டார்காண்
நீலமேகனுக்கு முடிசூட்டி
பாதாள யிலங்கை ஆழும்படி
ஆழும்படிப் பட்டங்கட்டிவைத்து
ராமச்சந்திரபகவானையுந்தம்பியையும்

யெடுத்துக்கொண்டு போனூர்காண்
நீலமேகன் உத்தரவில்லாமல்
யாருமொருவரையும் விடமாட்டோம்
யினிமேல் நீங்கள் நிற்கக்கூடாதென்று
போய் விடுங்களென்று உரைத்தபோது

---

9829. பிடரி—கழுத்தின்பின்பகுதி
9838. விரத்தாந்தம்—வரலாறு

அவ்விடத்தை விட்டுதூதுவர்கள்
யிலங்காபுரி வந்துசேற்ந்தார்கள்
ராவண சூரன் முன்பில் வந்து
மயில்ராவணன் அவன் படைகளையும்
கொன்று அதஞ்செய்து போட்டபின்பு

பாதாளயிலங்கை ராக்ஷியத்தை
நீலமேகனுக்கு முடிதானுஞ்சூட்டி
பட்டந்தரித்து ஆண்டு வாறுர்
என்றுதூதர்கள் தான் கூற

### இராவணன் மயக்கமடைதல்

அவ்விசயம் ராவணன்கேட்டபோது
சிங்காசனத்திலிருந்தவன்தான்
திகலடைந்துகீளே விழுந்துவிட்டான்
கறட்டுக்கறட்டென்று முறட்டையிட்டு
புரண்டுமூற்ச்சையாய்க்கிடக்கும்போது
ராவணனை மகோதரமந்திரிதான்

ஆயாசந்தீரத்தான் பாற்த்து
அந்த ராவணனைத்தூக்கி வைத்து
சொஸ்தஉபகாரந்தானும் செய்து
மூற்ச்சை தெளிந்தபின் அவன்தனக்கு
தேறுதல் மகோத[த]ரன் உரைக்கலுற்றுர்

அப்போது ராவணன் மந்திரியே
ஆராய்ந்து சொல்லுமந்திரியே
யினிமேல்யென்புத்தி சொல்லாது
எனது சரீரமும் நிலவாது
என்று ராவணன்கிலேசமுற்று

யுத்தத்திற்குப் போக வேணுமென்று
தேரைக்கொண்டுவரச்சொல்லியவன்
தேரின்பேரிலேயேறிக்கொண்டான்

### இராவணன் போருக்கு வரல்

யிந்திரனென்ற கும்பகற்ணன்பட்டான்
யினிமேல் ராவணன் வருவானெந்துதான்

---

9860. விசயம் – செய்தி
9863. கறட்டுக்கறட்டென்று—ஓலிக்குறிப்புச்சொல்
9863. முறட்டை – குறட்டை
9866. ஆயாசம் – மயக்கம்
9868. சொஸ்த—குணமடைய
9873, சொல்லாது—செல்லுபடியாகாது
9878. தேரின்பேரிலே—தேரின்மீது
9880. வருவானென்று என்பது வருவானெந்து என்று எழுப்-பட்டுள்ளது.

அம்புவிமெய்க்கராமர்சரத்தாலே
ராவணனும் படுவானென்றாடினார்
வந்தசேனையுங்கும்பகற்ணனுமே
வானரப்படையானது மன்னரும்
செய்திகேட்டந்த ராவணனப்போது

சிந்தைமெய்க்கச்சிதறவே கொன்றதை
தன்மையான சகோதரன் பட்டதை
தாட்டையாலே சடைத்துபுலம்பியே
யிம்மைதன்னில்யெவராகிலும்யிப்போ
யிரு(ப் ப[த்]தாரு யிறப்பது நிச்சயம்

யிந்தவாறே விதிவந்துதென்றுதான்
யிருந்தபாளையம்ஒக்கயிளக்கியே
வந்தசேனையுடன் களந்தன்னிலே
வாறதாரினிபோருக்கென்றானவன்

## இராவணன் போரில் மடிதல்

கண்டுராமருஞ்சந்தோசமாகவே

கணைகள்தன்னைதெரிந்தேயெடுத்தவர்
பண்டுமுன்னாள்விதித்தவிதியென்று
பார்ரபோர்க்களந்தன்னிலே வந்தனர்
வந்தராமரைக்கண்டந்த ராவணன்
மடமடத்தவன்தேரை நடத்தியே

முடுக்கியேசரந்தன்னைத் தொடுத்தானே
முந்தவேபளிமீள்வேனென்றுசொல்லியே
மன்னன்ராவணன்விட்டசரமெல்லாம்
வாளியாலே அறுத்தாரே ராமரும்
யின்னமுண்டோசரமென்றார் ராமரும்

யேகினார்கையில்சக்கிறந்தன்னையும்
சென்றுராவணன்பத்துமுடியையும்
சேரஒன்றாயத்துத்தப்பாலேகினார்
பண்டுபோலசிறிராமச்சந்திரன்
பாரராவணன் பட்டுவிழுந்தானே

மலைகயிலாசமூற்த்திமனமதுமகிளச்சென்று
வல்லமையாய்யிலங்கைதன்னில்

---

9888 தாட்டை—அகந்தை
9892. ஒக்க—எல்லாம்; யிளக்கி—எழுப்பி
9900 மடமடத்து—விரைந்து
9904. வாளி—அம்பு
9906. சக்கிறம்—சக்கராயுதம்
9907. அத்து—அறுத்து

வாள்ந்து கொண்டிருக்கும் நாளில்
குலைப்படத்தவங்கள் பெற்று
கொடுமையால் ராவணனைத்தான்

தலையதுபத்தும்அத்து
தரணியில் விழுந்தானன்றே
விழுந்தான் தளமதில் ராவணனும்

## இராமர் விபீசணருக்குப் பட்டஞ் சூட்டல்

விம்மியழுதாரே விபூஷணரும்
குழுந்தமொளிசொல்ல ராமருந்தான்

கூண்டதிருமுடி அரசுவைத்தார்
வைத்தார் அரிராமர் விபூஷணருக்கு
வாள்ந்திருப்பாயே யிலங்கை யென்றார்
மெய்த்துதேவரும் யிருள்சிகழும்
விண்ணுமண்ணுள்ள அரசர்கழும்

பட்டான்ராவணன் பட்டானென்று
பரவித்தவர்கழுஞ் சந்தோசமாய்
கட்டாயிருந்தப்போ சீதையாலே
கடியராவணன் பட்டானென்பார்
ராமச்சந்திரன் கையால் ராவணனும்

நல்லமுடிபத்தும் யிளந்தானென்பார்
நேமநிஸ்டையால் விபூஷணனும்
நெடியதவம் பெற்றான் யிலங்கையிலே
என்றுவானவர் தேவரெல்லாம்
யின்பமுடன் களிகூர்ந்திருந்தார்

## இராமர் சீதை பரிவாரங்களுடன் அயோத்திக்கு வரல்

நன்றுபெருமாழும் விபூசணர்க்கு
நலமுடன் யிலங்கைப் பட்டம்வைத்து
யிருந்தே யிலங்கையை ஆள்வாயிப்போ
என்றுபெருமாழும் அருள்புரிந்து
மருந்துபோலொத்த சீதைதன்னை

வருந்திராமரு மனமகிள்ந்து
மகிள்ந்து சீதையுஞ்சந்தோசமாய்
வாய்த்த சிறைவிட்டு மன்னரிடம்
புகழ்ந்து திருமனங்களி கூர்ந்து
போத்தி வணங்கித் தொழுது நின்றாள்

---

**9920.** குளிர்ந்த>குழுந்த (பே.வ.மா)
**9927.** பரவித்து—வாழ்த்தி
**9932.** நேமநிஸ்டை—முறையானதவம்

வலியராவணன் தன்னைக்கொன்று
நானிலந்தன்னில் விபூசணருக்கு
நல்லமுடிசூட்டி அரசுவைத்தார்
சீதையும்ராமரும் லெச்சுமணரும்
சிறந்தயெழுபது வெள்ளச்சேனையுடன்

பாதைநோக்கியே வளிநடந்தார்
பாரளந்தோரும் யிலங்கைவிட்டு
சமரிவன்வாசந்தான் கடந்து
தம்பியும் ராமரும் சீதையுமாய்
அரக்கர்கிளைகளை வேரறுத்து

அய்யோத்தியாபுரி தன்னில்வந்தார்

*அசலவ சுவாமி கதை*

ஆடிகளித்தொரு ஆவணி முதத்தெய்தி
அய்யோத்தி நாட்டிலே ராமர்வந்தார்
மாதமூன்று பயிர்விளையும்
வருசமூன்று பயிர்விளையும்

வயல்களெல்லாஞ் சென்னல் கன்னல்
வரப்பெல்லாம் முத்துருள
தேசமெல்லாம் புகள்சிறக்க
செல்வஅய்யோத்தி மாநகரில் வந்தார்
வந்தார்ராமர் வந்தாரென்பார்

வண்ணத்தெருக்களை யலங்கரிப்பார்
தெருக்களென்ற தெருக்களெல்லாம்
தெருவில்தோறணங் கெட்டிடுவார்
வேப்பிலைமாவிலை தோறணங்கள்
விரைவாய்த்தோறணங் கெட்டிடுவார்

வாளைகரும்புகள் நாட்டிடுவார்
மல்லிகை பிச்சி தூக்கிடுவார்
மஞ்சள்பொடியோடு செங்கல்பொடி
வாசலெல்லாஞ் கோலஞ்செய்வார்
கமுகின்குலைகளை தூக்கிடுவார்

கார்வணர் சுவாமி வந்தாரென்பார்
வாறவாற தெருக்களெல்லாம்
மல்லிகை செண்பகந் தூக்கிடுவார்
பைங்கிளிலெச்சுமி வந்தாளென்று
பச்சைப் பழுக்காய் நிரத்திடுவார்

---

9957. ஆடி, ஆவணி—மாதங்கள்
9957. முதத்தெய்தி—முதல்நாள்
9961. சென்னல்கன்னல்—நெல்வகைகள்
9980. பழுக்காய்—கமுகின்பழம்

## இராமரை பலரும் வந்து காணல்

சித்திரவன்ன மேடையிலே
சிறிராமர்வந்து கொலுவிருக்க
தம்முடதம்பி பரதாள்வான்
சத்துருக்கன்வந்தடி தொழுதான்
கோசலைகைகேசி சிமித்திரசி

கொடியிடைமார்கள் வந்துகண்டார்
அய்யோத்தியாபுரி சனங்களெல்லாம்
அச்சுதராமரைவந்துகண்டார்
தேசமெல்லாம்தான்வாளவென்று
சிம்மாசனத்திலே வீற்றிருந்தார்

## இராமர் பரதன் உரையாடல்

பள்ளிகொண்டதோர் பெருமாளும்
பரதாள்வாரைப்பாற்த்தேது சொல்வார்
என்னுடையதம்பிபரதாள்வார்
யேத்தஅய்யோத்தியை ஆண்டிருந்தாய்
பதினாலுவருசமட்டும்

பாரஅய்யோத்தியை ஆண்டிருந்தாய்
நானிருந்து அரசாண்டதுபோல
ராச்சியத்தை அரசாண்டாயோ
தாய்மார்கள் மூபேற்க்கும்
தான்சிலவு கொடுத்தாயோ

கிருபையுடன் ராமர்கேட்டபோது
கீள்பணிந்து சொல்வான்பரதாள்வான்
வாருமையாசுவாமிகோபாலரே
மனுக்களைக்காத்தஅதிபதியே
ஆறிலொருகடமைதண்டி

அசையாதமணியுங்கெட்டி
கூறிலொன்றுங்குறைவில்லாமல்
குவலயத்தையரசாண்டிருந்தேன்
தாய்மார்கள் மூபேருக்கும
சந்தோசப்படிநான் கொடுத்தேன்

உடுக்கவஸ்த்திரம் நான்கொடுத்தேன்
உலகத்தையரசாண்டிருந்தேன்
காவலர்கள்தூதுவற்கு
கடுகச்சம்பளந்தான் கொடுத்தேன்
மிஞ்சின திரவியமானதெல்லாம்

---

10008. குவலயம்—தேசம்
10011. வஸ்த்திரம்—ஆடை
10014. சம்பளம்—கூலி

வெண்ணெயுண்டபெருமாளே
ராமாவென்றும் லெச்சுமணுவென்றும்
ரெண்டுகளஞ்சியங்கெட்டிவைத்தேன்
என்றுரைத்தபரதருக்கு
யேது சொல்லுவார் அரிகோபாலர்

ஆறிலொரு கடமைதன்னில்
அய்யோத்தியாபுரிசமுசாரிகள்
எத்தரையோ காலமட்டும்
யேத்தகடமைக்கு நீ கொடுத்தாய்
ஆண்டு பதினாலுவருசத்துக்கும்

அண்ணருடையபேர் சொல்லிக்கொண்டு
அடையோலை எழுதிநான் கொடுத்தேன்
ஆகையினுல் மாயவரே
அந்த அந்த சமுசாரிகள்
திரவியத்தில் மிகுந்துபோனார்

செல்வ அய்யோத்திச் சமுசாரிகள்
பரதாள்வார் சொன்னபோது
பச்சைமுகில் வண்ணரேது சொல்வார்
அய்யோத்தியாபுரி வற்த்தகரை
அச்சுதராமர் வரவழைத்து

என்னுடை அய்யா திசதரரும்
யிறந்து வெகுகாலமாகிப் போச்சு
அவரிறந்த தெய்தியிலே
அன்னதானங் கொடுக்கவேணும்

இராமர் சமுசாரிகளுக்குப்பூசணி
விதை கொடுத்தல்

என்றுசொல்லி சிறிராமரும்

யேத்தஅய்யோத்தியிலுள்ள பேற்க்கு
ஆழுக்கொரு பூசணிவித்தை
அச்சுதராமருங் கொடுத்துவிட்டார்

---

**10022.** சமுசாரிகள்—நிலக்கிழார்கள்
**10023.** எத்தரை (மலையாளவழக்கு)—எத்தனை
**10027.** அடையோலை—அடைமானப்பத்திரம்
**10034.** வற்த்தகர்—வணிகர்
**10038.** இறந்ததெய்தி—இறந்தநாள்.
**10038-10039.** ஒருவர் இறந்தநாளை நினைவு நாளாகக் கொண்டு ஆண்டுதோறும் அந்நாளில் இறந்தவரின் குடும்பத்தினர் அன்னதானம் வழங்குவதனை இன்றும் தென்மாவட்டங்களில் காணலாம்.
**10042.** பூசணி பூசனிச்செடி; வித்தை—விதையை

வாங்கியந்த வற்ந்தகர்கள்
மாயவரைத்தொழுது தான்போனார்

பூசணிவிதைத்தானெடுத்து
புகள்பெரிய வற்த்தகர்கள்
மாயவற்க்கு தஞ்சமென்று
வரிசையுடன் வித்தைஊன்றிவிட்டார்
யிப்படி ஊன்றியவரிருக்கையிலே

### அனுமான் பூசணி வித்து ஊன்றல்

என்பெருமாளவரேது சொல்வார்
வாளனுமானை வரவழைத்து
வரிசையாய்வித்தை ஊன்றச்சொன்னார்
பூமியளந்தோன் தூதுவன்தான்
பூசணிவித்தை ஊன்றிவிட்டார்

முன்வாளனுமான் பூசணிதான்
முளைத்துப்பச்சையாய் வளர்ந்திடவே
ஒருகொடியது தான்வீசி
ஒத்தப்பூவதுதான்பூத்து
மயில்ராவணனை சங்கரித்து

மாயவர்சிறைமீண்டனுமாருடன்
கண்டிருந்து அரிகோபாலர்
கையைப் பிடித்தவர் முத்தமிட்டார்
சீதாதேவிதன்மணவாளர்
சிம்மாசனத்திலே வீற்றிருந்தார்

திசதரமகாராசன் தனபாலன்
தரணிதன்னையும் ஆண்டிருந்தார்

### சமுசாரி பூசணிகள் காய்க்காதிருத்தல்

அய்யோத்தியா புரிசமுசாரிகள்
அரிராமரிடம் வேண்டின வித்துகளை
கொல்லையில் ஊன்றின பூசணிவித்து

கொடியெடுத்துதான்படர்ந்து
வளவத்திலுமுத்தத்திலும்
வளிபோகயிடமில்லாமல்
உலகளந்தோன் தந்தவித்து
ஊரெல்லாம்படர்ந்தாலும

ஒருகாயுங்காய்(க்)கலையே

---

10048. தஞ்சம்—அடைக்கலம்
10069. வேண்டின—வாங்கின
10070. கொல்லையில்—வீட்டின் பின்புறத்தில்
10072. வளவத்தில்—வீட்டின் பின்புறத்தில்
10072. முத்தத்தில்—வீட்டின் முன்புறத்தில்

ஊரிலுள்ளபிரபுக்களே
என்னசெய்வோம் யேதுசெய்வோம்
என்னுடையஅண்ணன்மாரே
திங்கழுதயகாலத்திலே

சிறிராமசுவாமி அவர்களுக்கு
மாயவர்க்கென்ன செய்வோமென்று
வாடிநின்றாரே (வற்)த்தகர்கள்
யிப்படியாக யிருக்கையிலே

*இராமர் சமுசாரிகளிடத்தில் பூசணிக்காய் கேட்டல்*

என்பெருமாளேது செய்தார்

தூதுவனை வரவழைத்து
சுவாமி அரியரி கோபாலர்
சமுசாரிகளிடத்தில் சென்று
தார்வேந்தன் தூதுவனே
பூசணிக்காயைத்தான் பறித்து

புகள்பெறவே கொடுவருவாய்
தார்வேந்தன் தூதுவனே
சமுசாரிகளைக் கொடுவருவாய்
உலகளந்தோன் சொன்னபோது
ஓடிவந்தானந்த தூதுவன்தான்

வாருமையா வற்த்தகரே
மாயவரும் உங்களைத்தான்
பூசணிக்காயை பறித்து
புகள்பெறவே கொடுவாரு மென்றார்
தூதுவனும்வந்து சொன்னபோது

சோர்ந்துவிட்டாரந்த சமுசாரிகள்
உலகளந்தோனுக்கு கொடுபோக
ஒருகாயுங்காய்(க்)கலேயே

*சமுசாரிகள் இராமரைக் கண்டு செய்திகூறல்*

சமுசாரிகள் ஒன்றுபோலே
தயங்கியவர் கூட்டமிட்டார்

யிந்தநல்லக்கூட்டத்தினிலே
யிலங்கைவென்றோனைக்காணவேணும்
சமுசாரிகள் ஒன்றுபோலே
சாமிநாதனை வந்துசரணமிட்டார்
அடிதொழுத சமுசாரிகள்

---

10077. பிரபு—பொருள்படைத்தோன்

10080. திங்கழுதயகாலம்—சந்திரன் உதிக்கும் நேரம்

10090. பறித்து—பிடுங்கி

அளகுபூசணிக்காயெங்கேயென்றார்
பச்சைமுகில்வண்ணர்கேட்டபோது
பதறிப்பதறிசமுசாரிகள்
உலகளந்தோனே நீர்தந்தவித்து
ஓங்கிபடர்ந்ததேயல்லாமல்

பூலோகநாதா உங்களாணை
பூசணிக்காயொன்றுங் காய்க்கவில்லை
சமுசாரிகள் சொன்னபோது

## அனுமான் பூசணிக்காய் பறித்து வரல்

சுவாமி அனுமாரை வரவழைத்து
போருக்கு வீரவாளனுமான்

தேவாதிதேவரிடுக்காந்தீந்த
சீதை மணவாளர் சொன்னபோது
பெருமாள் தூதன் அனுமான்ஓடி
பூசணிக்காயைப் பறித்துவந்தான்

## இராமர் ஆசாரியிடம் பூசணிக்காயினை விலைமதிக்க கூறல்

அய்யோத்தி தனிலொரு தட்டாசாரி

ஆளைவிட்டுராமரழைத்து கொண்டார்
வாரும்பிள்ளாய் தாட்டாசாரியே
வாளனுமான் கொண்டுவந்த
பூசணிக்காய்தன்னையிப்போது
போதுமான விலைநீயறிவாய்

கோசலைக்குமாரனுஞ் சொன்னபோது
கூர்மையாய்ப் பார்த்தான் தட்டாசாரி
கீழுமேலுந்தான் பிரட்டி
கிறுபையுடன் தான்பாறத்து
மாத்துரை கூட்டியைத் தானெடுத்து
மாத்துரையானது தான்பாறத்து
வாளனுமானுட பூசணிக்காய்
வரிசையுடனே விலைமதிக்க

## ஆசாரி விலைமதிப்பிட்டுக் கூறல்

மாயவரே சுவாமி கோபாலரே
வையகத்தையாண்ட பரஞ்சுடரே

---

10116. உங்களாணை—உங்கள் மீது சத்தியம்

10125. தட்டாசாரி—தட்டான்

10135. மாத்துரைகூட்டி—மாற்றறிய உரைத்துப் பார்ப்பதற்கான கல்

காசினியெல்லாம் விலைகொண்டாலும்
காய்க்குவிலை கொள்ளக்கூடாது
பூலோகமெல்லாம் விலைகொண்டாலும்
பூசணிக்காயை மதிக்கக்கூடாது
நாட்டையெல்லாம் விலைமதித்திடலாம்

நல்லனுமான் காய்மதிக்கொண்ணாது
ஆசாரியானவன் சொன்னபோது

### இராமர் பூசணிக்காயை சமுசாரிகளை வாங்கச் சொல்லல்

அரிராமச்சந்திரரேது சொல்வார்
காசினிதனிலுள்ள சமுசாரிகள்
காய்க்குகிறயங் கொடுத்துப்போவீர்
அரிராமச்சந்திரர் சொன்னபோது

### சமுசாரிகள் கலங்கி நிற்றல்

அலறியழுதாரே சமுசாரிமார்
யென்னசெய்வோம் யோதுசெய்வோமென்று
யிரைந்து அழுதாரே சமுசாரிமார்
பதினாலு வருசமட்டும்

பரதன் தேசத்தை யாண்டிருந்தான்
யிந்தகாற் வணாரில்லாத்ததினால்
கவலையற்று நாமிருந்தோம்
மாயவன் ரெகுராமன் நம்மை
மாயச்சூதாலே வென்று கொண்டான்

ராவணசம்மாரஞ் செய்துவந்தார்
ராச்சிய நடத்தயைக் கண்டுகொண்டார்
தாட்டிமையாகச் சமுசாரிமார்
தங்கமுடமையெல்லாந் தானுருக்கி
கார்வணராமர் முன்பில் வைத்தார்

அழுதகுரலோசை ராமர்கேட்டு
அவரவர்(க்)குத் தகுந்தபடி
வைக்க வைக்க வாடுதல்லே
மாயவனார் திராசியது
கூட்டிவைத்த பேற்க்கு நிறைசரிதான்

கொஞ்சம்வைத்த பேற்க்கும் நிறைசரிதான்
எல்லாற்க்கும் ஒருநிறையாய்
யேத்திராசியே நீயிருப்பாய்
அவரவர்க்குத் தகுந்தபடி
அனுமானது பூசணிக்காயே நீயிருப்பாய்

---

10150. கிறயம் — விலை

மாயவர் ராமர் வரங்கொடுத்து
மாயக்கண்ணாலே பாத்திருந்தார்
கண்டிருந்து அரிகோபாலர்
கைத்தட்டி ராமர்சிரித்[துத்]துக் கொண்டார்
மாவேலிதேசம் பறித்ததுபோல்

வாள்வை பறித்துகொண்டார் சமுசாரியை
மாயன் ரெகுராமர் பறித்தபோது
வாய்விட்டழுதாரே சமுசாரிகள்
கூடியே நாங்கள் அழுதகண்ணீர்
கூரையில் தீப்பிடியாதே

முன்னேவனம் போனதுபோல
யின்னும் வனம் போவாயோ
என்று சொல்லி சமுசாரிகள்
யிரைந்தழுதுதான் போனார்

## இராமர் மகிழ்ந்திருத்தல்

சமுசாரிகள் போனபோது

சாமிநாயகர் கோபாலர்
ஐயாயிறந்த தெய்தியிலே
அன்னதானந்தான் கொடுத்து
சிம்மாசனமிட்டுக் கோபாலர்
சிறந்தமண்டப வீதிவந்தார்

லெட்சுமிதேவியும் ஓடிவந்து
நலமுடன் தண்ணீர் கொண்டுவந்தாள்
பாவமதுதீர வேணுமென்று
பச்சைமால்பாதம் சுத்திபண்ணி
சிவசிவா சிவசிவா யென்றுசொல்லி

திருநெற்றியில் நீறணிந்தாள்
சிவபூசையதுதான் முடித்து
சிறப்பாயன்னந்தான் பொசித்து
தாம்பூலம் போட்டுககொண்டு
சுவாமிநாயகர் மகிள்ந்து கொண்டார்

பத்தினி சீதைமடிமேலேபச்சைமாலும்நித்திரைசெய்தார்

## இராமர் அயோத்தி நகரை சோதனை செய்தல்

பஞ்சணைமெத்தைக்கட்டிலிலேபடுத்துறங்கும்வேளையிலே
உலகளந்த பெருமாளும்ஒண்ணுதலாளை யறியாமல்
செம்பாதிச்சாம வேளையிலே
திருமால பெருமாளும் யெழுந்திருந்து

---

10177. பார்த்து > பாத்து (பே. வ. மா)
10199. சுத்தி பண்ணி—சுத்தம் செய்து

நாட்டை யளந்த பெருமாளும்
ராமபாணம் கையில் எடுக்கவில்லை
மதிலோடே சாத்திவைத்த
மந்திரவாள்தான் யெடுக்கவில்லை
என்பெருமாள் நந்தக்கோபாலர்

எறியீட்டி கையிலெடுக்கவில்லை
உரல்போலே ரெண்டு மிதியடியை
உடனேகாலிலே மாட்டிக் கொண்டார்
பனைபோலேயொரு பொந்தத்தடி
பாரளந்தோன்கையில் ஊன்றிக்கொண்டார்

கொடுங்கை தன்னில் படுத்திருந்த
கோதைலெச்சுமி யறியாமல்
வாசல்நடையில்க்காத்திருந்த
மறவர் வன்னியரறியாமல்
தெருநடைதன்னில் காத்திருக்கும்

சேவுகரையு மறியாமல்
தாயார் கேகேசி சூதாலே
தானே வனத்திலே போயிருந்தோம்
பதினாலுவருச மட்டும்
பரதன்தேசத்தை யாண்டிருந்தான்

நம்மை பெரியோனென்கிறதும்
தம்பிபெரியோனென்கிறதும்
நம்முடைய அய்யோத்தியிலே
நகர்சோதனை பாற்க்கவேணும்
சீதாதேவிமணவாளன்

தெருவீதிசுத்தித்தான் பாற்க்க
வேதியர் வெள்ளாளதெருவதிலே
வெண்ணையுண்டோன் வருகையிலே
ராமா ராமாவென்றுசொல்லி
ராமர் பேரில்புகள்ந்துகொண்டார்

செட்டிதட்டார் தெருவதிலே
திருமாலைப்பெருமாளும் வாறபோது

---

10219. பொந்தத்தடி—ஊன்றுகோல்
10221. கொடுங்கை—வீட்டின் வெளிப்பக்கம்
10222. கோதைலெச்சுமி—சீதை
10224. மறவர், வன்னியர்—சாதிப்பெயர்கள்
10226. சேவுகர்—ஏவலர்
10227. கைகேசி என்பது கேகேசி என்று எழுதப்பட்டுள்ளது.
10237. வேதியர் — பார்ப்பனர்
10237. வெள்ளாளர் — சாதிப் பெயர்
10241. செட்டி, தட்டார் — சாதிப்பெயர்கள்

செட்டி தட்டாரொன்றுபோலே
திருமால்பேரிலேதான்துதித்தார்
மறவர் வன்னியர்தெருவதிலே

மாயன் பெருமாளும்வாறபோது
மறவர் வன்னியர்ஒன்றுபோலே
மாயவர்பேரில் கீதம்பாட
சுவாமி அரியரிகோபாலர்
துலுக்கர் மலுக்கர் தெருவில் வந்தார்

அந்த தெருவீதி தன்னைவிட்டு
அடுத்த தெருவில் சுவாமி வாறார்
மாயன் அரியரி கோபாலர்
மாடவண்ணான் தெருவில் வந்தார்

### வண்ணாத்தியின் தவறிய ஒழுக்கம்

மாடவண்ணான் தேவியவள்

மகிளம்பூமாலைவண்ணாத்தி
செம்பாதிச்சாம வேளையிலே
செய்யிலையாழும் யெழுந்திருந்து
மன்னவனுட நாசியிலே
மகிளம்புமாலை கைவைத்துப் பாற்த்தாள்

சேலையடித்த சடவதிலே
தெளிவாயுறங்கினான் மாடவண்ணான்
யிதுதான் நல்ல சமயமென்று
யேந்திலையாளந்த வண்ணாத்தி
கதவை வந்து மெள்ளத்தான் திறந்து

கடுநடையாக வண்ணாத்தி
மறுமுனையிலோடிவந்து
ஒரு மன்னனோடே வாள்ந்திருந்தாள்
காமலீலை பேராசை
கன்னி நல்லாள் தீர்ந்தபின்பு

கோளி கூவுஞ்சத்தங்கேட்டு
கொண்ட கணவன் மனைநோக்கி

---

10250 துலுக்கர்—முகமதியர்
10254. வண்ணான்—சாதிப்பெயர்
10256. மகிளம்—ஒரு மரம்
10259. நாசி—மூக்கு
10261. சேலையடித்த—சேலை துவைத்த
10265. மெள்ள—மெதுவாக
10267. மறுமனை—வேறுமனை
10268. வாள்ந்திருந்தாள்—இன்புற்று இருந்தாள்
10269. காமலீலை—காம விளையாட்டு

மகிளம்பூமாலை வண்ணாத்தி
வளியில் வருகிற நேரத்திலே

### வண்ணான் வண்ணாத்தி தகராறு

மாடவண்ணான்தான் முளித்து

மனையாளைத் தேடித்தான் பார்த்தான்
தேடியெங்கும் காணாமல்
தேன்மொளியாளெங்கே யென்று
யிதுதான் நல்லசமயமென்று
எண்ணிக் கொண்டானந்த வண்ணானும்

கதவை மெல்லச் சாத்திக்கொண்டு
கதவினருகே காத்திருந்தான்
காத்திருந்து தூங்குகிறான்
கழுவடியில் நாயதுபோல
மகிளம்பூமாலை வண்ணாத்தி

வாசல்நடையிலே உள்புகுந்தாள்
வந்துமனைக்குள் புகுந்தவளை
மயிர்பிடித்தடித்தான்மாடவண்ணான்
யிந்தநடுச்சாமவேளையிலே
எங்கே போனாயடிவெள்ளாட்டி

என்றுசொல்லியந்த மாடவண்ணான்
யேந்திழையாளையடிக்கையிலே
யேனக்காறுமாடவண்ணானே
எண்ணாமலென்னை யடிக்கிறாய்
வானம்போலே வயிறூதி

வளவதிலே நான்போனேன்
கேப்பைக்களிக்குத்ததினால்
குடலையொட்டுதில்லை வயிற்றூத்தம்
என்று சொன்னாளந்தவண்ணாத்தி
யிதமாக மாடவண்ணானிடம்

அப்போதுமாடவண்ணானும்
ஆதரவாகவேயேது சொல்வான்
வளவதிலே போனவள்க்கு
வாடை சந்தணமணமேது
மாடவண்ணானுங் கேட்டபோது

---

10284. கழுவடி — எச்சில் கை கழுவுமிடம்
10288. மயிர் — கொண்டை மயிர்
10295. வயிறூதி — வயிறு விம்மி
10297. கேப்பைக்களி — கேழ்வரகு மாவால் கிண்டிய களி
10297. குத்து — நோவு
10298. ஒட்டுதில்லை — வாந்தியெடுக்குதில்லை
10304. வாடை — நறுமணம்

மகிளம்பூமாலை யேதுசொல்வாள்
நாச்சியார்மகள் சந்தணந்தான்
நான்வாங்கியணிந்துவந்தேன்
மாலைநேரம் படுக்கையிலே
வாடைமணம் வீசலையே

கள்ளத்தனம் என்றறிந்து
கைகொண்டடித்தானே மாடவண்ணான்
அடியாதே அடியாதே மாடவண்ணான்
ஆணோடு பெண்ணோடு பிறக்கலையோ

### வண்ணாத்தி இராமரிடம் முறையிடுவேன் எனல்

அடியாத்தமாட்டாமலே

அரிராமருக்குக்கபயமென்றாள்
வனவாசம் போனதொரு
ராமர்வந்தார் அய்யோத்தியிலே
விடியட்டும் உன்னைநான் சொல்லுகிறேன்
வெண்ணையுண்டோன் யிடத்தில்சொல்லி

அடிக்கடியுன்னை அஞ்சுபங்காய்
அம்பலத்தில் விட்டுத்தானடித்து
அச்சுதராமர் முன்னேவைத்து
அவதாரம் வாங்காமல் உன்னைவிட்டால்
என்பேர் மகிளம்பு மாலையல்ல

என்றுசொல்லி பெண்ணாள் சாபமிட்டாள்

### வண்ணான் சீதையைப் பழித்துரைத்தலும் இராமர் கேட்டலும்

அப்போதந்த மாடவண்ணான்
ஆயிழையைப் பார்த்தேது சொல்வான்
வாய்மதம் போசாதே வண்ணாத்தி
மண்டைஉடைபட்டுப் போகாதே

வானிலங்கை ராவணன்தான்
மங்கைலெச்சுமியைச்சிறையெடுத்து
தென்னிலங்கைக்குக் கொடுபோனான்

---

10311. கள்ளத்தனம் — திருட்டுத்தனம்
10315. அடியாத்த—அடிதாங்க
10319. விடியட்டும் — நேரம்விடியற்காலம் ஆகட்டும்
10321. அடிக்கடி — பதிலடி! பங்காய்—மடங்காய்
10322 அம்பலம்—பொதுவிடம்
10324. அவதாரம் — அபராதம்; மானநஷ்டஈடு
10329. வாய்மதம்—வாய்ச்செருக்கு; தேவையற்றபேச்சு

சீதையரையவன் வைத்திருந்தான்
அதுபோலே உன்னையும் நான்

அசல்வீட்டில் போக விடுவேனோ
அசல்வீட்டில் விட்டுவிட்டு
அரசாட்சி செய்கிறதோ
அய்யோத்தி ராமருக்காகுமல்லாமல்
அளகுவண்ணார்குலந்துக்கு ஆகாது

அழுக்கெடுக்கும் மாடவண்ணன்
அன்னலெச்சுமிபேரில்வசைபேசினதை
நகர்ச்சோதனைக்குப்போன மேகவண்ணர்
ராமச்சந்திரமூற்த்தி காதில்கேட்டார்

## இராமர் மனம் வருந்தல்

கேட்டபொழுதிலே மனம் வெகுண்டு

கிலேசமுற்று சுவாமி மெய்சோற்ந்து
காலாலே தள்ளுஞ்சீலைகளை
கையால் எடுக்குற சாதிவண்ணப்பயல்
சாதிவண்ணப்பயல் நம்முடைய
தையலாள் பேரில் வசைசொல்லலாமா

விடியட்டுஞ் செய்தி சொல்லுகிறேன்
வீட்டில் சுண்ணும்புக்குறியுமிட்டு
அச்சுதராமரும் மனஞ்சோற்ந்து
அரமனைநோக்கி வருகையிலே
பண்டேகெடுத்த பளிகாறி

## கைகேசி சீதைமீது பழி சுமத்தல்

பாவி சண்டாளிகைகேசி

---

10334. வைத்திருந்தான்—வைப்பாட்டியாக வைத்திருந்தான்
10336. அயல்>அசல் (பே. வ மா)—வேறு
10342. வசை – இழிமொழி
10345. வெகுண்டு—கோபப்பட்டு
10347. சீலை—துணி
10348. பயல்—சிறியன்
10350. தையலாள்—பெண் (சீதை)
10352. குறி—அடையாளம்
10354. அரண்மனை>அரமனை (பே. வ. மா)
10355. பண்டே—முன்னரே; பளி—குற்றம்
10356. பாவி—தீயோள்
10356. சண்டாளி—துரோகம் புரிபவன்

தேன்மொளியாளந்த கைகேசி
சீதைதேவியிடத்தில் வந்தாள்
என்னுடைய நல்ல மருமகளே
யேற்ற லெச்சுமியிளமயிலே

யிளமயிலே நான் சொல்லக்கேழு
யிப்போ பதினலுவருசமட்டும்
பாரவனத்திலே ஆண்டிருந்தாய்
பாரளந்தோனுடதேவியே
பத்துதலே வல்லரக்கனைக்கண்டாயே

பரதவியாதே சொல்லுசொல்லு
மாயமானங்கே வந்ததுவும்
நீமான்பிடிக்க சொன்னதுவும்
மகன் மான்தேடிப்போனதுவும்
மன்னன்யிளையோனுன்னை காத்ததுவும்

துணையிருந்த யிளையோனை
தூரப்போ வென்றுசொல்லி
துடுக்குச்சொல்லிநீ அனுப்பினதும்
சுவாமியுட மான்பட்டதுவும்
வல்லரக்கனென்ற ராவணன்தான்

வாள்மயிலே அங்கே வந்ததுவும்
மண்ணேடுன்னை தேரிலேற்றி
மாயத்தாலேயந்த ராவணன்தானே
பக்கரம்வைத்துப் போர்செய்தானே
மாண்டார்கள் ராச்சதர்கள்

தென்னிலங்கை ராச்சியத்தை
சிறந்த விபூசணருக்குப்பட்டங்கெட்டி
சிறையிருந்த உன்னைக்கூட்டி
சிறந்த அய்யோத்தி சேற்ந்தானே
பத்துதலே ராவணனும்

பாரமுடி தன்னளகும்
கண்டாயோ மருமகளே
கன்னியரே பெண்ணே லெச்சுமியே
கைகேசி கேட்போது
கன்னிநல்லாள் சீதையேது சொல்வாள்

கண்டதில்லை ராவணவடிவை
காயாம்புமேக வண்ணன் தாயே
கண்ணாலே நான்கண்டதில்லை

---

10372. தூரப்போ — விலகிப்போ

10373. துடுக்குச்சொல்லி—தீயசொற்களைச்சொல்லி

10379. பக்கரம்—முறை

காதாலே கேட்டதுண்டு
தென்னிலங்கை ராவணனே

திருக்கண்ணாலே கண்டதில்லை
கன்னிலெச்சுமி சொன்னபோது
கேகேசி கோபங்கொண்டு
ராவணனும் நீயும்ஒருதேரில்
நலம்பெறவே யிருந்த கள்ளி

கன்னியரே நல்லசீதையரே
காட்டரக்கன் ராவணன்தான்
உன்னைக்கற்ப்பளித்து போட்டானே
நீயுங்கெற்ப்பவதியானாயே
பாவியந்த கைகேசி

பாராமல் சொன்னவுடன்

## சீதை வருந்தல்

பச்சைமுகில் வண்ணர்தேவியரும்
பஞ்சணைமெத்தையில் விழுந்தழுதாள்
பண்டேகெடுத்தபளிகாறி
பாவிகைகேசி மடியாயோ

மலையைப்பாற்த்தகண்ணால்
மண்ணாங்கட்டியைப்பாற்ப்பேனே
ஆனையைப்பாற்த்த கண்ணாலே
ஆட்டுக்குட்டியைப் பாற்ப்பேனே
புலியைப்பாற்த்த கண்ணாலே

பூனைக்குட்டிகண்ணில் முளிப்பேனே
கைகேசிமாமி மடிந்தாளானால்
கவ்வையற்றுத்தேசம் ஆளலாமே
சிறிகிட்டிணர்தேவி சொன்னபோது

## கைகேசி மீண்டும் பழித்தல்

சீறியேது சொல்வாள்கைகேசி

செல்வஅய்யோத்தியைக் கெடுக்கவந்த
தினகரராசன் திருமகளே
முன்னேபதினாலுவருசமட்டும்
முடுக்கிவிட்டேன் பாரவனந்தனிலே
யின்னம் பதினாலுவருசமட்டும்

யேற்றவனமுன்னை விரட்டாவிட்டால்
கைகேசிராசன் பெற்றெடுத்த
கைகேசியென்ற பேருமில்லை
கைகேசிசப[ற்]தமிட்டவுடன்
கண்ணீர்விட்டாளே லெட்சுமியாள்

---

10400 கள்ளி—திருடி
10404. கெற்ப்பவதி—கர்ப்பிணி
10418. கவ்வை—துன்பம்

முன்னே பதினாலுவருசமட்டும்
முடுக்கிவிட்டாளந்த கைகேசி

## சீதை இராவணன் உருவரைந்து கொடுத்தல்

யின்னமும்என்னவினை வளர்க்கிறாளோ
என்றுயேங்கிப்பதறியேது சொல்வாள்
வல்லரக்கனுட தன்வடிவத்தை

வாயாலே சொல்லமாட்டேன்
பத்துதலை வல்லரக்கன்னுருவை
பார்த்துகோவென்றெழுதலுற்றாள்
மாயவனார்தேவி லெச்சுமியாள்
வரும்விதிசற்றும் அறியாமல்

சிமிள்க்கூட்டில்ம்மையெடுத்து
சிறியமயிலின்யிறகெடுத்து
தென்னிலங்கை ராவணனை
சித்திரம்போலுருவெழுதி
பத்துதலைகளும் கோபுரம்போல

பாரமலைபோலே உடம்புகளும்
பத்துதலைக்கும் பத்துமுடி
படலத்திலே நின்றிலங்க
யிருபது கண்களும் வட்டிலுபோல
யிளமயில் சீதைஉருவெழுதி

யிருபது கண்ணுக்கும் மையெழுதி
யேத்தசெந்தூரப் பொட்டுமிட்டாள்
யிருபதுகாதுஞ் சுளவதுபோல
யேந்திழை சீதைஉருவெழுதி
மலைபோலே நாக்குகளும்

மந்திரவாள்போல மூக்குகளும்
யிருபதுகைகளும் பனைபோல
யிளமயில் சீதை உரு(வெ)ழுதி
காவிவேட்டி மேலுடுத்தி
கழுத்திலுத்திராக்ஷிய மாலையிட்டு

மார்பின்மோகன மாலையணிந்து
வல்லரக்கனுட உருவெழுதி
ஆலிலைபோல வயிறுகளும்

---

10437. உரு—வடிவம்
10441. சிமிள்—சின்னசெப்பு
10449. வட்டில்—வட்டவடிவமான பாத்திரம்
10453. சுளவு—முறம்

அமந்த சிறுநடை துடையளாகும்
கார்வணர்தேவி உருவெழுதி

கைகேசிகையில் படங்கொடுத்தாள்

## கைகேசி இராவணன் உருவினைக் கண்டு
## சீதை மீது குற்றம் கூறல்

காட்டரக்கனுருவைக் கண்ணில்கண்டாள்
மயங்கி பெருமூச்செறிந்து
வல்லரக்கன்பேரில் மோகங்கொண்டாள்
பரதன் தாயார் கைகேசி

பத்தினி சீதையைப்பாற்த்து சொல்வாள்
யிப்படிக்கொத்த ராவணன்தான்
எப்படி உன்னைச்சிறை வைத்திருப்பான்
சிறையிலிருந்த பெண்ணுமல்ல
சேவுகனோடே வாள்ந்தவள்தான்

கைகேசி யிப்படிச் சொன்னபோது

## சீதை புலம்பல்

கதறியழுதாளே லெச்சுமியாள்
உன்வாயில் யிந்தச்சொல் கேள்க்க
ஊளிவிதிப்படிதானோ
அகந்தையான சொல்கேள்க்க

அமைத்தானோ பிரமதேவன்
என்தலையில் விதி வசமோ
எனக்கெழுதினானோ பிரமதேவன்
பெண்ணாலே அளிந்தவர்கள்
பெரியோர்கள் ரெம்பஉண்டு

நானொருத்தி பெண்பிறந்து
நாடோலமானேனே மகதேவர்
வாணுதலாள்ந்த லெச்சுமியாள்
வாய்விட்டழுதவள் நிற்க்கையிலே

## இராமர் இராவணன் உருவினைக்காணல்

நகர்ச்சோதனை பாற்க்கப்போன

ராமச்சந்திரமூற்த்தி வருவாரென்று
அரக்கனுருவை கைகேசி

---

10468. பெருமூச்செறிந்து—பெருமூச்சு விட்டு
10478 வாயில்—வாயினால்
10479. ஊளி—வாழ்நாள்
10485. ரெம்ப—நிரம்ப
10487. நாடோலம்—அவலம்

அன்னலெச்சுமி கைகொடுத்தாள்
மாயவர்தேவி சீதையரும்
வல்லரக்கன்தன்படத்தை

பச்சைமால் நித்திரைசெய்யுகிற
பஞ்சணைமெத்தையின்கீள் எறிந்துவிட்டாள்
யிப்படியாகயிருக்கையிலே
யேந்திழைகோசலை திருமகன்தான்
நகர்ச்சோதனைக்குப்போன கோபாலர்

ராமச்சந்திரமூற்த்தி வந்துவிட்டார்
வண்ணான்பேசின வகையாலே
மாயவர்பாதசுத்தி செய்யவில்லை
பச்சைநிறமுள்ள மாயவரும்
பஞ்சணைமெத்தையின்மேல் பள்ளிகொண்டார்

பெண்கொடியளந்த லெச்சுமியாள்
பொன்னடிபாதத்தை தொழுதுநின்றாள்
பச்சைமால்மேனிதான் வேற்தது
பஞ்சணைமெத்தைகீளே ஒளித்திருக்கும்
பத்துத்தலை வல்லரக்கன்திருமேனியில்

பச்சைமால்வேர்வை பட்டவுடன்
செத்திறந்துபோன ராவணற்க்கு
சீவன்வந்து பரந்ததுவே
பாரளந்தோன் நித்திரைசெய்யும்
பஞ்சணைமெத்தயை தூக்குதல்லோ

ஒருநாழுந்துடியாத பஞ்சணைதான்
யின்றுதுடித்திடக்காரணமேன்
அரிகிட்டினசுவாமி எழுந்திருந்து
அச்சுதராமர் கண்ணால் பாற்த்தார்
பத்துத்தலைவல்லோன் திருவுருவை

பச்சைமால்கண்டு எட்டிமிதித்தார்
ராவணனுருவைத்தான் பிடித்து
ராவணசங்காரப்போர் முடித்தார்

## இராமர் சீதை மீது ஐயங்கொளல்

ஆராலேவந்த அனத்தமென்று
ஆயிழைச்சீதையைப் பார்த்துரைப்பார்

என்பேரில் குற்றமில்லை
எழுதச்சொன்னாள் மாமிகைகேசி

10505. பள்ளிகொண்டார்—படுக்கலுற்றார்
10508. வியர்த்து>வேற்த்து (பே.வ.மா)
10524. அனத்தம்—தீங்கு

அன்னலெச்சுமியுஞ் சொன்னபோது
அச்சுதராமரும்யேது சொல்வார்
செத்திறந்து போன ராவணனை

திரும்பவும் படமெழுதலாமோ
மாண்டிறந்துபோன ராவணனை
மறுபடியுஞ் சீதைஎழுதலாமோ
ராவண சங்காரஞ் செய்வதற்கு
நாமளெத்தனை பாடுபட்டோம்

தேசராசாக்கள் வணங்குவாரோ
திருமுடியானது தரிக்கலாமோ
அம்பலமாசனம் போகலாமோ
அரசர் தன்கூட்டத்திலிருக்கலாமோ
வண்ணான் சொன்ன சொல்சரியாச்சே

கண்ணில் முளியாதே அப்பாலேபோ
யிலங்கை வேந்தனோடே சேற்ந்தவள் தான்
என்முன்னில்லாதே அப்பாலேபோ
கார்வணர் ராமர் சொன்ன சொல்லை
கைகேசி காதிலே கேட்டுக்கொண்டாள்

## கைகேசி இடையீடும் இராமர் மறுமொழியும்

என்மகனே அரிகோபாலா
என்ன சொன்னாய் சீதாலெச்சுமியை
கைகேசி பிராட்டிகேட்டபோது
கார்வணர் ராமருமேது சொல்வார்
யிவள் அரக்கனோடேவாள்ந்தவள்

யிங்கே ஆகாதுலெச்சுமியும்
செத்திறந்து போனராவணனை
திரும்பவும் பட[ல]மெழுதலாமோ
மந்திரவாளால் ஒருவெட்டாக
வாணுதல் சீதையை வெட்டவேணும்

கானவனத்திலே கொண்டுபோயி
கட்டிவெட்டவேணுமென்றவுடன்
கன்னிநல்லாளந்தகைகேசி
காற்வணரைப் பாற்த்தேது சொல்வாள்
என்மகனே அரிகோபாலா

யேந்திழை சீதை மேல் குற்றமில்லை
காட்டரக்கனுரு வெழுதினது
காற்வண்ணா என்னால் வந்தபிழை
நான்பாவிகைகேசி
நடுவிருந்து பிழை செய்ததினால்

ஓங்கி ஒருவெட்டாக யென்மகனே
உலகளந்தா என்னை வெட்டிவிடு

## இராமர் சீதை மீது பழிசுமத்தல்

கைகேசியழுத குரலோசை
காதில்கேட்டாளே கோசலைசிமித்திரரசி
என்மகனே அரிகோபால

யேற்றகுரலோசை கேட்டதென்ன
கோசலைசிமித்திரரசி கேட்டபோது
கோபாலரா(ம)ருமேது சொல்வார்
அரக்கனுருவை எழுதிவிட்டாள்
ஆகாதுஆகாது லெச்சுமியாள்

ராவணனோடு வாள்ந்தவள்தான்
நமதுகுலத்துக்குஆகாது
பண்டுகெடுத்தப்பளிகாறி
பாவிகைகேசி செய்ததுதான்
கைகேசிசெய்ததுயிது

கன்னியர்சீதையை வெட்டவேண்டாம்
சீதாதேவியை வெட்டிவிட்டால்
செத்திறந்து போவோம் நாங்களெல்லாம்
கோபாலராமர் தன்னிடத்தில்
கோசலையழுத குரலோசை

தீரன்யிளைய பெருமாழும்
சிறந்தபரதன்சத்துருக்கன் கேட்டான்
அச்சுதராமர் மண்டபத்தில்
அழுதகுரலோசை கேட்டதென்ன
ராமுதரரையடி தொழுது

நடந்தசெய்தியைச் சொல்லுமென்றார்
என்னுடையதம்பியரே
யேத்தயிளவாசப் பெருமாளே
நகர்சோதனைக்குப் போனேன்தம்பி
நாயகிசீதைமேல் தியாகஞ்சொன்னான்

வண்ணான்சொன்ன வசையாலே
மனஞ்சடைத்து நானிங்குவந்து
மாளிகையில் நித்திரை செய்தேன்
வல்லரக்கனுரு வெழும்பி
பத்துதலைராவணன் உருவெழும்பி

பஞ்சணைமெத்த்த தூக்கிறவேளையிலே
துணிந்துமுளித்து எழுந்திருந்தேன்
சூரசங்காரஞ் செய்துவிட்டேன்
யிந்த உருவதேன் சீதையற்க்கு
யேந்திளைகண்ணில் முளிப்பேனோ

---

10595• தியாகம்—பழிச்சொல்

## இலெட்சுமணர் சீதைக்காக பரிந்துரைத்தல்

என்னுடைய தவம் வழுவாமலே
என் தம்பிலெச்சுமணு வெட்டிவாடா
மாயன் அரிகோபாலர்
வாளால் வெட்டிவிடு யென்றவுடன்
மறுகி மறுகியே வாள்வீரன்

மாயவன் முன்னே விழுந்தழுதான்
சிந்தையில் சிவனுர் முன்பாக
செய்தபிளையிவள் தானே
யேந்திளைக்குத்தான்யிப்பாடு
யிருந்தூதோயினியென்ன செய்வேன்

விந்தையான சீதையர்க்கு
யிந்திவிதிவருமென்றறியேன்
பாங்குள்ள அய்யோத்திவாழும்
பாலமொளியாளந்த சீதை தன்னே
நீக்கியே வனத்தில் வெட்ட

நீதியோ சொல்லுமண்ணு
தேங்கியே அக்கினிதன்னில்
சீதைமெழுகி வரலாமோ
தீங்குகள் சொல்லவேண்டாம்
தினகரராசன் திருமகள்க்கு

மாயவருந்தம்பியிடம்
வனத்தில் கொண்டுவெட்டுமென்ருர்
வெட்டென்ற சொல்லோடே
விம்மியழுதாரே யிளையவரும்
அம்புபட்டமான்போலே

அலறியழுதாரே லெச்சுமணரும்
உண்டைப்பட்டமான்போலே
உலகளந்தோன் தம்பிபரதவித்தார்
யிலங்காபுரிநகர்தனிலே
யேந்திளைசீதைக்கெத்தனே பாடுபட்டோம்

பட்டபாடெல்லாம் வீணய்போச்சே
பத்தினிசீதயை வெட்டிவிட்டால்
அன்னலெச்சுமி கற்பளிந்தால்
அக்கினி மெழுகி வருவாளே
மாயவுதா(ர)ரே நீர்தாமும்

வலியஅம்பால்வென்றுவருவீரோ
கடலைநீருமடைப்பீரோ
கனத்த கும்பகற்ணன் படுவானே
யிலங்கைஎழுநூறுகாதமெல்லாம்
யியலனுமான்சுட்டளிப்பானே

யிந்திரசெயித்தவன்தான் படுவானே
யிலங்கண்ணிபெண்ணைக் கொல்லுவீரோ
மூலபலஞ்சேனைப் பட்டிடுமோ
முடிபத்துடையோன் படுவானே
கற்ப்புஒருநாளும் வழுகவில்லை

கண்ணிநல்லாள் சீதைலெச்சுமியை
கற்ப்புநெறிதான் பொல்லாது
காற்வணுசீதையை வெட்டவேண்டாம்
பெண்பாவம்பினைவருமே
பெரியோர்க்குயேக்காது

பெண்ணுள்சீதயை வெட்டவுந்தான்
பெருமாளேயினக்கு மனம்வருமோ

### இராமர் சீற்றமடைதல்

மாதுசீதையை வைத்திருந்து
வையகத்தை யரசாழுதம்பி
மந்திரவாளை யுறையுருவி

மாயவனுர் அரிகோபாலர்
தீரன்யினையோனே யென்னுயிரை
திருமந்திரவாழுக்கிரையிடுவேன்
உறையிலிருந்த வாழுருவி
ஓங்கிவிட்டாரந்த கோபாலர்

### இலெட்சுமணர் சீதையை வெட்ட முடிவெடுத்தல்

உலகளந்தோன் தம்பிலெச்சுமணர்
ஓங்கியவாளைப்பிடித்துக் கொண்டார்
வாளது உருவும்போதுவகையுடன் லெச்சுமணர்தான்
நீள்க்கரங்குவித்துச்சி[வி]ந்தை நிலைகலங்கிமனதுசோற்ந்து
கோள்கரம்செய்யும்ராமர்கொடுசிலையேந்துங்கையாலே

மீளவேஓடிவந்துவிரவுடன் வாள்பிடித்திட்டாரே
மந்திரவாழுக்கிரையாகவாணுலைப்போக்கவேண்டாமையா
எட்டிப்பிடித்த வாளாலேயேந்தினை சீதயை வெட்டிவாறேன்
மாதுசீதையை யிருதுண்டாக
வனத்தில்கொண்டு போய் வெட்டிவாறேன்

உலகளந்தோன் சீலததன்னை
ஓங்கிஒரு வெட்டாய்வெட்டிவாறேன்
அழுதுகொண்டு லெச்சுமணர் தானும்
ஆயினை சீதையிடத்தில் வந்தார்
என்தாயே லெச்சுமியே

---

10655. ஏர்க்காது>யேக்காது (பே வ மா)

என்னகால பிளேயிதுவோ
மந்திரவாள் தந்தார்ரகுராமர்
வனத்தில் சீதயே வாருமென்ருர்
அளகனிளேயோனுஞ் சொன்னவுடன்

### சீதை புலம்பலும் இராமரைத் தொழுதலும்

அலறியழுதாளே லெச்சுமியும்

என்தலே விதிவசமோ
எனக்கெழுதிளுேபிரமதேவன்
உள்ளவிதிப்படிதாஞே
உடையவஞர் கட்டளேயோ
நாஞெருத்தி பெண்பிறந்து

நாடோலமானேனிளேயோனே
என்னேப்போலபெண்பிறந்து
யிக்கோலமாவாரோ வையகத்தில்
மாயவரையடி தொழுதுவாறேன்
மந்திரவாளாலே வெட்டுப்பட

மாதுசீதையெழுந்திருந்து
மாயவர் முன்னே விழுந்தழுதாள்
சிறிராமர் முன்னே சீதை விழுந்தழுதாள்
திரும்பிவிட்டார்கிளக்குமுகம
சிறிகிட்டினர்தேவிசீதையவள்

கிளக்கே வந்துஅடிதொழுதாள்
கிளக்குமுகமாயிருந்தவர்தான்
தெற்குமுகமாய்த்திரும்பிவிட்டார்
தினகரராசன் திருமகள் தான்
தெற்க்கே வந்துஅடிதொழுதாள்

தெற்குமுகமாயிருந்தவர்தான்
திரும்பிகொண்டார்மேற்க்குமுகம்
தெற்கேசுற்றிமேற்க்கேவந்து
சிறிராமரை அடிதொழுதாள்
மேற்குமுகமாயிருந்தவர் தான்

வடக்குமுகந்திரும்பிக்கொண்டார்
மேற்க்கேசுற்றிவடக்கே வந்தாள்
மேகநாதனேயடி தொழுதாள
காயாம்பு மேனியஞர்
கமுந்துதலேபோட்டுக்கொண்டார்

அச்சுதஞர்தேவி லெச்சுமியாள்
அரிராமர்முன்னே விழுந்தழுதாள்
அச்சுதனேஅரிகோபாலா
அடியாள்நான் செய்தகுற்றமென்ன
மண்ணேவிட்டு மரம்போமோ

மரத்தைவிட்டுநிணல்போமோ
பொன்னைவிட்டுநிறம்போமோ
பூவைவிட்டுமணம்போமோ
வேணுமென்ற நாளையிலே
வேப்பன் காயும் யினிப்பாச்சே

வேண்டாத நாளையிலே
வேப்பன் காயுங் கசப்பாச்சே
உம்மைவிட்டு நான்பிரிய
உடையவனுா் கட்டளையோ
என்னுக்குள்ளிருக்கும் எண்ணையைப்போல்

யிருந்தோமே சிலகாலம்
புண்ணுக்கும் எண்ணையும்போல
பிரியவுந்தான் நாளாச்சே
முன்னேஎன்ன பாவமது செய்தேனோ
முகில்வண்ணரே உமைப்பிரிய

மாதுசீதையழுதவுடன்

## இராமர் பதிலுரைத்தல்

மாயவன் பெருமாழும் யேதுசொல்வார்
பொல்லாத மோசக்காறி
புலம்பாதே பெண்ணேயப்பாலேபோ
என்கண்ணில் முளியாதே

யிளையபெருமாள் முன்னேபோ
தீரனிளையோன் தன்னிடத்தில்
திருமந்திரவாள் கொடுத்துவிட்டேன்
மந்திரவாழுக்கிரையாக
வனத்திலிளையோனுங் கொண்டுபோவான்

வாளாலே வெட்டுப்பட்டு
மாண்டிறந்து போவாயே
அச்சுதரா(ம)ருஞ் சொன்னவுடன்
ஆயிளைசீதை விழுந்தழுதாள்

## இலெட்சுமணர் சீதையை அழைத்து வரல்

தீரனிளைய பெருமாழும்

சீதாதேவியை பாற்த்தேது சொல்வார்
என்தாயே சீத(ா)லெச்சுமியே
என்பிறகாலே நீ வருவாய்
சீதாதேவியைக் கூட்டிக்கொண்டு
தீரனிளையோனுமா வளிநடந்து

---

10729. உடையவனுா்—வழிபடுகடவுள்
10732. பிண்ணுக்கு>புண்ணுக்கு (பே:வ.மா)
10753 பிறகாலே - பின்னாலே
10749. ஆயிளை—தேர்ந்து செய்த அணிகளை உடையவள்

அச்சுத ராமன்தன்னைவிட்டு
ஆயிளைசீதயைக் கூட்டிவந்தார்
கான வனங்கழுஞ்சோலை விட்டு
கமலக்கடம்பாறு தன்னைவிட்டு
ஆறுகுளங்கழுந்தான் கடந்து

ஆயிளை சீதையைக்கூட்டி வாறார்
கடுவாய் புலிவாழுமலையிட்டு
கானில் மரதகவல்லி வனமுமிட்டார்
சீதாதேவியு மிளையவரும்
சேவல்மாமுனி வனத்தில் வந்தார்

## சீதை இலெட்சுமணரிடம் வேண்டல்

எல்லாவனங் கழுந்தான் கடந்து
யிளையபெருமாளைப் பாற்த்துரைத்தார்
தலைவாசல் கண்டறியேன்
தாய்வீடுநான் போயறியேன்
அய்யோத்தியில் வந்தநாள் முதலாய்

அன்னசுற்றத்தாரை நானறியேன்
முத்தமது தூத்தறியேன் மேற்க்கேவனம்
வந்துவிட்டேன்
பொழுதடையுந்தலமறியேன்
பொங்கியுண்ண மதியறியேன்

காலுஞ்சடையுதே லெச்சுமணா
கையுஞ்சடையுதே யிளையோனே
அங்கம்பதருதே லெச்சுமணா
ஆவிதுடிக்குதே லெச்சுமணா
அச்சுதனார்தம்பி லெச்சுமணா

ஆத்துமாச்சோருதே யிளையோனே
உங்களண்ணார் மனமகிள
ஓங்கிஒரு வெட்டாய் வெட்டிவிடு
கெற்பவதி யென்றும் பாராதே
கிட்டிணார்தம்பி லெச்சுமணா

உலகமெல்லாம் பேரோங்கிட
ஓங்கியொரு(வெ)வட்டாய் வெட்டிடு
அண்ணன்தேவியென்றும் பாராதே

---

10768. தலைவாசல்—முன்வாசல்
10771. அன்னசுற்றத்தார்—அண்ணன் தம்பி உறவுடையார்
10772. முற்றம் > முத்தம் (பே.வ.மா)—வீட்டின் முன்பக்கம்
10772. தூத்து—பெருக்கி
10774. பொழுதடையும்—சூரியன்மறையும்
10775. பொங்கி—சமைத்து

அளகன்யிளைய பெருமாளே
தேவாதிதேவர்மனமகிள

திருமந்திரவாளாலே வெட்டிவிடு
யிலந்தைப்பளம் போலேலெச்சுமணா
யிருகாலும்பொக்காளங் கட்டுதையோ
வடுப்படாத மேனியெல்லாம்
வடுபட்டுப்போச்சுதே லெச்சுமணா

யிந்தவனத்திலேலெச்சுமணா
யிருதுண்டாய்யென்னைவெட்டிப்போடு

## இலெட்சுமணர்பதிலுரைத்தல்

சீதாதேவியுஞ் சொன்னவுடன்
திருமாலிளையபெருமாளும்
யிந்தவனமதுகடந்தவுடன்

யிருள்சிகண்ணில் காணலாமே
தண்டகாருண்ணிய வனந்தனிலே
தையல் சீதையே உனைவெட்டுவேன்
வடவால மரத்தருகே
மாதுசீதையும் வந்தாளே

அந்த வனக்காவதிலே
ஆலாவிருக்ஷ நிணலதிலே
யிந்த நல்லநிணலதிலே
யிருந்து போவோமென்றுரைத்தார்
யிருக்குமந்த வேளையிலே

யேந்திளை யாளந்த சீதையரும்
நடந்த சடவதினாலே
நல்லிளையோன் மடிதனிலே
அளகன்னிளையோன் மடிதனிலே
அன்ன லெச்சுமி தலைசாய்த்து

படுத்து நித்திரை செய்கையிலே

## இலெட்சுமணர் சீதை கற்பினை சோதனை செய்தல்

பாலன்யிளை யோனுமேது செய்வார்
கற்பளிந்து போனதுவும்
கற்பு நெறியிருப்பதுவும்
பரிசோதனைதான் பார்த்து

---

10792. யிலந்தை—முள்மரவகை
10793. பொக்காளம்—கொப்புளம்

பச்சைமால் தேவியை வெட்டவேணும்
துடையளகு மணல்குவித்து
சுந்தரிதலயை அதின்மேல்வைத்து
வடவால மரத்திலே
மன்னனிளையோனும் பாற்த்திருந்தார்

பாற்த்திருக்கும் வேளையிலே
பாவினை சொல்லமுடியாது
வனத்திலுள்ள மிருகமெல்லாம்
வந்து செய்யுங் காச்சிகேழும்
நாகம்வந்து குடைபிடிக்க

நல்லபாம்பு தாராட
வருணன்வந்து மழைபொளிய
வாய்வுவந்து தென்றல்வீச
கடுவாய் புலியாளி சிங்கம்
கன்னி நல்லாளைக் காத்திருக்க

மரத்திலுள்ள கனிகளெல்லாம்
மந்திகொண்டுகொடுக்குதையா
சிங்கங்குலையோடு கதலிக்குலை
தேன்மொளிசீதைக்குக் கொடுக்குதையா
மாங்கனியோடு மாதளங்கனி

வாணுதல்சீதைக்குக் கொடுத்திடுமாம்
மலையிலுள்ளகனிகளெல்லாம்
மாயவர்தேவிக்குத்தான் கொடுக்க
காயாதகமுகின்மரம்
காற்வணர்தேவிக்கு காய்த்துதிர

பூக்காதமுல்லைமரம்
பெருமாள்தேவிக்குப் பூத்துதிர
நந்தவனந்தான் பூத்து
நாரணர்தேவிக்கும் மலர்சொரிய
மயிலிருந்துதாராட

குயிலிருந்துவிளையாட
வண்டினங்களெல்லாங் கூடி
மகிள்ந்துசங்கீதம்பாட

---

10822. அளகு—அளவு
10829. காட்சி > காச்சி (பே. வ. மா)
10830. நாகம்—ஆதிசேடன் (பாம்பு)
10831. தாராட—அசைந்தாட
10837. மந்தி—பெண்குரங்கு
10838. சிங்கன்—வழைமரவகை
10840. மாதுளம் > மாதளம் (பே. வ. மா)

## இலெட்சுமணர் மனமாற்றமடைதல்

மரத்திலிருந்ததோர் மாயன்தம்பி
மனதில்நன்றாய் தேறிக்கொண்டார்

கற்ப்பளியவில்லை லெச்சுமியாள்
கன்னிநல்லாள் சீதையுந்தான்
கற்ப்புநெறிகாத்துக்கொள்ளும்
கன்னிநல்லாள் சீதைலெச்சுமியை
கன்னியர்சீதையை விட்டுவிட்டு

காற்வணரிடத்தில் போகவேணும்
உள்ளங்காலைத்தான்கீறி
உதிரங்கொண்டுபோகலாம் மாயவற்க்கு

## சீதைஇலெட்சுமணரைக் காணாமல் புலம்பல்

என்றுநினைத்தவரிருக்கையிலே
யேந்திழைசீதை முளித்துவிட்டாள்

முளித்துப்பாற்த்தாள லெச்சுமியாள்
முகில்வண்ணர் தம்பியைக்காணவில்லை
கண்ணில்காணாமல் சீதையரும்
கலங்கியழுதாளே லெச்சுமியாள்
நான்உனக்கென்னபாவஞ் செய்தேன்

நாட்டையளந்தோன் தம்பியரே
என்னபாவஞ்செய்தேனப்பா
யிளையோனேதம்பி லெச்சுமணா
மனிதரில்லா வனந்தனிலே
மசங்கிறேன் தம்பிதிசங்கிறேன்

வாளால் நீயென்னை வெட்டாமல்
வனத்தில்விட்டாயே லெச்சுமணா
உனக்கென்ன பாவம் செய்தேனப்பா
உலகளந்தோன் தம்பியரே
மலங்கியழுதாளே சீதையரும்

மாயவர்தம்பியைத்தான்தேடி

## விலங்குகள் சீதையை காத்தல்

திசங்கியழுகிற வேளையிலே
சேற்ந்து நின்றமிறுகமெல்லாம்
கற்புக்கருதிய சீதைமுன்னே
கண்ணீர் விட்டு அழுதிடுமாம்

---

10855. தேறி—தெளிந்து

10875. திசங்கிறேன் —சோர்கிறேன்

10880—மலங்கி—மனம்கலங்கி

சிங்கங்கரடி புலிகள்வந்து
தெளிவு சொல்லுமாங் தேவியற்கு
கண்ணைத்துடைக்குதாம் ஒருமிறுகம்
காலைத்தடவுதாம் ஒருமிறுகம்
மரத்தின் கனியைக் கயிலெடுத்து

வாயில் கொடுக்குதாம் ஒருமிருகம்
மரத்திலிருந்(து)தான் பாற்த்துக் கொண்டார்

## இலெட்சுமணர் மனந்திரும்பி இராமரைக் காணவரல்

மாயோன் தம்பியிளையவரும்
கற்புக் கருதியே லெச்சுமியை
காட்டு மிறுகங்கள் காத்துக்கொள்ளும்

மரத்திலிருந்தவர் கீளிறங்கி
மாயனிடத்திலே போகவென்று
காடுவனங்கழுஞ்சோலைவிட்டு
கமலக்கடம்பாறுதான் கடந்து
ஆறும்வனங்கழுந்தான் கடந்து

அச்சுதனார் தம்பி லெச்சுமணர்
உள்ளங்காலதைத்தான் கீறி
உதிரம் வாளதில் தான் தடவி
வாழும் அய்யோத்திநகர்தனிலே
வந்தாரேதம்பி லெச்சுமணர்

## இராமர் வருந்துதல்

பள்ளிகொண்டோன் முளிக்குமுன்னே

பஞ்சணை மெத்தையில் சாத்திவைத்தார்
மந்திரவாளதைச்சாத்திவைத்து
மறைந்து கொண்டாரிளையவரும்
பள்ளிகொண்டோன்முளித்திளகி

பஞ்சணைமெத்தைவிட்டு கீளிறங்கி
வாசல் நடையிலே வரும்போது
மந்திரவாளதைக்கண்ணில்கண்டார்
வாளில் ரெத்தங்கண்டவுடன்
மாயோனின்றுப்பரிதவித்தார்

பச்சைமுகில்மேனியனார்
பஞ்சணைமெத்தையில் விழுந்தழுதார்
வெட்டிவாயென்று செல்வி
வேந்தே உன்னை அனுப்பிவிட்டேன்
வெட்டிவிட்டுவந்தாயோ

விட்டுவந்தாயோ தம்பியரே

வெட்டவுந்தான் மனம்வருமோ
வீரன்யிளையோனே உந்தனக்கு
கொன்று வரச்சொல்லியல்லவோ
கோபத்தாலே சொல்லிவிட்டேன்

பத்தினி சீதையை என்றுகாண்பேன்
பளிகாருதம்பி யிளையோனே
லெச்சுமியென்ற பெண்ணுக்காக
நாமளெத்தனையோ பாடுபட்டோம்
பட்டபாடெல்லாம் வீணாய்போச்சே

பைந்தொடி சீதையை யிளந்தேன்
லெச்சுமியென்ற பெண்ணைப்போலே
நாட்டிலும் பெண்கிடையாதே
கன்றுங்கலையுப் போலிருந்த
கானமயிலாளை யிளந்தேனே

குயிலும் மயிலும் போலிருந்த
கொடியிடை சீதையையிளந்தேனே
அன்னமயிலாளை யிளந்தேனென்று
அளகன்யிளையோன் மடியில்சாய்ந்தார்

## இராமர் லெட்சுமணர் உரையாடல்

மாயன் படுகிறதுயரங்கண்டு

மன்னனிளையோன் தடுத்துரைப்பார்
உம்முடைய சொல்ப்படியே
ஓங்கிஒரு வெட்டாய் வெட்டிவந்தேன்
கற்பு நெறியால் பிளைத்தாளோ
கானவனத்தில் பட்டு மடிந்தாளோ

வெட்டிவிடாதபடி கானகத்தில்
விட்டுவந்தாயோ சொல்லுதம்பி
வெண்ணையுண்டோனவர் கேட்டபோது
வீரன்யிளையோரும் யேதுசொல்வார்
மந்திர வாளாலே வெட்டிவிட்டு

வடக்குமுகமாக வந்துவிட்டேன்
யிளையபெருமாளுஞ் சொன்னவுடன்
எல்லையளந்த பெருமாளும்
மாதுசீதையை வெட்டிவந்தால்
மலர்முகந்தான் வாடிடுமே

கண்ணீராய் பெருகிடுமே
கன்னி சீதயைவெட்டிவந்தால்
வாடுகின்ற மனந்தேறி
மாயாவுதாரருந்தானிருந்தார்
யிப்படியவர்கள்யிருக்கையிலே

## வால்மீகரிசி, சீதை உரையாடல்

யேந்திளை சீதலெச்சுமியாள்
வால்மீகர் வனத்தில் நித்திரைசெய்து
மறுநாழுதயத்திலெழுந்திருந்து
லெச்சுமிதேவியெழுந்திருந்து
நல்லயிளையோனைத்தேடிப்பாற்த்தாள்

துணையாயிருந்த யிளையோன்
தோகை நல்லாள் கண்ணில் காணுமல்
அம்புபட்டமான்போலே
அலறியழுதாளே லெச்சுமியாள்
மந்திரவாள் கொண்டுவந்த

வாள்வீரன் லெச்சுமணரை
கடுவாய்புலிகொன்றதுவோ
கார்வணர்தம்பியிளையோனை
கூண்டவனத்தில் மதயானை
கொன்றுவிட்டதோவென்றுசொல்லி

வெட்டவந்த லெச்சுமணர்தான்
விட்டுப்போனுரே ரகுராமர்
கார்வணர் ராமரிங்குவந்து
கருத்துள்ளயிளையோன் யெங்கேயென்ருல்
மாயவர்வந்து கேட்டாக்கால்

வரலாறுயென்ன சொல்லப்போறேன்
வாடியழுஞ்சீதை குரலோசை
வால்மீகரிசி கேட்டுக்கொண்டார்
ஆரோ ஒருபெண்குரல்தான்
அலறியழுது கேள்க்குதல்லோ

கள்ளர்திருடர் வெட்டுருரோ
கன்னிமார்சண்டைசெய்கிருரோ
வரலாறுபோய்ப்பார்ப்போமென்று
வளிநடந்தார் வாலமீகர்
ஆடலும்பாடலுந்தானிறுத்தி

அளகு புகள் வால்மீகர்ரிசியும்
காலி ல்)பாதக்குறமிட்டு
கையில்துளசிமாலையணிர்தார்
புலித்தோலும் திருப்பிரம்பும்
பூண்டசிவமணிமாலைதானணிந்தார்

தென் டுகமெண்டலந்தானெடுத்து
சிறப்புடன்வால்மீகர்ரிசியும்

---

10988. வரலாறு—நிகழ்ச்சி

சாந்துபினுகுசவ்வாதணிந்து
தானேகயில் புலித்தோலெடுத்து
தெண்டு கமண்டலந்தானெடுத்து

சித்தாண்டார் குடைப்பிடித்தார்
மடமடென்று மகாரிசியும்
மண்டபத்தை விட்டெழுந்திருந்து
காடுவனஞ்சோலை தான்கடந்து
கடுங்கண்ணீர் மொட்டைவிட்டு

வடவாலமரத்தருகே
வந்துசீதையைக் கண்ணில்கண்டார்
எந்தஊர் யெந்தத்தேசம்
எந்தஊர் ராசன்மகளே
எங்கிருந்து யிங்குவந்தாய்

எனக்கறிய சொல்லுமென்றார்
வந்தவகை யினக்குச் சொல்லவேணும்
வாணுதலே பெண்ணே மடக்கொடியே
தனிவழியே நீவந்தாயோ
கண்ணே ரகுராமனுன்னை வைதானோ

உன்னைத்தனியே விட்டுவிட்டு
உன்னுடைய மன்னவன்தான்
உயிரிளந்து போனானோ
உத்தமியே பெண்ணே கற்புடையாள்
வால்மீகரிசி கேட்டவுடன்

மனந்தேறியே லெச்சுமியாள்
வனத்தில் வாழும் மாமுனியே
வாக்கினில் நானுஞ் சொல்வேனென்றாள்
பெட்டகத்தில் பிறந்துவந்த
புகள்பெரிய தினகர ராசன்மகள்

அய்யோத்தியாபுரி யரசாளும்
அளகுதிசரதன் என்மாமன்
கோசலைபிராட்டி என்மாமி
கோபால ராமரென்னை மாலையிட்டார்
மாலையிட்டுச் சிலகாலம்

வாள்ந்திருந்தோம் அய்யோத்தியை
பாவிகைகேசி சூதாலே
பதினாலுவருசம் வனத்தில்போனோம்
வல்லரக்க னென்ற ராவணனும்
வனத்தில் வந்தென்னை சிறையெடுத்தான்

---

10998. சாந்துபினுகுசவ்வாது—நறுமணப்பொருட்கள்
10998. புனுகு>பினுகு (பே.வ.மா) புனுகு என்னும் நறுமணக் குளம்பு புனுகுப் பூனையிலிருந்து எடுக்கப்படும்.
11015. வைதானோ—ஏசினானோ

மாயவனூர் தேடிவந்து
வாளிலங்கா புரிநகரதிலே
சூரனென்ற ராவணனை
சூரசங்காரஞ் செய்துவிட்டார்
திருமால் வந்தென்னை சிறைதிருப்பி 11040

சிறந்த அய்யோத்தி தன்னில் வந்தோம்
அய்யோத்திதனிலே வந்து
அவதரித்தோம் மாமுனியே
வண்ணான்வசை சொன்னனென்று
வனத்திலென்னைவெட்டச் சொன்னூர் 11045

வெட்டவந்தவீரர் லெச்சுமணரை
விலங்கினங்கள் கொன்றுபோட்டதுவே(ஈ)
தரணியளந்தோனும்யிங்கு வந்து
தம்பியிளையோன் யெங்கேயென்றால்
மாயவர்வந்து கேட்டாக்கால் 11050

வரலாறுயென்ன சொல்லப்போறேன்
தனியேஇருந்துபுலம்புகிறேன்
தவமுனியே நானடியாள்
மாதுசீதை சொன்னவுடன்
வால்மீகரிசியேது சொல்வார் 11055

கோசலைபிராட்டி மருமகளே
கோபாலராமன் தேவியரே
தினகரராசன் திருமகளே
சீதாதேவி லெச்சுமியே
கெற்ப்பவதியானதிறல் 11060

கிலேசப்படாதபடி நான் காற்ப்பேன்
அஞ்சவேண்டாம் பதறவேண்டாம்
அச்சுதனூர்தேவி லெச்சுமியே
உன்வயிற்றில் தரித்தகெற்பம்
உலகாளப்பாலன்தான் பிறப்பான் 11065

அய்யோத்தியாபுரி அரசாள
அருமைத்திருமகன் பிறப்பான்
ராமர்படையெல்லா மரைசாள
ராமரைப்போலே வடிவுடையான்
தரணியெல்லாமரைசாள 11070

தார்வேந்தன் பிறந்திடுவார்
நம்முடைய மண்டபத்தில்
நலமுடனே நீ வந்திருப்பாய்
ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்
உலகளந்தோன் தேவியரே 11075

11040. திருப்பி—மீட்டி

காத்திருந்து பணிவிடைகள்செய்ய
கன்னிமாரேழு பெண்களுமுண்டும்
உன்னருகே வந்துதுணையிருக்க
உத்தஅவ்வைக் கிளவியுண்டு
மாமுனியானவர் சொன்னபோது

## *சீதை ஆச்சிரமத்தில் தங்கியிருத்தல்*

மனமகிள்ந்து சீதாலெச்சுமியாள்
தாயாருந்த் தங்கையரும்
தாரணியிலவரென்று சொல்லி
வடவாலமரம் விட்டுச்சீதாதேவி
மடமடென்று யெழுந்திருந்து

காடுவண்ணஞ் செடிகடந்து
கானவனங்களுஞ் சோலைவிட்டு
வால்மீகர்முனி யாச்சிரமத்தில்
மண்டபத்தில் வந்துவீத்திருந்தாள்
மனங்கலங்கி தான்திகைத்து

வருத்தமெத்த தோன்றிடுமாம்
கெற்ப்பவதியான சீதையர்க்கு
கிளவிஒருதி தானருகிருக்க
கன்னிமாரவரேழு பெண்கள்
கார்வணர்தேவிக்கு அடப்பமிட

வால்மீகரிசிவனந்தனில்
வாள்ந்திருக்கிற நாளையிலே
மாதுநல்லாள் சீதையற்க்கு
மாதம் பத்துந்திகைந்திடுமாம்
பத்துமாதந்திகைந்தவுடன்

பாலன்பிறக்க நாளாச்சுதென்று
அப்போதுசீதா லெச்சுமியாள்
அருள்முனியைப் பாறத்துரைப்பாள்
வாருமையா மாமுனியே
மாதம்பத்தும் சரியாச்சு

யிப்போதுபுரை கட்டவேணும்
என்குருவே மாமுனியே
யிளமயில்சீதை சொன்னவுடன்

---

11076. பணிவிடைகள்—சிறு உதவிகள்
11079. அவ்வை—மூதாட்டி
11088. ஆச்சிரம்—ஆஸ்ரமம்;மடம்
11095. அடப்பம்—குற்றேவல்
11099 திகைந்து—நிறைவுற்று
11106. புரை—பிள்ளைப் பேற்றிற்கான அறை

## மாந்தையர் ஈத்துப்புரை கட்டல்

யியல்முனியானவ ரன்னேரம்
மாந்தையரை வரவழைத்து

மாமுனிவரேது சொல்வார்
யேந்திழை சீதாலெச்சுமிக்கு
யிப்போது புரைகட்டவேணும்
மரங்கள் வெட்டிவாருமென்று
வால்மீகர்ரிசி போகவிட்டார்

வாற்த்தைகேட்டு மாந்தையர்கள்
வாச்சி உளிதானெடுத்தார்
வாளரமுங் கையிலெடுத்து
மந்தையர்கள் வளிநடந்தார்
மலையதிலே வந்துநின்று

மரம் பார்க்கும்வேளையில்
வடக்கிருந்து வந்தயானையைக்கண்டு
மதயானைக்கொம்புவெட்டி
வெட்டினதோர் யானைக்கொம்பில்
விரவுடன் தொட்டில் தான்சமைத்து

அதற்கடுத்தமலைதனிலே
அளகுசெண்பக மரமுங்கண்டார்
செண்பக மாமரம் தேக்குமரம்
சிறியவாளாலேதானறுத்தார்
மரமறுத்துக்கொண்டு மலைகடந்து

வால்மீகரிசி மண்டபத்தில்
மண்டபத்தின் வடபிறமாய்
வாய்த்தகுடிகட்டுவார்கள்
தட்டவளையோடுபக்கவளை
தானே வளைகள்தான்பரப்பி

புரையது கட்டிமுடிந்தபின்
பூவையிளமயில்குடிபுகுந்தாள்
யிப்படியாக யிருக்கையிலே

## பத்திரகாளி மருத்துவம் பார்த்தல்

யேந்திழை சீதையேது சொல்வாள்
வாருமையா மாமுனியே

மருத்துவத்தையழைத்துவாரும்
சீதையருஞ் சொன்னவுடன்

---

**11125.** சமைத்து—செய்து
**11134.** வளை—நீண்டகம்பு

**11141.** மருத்துவம்—மருத்துவத்தாள்

செல்வமாமுனிவரேது சொல்வார்
எந்த எந்தமருத்துவத்தை
யினியளைக்க வேணுமம்மா

மாமுனிவர் கேட்டவுடன்
மனமகிள்ந்து யேது சொல்வாள்
என்மதனி பத்திரகாளி
யிருக்கிறாள் புட்டாபுரந்தனிலே
அவளையிங்கே கூட்டிவர

அருளும்மையா மாமுனியே
அப்போது அந்தமாமுனிவர்
அவசரமாயோடி வந்தார்
பத்திரகாளியிடமதிலே
பாரமுனிவரேதுசொல்வார்

அம்மாஅம்மா பத்திரகாளி
அரிராமன்தேவி உனையளைத்தாள்
அவள்தனக்கு மருத்துவமாய்
அளைத்துவரச்சொன்னாள் காண்
மாமுனிவர் சொன்னவுடன்

மாயவர்தங்கை பத்திரகாளி
அண்ணருடதேவி லெச்சுமியாள்
அவதிப்படுகிறா ளென்றறிந்து
பத்திரகாளி யெழுந்திருந்து
பாரமுனி முன்னால் வளிநடந்தாள்

காடுசெடி வனங்கடந்து
கண்டார் வனங்கழுந்தான் கடந்தார்
என்பெருமாள் தேவிபடுத்திருக்கும்
யீத்துப்புரையில் குடிபுகுந்தார்
பத்திரகாளியைக் கண்டவுடன்

பச்சைமால்தேவி யெழுந்திருந்தாள்
ஆவாவென்று அழுதிடுவாள்
அலறிப்பதறிக் கதறிடுவாள்
என்னுடபொன்னுடலு
எழுந்திருக்க கூடுதில்லை

பக்கவிலாவுகழும்
படந்தெழுந்த கொங்கைகழும்
எல்லாந்தானோகுதம்மா

---

11148. மதனி—உறவுமுறைப்பெயர் (அண்ணனின் மனைவி)
11163. அவதி—துன்பம்
11176. விலா—உடலின் பக்கம்
11177. கொங்கை—மார்பு

என்னுடைய யென்மதனி
அய்யோத்திப்பட்டணத்தில்

அருமையாய்வயிறு நொந்தால்
கைதாங்கத் தோளியுண்டு
கால்பிடிக்கத் தோளியுண்டு
வனவாசகக் காடதிலே
வாள்ந்திருக்க வந்தேனே

நான்படும்பாடு யெல்லாம்
நாட்டிலுள்ளோர் படுவாரோ
எல்லார்க்கும் யிந்தப்பாடு உண்டு
யேங்கியளவேண்டாம் சீதையரே
பதறியளவேண்டாம் லெச்சுமியே

பாலன்வந்து பிறக்கு மென்பாள்

### *சீதை பாலனைப் பெற்றெடுத்தல்*

பைந்தொடி சீதைமயங்குகையில்
பாலன்வந்து பிறந்திடுமாம்
பச்சைக்கிளி போலே பாலகனை
பைந்தொடி சீதை ஈன்றெடுத்தாள்

நெத்தியிலே நாமத்துடன்
நெடுமாலளகன் வந்துதான் பிறந்தான்
சங்குசக்கரத்துடனே
தரணியாளவே மகன்பிறந்தான்
ஐந்தான நாளையிலே

ஆயிலை சீதையஞ்சுகுளித்தாள்
யேளான நாளையிலே
யிழைதிரித்துயரையில்கெட்டி
மாணிக்கப் பச்சைவைடூரியம்
வற்ணச்சலங்கை கையில்தூக்கி

பாலூட்டி நீராட்டி
பத்திரகாளி தொட்டிலில் நீராட்டி

### *தாலாட்டு*

தாய்க்கு தலைமகனே
தன்குலத்தில் பிறந்தவனே
கற்கண்டோ சற்கரைபோ

---

11186. பாடு—துன்பம்
11201. அஞ்சுகுளித்தாள்—ஐந்தாவது நாள் குளித்தாள்
11203. யிழை—நூல்; திரித்து—ஒன்றோடு ஒன்று சேர்த்து
11204. வைடூரியம்—நவரத்தினங்களுள் ஒன்று

கண்டவற்க்கும் மாணிக்கமோ
வனமிருந்தாளென்று சொல்லி
வையகத்தோரேசாமல்
வனமிருந்த சீதையர்க்கு
மாணிக்கமாய்வந்தாயோ

சிறையிருந்தாளென்று சொல்லி
தேசத்தோர்களேசாமல்
சிறையிருந்த சீதையற்க்கு
திருமகனாய் பிறந்தாயோ
மோரளந்த நாளியிலே

முத்தளக்க வந்தவனே
பாலளந்த நாளியிலே
பணமளக்க வந்தவனே

### பாலனுக்குப் பெயரிடல்

ஆரார் தன்ப்பேரிடுவோம்
அளகுசிறந்தபாலனுக்கு

சேரன் சோளன்பேரிடவோ
தெய்வேந்திரன் பேரிடவோ
சீதாலெச்சுமி பாலகனுக்கு
தினகரனார் பேரிடவோ
மகதேவர் பேரிடவோ

மன்னன்திரிதரர் பேரிடவோ
ஆருடைய பேரிடுவோம்
அச்சுதனார் பேரிடவோ
கோசலையாள் பெற்றமகன்
கோபால ராமன் பாலகனுக்கு

பத்திரகாளி எழுந்திருந்து
பச்சைமால் பாலகனைக் கையிலெடுத்து
அரிராமருக்குப் பிறந்தபிள்ளை
அசலவனென்று பேருமிட்டார்
பேருமிட்டு குரவையிட்டு

பெற்றதாயார்கைக்கொடுத்தாள்
அண்ணருடபாலனுக்கு
ஆபத்துவாராதபடி
கண்ணேறு நாவளத்துவாராமல்
காரிகையானவள் தான்வாள்த்தி

---

11220. நாளி—அளவைப் பெயர்

11223. பணம்—நாணயவகை

11244. கண்ணேறு—கண்திருஷ்டி

11244. நாவளத்து—திருஷ்டிவகை

யுத்தகளத்திலே போனலும்
ஒருவரும் உன்னைச் செயிக்கமாட்டார்
பத்திரகாளியுந்தான்வாள்த்தி
பாலகனைக்கைக்கொடுத்தாள்
பைங்தொடி சீதைகைக்கொடுத்து

பத்திறகாளியும் போனபோது

## சீதை பாலனைப்பேணி வளர்த்தல்

பைங்தொடி சீதையேதுசெய்தாள்
பாலகன் தன்னைநீராட்டி
பத்தினி சீதைலெச்சுமியாள்
நெத்தியிலே நாமமிட்டு

நீலவற்ணப் பொட்டுமிட்டு
தன்னுடைய பாலகனுக்கு
சந்தணஞ்சவ்வாதணிந்தாள்
ஆனைக்கொம்பு தொட்டிலிலே
அருமைப்பாலன் தனைக்கிடத்தி

செப்புக்குடத்தையுந்தானெடுத்து
சீதாதேவி தண்ணீர்க்குப்போனள்
சாலைவளிவெகுதூரத்திலே
தண்ணீர்க்குப்போறவேளையிலே
மந்திரசாலையில் போகையிலே

வனந்தனிலே ஒருகுரங்கு
தன்னுடைய பிள்ளையைத்தான்
தன்யிடுப்பிலே தொங்கவிட்டு
கொம்புவிட்டு கொம்பு தாவுறதை
கொடியிடைசீதை கண்ணில்கண்டாள்

வனத்தில் வாழும் குரங்குகள்தான்
வனத்தில் பிள்ளைவைத்துப்போனல்
வனமிறுகங்கள் கொல்லுமென்று
மார்பில் பிள்ளயைத் தொங்கவிட்டு
தன்வயிற்றில் பிறந்தபிள்ளை

தானவற்கு அபூற்வமாய்
நம்முட பிள்ளை அசலவன்ருன்
நமக்கு நல்லமகன் பொன்மகனே
காட்டுமிருகங்கள் கொடுபோனல்
கணவன்ராமருக்கென்னசொல்வேன்

செப்புக்குடத்தை கீளிறக்கிவைத்து
சீதாதேவியும் ஓடிவந்தாள்

---

11276. அபூர்வமாய்—அரிதாய்

பாலனைத்தாயார் கையிலெடுத்து
பாரிலுள்ளவரறியாமல்
யிறக்கிவைத்த தண்ணீர் குடத்தை

யேந்திழை சீதையிடுப்பில்வைத்து
தண்ணீர் கிணத்தங்கரைதனிலே
தண்ணீர் யிறைத்து நிற்கையிலே

### பத்திரகாளி பாலனைக் காணமல் வருந்தல்

யிப்படியாகவே நிற்கையிலே
யேந்திழைபத்திறமாகாளி

வால்மீகர்ரிசி மண்டபத்தில்
வாணுதல் பாலனைவந்து பாற்த்தாள்
அச்சுதர் பாலனைக் காணமல்
அலறியழுதாளே பத்திறகாளி
பாலனைத்தொட்டிவில் காணமல்

பச்சைமால்தங்கை பத்திறகாளி
வால்மீகர்முனி தன்னிடத்தில்
மாயவர்பாலகனைக் காணேம்

### வால்மீகமுனி வேறொரு பாலனைத் தோற்றுவித்தல்

அப்போதுநல்ல வால்மீகமுனிவர்
அவருமேயெழுந்தேது சொல்வார்

கடுவாய்புலிகொன்றதுவோ
கன்னிசீதைக்கு என்னசொல்வேன்
திடுதிடென்று ஓடிவந்து
தெற்ப்பபுல்லைத்தான் பறித்து
சீதாதேவிபாலனைப் போலே

தெற்பப்புல்லே நீயிருப்பாய்
பொன்னூஞ்சல் தொட்டிலிலே
புகள்பெறவே தாராட்டி
மாமுனியானவர் தாராட்ட
வந்துபிறந்தானே பாலகனும்

பிறந்த பாலனது துள்ளிவிளையாட
பெருகமாமுனி பாத்திருக்க
பச்சைமால்தங்கை பத்திறகாளி
பாலனருகே வந்திருந்தாள்

### சீதை மண்டபத்தில் மற்றுமொரு பாலனைக் காணல்

யிப்படியாக யிருக்கையிலே

---

11308. தாராட்டி—தாலாட்டி

யேந்திளைசீதாலெச்சுமியாள்
கெங்கைக்கரையிலே நீராட்டி
கிட்டிண பாலனைத்தார(ா ட்ட
செப்புக் குடத்தையிடுப்பில் வைத்தார்
செல்வப்பாலனைத் தோளில் வைத்து

மயில்போலே வளிநடந்து
வாணுதல் சீதைவருகையிலே
சிறந்த மண்டபத்தில் வந்து
செப்புக்குடத்தையிறக்கி வைத்து
செல்வப்பாலனைத் தானெடுத்து

தெய்வதொட்டிலில் கிடத்தவென்று
சீதாதேவிதொட்டிலைப்பாற்க்க
துள்ளிவிளையாடுதே பாலகனும்
கண்ணினுல் கண்டுலெச்சுமியாள்
கடுகப்பாலகனேதோ வென்ருள்

வாருமையா மாமுனியே
வாய்த்த பாலகனேதோவென்ருள்
மாதுசீதைகேட்டபோது
வால்மீகர்ரிசியேது சொல்வார்
செல்வச்சுவாமியை நீகொடுபோனது

திருக்கண்ணுல் நான் கண்டதில்லை
வனத்திலே மிறுகங்கொடுபோச்சே
மாதுசீதைக்கென்ன செய்வோமென்று
தெற்பப்புல்லை நான்பறித்து
தொட்டிலில் போட்டு தாராட்டினேன்

அதுவுமொரு பாலகனும்
அரிகிட்டிணர்சியலாய் பிறந்து
தன்மகனுக்கு துணையாக
சானகிதேவியே நீவளப்பாய்
அரிராமருக்குப் பிறந்தபிள்ளை

அசலவசாமி யென்றும்
குசப்புல்லில் பிறந்தபிள்ளை
குசலவசுவாமி யென்றும்
யிருவரையும் ஒன்றுபோலே
யேந்திளைசீதையே நீவளப்பாய்

## சீதை பாலர் இருவரையும் வளர்த்தல்

அப்போது சீதாலெச்சுமியாள்
அருள்முனியைப் பாற்த்துரைப்பாள்
குசலவனை வளத்ததுண்டால்
கோபாலரென்னைச் சேற்க்கமாட்டார்
நான்பட்டபாடுபோதுமையா

நானந்தபாலனை வளர்க்கமாட்டேன்
அப்போது பத்திரகாளி
ஆயிளைக்கு யேதுசொல்வாள்
அஞ்சவேண்டாம் பதறவேண்டாம்
அண்ணருடைய தேவியரே

மாயவற்க்குச் சேதிசொல்லி
வருவேனெனந்த வேளையிலே
ராமருக்குநான்சாட்சி
யிரண்டுபிள்ளையையும் நீவளப்பாய்
என்றுரைத்தாள் பத்திரகாளி

யிளமயில் பாலரைத்தான் வளர்த்தாள்
வாற்ப்புரு(க்)கி வாற்த்ததுபோல
வளர்த்தாளே பாலரைத்தான்
ஒன்றுரெண்டு மூன்று நாலு
உயரைந்து வயசாக

அய்ந்தான பிராயத்தில்
அறிந்தார்கள் மாமுனியை
ஆறானதிருவயதில்
ஆயிளைபாலர் விளையாட

### *பாலர் பலவித்தைகளும் கற்றல்*

ஏழானதிருவயதில்

எழுத்தோத வைக்கவென்று
வாத்தியாரை வரவழைத்து
வால்மீகர்ரிசியேது சொல்வார்
லெச்சுமியாமுடபிள்ளைகள்க்கு
நலமுடன்படிப்பிக்கவேணுமென்றார்

வால்மீகரிசி சொன்னவுடன்
வாணுதல்பிள்ளயை வரவழைத்து
பொரிகடலையோடு போற்ந்த அவலை
புஸ்ப்பமலர் தேங்காயும்
நிறநாளிகும்பக்குடம்

நிறவிளக்கு யேத்திவைத்தார்
அரிஓம்நமசிவாயமென்று
அச்சரத்தை நாவிலுச்சரித்தார்
லெச்சிமியாமுட பாலனுக்கு
நலமுடன்வாத்திய(ா)ர் ஓதிவைத்தார்

கல்வியானதுதானோதி
கற்றுக்கொடுத்தானே வாத்தியாரும்

---

11388. அச்சரம்—எழுத்து

வில்வித்தைகள்தான்படித்து
விரைவாய்கற்ருரே பாலகர்கள்
கூடுவிட்டுகூடு பாய்வதற்க்கு

கொடிஅஸ்த்திரம் விடுவதற்கு
யிருக்கபறக்காத் தொளில்படித்து
யிந்திரமாஞ்ஞால வித்தைகற்ருர்
படித்துக்கொடுத்த வாத்தியாற்க்கு
பவுசிபெறவெகுமதிதான் கொடுத்தார்

வரிசைபெற்று வாத்தியாரும்
வால்மீகரையடிதொழுது
வாத்தியாரும் போனபோது

## வால்மீகமுனி பாலர்களை வாழ்த்தி வேட்டையாட விடைகொடுத்தல்

வரிசையுடன் ரெண்டுபாலகரும்
குசலவனும் அசலவனும்

கும்பிட்டாரே மாமுனியை
வந்தடிதொழுத பாலகளை
வால்மீகர்ரிசியேது சொல்வார்
எல்லா வித்தையுங்கற்றீர்களோ
யேந்திளைசீதை பாலகர்களே

கல்லாதவித்தையெல்லாம்
கற்றறிந்தோம் எங்களைக்காருமையா
வனவேட்டையாடுதற்கு
மாமுனியே விடைதாருமையா
மாதுசீதை பாலரிருபேரும்

வாழும் வில்லுந்தாருமென்றவுடன்
அம்பும்வில்லும் பாணங்கழும்
அஸ்திரக்கணைமுதலானதெல்லாம்
நாகக்கணையோடு நச்சுகணை
நலமுள்ள மந்திரவாள் கொடுத்து

காடைகவுதாரி பிடிப்பதற்க்கு
கண்ணித்தட்டுக(ளு)ந்தான் கொடுத்து
உள்ளான் படுக்கும்வலை
ஊர்குருவிதட்டுகழும்
மான்வரையாடுபடுவதற்க்கு

---

11422—23. கண்ணி, தட்டு, வலை—பறவை, விலங்குகளை பிடிப்பதற்கான பொருட்கள்

11423. உள்ளான்—குருவிவகை

11425. வரையாடு—ஆடுவகை

வலைகளும் கயிறுகளும்
மாமுனியானவர்தான்கொடுத்து
வாள்த்தி சீதைபாலகர்களை
போய்வாரும் பிள்ளைகளே
புகள்பெறமுனிவர்விடைகொடுத்தார்

### பாலர்களை சீதை வாழ்த்தி வேட்டையாட விடை கொடுத்தல்

வரிசையுடன் வ[ர]ந்தார் பாலகர்கள்
மாதுசீதை முன்பில்வந்து
மலர்தூவி தெண்டனிட்டார்
திருமால் பாலரைசீதைதானெடுத்து
திருமார்போடே அணைத்துகொண்டு

கட்டியிருவரையும் அணைத்துக்கொண்டு
கனிவாயால் முத்தமிட்டாள்
வாள்வீர் நீங்கள் வாள்ந்திருப்பீர்
மாறுமல் நீங்கள் என்றுமும்
என்னவரம் வேணுமப்பா

எந்தனுடபிள்ளைகளே
கேட்டவரந்தருவேனுன்
கிலேசபடாதபடிக்கு
சீதாதேவியுஞ் சொன்னவுடன்
செல்வபாலரிருவருந்தான்

வனவேட்டையாடுதற்கு
வாள்த்திவிடைதாரும் அம்மா
பச்சைமால்தேவி பரதவித்தாள்
வேட்டையாடிவாருமென்று
விடைதரவும் மனசியில்லை

வனவேட்டையாட வேண்டாமென்றால்
மக்களே கோளையாவீர்களே
வாறதெல்லாம் வரட்டெனவே
வாயால்வாள்த்தி விடைகொடுத்தாள்
மடியிலிருந்த பாலகர்க்கு

வலதுகையாலே நாமமிட்டாள்
செந்தூரப் பொட்டுமிட்டு
திருசக்கரநாமமிட்டார்கள்
செங்கையில் கோதண்டவில் கொடுத்து
சீதாதேவியும்யேது சொல்வாள்

---

11450. மனது>மனசி (பே. வ. மா)

11452. கோளை—வீரமற்றதன்மை

வேட்டையாடப் போவீரென்று
விரைவாய்பாலரையனுப்பி வைத்து

### பாலர்களைப் பத்திரகாளி சோதித்தல்

மாதாவிடத்தில் வரம்வாங்கி
வால்மீகர்ரிசி வனங்கடந்தார்
பத்திறகாளி வனமதிலே

பாலரிருவரும் வருகையிலே
பள்ளிகொண்டோன் தங்கைபத்திறகாளி
பாலரைச்சோதனை பாற்க்கவென்று
யிருபத்தொரு கூனுந்தான்கூனி
யேந்திளைப்பத்திரமாகாளி

யிருபத்தொரு கூனதுக்கும்
யிருபத்தொருகுடமும் வைத்தாள்
செப்புக்குடங்களையிடுப்பில் வைத்து
திருமால்பாலரெதிரில் வந்தாள்
பத்திறகாளி வருகிறதை

பாலன்அசலவன் கண்டுகொண்டான்
அப்போதந்த அசலவனும்
குசலவனைப்பாற்த்தேது சொல்வான்
குறித்துநாம்வேட்டையாட வந்தோம்
கூனியெதிரே வாறுளென்பான்

கூனையிப்போதிருத்துதற்கு
கொண்டுவாதம்பி தெறிவில்லைத்தான்
வில்லைவாங்கி அசலவனும்
வீரமுடனேதோ சொல்வான்
யிருபத்தொருகூனதுக்கும்

யிருபத்தொரு உண்டைவைத்தான்
வில்வளைத்துஞாண்பூட்டி
விரைவாகத் தொ(டு)த்துவிட்டார்
கூனதிலே உண்டைபட்டு
குடமும்யில்லியில்லியாய்ப் பிரிந்திடுமாம்

பத்திரகாளிதிரும்பிநின்று
பாலகற்க்குயேது சொல்வாள்
கூனைக்கெடுத்தீரோ பிள்ளைகளே
குடத்தைஉடைத்தீரோ பாலர்களே
சுட்டித்தலை பிள்ளைகளே

உன்தகப்பனுக்கல்லோயிந்தத்தொளில்
காதுகளையறுப்பதுவும்

---

11495. சுட்டித்தலை—குறும்புத்தனம்

கண்களைகுடி கெடுப்பதுவும்
மூக்கையறுப்பதுவும்
முகலெட்சைகளைக் கெடுப்பதுவும்

உன்பிதாவுக்கும்யிந்ததொளில்
உங்களுக்கும் யிந்தத்தொளில்தானே
என்பெருமாள்திரு மகனே
என்தனக்கு மருமகனே
அண்ணருக்காக பொறுத்து விட்டேன்

அல்லாதே போனால் சபித்திடுவேன்
வாருமென்று பாலகரை
வடபத்திர காளியருகளைத்து
திருமாலுடபாலகனுக்கு
திருநீறுந்தான் கொடுத்தாள்

அண்ணருட பாலகர்களே
அப(த்)தஞ்செய்யவேண்டாமையா
வனவேட்டையாடியே வாருமென்றாள்

### பாலர்கள் கயிலாசமலையில் வேட்டையாட வரல்

அந்தமலைசார்[ா]வும் விட்டு
ஆயிளையாள்சீதைபாலகர்தான்

கயிலாசகிரிமலையிலேதான்
கன்னிநல்லாள் பாலகர்கள்
யீஸ்பரனுருட மலைதனிலே
யேந்திளை பாலகர்வேட்டையாட
மலையிலுள்ள மிறுகமெல்லாம்

மலையைவிட்டுஓடிடவே
கடுவாய்புலியாளி சிங்கமெல்லாம்
கூறக்கணையாலே தான்பிடித்தார்
மான்வரையாடுகரடியெல்லாம்
மடியச்சரந்தான் தொடுத்தார்

முசல்விடும்புதாருவை
முடுக்கியடித்துக் கொன்றிடுவார்

### பாலர்கள் வேட்டையாடலை முனிவர்கள் சிவனிடம் கூறல்

கயிலாசகிரியைதனிலிருந்து
கரைக்கண்டனரிடந்தனிலே
மலையிலுள்ள முனிவரெல்லாம்
வரிசையுடன் ஓடிவந்து

---

11500. லெட்சை—லட்சணம்
11526. விடும்பு—பல்லி போன்ற பெரியஉயிரினம்

உமதுமலையே அல்லாது
ஒதுங்குதற்கு வேறு மலையுமில்லை
எங்கிருந்தே ரெண்டு மானிடவர்
யேத்தமலையில் வேட்டையாடுகிறார்

கானமலையிலுள்ள மிறுகங்களை
கதறக்கணையாலே கொன்றுவிட்டார்
யீஸ்பரரிடத்திலே செய்திசொல்லி
யேகிச்சன்னியாசி முனிவர்பேசினார்

*சிவன்பாலர்களைப் பிடித்துவர*
*நாரதரை ஏவல்*

பிணநாத்தம் பொறுக்காமல்

பேர்பெரியப்பரமேஸ்பரனார்
எங்கிருந்தோரெண்டு மானிடவர்
யிம்மலையில் வேட்டையாடுறார்
மாமலையிலுள்ள மிருகங்களை
வந்துவதைசெய்து போட்டார்கள்

வேட்டையாடும் பாலர்களை
விரைந்துகொடுவாருமென்றார்

*நாரதர் பாலர்களைப்பிடிக்க இயலாமல்*
*திரும்பல்*

யீஸ்பரனார் சொல்தட்டாமல்
யேகிநடந்தாரே நாரதரும்
கயிலாச கிரிதானுமிட்டு

காண்டுருவப் பொய்கைவிட்டு
யேழுகாதவளிதூரம்
யீஸ்பரனார் வாழும்மலை
அந்த மலைச்சார்வதிலே
அளகுபாலரைக் கண்ணாலகண்டார்

பாலருடைய ஆரப்பாரம்
பாற்த்துபதறியே நாரதரும்
அஞ்சிப்பதறியே நாரதரும்
அங்குமிங்கும் பாற்த்துரைப்பார்
ஆதிபரன்வெள்ளிக் கயிலையிலே

ஆவலாதி சொல்லுவாராம்
யிந்தப்பாலரை பிடித்ததுண்டால்
எண்ணாமல் என்னைக்கொன்றிடுவார்

---

11556. ஆரவாரம் என்பது ஆரப்பாரம் என்று எழுதப் பட்டுள்ளது
11561. ஆவலாதி—பிராது; பராதி

என்னுலேயேலாதுமென்று
யிந்தப்பாலரைப் பிடிப்பதற்கு 11565

நாரதமுனிவர் சொன்னபோது

### சிவன் பாலர்களைப்பிடிக்க காலதூதர் யமனை அனுப்பல்

நலமுடனே பரமேஸ்பரனுர்
காலதூதரிசமராசாவை
கரைக்கண்டரும் பாற்த்துரைப்பார்
பாரமலையிலே வேட்டையாடும் 11570

பாலரிருவரையும் பிடித்துவர
ஈஸ்பரனுர் சொன்னபோது

### காலதூதர் யமன் பாலர்களைப் பிடிக்க முடியாமல் திரும்பல்

யிசமகால தூதரெல்லாம்
மலையதிலே வருகையிலே
மன்னரிருவரையுங் கண்ணில்கண்டார் 11574

கண்டவுடன் மூபேரும்
கலங்கி நெடுமூச்செறிந்து
முன்போல வலுக்குறைந்து
முன்னும்பின்னுந் திரும்பிநின்ருர்
எங்களாலே முடியாது 11680

யேலாதுபாலரைக் கொல்வதற்கு
தூதர்கள்தான் சொன்னவுடன

### சிவன் ஞானக்கண்ணுல் பாலர்கள் யார் என அறிதல்

சுவாமிபரமேஸ்பரனுர்
ஞானக்கண்ணுல் யீஸ்பரனுர்
நடந்தகாரணங் தெரியக்கண்டார் 11585

லெச்சுமியாழுட பாலரென்று
ஞ்னனக் கண்ணுல்கண்டெழுந்திருந்து

### சிவன் அயோத்திக்கு வந்து இராமரிடம் சோதிடம் கூறல்

கயிலாச மலையுமிட்டு
காண்டுருவப் பொய்கைவிட்டு 11590

ஆறுவனமுங்கடந்து
அய்யோத்திக்கு வருகையிலே

---

11581. இயலாது>ஏலாது (பேவ.மா)

வேதப்பிரமன்வடிவுகொண்டு
விரைவாய் வாருரே யீஸ்பரரும்
புத்தகமுங்கையிலெடுத்து

பொன்னெழுத்தாணி தான்பிடித்தார்
தெண்டுகோலுங்கையில் பிடித்து
சித்தரைப்போலே வளிநடந்தார்
அய்யோத்தியா புரியில் வந்து
ஆதிபரமேஸ்பரனுர்

எட்டுத்திக்கும் பாற்த்து வந்தேன்
எவராகிலும் புரச்சங்கேள்ப்பாரில்லை
வேதப்பாப்பான் சொன்னசொல்லை
வெண்ணையுண்டோன் கேட்டுக் கொண்டார்
வாருமையா வேதப்பாப்பாரே

வந்துசோசியம் சொல்லுமையா
அச்சுதரும்சொன்னபின்பு
அருகே வந்துவேதப்பாப்பான்
தார்வேந்தே உன்முகந்தான்
தாரமிளந்ததுபோல காண்கிறது

தாரமிளந்தவர் மனைதனிலே
சாஸ்திரமும் சொல்லமோ
மனையாட்டியில்லா மனைதனிலே
மறையோரமுது பொசிக்கலாமோ
என்றுரைத்து பரமேஸ்பரனுர்

யேந்தக்கயிலையில் போய்ச் சேர்ந்தார்

## பாலர்கள் சேவல் முனிவர்வனத்தில் வேட்டையாடல்

யிப்படியாக யிருக்கையிலே
யேந்திழையாளுட பாலகர்தான்
கயிலாசகிரிமலைதனிலே
கனக வேட்டைகள் தானுடி

மலையை விட்டுக்கீளிறங்கி
வனவேட்டயைக் கயிலெடுத்து
சேவல் முனிவர்வனந்தனிலே
சீதைபாலர் வருகையிலே
பாலர் வருகிற ஆரப்பாரம்

பாற்த்துச் சேவல் முனியானவர்

---

11598. சித்தர்—சித்தி பெற்றவர்

11610. தாரம்—மனைவி
11613. மனையாட்டி—மனைவி

சேவல் வடிவாகத்தானெடுத்து
சிறகுதட்டிப்பறந்திடுவார்
கண்டு அந்தஅசலவன் தான்
கார்வண்ணதம்பிகுசலவனே

சேவல்கூட்டுக்குஆகுமல்லோ
சேவலைச்சிக்கென்றுபிடியுமென்றார்
சேவல்தன்னைப்பிடித்துக் கொண்டு
சேவல்மாமுனிவன் மலையுமிட்டு
பத்திரகாளி வனமும்விட்டு

பத்தினிசீதை முன்னே வந்தார்

### *சீதை பாலர்களிடம் சேவல்பற்றி வினவலும் பாலர்கள் பதிலுரைத்தலும்*

அப்போது சீதாலெச்சுமியாள்
ஆயிழை சீதையேது சொல்வாள்
வேட்டையாடப் போனீர்களே
வீரன்ராமருட பாலகரே

ஆருடைய சாவலிதோ
யினக்கறியப் போகுதில்லை
தேசராசாவின் சாவலிதே(ா)
தெய்வேந்திரன் சாவலிதே(ா)
மாயமாக வந்ததுவே(ா)

மாயராமன் சேவலிதோ
வனத்திருக்கும் பாலர்களே
வல்லவித்தை பாடமுண்டோ
சேவல்க்குடையவர் வந்ததுண்டால்
சேர்ந்துவருவாரே போராட

லெச்சுமிதேவி சொன்னவுடன்
உற்ற அசலவனேது சொல்வான்
கட்டுத்துறையிலே அவுக்கவில்லை
கன்னக்களவுகள் செய்யவில்லை
வனவேட்டையாடிவந்தோம்

வலியிலகப்பட்டு பிடித்துவந்தோம்
என்றுசொல்ல அசலவனும்
யேதுசெய்தான் சாவலைத்தான்

---

11631. கூட்டு—துணை உணவு
11651. சேவல்>சாவல் (பே.வ.மா)
11653. கட்டுத்துறை—கட்டிவைக்குமிடம்
11653. அவிழ்க்க>அவுக்க (பே.வ.மா)

வற்ணமணித்தூணதிலே
மாணிக்கச்சேவலைகட்டிவைத்தான்

மாதுநல்லாள் சீதையவள்
வனவேட்டைக்கறிசமைத்தாள்
உண்டுமுதலான பின்பு
உறங்கி நித்திரைதான் தெளிந்து
மறுநாழுதயகாலத்திலே

வனவேட்டையாடவென்று
பாலரிருபேரும் போனபின்பு

## சீதை சேவலினை அவிழ்த்துவிடல்

பைந்தொடிசீதைதனித்திருந்தார்
சேவல்வடிவாகயிருந்தவன் தான்
சேவன் முனியுமே எழுந்திருந்து

சேவலல்லதாயே சேவலல்ல
சேவல்மாமுனியென்பேர்தான்
செல்லப்பாலருக்காக பயந்து
சேவல்வடிவாக நான் மறைந்தேன்
வல்லமையுள்ள பாலகர்தான்

வலக்காரமாய் பிடித்துக்கொண்டார்
கட்டவிள்த்துவிட்டதுண்டால்
கன்னியரே உன்பிள்ளைகள்க்கு
ஓயாமலென்னுழும்
உதவி செய்துநானிருப்பேன்

என்றுசொல்லவே சேவல்முனி
யேந்திளைசீதையும் அவிள்த்துவிட்டாள்

## சீதைபாலர்களிடம் சேவல் அவிழ்த்து விட்ட செய்தி கூறல்

சேவல்முனிவரும் போனபின்பு
சீதைப்பாலகர் வந்துவிட்டார்
சேவலெங்கேதாயே சேவலெங்கே

செய்யிளையே சொல்லுவாயெங்கழுக்கு
குசல(வ)சுவாமியுங்கேட்டபோது
கொடியிடைசீதையுமேது சொல்வாள்
சேவலல்ல மகனே சேவலல்ல
சேவல் மாமுனியை அவிள்ந்த்துவிட்டேன்

---

**11675.** வலக்காரமாய்—பலவந்தம்; தந்திரம்

**11679.** ஓயாமல்—இடைவிடாது

அன்னலெச்சுமிசொன்னபோது
அமர்ந்தாரிருந்த பாலகரும்

## இராமர் இலட்சுமணரிடம் வசிட்டரை அழைந்து வரக்கூறல்

யிப்படியாக யிருக்கும்போது
ரெகுராமசுவாமியுந்தான்
அய்யோத்தியாபுரிநகரதிலே

அச்சுத நாராயணன் பெருமாள்
தன்னுடைய தம்பியிளையோனே
சுவாமிநாயகரருகழைத்து
குலகுருவாகிய வசிட்டரையும்
கூட்டியென்முன்னே கொண்டுவருவாய்

## லெட்சுமணர் வசிட்டரை அழைத்துவரல்

அண்ணருரைத்த சொல்தவருமல்
அளகுனிளையோனெழுந்திருந்து
அச்சுதராமரையடிதொழுது
அரண்மனையைவிட்டுவெளியில் வந்து
ஓட்டமும் பெரும் நடையுமாக

ஓடிவந்தாரே ராமர்தம்பி
வசிட்டருடைய அரண்மனையில்
வசிட்டரைவந்தடிதொழுதான்
வந்தடிதொழுதயிளையோனே
வசிட்டகுருக்கழும் யேதுசொல்வார்

என்னை அடிதொழுத காரணந்தான்
என்னுடனே சொல்லும்லெச்சுமணா
அழைத்துவரச்சொன்னாருங்களைத்தான்
மன்னனிளையோனுஞ் சொன்னவுடன்

## வசிட்டர் புறப்பட்டு வரல்

வசிட்டகுருக்கழும் எழுந்தருளினார்

காலி(ல்)பாதக்குறடுமிட்டு
கையில்திருப்பிரம்பெடுத்து
புலித்தோலும் திருப்பிரம்பும்
பூண்டார்சிவமாலைகழும்
காவிவேட்டியுந்தரித்து

கழுத்திலுத்திராச்ச மாலையிட்டார்
நெத்தியிலே நீறணிந்து
நீலவற்ணப்பொட்டுமிட்டு
திருநீறுக்குப்பரையும்
சிறப்பாக யெடுத்துக்கொண்டு

மடமடென்று வளிவரவே
வசிட்டகுருக்கழும்யெழுந்திருந்து
தெருக்களென்ற தெருவுமிட்டு

### வசிட்டர் இராமரிடம் சீதை எங்கே என வினவல்

சிறப்பாக முனிவரவே
குலகுருவாகிய வசிட்டரையும்

கொலுவிருத்தி ராமர் தான்பணிந்தார்
அடிபணிந்த ரெகுராமர்க்கு
அம்முனியானவரேது சொல்வார்
பட்டத்துதேவி லெச்சுமியாள்
பச்சைமாலேயெங்கேயென்ருர்

### இராமர் திணறி நிற்றல்

குலகுருவானவர் கேட்டபோது
கோபாலராமர்பரிதவித்தார்
என்னசொல்வேனினியேது சொல்வேன்
யேந்திளசீதையையிளந்தேனே
வண்ணான் சொன்னவசையாலே

மன்னனிளையோனையருகளைத்து
அரக்கனுருவை எழுதினதோர்
அன்னலெச்சுமியை வெட்டச்சொன்னேன்
என்னுடைய சொல்மாருமல்
யேந்திளசீதயை வெட்டிவந்தான்

சீதையிறந்த நாள்முதலாய்
சிங்காசனமரசு செய்யவில்லை
லெச்சுமியென்ற பெண்ணைப்போலே
நாட்டிலும் பெண்கிடையாது
உத்தமியாளென்ற பெண்ணைப்போலே

உலகத்திலும் பெண்கிடையாது
சானகியென்ற பெண்ணைப்போலே
சனகர்க்குப் பெண்பிறந்திடுமோ

### இராமர் வசிட்டரிடம் சீதையை உயிரெழுப்ப வேண்டல்

குருவே உம்முடவல்லமையால்
கோர்குளல் சீதையையெழுப்பவேணும்

செத்திறந்து போனலெச்சுமியை
திரும்பஉயிரெழுப்பவேணும்
சீதாதேவியில்லாமல்
தேசத்தையரைசாள மாட்டேன்
மாயன் ரகுராமர் சொன்னவுடன்

## வசிட்டர் இராமரிடம் வேள்வி வளர்க்கக் கூறல்

வசிட்டகுருக்கழுமே து சொல்வார்
செத்திறந்து போனலெச்சுமியாள்
திரும்பவும் வந்து பிறப்பாளோ
மாண்டிறந்துபோன லெச்சிமியாள்
மறுபடியும் வந்து பிறப்பாளோ

ஞானக் கண்ணாலே வசிட்டமுனி
நடந்தகாரணந் தெரியக்கண்டார்
லெச்சுமிதேவியாளிருப்பிடமும்
ஞானக் கண்ணாலே தெரியக்கண்டார்
வாரும்பிள்ளாய் ராமர்ரெகுபதியே

வாற்த்தையொன்று சொல்லக்கேழும்
மாண்டிறந்து போன லெச்சுமியை
மறுத்தெழுப்ப வேணுமானால்
வேள்வியொன்று வளர்த்ததுண்டால்
வீரலெச்சுமியைக் கண்டிட்லாம்

திருவேள்வி வளர்த்ததுண்டால்
சீதைதேவியைக் கண்டிடலாம்
வேள்வியது வளர்ப்பாயென்று
விரைவாய்வசிட்டர் கொலுவிருந்தார்

## இராமர் வேள்வி வளர்த்தல்

அன்பத்திரெண்டடி யகலத்திலே

அறுபத்தி மூன்றடி நீளத்திலே
யேறப்படி யிறங்கப்படி
யிருபத்தொருபடி வைக்கவென்று
ஆளத்தாலே ஒமகுண்டம்
அகலம் பெறவேள்விக் குளியும்வெட்டி

வேள்விக்குளி வெட்டித்தான்முகிக்க
வெடுவெடென்று வெட்டுவார்ராம்
மூலைகள்சற்றுங் கோணில்லாமல்
முந்தவேகறண்டகம் போல்மினுங்கி
வேள்விக்கு நல்லவிறகுக்கு

மேகநாதர்தானும்விட்டார்
சந்தணமரமொடு காருகிலும்
தலைப்பிலா மரம்அத்திமரம்
நூதனமானவிறகுகளை
நிமிசத்துடனவர்தான் முறித்து

---

11786. முகிக்க—முடிக்க
11794. நூதனமான—அரிதான

கட்டுக்கட்டாக விறகுகளை
கட்டியேவண்டியின் மீதேற்றி
உல்லாசமாய்விறகு கொண்டுவந்து
உற்றவேளையில் தானடுக்கி
எண்ணைக்குடத்திலே தொண்ணூறுவிட்டு

யிலுமிச்சம்பளத்தில் முன்னூறுவிட்டார்
வட்டமலரியில் ஒருகோட்டைபோட்டார்
மஞ்சள்பொடியிலரைக் கோட்டைபோட்டார்
எள்ப்பொரிநெல்ப்பொரி வேள்வியில்ப்போட்டார்
பானைக்காரத்திலே மஞ்சணை போட்டார்

கரும்புசற்க்கரையில் ஒருதுலாம்போட்டார்
கனத்தசாம்பிருணி ரண்டுதுலாம்போட்டார்
சூடகம்கட்டிஒரு துலாம்போட்டார்
சுத்தசவ்வாது வேள்வியில்போட்டார்
செவ்விளனீரிலாயிரங் கொண்டு

திருவேள்விதன்னில் கண்திறந்துவிட்டார்
ஏழுகளஞ்சி தங்கமும்போட்டார்
யிருபத்தொருகளஞ்சி பொன்னையும்போட்டார்
ஒருகோட்டை நெல்குத்தி மாவாய்த்திரட்டி
உத்ததோர் வேள்விக்குளியிலே வைத்தார்

பொன்னால்செய்த துருத்தியைக் கொண்டு
புகள்பெரிய தெய்வா ரனலூதுவாராம்
தெய்வார்கள் வேள்வியி லனலூதி
சிறப்புடனக்கினி கொதித்துயெழும்பி
எட்டுமலையிடி வெட்டினாப்போல

யீரேழுபதினாலு லோகம்நடுநடுங்கி
அண்டபகிரெண்டங் கிடுகிடுங்கி
அக்கினிவேள்வியில் குப்பென்றெழும்பி
அச்சுதன்திருவேள்வி வளருதுபாராய்
அனலுபெருகியே முட்டுதுபாராய்

மாமுனிவளத்தவேள்விதனில் புகை
வாழும்அய்யோத்தியை முட்டுதுபாராய்

---

11805. பானைக்காரம்—பனைவெல்லமும், புளியும்தண்ணீருடன் கலந்துசெய்யும் ஒருபானம்.

11806. துலாம்—நிறுத்தலளவைப் பெயர் (கிட்டத்தட்ட பத்துகிலோவுக்கு நிகரானது

11811. கண்—தேங்காய் கண்

11816. துருத்தி—காற்றூதி

11817. அனல்—தீ

11822. கிடுகிடுங்கி—அசைந்து

## வேள்வியில் குதிரைதோன்றுதல்

வசிட்டமுனிவளத்த வேள்வியிலே
வன்னப்புரவி வந்துபிறந்திடுமாம்
பிறந்தநல்லகுதிரை தன்னை

புகழுரைக்கவும் கூடாது
வேள்வியில் பிறந்தகுதிரையை
விதங்கள்சொல்லப்போகாது
வாழும்ராமர் தன்வேள்வியிலே
வந்தபுரவிதன் வளப்பங்கேழும்

நாலுகாலும் வெண்டயமாம்
நடுவயிற்றிலே மாருப்பாம்
நெத்தியிலே சுட்டிவெள்ளை
நேரேநாமம் சாத்திறுப்போல
கடிவாளமும் பொன்னாலே

கல்லணையும் பொன்னாலே
முகவாரும் பொன்னாலே
முன்வாரும் பின்வாரும் பொன்னாலே
அளகுப்படிகமும் பொன்னாலே
அதின்கழுத்து மணிகழும் பொன்னாலே

சதங்கை தண்டையும் பொன்னாலே
தாவடஞ்சுட்டியுந்தங்கத்தாலே

## இராமர் குதிரையில் வாசகங்களைக் காணல்

தனியேபிறந்த தெய்வபுரவிதன்னை
சாமிநாயக்கர் பார்ப்பளவில்
குதிரைலாடச் சேணத்திலே

கோபால வாசகம் எழுதக்கண்டார்
வாசகம் எழுத்தைக் கண்டபோது
வாசித்துப் பாற்த்தார் ரெகுராமர்
தெய்வப் புரவியானதிலே
திருமால் பெருமாள்க்கும்யேக்காது

தேசராசர்க்கும்.யேக்காது
தரணியிலுள்ளோர்க்கும் யேக்காது

---

11829. புரவி—குதிரை
11835. வளப்பம்—வளமை
11836. வெண்டயம்—கால்சலங்கை
11837. மாருப்பு—தோலாலாகிய மார்பணி
11838. சுட்டி—நெற்றிக்குறி
11841. கல்லணை—குதிரையின்மீதான இருக்கை
11846. சதங்கை, தண்டை—காலணிகள்
11847. தாவடம்—கழுத்தணி; சுட்டி—நெற்றிச்சுட்டி

தெய்வேந்திரர்க்கும் யேக்காது
சிறந்தபரதன் சத்துருக்கனு(க்)கேக்காது
யிந்தபுரவி பிடித்தேறினவர்

ராமசாமிக்குப் பெண்கொடுப்பீரோ
யிந்தப்படிக்குள்ள வாசகத்தை
என்பெருமாள் வாசித்துப்பாற்த்தார்

## இராமர் அனுமானிடம் குதிரையை பிடிக்கக் கூறல்

எழுத்துவாசகங் கண்டவுடன்
என்பெருமாளரி கோபாலர்

வாளனுமானை வரவழைத்து
வன்னப்புரவியைப்பிடியு மென்றூர்
மாயன்பெருமாழுஞ் சொன்னபோது
வன்னப்புரவியைத்தான் பிடித்து
புரவியைமேய்ப்பது போரனுமான்

பிடித்துக்கட்டுவது வாளனுமான்
பலநாழும் மேய்த்துவந்தான்

## குதிரை தப்பித்து ஓடல்

பச்சைமாலுட புரவிதன்னை
ஒரு நாளத்தவேளையிலே
உலகளந்தோன் புரவியது

கட்டுத்தறிவிட்டவிள்ந்து தான்
கானவனத்திலோடினதே
தெருக்களென்ற தெருத்தாண்டி
சிறந்தவனத்திலோடினதே
கானவனங்கழுஞ் சோலைவிட்டு

கடுகவனத்திலோடினதை

## சேவல்முனிவர் குதிரையைப் பிடிக்க முயற்சித்தல்

சேவல்முனிவனத்தில் வந்து
தினைப்பயிரையளித்ததுவே
கடுவாய்புலிசிங்கமெல்லாம்
கடுகவந்துபயிரளிக்கவே

கண்டுகொண்டாரப்போ சேவல்முனி
கடுகப்புரவிதன்னருகே வந்தார்
முன்னே வந்தால் கடிக்குதல்லோ
பின்னேவந்தால்எறியுதல்லோ
தெய்வப்புரவியுங்கடிக்கவே

சீறிமிருகம்விரட்டிடவே

### சேவல் முனி சீதை பாலர்களிடம் முறையிடல்

ஆத்தமாட்டாமல் சேவல்முனி
அபையமிட்டே ஓடிவந்தார்
அபயமுறயம் அசலவற்க்கே
ஆபத்துக்குவந்துதகவேணும்

சேவல் முனிபோயபயமிட்டார்
சீதைப்பாலகரிருபே[ர]ரும்
அபயமிட்டசேவல்மாமுனியே
அவசரத்தை சொல்லுமென்ருர்
படபடென்று தான்பதறி

பாலரோடேயேது சொல்வார்
கடுவாய் புலியாளிசிங்கம்
காட்டில் வாழுமிறுகமெல்லாம்
ஆனைகுதிரைகடுவாய்கள்
எந்தனபயிரையளிக்குதையா

பச்சிபறவை வேங்கையெல்லாம்
பயிரளிக்க நான்விரட்டிவந்தேன்
ஆனைகுதிரையாளிசிங்கம்
அஞ்சுதில்லைநான்விரட்டுதற்க்கு
ஆபத்துக்குவந்துவேட்டையாடி

ஆயிளைப்பாலகரே காத்திடுவீர்

### சீதை பாலர்களை வாழ்த்தி அனுப்பி வைத்தல்

சேவல்முனிஅஞ்சி பதுங்குகையில்
சீதைபாலகர் வந்தடிதொழுதார்
அடிதொழுத பாலகரை
ஆவிக்கெட்டி சேற்த்தெடுத்தாள்

உச்சிபகுந்தவள் பிரியமதாய்
உள்ளங்காலைத்தாயார் முத்தமிட்டாள்
நெத்தியிலே நீறணிந்து
நீலவற்ணப் பொட்டுமிட்டு
மாமுனிவரிடுகாற்தீற்த்து

மக்களே போய்வாருமென்ருள்
மாதுசீதாலெச்சுமியாள்

---

11892. ஆத்தமாட்டாமல்—தாங்கமுடியாமல்
11906. வேங்கை—புலிவகை
11915. ஆவிக்கெட்டி—தழுவி

வாயாரவாள்த்தி விடைகொடுத்தாள்

### பாலர்கள் வேட்டைக்கு வரல்

விடைவாங்கி அசலவனும்
வீரமுள்ளதம்பி குசலவனும்

அம்புருத்துணியானதிலே
அம்புச்சரங்களைத் தெரிந்தெடுத்தார்
வச்சிரகணை வறணங்கழும்
மாயச்சித்திரக்கணையெடுத்தார்
மூன்றுமுக்கோடியம் பெடுத்தார்

முக்கோடிவாளம்பு கயிலெடுத்தார்
ஆனைசெவியம்பு தானெடுத்தார்
குதிரைசெவியம்பு கூட்டிக்கொண்டார்
எங்குமவர்போக ஒட்டாமல்
யிருட்டுக்கணையொன்று யெடுத்துக்கொண்டார்

ஓடுமிருகங்களைக் கொல்வதற்கு
ஓசைக்கணையொன்று கயிலெடுத்தார்
கோபமிறுகங்களைக் கொல்வதற்கு
கோதண்டபாண மெடுத்துக்கொண்டார்
தனக்குவேணுன்ன ஆயிதத்தை

சானகிபால ரெடுத்துக்கொண்டார்
சேவல்முனியைக் கூட்டிக்கொண்டு
சீதைபாலகர் வளிநடந்தார்
நாடுவனங்கழுஞ் சோலைவிட்டு
நடந்துவந்தார் சேவல் முனிவனத்தில்

தினைப்பயிரையளித்து நின்ற
சிறுமிறுகத்தைக் கண்ணில்கண்டோர்
யானைகுதிரை யாளிசிங்கம்
யிவர்கள்சரத்தாலே கொன்றதுவே
வனமிறுகம் பன்றிகழும்

மட்டுக்கணையாலிறந்த போது

### பாலர்கள் குதிரையில் உள்ள வாசகத்தைக் காணல்

சீதாதேவி பாலரிருபேரும்
தெய்வப்புரவி தன்னருகே வந்தார்
குதிரைலாடச் சேணத்திலே
கொடியவாசக மெழுதக்கண்டார்

என்னுடைய தம்பி குசலவனே
யேத்தபுரவியை நீபாற்த்தது
விலாடச்சேணத்துவாசகத்தை
விரவுடனே நீ பாற்த்துவாராய்
அண்ணருட்ட சொல்மாறுமல்

அக்குசலவன்வாசிக்கவே
திருமால்பெருமாழுக் கேற்க்காது
தெய்வேந்திரற்கு யேற்க்காது
தேசராசர்க்குமேற்க்காது
தீரனினேயோற்க்கு மேற்க்காது

பரதன்சத்துருக்கனுக்கேற்காது
பச்சை மாலுடபுரவியது
யிந்தபுரவிபிடித்தேறினவர்
ராமசாமிக்குப்பெண்கெ(ா)டுப்பாரே
என்றுசொல்லிவாசகந்தான்

எழுதியிருக்குது லாடத்திலே

## பாலர்கள் குதிரை மீதேறி வரல்

குசலவசுவாமியுஞ் சொன்னபோது
கொற்ற மன்னன் அசலவன்ருன்
அந்தப் புரவியைப்பிடியுமென்று
அசலவ சுவாமி சொன்னபோது

ஓடிவந்து குசலவனும்
ஒற்றபுரவியைப் பிடிக்கையில்
முன்னேபோனல் கடிக்கிறது
பின்னேவந்தால் எறிகிறது
கூகூவென்று சொல்லி

கொற்றமன்னன் சத்தமிட்டான்
அசலவசுவாமி சத்தங்கேட்டு
அவசரமாய் ஓடிவந்து
குதிரைமுன்னேதான்வரவே
குணமுடனே புரவியது

பண்டுபளகின புரவியைப்போல
பாலகனேக் கண்டவுடன்
வலத்தேவந்துசெவிதாத்தி
மண்டிபோட்டு அடிபணிய
குசலவனும் அசலவனும்

குதித்துப்புரவி மேலேறி
அடித்தானே புரவிதன்னே
அந்தவனம் முழுதுஞ்சுத்தி
வெண்ணேயுண்டோன் புரவிதன்னே
வென்னுரைக்கத் தானடித்தார்

சேவல்முனி வனங்கெளல்லாம்
செந்தூளாய் யெழும்புதல்லோ

11995. வென்னுரைக்க—வாயில் இருந்து நுரைதள்ள

கருந்தூழுஞ் செந்தூழும்
கதிரோனைக் கரப்புதல்லே
அந்தரத்தில் பறந்தோடிபுரவி

ஆகாசத்தில் ஓடுதல்லோ
சிறிராமர்புரவியது
தெய்வலோகம் பறக்குதல்லோ
கண்டிருந்து அசலவனும்
கன்னியரிடத்தில் போகவென்று

காடுவனஞ் சோலைவிட்டு
கலல்ஆறுபுல்லாறுவிட்டு
வால்மீகரிசிவனத்தில் வந்து
வன்னப்புறவியை விட்டிறங்கி
புரவிதன்னைக்கெட்டிவைத்து

பெற்றதாயாரை அடிதொழுதார்

### *சீதை, பாலர்களிடம் குதிரை பற்றிய செய்தி கேட்டல்*

அடிதொழுத பாலகரை
அன்னலெச்சுமிபாற்த்துரைப்பாள்
என்னுடைய பாலகரே
யிந்தப்புரவியையேன்பிடித்தீர்

ஆருடைய குதிரையிதோ
அளகறியப் போகுதில்லை
தேசராசாக்கள் புரவியிதோ
தெய்வேந்திரன் புரவியிதோ
அன்பத்தாறு தேசராசக்கள்

அவனியிலுள்ள புரவியிதோ
புரவியிப்படியளகிருக்க
புரவிக்குடையவரெவ்வளகோ
குதிரைவியாச்சியம்போலேவந்து
குசலகனே மகனே அசலவனே

சீதாதேவியுஞ் சொன்னவுடன்

### *பாலர் சீதையிடம் பதிலுரைத்தல்*

சிறப்புடனசலவனேது சொல்வான்
கட்டுத்துறையிலே அவுக்கவில்லை
கன்னமிட்டுக்கொடு வந்ததில்லை
வனத்தில் வேட்டையாடி வந்தோம்

வந்தகப்பட்டது பிடித்துவந்தோம்
எங்கள்புரவியாயிருப்பதினால்

---

11999. கரப்புதல்லே—மறைக்கின்றதல்லவா?

எங்களை நமஸ்காரஞ்செய்ததம்மா
என் தாயே மகாலெச்சுமியே
யிந்தபுரவியை விடவொண்ணுது 12035

புரவிக்குடையவர் வந்துகண்டால்
பெருகயெங்களையனுப்பி வைப்பாய்
பாலரிருபேரும் சொன்னபோது
பத்தினிசீதா லெச்சுமியாள்
புரவியைவிடச் சொன்னுலும் 12040

பிள்ளைகள் ரெண்டுங் கோளையாகும்
வாறதெல்லாம் வரட்டெனவே
மக்களுக்கு பசிதீர்த்தாள்

## அனுமான் இராமரிடம் குதிரை ஓடி சென்றதைக் கூறல்

யிப்படியாக யிருக்கையில்
யேத்த அய்யோத்தி நகர்தனிலே 12045

வாளனுமானேடி வந்து
மாயோனை பாற்த்தேது சொல்வான்
திருமால் பெருமாளே உம்முடைய
தெய்வப்புரவி யானதுதான்
கட்டுத்தறியை அவிள்த்துக்கொண்டு 12050

கானவனத்திலோடிப் போச்சுதையா

## இராமர், அனுமானிடம் குதிரையைத் தேடி கொண்டு வரல் கூறல்

வாளனுமான் சொல்லைக்கேட்டபோது
வைகுண்ட மூற்த்தி யேதுசொல்வார்
எட்டுதிக்கும் பதினுலுலோகம்
யீரேழுபதினுலு லோகம்மெல்லாம் 12055

எங்கெங்குந் தேடித்திரிந்து
எந்தன் புரவியைக் கொடுவருவாய்
பாற்த்து வருவாயென்று சொல்லி
பச்சைமுகில் வண்ணரனுப்பி வைத்தார்

## அனுமான் குதிரையைத் தேடி வரல்

கச்சை கெட்டிவாரிறுக்கி 12060

கார்வண்ணர் தூதனெழுந்தருள
அய்யோத்தியாபுரி தன்னைவிட்டு
அரிநெடுமாலுட தூதுவந்தான்
தெய்வலோக மானதிலே

---

12060. வார்—இடுப்புத்தோல்

உம்பர்லோகம் பரலோகம் 12065

உத்தபுரவியைக்காணுமல்
திருமால்புரவியைக்காணுமல்
திகைத்தனுமான் திரும்பிவந்தான்
நாடுபலபலதேசமிட்டு
நல்லமுனிவன்வனமுமிட்டு 12070

மாமுனிவருட சோலைவிட்டு
மரதகவல்லி வனமும்விட்டு
எட்டுத்திக்கும் பதினுலுலோகமும்
யீரேழு பதினுலுலோகமும்
ஒருவிடங்காணுமல் 12075

உலகளந்தோனுட தூதுவந்தான்
உப்பரிகையது தனிலேறி
உலகளந்தோனை தியானஞ்செய்தான்
ஒருதரம்ராமா வென்றுச்சரித்தால்
உடன்கூடுமெந்த(க்)காரியமும் 12080

பலதரம்ராமாராமா வென்ருல்
பலிக்குமெந்தக்காரியமும்
போனகாரியம்யிதுவரையும்
பொய்யாக(ா)தொரு நாழும்
தெய்வப்புரவியைக்காணுமல் 12085

திருமாலிடத்திலே போகலாமே

## அனுமான் குதிரையைக் கண்டுகொளல்

அழுதழுதுவாளனுமான்
அம்மலைமேல்நின்று பார்த்தான்
உப்பரிகை மலைதனிலிருந்து
யோசினைபார்த்து நிற்கையிலே 12090

வால்மீகர்ரிசிவனந்தனிலே
குதிரைவால் வீசுகிறதைக்கண்டுகொண்டான்
ஓட்டமும் பெருநடையுமாக
ஓடிவந்தான் வாளனுமான்
வடவாலமரத்தருகேவந்து 12095

மாயப்புரவியைக் கண்டுகொண்டான்

## அனுமான் புரவியைப் பிடித்தலும் பாலர்கள் தடுத்தலும்

சந்தோசமாக வாளனுமான்
தான்பிடித்தானந்த புரவிதன்னை

---

12065. உம்பர்—தேவர்
12081. பலிக்கும்—நடைபெறும்

அரிராமர்புரவியை அவிள்(க்)கையிலே
அப்போகுசலவன் கண்டுகொண்டான்

யேண்டாகுரங்கே வாளனுமானே
பிந்தப்புரவியையேனவிள்த்தாய்
கொம்பிலேறும் மரத்திலேறும்
குரங்குக்கு குதிரையுண்டோடா
என்றுரைத்தார் குசலவசுவாமி

அனுமான். பாலர்கள்போர்

யேதுசெய்தான் வாளனுமான்
குதிரைச்சவுக்கையை கயிலெடுத்து
கொடுத்தானேகுசலவனே
அடித்தஅடியோடே குசலவனும்
அனுமானைமாறித் தாளடித்தான்

அனுமராசன் குசலவனை
ஆரபாரத்தேடேதானடித்தான்
அனுமாரடித்ததுபொறுக்காமல்
அலறியழுதான் குசலவனும்
அடிபொறுக்க மாட்டாமல்

அண்ணார் அசலவர்க்கபயமென்றான்

அனுமான் தோற்றேடல்

அசலவசுவாமி சத்தங்கேட்டு
அந்தநிமிசத்தில் ஓடிவந்தார்
ஏண்டாகுரங்கே வாளனுமானே
என்னுடதம்பியை யேனடித்தாய்

காலுரெண்டையுந்தான்பிடித்து
கருமலைமேல் தூக்கியடித்தான்
அடிபொறுக்க மாட்டாமல்
அலறிசத்தமிட்டார் அனுமானும்
மலைமேல் அடித்தஅடியோடே

வாய்க்குள்ளிருந்த பல்தானுதிர
வாளனுமான் பல்லுதிர்ந்து
வாயை வாயைத்தான்பிளந்தான்
பிட்டியது முறிந்துபோச்சே
பிடரிகண்ணு மகன்றுபோச்சே

யினிப்பிளைத்தோம் பிளைத்தோமென்று
யிசலனுமான் விழுந்தோடலுற்றான்
ராமா ராமா வென்றுசொல்லி
நல்லனுமான் விழுந்தோடி
கானவனங்கமுழுஞ் சோலைவிட்டு

12129. பிட்டி — புட்டகம்
12130. அகன்று — விலகி

கல்லாறுபுல்லாறுமிட்டு
ஆண்டபடை வீடுதன்னைவிட்டு
அய்யோத்தி நகரில்வந்தானே

## அனுமான் இராமரிடம் செய்தி கூறல்

சிங்காசன மேடையானதிலே
திருமாலைவந்து அடிதொழுதான்

அனுமார் தன்னைக் கண்டபோது
அச்சுத நாராயணப் பெருமாள்
யேத்ததுரை வாளனுமானே
யெந்தன்புரவி யெங்கேயென்றார்
மாயவனார் கேட்டபோது

வாளனுமானேது சொல்வான்
மாயன் பெருமாளே கோபாலரே
வால்மீகர்வனத்தில் ரெண்டுபாலகர்கள்
தெய்வப்புரவியைக் கட்டிவைத்து
சிறந்தவனத்திலே காத்திருந்தார்

பேசாமல்போய் புரவிதன்னை
பெருமாளே நானவிள்த்தேன்
முன்னும் பின்னும் பாராமல்
முன்னடிப்பல்லை பறித்துவிட்டான்
முற்றிபெற்றேன் கோபாலர்

முகில் வண்ணரே சொல்லக்கேழும்
மலையெடுத்தேன் கடலடைத்தேன்
வல்லரக்கனோடு போருசெய்தேன்
மயில்ராவணனை நானுஞ்சென்று
மருமகனுக்கு முடிசூட்டிவைத்தேன்

யிலங்கைராவணன் கொலுவுக்குமேல்
யேற்றசிங்காசனம் போட்டிருந்தேன்
சீதாதேவியைக்கண்டு கொண்டு
திருவாளிமோதிரம் நான்கொடுத்தேன்
சூடாமணிமாலைதான் வாங்கி

சுவாமிக்கு அடையாளங் கொண்டுவந்தேன்
யிப்படிக்கொத்த பாலகரை
எங்கு ங்கண்டதில்லை என்கோவே
செத்திறந்துபோன யிந்திரசெயிற்று
திரும்பவும்வந்து பிறந்தானே

அனுமாருரைத்ததை தான்கேட்டு

---

12154. முன்னடிப்பல்—முன்வரிசைப்பல்

### இராமர், அனுமானிடம் லெட்சுமணரை அழைத்து வரக்கூறல்

அச்சுத நாராயணப் பெருமாள்
யென்னுடைய தம்பிலெச்சுமணை
யினிமேல் நாமென்ன செய்யப்போறோம்
அனுமானவரை வரவளைத்து

அரிகோபால ரேதுசொல்வார்
புரவியை அவிள்த்து விடுவாயென்று
புகள்பெறவே சொல்லிவருவாய்யென்றார்

### அனுமான் தடுத்துரைத்தல்

அந்த வாற்த்தை தனைக்கேட்டு
அனுமானவ ரேது சொல்வார்

எந்தவேலை சொன்னாலும்
யிந்தவேலை சொல்ல லாகாதையா
அனுமாரவருஞ் சொன்னபோது

### இராமர் அங்குதனை பாலர்களிடம் அனுப்பி வைத்தல்

அச்சுத நாராயணப் பெருமாள்
அங்குதனைத் தானளைத்து

அரிகோபால ரேது சொல்வார்
வால்மீகர்ரிசி மண்டபத்தில்
வன்னப்புரவியை பாலன் வைத்துக்கொண்டார்
பாலகரிடத்தில் நீயுஞ்சென்று
பாங்காய் போருக்கு வருவாயென்று

அதிக விரவாய்ச் சொல்லிக் கொண்டு
அங்குதனேயிப்போ நீவருவாய்

### அங்குதன் பாலர்களிடம் வந்து செய்தி கூறல்

அச்சுத ராமருஞ் சொன்னபோது
அங்குதனவ னோடிவந்து
அய்யோத்தியா புரிதன்னை விட்டு

அதிகவிரவாக ஓடிவந்தான்
காடுவனங்கழுஞ் செடிகடந்து
காண்டாவனங்கழுஞ்சோலைவிட்டார்
கடுநடையாய்நடந்து அங்குதனும்
வால்மீகர்ரிசி வனந்தனிலே

வன்னப்பாலகரிடத்தில் வந்தான்
அப்போதந்தப் பாலகர்கள்
அங்குதனைப்பாற்த்தேது சொல்வார்
வந்தவகையேது எங்கழுக்கு
வகையாகச் சொல்லவேணும்

அசலவசுவாமி கேட்டபோது
அரிராமர்தூத னேது சொல்வார்
புரவியதை விடுவீர்களோ
போருக்குநீங்கள் வருவீர்களோ
என்றுரைத்தா னங்குதனும்

யேதுசொல்லுவான் அசலவனும்
எந்தயிடத்தில் போருசெய்ய
எப்போதுவரவேணுமடாப்பயலே
குமடுமலையோரத்திலே
குஸ்திப்போர் செய்ய வருவீரென்று

## பாலர்கள்போருக்கு வரசம்மதித்தல்

அந்தவாற்த்தை தனைக்கேட்டு
அசலவனுங் குசலவனும்
போருசெய்ய நாளைவருவோமென்று
பெற்றதாயாரிடத்தில் வந்தார்

## அங்குதன் இராமரிடம் செய்திகூறல்

அந்தமொளிகேட்ட அங்குதனும்

அதிவிரவாக ஓடிவாரூர்
நாடும்பலபல சோலைவிட்டு
நந்தவனங்கழுங்காடுமிட்டு
பூமாரிபொன்மாரி பொத்தைவிட்டு
பொன்னுங்தெற்பக்குளங்கடந்து

அதிவிரவாய் வளிநடந்து
அய்யோத்தியில் வந்துசேற்ந்தான்
அச்சுதராமரை யடிதொழுது
அங்குதனு மேது சொல்வான்
மாயவரேசுவாமி ரெகுபதியே

வையகத்தையாண்ட பரஞ்சுடரே
அந்தப்பாலகர்க ளிடத்தில் சொல்லி
அன்புடன் நான்ஓடிவந்தேன்

## இராமர்படை திர்ட்டி, போருக்குவரல்

அந்தஉரை தனைக்கேட்டு
அச்சுதராமரு மேது செய்தார்

அய்யோத்தியபுரி நகர்தனிலே
அளகனிளையோனைதானிருத்தி
போருஞ்செய்ய நாமள்போவோமென்று
பூலோகநாதன் சொல்கையிலே
அச்சுதராமருஞ் சொன்னபோது

---

12216. குஸ்தி – மல்சண்டை
12224. பொத்தை – உயரங்குறைந்தமலை

அனுமராசனு மேதுசொல்வார்
படைமுகத்துக்குப் பெரியவன்காண்
பாலர்களை வெல்வதற்கு
தம்பியிளையோனும் யிங்கிருந்தால்
சமற்க்களத்தை வெல்லொண்ணாது

வாளனுமானுஞ் சொன்னபோது
மாயராமருமேது சொல்வார்
என்னுடையதம்பி லெச்சுமணா
எழுப்பவேணும் பாளையத்தை
பாலருடதிறமை பாற்க்க

படையெழுப்பாய் போய் வருவோம்
அன்பத்தாறுதேச ராசாக்கள்
அறுபதினாயிரம் மந்திரிமார்
யிருபத்திநாலு படைத்தலைவர்
எழுபதுவெள்ளம் வானரங்கள்

மயிந்தன் குவிந்தன் சாம்புவனும்
வாலிமகன் அங்குதனும்
தாரகை மணவாளன் சுக்கிறீபன்
சுவாமிபெருமாள் கூட்டியெழுப்ப
தன்னுடதம்பி மூபேரையும்

சுவாமிநாயகர்பாற்த் தேதுசொல்வார்
பரதன் அய்யோத்தியை ஆண்டிருக்க
பச்சைமால் யிளையோன் சத்துருக்கன்
சாந்துபுனுகு சந்தணங்கள்
சுவாமிதம்பிமா ரெடுத்தணிந்தார்

தங்கமுடியது எடுத்தணிந்தார்
சரப்பளி மாலைகளது பூட்டிக்கொண்டார்
வயிரவயிடூரியம் மார்பதிலே
வகையுடன் மே(ா)கனமாலை யணிந்தார்
கொத்துச்சரப்பளி முத்துமாலை

கோதண்டமாலை பூண்டு கொண்டார்
அம்பு அம்புறுத்துணி கையிலெடுத்து
அம்புசரங்களைத் தெரிந்தெடுத்தார்
வாய்வு கணையோடு வற்ணக்கணை
மாயமால வித்தைக்கணையெடுத்தார்

மூன்றுமுக்கோடி அம்பெடுத்தார்
முக்கோடி வாளம்பு கையிலெடுத்தார்
நாகக்கணையோடு நச்சுக்கணை
நல்லபெருமாளும் எடுத்துக் கொண்டார்
மாயமால சித்திரக் கணையெடுத்து

மாயவரைக் குறித்துதவமும் செய்தார்
ராமபாணக் கணையெடுத்து

ராமலிங்கரைப் பூசைபண்ணி
ஆயிரமணி முடித்தேரதிலே
அச்சுத ராமருந்தேரேறி

தேரின்மேலே தானிருந்து
தேரை நடத்தினர் ராமசுவாமி
அண்டபகி ரண்டங்கிடுகிடென
அளகு கதிரோன் ஒளிமறைய
தேவாதிதேவர் குரவையிட

தெய்வலோகப் பெண்கள் நடம்புரிய
எட்டுமலை மேலிட்டதுபோல
யீரேழுபதினலு லோகமெல்லாம்
பூமாரி பொன்மாரி பொளிந்தோங்க
பூலோகந(ா)தன் போர்க்கு வந்தார்

தம்பூரு வீணைதான் முளங்க
தானே புல்லாங்குளலூத
அய்யோத்தி பட்டணந்தன்னைவிட்டு
ஆண்டபடைவீடு தன்னைவிட்டார்
காடுவனங்கழுஞ் செடிகடந்து

கால்லாறுபுல்லாறு தானுமிட்டு
புலிகரடி ஆளிசிங்கம்
போரானைவனங்கடந்து
உதயகிரி மலைபறுபதத்தில்
உடனேபாளையந் தானெழும்பி

எட்டணியாய் படைவகுத்து
என்பெருமாமுட பாளையத்தை
அணிஅணியாய் படைவகுத்து
அச்சுதராமருங் கொலுவிருந்தார்
தம்பியிளையோன் சத்துருக்கன்

சுவாமிநாயகரைச் சூள்ந்துநிற்க

*பாலர்களிடம் சீதைபோர்புரியும் முறை கூறி*
*அனுப்பல்*

யிப்படியாக யிருக்கையிலே
யேந்திளையாள்சீதை பாலகர்தான்
மத்தாளயோசை காதில்கேட்டு
மாதுசீதை பாலரேதுசெய்தார்

என்தாயேஅம்மா லெச்சுமியே
எங்களைவளர்த்த மாதாவே
புரவிக்குடையவர் தானுமிங்கே
போருக்குநாளை வாருன்
எந்தஊர்ராசாவோ

யின்(றெ)றக்குப்போருக்குவாறான்
ஆகையினாலே என்தாயே
அனுப்பிவைப்பாய் எங்களைத்தான்
பாலரிருபேரும் கேள்க்கையிலே
பத்தினிசீதையேது சொல்வாள்

வம்புபண்ண வேண்டாம்என்மேலே
வலியசண்டையையிழுத்துக் கொண்டாய்
வாடிமனந்தான் சடைத்து
மாதுசீதையேது சொல்வாள்
புரவியைவிடச் சொன்னாலும்

பிள்ளைரெண்டுங் கோளையாமே
போருக்குப்போக வேண்டாமப்பா
பொறுங்கள் கொஞ்சமென்றுரைத்தாள்
தாயார்சொன்ன வார்த்தையினால்
தானேகோபங் கொண்ட[ண]வனும்

மாதாவேவரந்தாராதேபோனால்
வாழுக்கிரையாய் உயிர்விடுவேன்
குளந்தைஅசலவன் சொன்னபோது
கோபத்தையமத்தி லெச்சுமியாள்
அஞ்சவேண்டாம் பதறவண்டாம்

அப்பாமகனே அசலவனே
படையுமில்லை சேனையில்லை
பாரஆயுதங்கள் தானுமில்லை
மிதுலாபுரி நகர்தனிலே
வில்வளைத்து என்னைமாலையிட்டார்

மெல்லியாள் என்னைமாலையிட்டு
வேறொருவர்முகம் பார்க்கவில்லை
என்றுசொல்லி உங்களையா
என்னுடன சத்தியமாகச்சொல்லி
கற்ப்புச்சூடா மணிமாலைதன்னை

களத்திஅடையாள மாலைதந்தார்
அந்தமாலையிருப்பதினால்
ஆருக்கும்மகனே நீஅஞ்சவேண்டாம்
கற்புச்சூடாமணி மாலைதன்னை
களத்திக்கொடுத்துயேது சொல்வாள்

போர்களத்தில் படைநெருங்கி
போர்செய்து மகனேநிற்க்கையிலே
எதிரிப்படை நெருங்கிவந்தால்

---

12327. வலிய—தானாக

12339. அமத்தி – தணியச்செய்து

யிருவர்கண்ணையும் பொத்திக்கொண்டு
சூடாமணிமாலையொளிவைக் காட்டு

துண்டுதுண்டாய் மயங்கிடுவார்
விழுந்தபாளையம் எழுப்பவென்றால்
விபரஞ்சொல்லுவேன் நீயுங்கேளு
யிருபேர்கண்ணையும் பொத்திக்கொண்டு
யிடதுகையால் மாலையைகளத்திவிடு

மாண்டிறந்துபோன பாளையங்கள்
மடமடென்று எழுந்திருக்கும்
அப்பாமகனே குசலவனே
ஆராகிலும் ஒருவர்காணுதபடி
துடையில் மாலையைத்தான்தரித்து

சுகமாய்போருக்குப் போய்வருவாய்
வாயாரவாள்த்தியே லெச்சுமியாள்
மக்களிருபேர்கழுக்கும்
செந்தூரப்பொட்டுமிட்டு
திருச்சக்கர நாமந்தானுமிட்டு

சாந்துபினுகு சந்தணங்கள்
தன்னுடபாலருக்கே யணிந்தாள்
கொத்துச்சரப்பளி முத்துவடம்
கோதண்டமாலை பதைக்கனிட்டாள்
வயிரவைடூரியம் மார்பதிலே

வயிரமோகனமாலை தானணிந்தாள்
சதங்கைதண்டையு மெடுத்தணிந்து
தாவடமாலையும் பூண்டுகொண்டார்
வால்மீகர்ரிசியை அடிதொழுது
மக்களேபோருக்கு போங்கோவென்றாள்

## *வால்மீகமுனி பாலர்களை வாழ்த்தி அனுப்பல்*

தாயார்சொன்ன சொல்தட்டாமல்
சானகி பாலரிருபேரும்
யின்றைக்குப் போருக்குப்போவதற்கு
எங்கழுக்குவிடை தாருமையா
அஸ்திரவித்தையெல்லாம் அறிவதற்க்கு

அம்புசரங்களைத் தாருமையா
சானகிபாலருங் கேட்டபோது
தவமுனியானவ ரெழுந்திருந்து
அம்பு அம்புறத்துணியிலே
அம்புசரங்களை தெரிந்தெடுத்து

---

**12360.** ஒளிவை—ஒளிலை

பாலரிருபேர்க்கைக் கொடுத்து
படைகளை வென்று வருவீரென்று
செல்லப்பாலருக்கு விடைகொடுத்து
தெய்வலோகம் போனார் மாமுனிவர்

### பாலர்கள் போருக்கு வரல்

மாமுனியிடத்தில் விடை வாங்கி
வற்ணப்புரவி யருகே வந்தார்
தெய்வப்புரவி தன்னோடே
சீதைபாலரேது சொல்வார்
சண்டைசெயித்து வந்தோமானால்
தங்கக்கடுவாளம் செய்துவைப்பேன்
என்றுசொல்லி பாலகர்கள்
யேறினாரவர் புரவியிலே
லகானையிழுத்து சிமிட்டாக் கொடுத்து
நலமுடனே அசலைவனும்
சந்தோசத்துடன் பறக்கிதுபார்
தரிகிடதொம்மென்றடுதுபுரவி
தொந்தந்தொங் தோம்தொம்மெனவே
துள்ளிவிளையாடுதுபுரவி
அண்டபகிரெண்டங் கிடுகிடென்ன
அலைகதிரோன் ஒளிமறைய
யிடமலையிலிடி பட்டதுபோல
யீரேழுபதினாலு லோகம் நடுங்க
தேவாதி தேவர் குரவைபாட
தெய்வலோகப் பெண்கள் நடம்புரிய
பூமாரி பொன்மாரி பொளிய
புகள் பெரியபாலர் போருக்கு வாறார்
வால்மீகர்ரிசி வனங்கடந்து
வாணுதல்பாலர் போருக்கு வாறார்
காடுவனங்கழுஞ் சோலைகடந்து
கமலக்கடம்பாறு தானுமிட்டு
சேவல்முனி வனங்கடந்து
தெய்வநாடக சாலைவிட்டு
உதயகிரிமலை பறுபதந்தன்னில்
உத்தபுரவியோடே அமர்ந்திருந்தார்

### இராமர் பாலர்களைக் கடிந்துரைத்தல்

புரவிமேல் பாலரைக் கண்டபோது

---

12405. கடிவாளம்என்பதுகடுவாளம் என்று எழுதப் பட்டுள்ளது.
12408. லகான்—கடிவாளம்
12408. சிமிட்டாக் கொடுத்து—தட்டிக்கொடுத்து

புத்தியில்லாதபாலரென்று
அச்சுதராமருங்கண்ணில் கண்டு
அறியாத மதலையென்று சொல்லி
ஓடிப்போ வாரென்று சொல்லி
உலகளந்தோனேது சொல்வார்

உன்தகப்பன் நீசனோடா
உன்தாயார் நீலியோடா
தகப்பனிருந்ததுண்டால்
சமரிலே உங்களை விடுவானோ
யிராமபாணத்துக்கிரையாக

போகாதேபுரவியை விட்டுவிடு
பாலாஉங்களைக்கொல்ல மனம்வருமோ
படுகளத்தைவிட்டு ஓடிப்போடா
ஓடிப்போடாவென்ற சொல்லை

## இராமர், பாலர்கள் போர்

உத்தமிபாலர்கள் கோபங்கொண்டு

போர்க்களத்தில் வந்தயென்னை
போபோவென்று முடுக்கலாமோ
யிருபேர்சமரத்தையும் பாற்க்கவென்று
எதுத்தானே அந்தஅசலவனும்
எதுத்தவருடதிறமறிய

யிப்போதுபாற்க்க வேணுமென்று
அசலவசுவாமியுஞ் சொன்னபோது
அரிராமர் சரந்தொடுத்தார்
வலியஅம்புசரம் வருகிறதே
வாள்கத்திமுனைப்பாணம் வருகிறதே

வீரமாய் சித்திக்கணை வருகிறதே
விரவுடன்அரிராமர் தொடுத்துவிட்டார்
மாயன்பெருமாளிட்ட சரமதுதான்
மாதுசீதை பாலரிடமதிலே
காரிகாலமலைபோலே வந்து

கடுகமலையாய் பொளிந்திடுமாம்
கண்டிருந்து அசல(வ)சுவாமி
கைதட்டிச்சிரித்துக்கொண்டார்
வாரும்பிள்ளாய் தம்பியரே
வாருங்கணைகளைத் தொடுக்கவேணும்

---

12536. நீசன்—கொடுமைக்காரன்
12437. நீலி—கொடுமைக்காரி
12447. முடுக்கல்—மிரட்டல்
12454. வலிய—பெரிய

என்றுசொல்ல அசல(வ)சுவாமி
எண்ணியீராயிரங்கணை தொடுத்தார்
குளந்தை பாலன்விட்டகணை
கோபாலர்மேல்பூவாய் சொரிய
கண்டிருந்து அரிகோபாலர்

கைதட்டிராமருஞ் சிரித்துக்கொண்டார்
அவருடசரமும் யிவர்சரமும்
அரைநிமிசத்தில் வெல்லவேணும்
என்பெருமாளதிகோபமதாய்
யிப்போதவர்களைக் கொல்லவேணும்

மாயன்கோபத்தைக் கண்ணில்கண்டு
மன்னன் அசலவனேது செய்தான்
அண்டரண்டங்கிடுகிடென்ன
அலைகதிரோன் ஒளிமறைய
எட்டுமலையிடி வெட்டினுப்போல

யீரேழுலோகமும் நடுநடுங்க
சாணுக்குச்பாண் பறியாமல்
தனைபடிபோர்கள் செய்தார்
மாமுனி கொடுத்த வில்லெடுத்து
மன்னன் அசலவன் தொடுத்துவிட்டான்

குளந்தை பாலன் விட்டகணை
கோபாலர் மேனியில் பூச்சொரிய
கண்டிருந்து அரிகோபாலர்
கார் வண்ணருஞ் சந்தோசமாய்
என்னுடைய தம்பி யிளையோனே

யேத்தபாலன் தோத்துப்போவான்
யிந்தபாலனைக் கொல்வதற்க்கு
யினியென்னதம்பி யோசனைகள்
ராமபாணக்கணை கையிலெடுத்து
ரெண்டு பாலகர் தலையறுக்க

ராமசுவாமியும் அப்போது
ராமபாணத்தைத் தொடுத்துவிட்டார்
அப்போதந்த ராமபாணம்
அன்னலெச்சுமி பாலரென்றறிந்து
பாலர்தலையை மூன்று நேரஞ்சுத்தி

பச்சைமாலிடத்தில் வந்ததுவே
கண்டிருந்து அரிகோபாலர்
காற்வண்ணரும் பரிதவித்தார்
என்னுடையதம்பி லெச்சுமணா
யிளையபெருமானே என்கோவே

---

12491. தோத்து—தோல்வியடைந்து

என்னசெய்யப் போறேனினி
யேத்தபாலன்நம்மை வென்றுபோவான்
கடலைசூடிகின்ற ராமபாணம்
கண்டுவணங்கியே வந்ததுவே
எல்லாப்பாணமும் பொய்த்தாலும்

ராமபாணம்பொய்யா தென்றிருந்தேன்
தாடகைப்பெண்ணைக் கொன்றபாணம்
தானேராச்சதன் தலையறுத்தபாணம்
கரதூசணனைக் கொன்றபாணம்
கடுகவாலிமார்பைப் பிளந்தபாணம்

கும்பகற்ணன் முண்டமதை
கொடுங்கடலிலே தாள்த்தபாணம்
பத்துதலைராவணனை
பதறகரத்தோடேயறுத்தபாணம்
தேவாதிதேவரிடு(க்)கந்தீற்த்து

சீதையைச்சிறை மீண்டபாணம்
எல்லாகணைகளும் பொய்த்துப்போச்சே
என்னசெய்யபோறேனினி
மாயன்படுகிற துயரங்கண்டு
மன்னன்யிளையோனும் யேதுசெய்தார்

எட்டணியாப் படைகளை வளையவிட்டு
என்னுடையஅண்ணா ரகுராமா
யானுமொருமதி சொல்லுகிறேன்
யிருவரையும் பிடிக்கவேணும்
யிளையபெருமாளுஞ் சொன்னபோது

என்பெருமாளும் மனந்தேறி
அந்தரத்தில் பறக்கஒட்டாமல்
அரிராமர்கணைவிட்டு மறித்துக்கொண்டார்
யிருபேர்பாலரைப் பிடிக்கவாரார்
எதிராளி வாற[த்]தை கண்ணில்கண்டு

என்னுடையதம்பி குசலவனே
யினியென்ன நாமள்செய்யப்போறோம்
யிப்போது நம்மைபிடிக்கவாரார்
ஓடஒருவளியுமில்லை
ஒதுங்கியிருக்கயிடமும்யில்லை

ஆகாசமாற்க்கமாய்ப்பறக்க வென்றால்
அங்கேகணைவிட்டு மறித்துக்கொண்டார்

---

12516. முண்டம்—தலையில்லாத உடல்பகுதி
12517. தாள்த்த—ஆழ்த்திய
12526. வளைய – சுற்றி
12528. மதி—புத்தி

பூமிய ———————————
பொட்டெனவந்து பிடித்துக்கொள்வார்
கையிலாயுத வித்தையில்லை
காவலனே தம்பிகுசலவனே
தாயார்தந்த சூட(ா)மணிமாலை
தானே ஒருகணை யிருக்குதடா
தாயைச் சிறந்தது கோவிலில்லை
தாயர்வித்தையும் பாற்க்கவேணும்
என்னுடதம்பி குசலவனே
உன்னுடகண்ணைப் பொத்திக்கொள்வாய்
என்றுசொல்லி அசலவசுவாமி
தன்னுட கண்ணையும் மூடிக்கொண்டு
துடையில் கெட்டியிருந்த சூடாமணியை
துருசமுடனே தானவிள்த்தார்
வலதுகைப் பெருவிரலாலே
மாலைதன்னைக் களத்திவிட்டார்
அரிராமருட படைகளெல்லாம்
அலறிக்கதறியே விழுந்திடுமாம்
படைகளெல்லாம் விழுந்தபோது
பாலரிருபேருமேது செய்தார்
தங்கமுடிதன்னைத்தானெடுத்து
தலைதனில் தரிக்கவென்று
மாயவனார் தங்கத்திருமுடியை
மைந்தன் அசலவன்தானெடுத்து
தன்னுடைதலைதனிலே
தங்கத்திருமுடிதன்னை வைத்தான்
எந்தன் முகத்துக்கிந்தமுடி
யேதுவடிவுசொல் குசலவனே
அசல(வ)சுவாமியுங் கேட்டபோது
அப்போதம்பி குசலவனும்
தங்கள் முகத்துக்குயிந்தமுடி
சரியாயிருக்குது அண்ணாச்சி
யிப்படியிருபேரும் சொல்லிநிற்க்க
என்பெருமாளரி கோபாலர்
திடுதிடென்று தான்முளித்து
திருமாலேறிட்டுத்தான் பாற்த்தார்
தங்கத்திருமுடிதான் பாற்த்து
சமரிலே பாலர் நிற்கக்கண்டார்
கண்ட பொழுதந்த கோபாலர்
கார்வணர்தலையை தடவிப்பாற்த்தார்
திருமுடிதன்னைக் காணாமல்

12552. பொத்தி—கையால்மூடி
12574. அண்ணாச்சி—அண்ணன்

திருமாலும்நின்று பரிதவித்தார்
பள்ளிகொண்டோருட முடிதரிக்க

பரமசிவனும் பொறுத்தாரோ
பூமியளந்தோன் முடிதரிக்க
பொறுத்துயிருந்தாளோ பூமாதேவி
மேகநாதன் முடிதரிக்க
மெல்லிசீதையாளறியாளோ

வனத்தில்பாலரென் முடிதரிக்க
மாதுபத்திரகாளி பொறுத்தாளோ
தேவாதிதேவ ரறியாரோ
திருமுடிதன்னை நீதரிக்க
பாலர்எந்தன் முடிதரிக்க

பாற்த்துயிருந்தாளே யீஸ்பரியாள்
உலகளந்தோன்முடிதரிக்க
உறங்கிவிட்டாளோ கங்காதேவி
ஆனாலும் எந்தன்முடிதரிக்க
அவன்தலை தாங்கிவிட்டதுவே

ஆளிவண்ணர் முடியைதலையில்வைக்க
ஆருக்குந்தலை பொறுக்காதே
தேவிலெச்சுமி பாலகனை
யிந்தநல்லகுளந்தைகளை
யினிசோதிக்க வேணுமென்று

## இராமர், பாலர்கள் உரையாடல்

அரிராமர் வந்துநின்று
அசலவனை முகம்நோக்கி
உங்கழுடைய ஊரும்பேரும்
உண்மையுடன் சொல்லவேணும்
உம்முடைய ஊரும்பேரும்சொன்னால்

என்னுடையஊரும்பேரும் சொல்வேன்
அரிகிட்டினர் சொன்ன வார்த்தையோடே
அசலவசுவாமியேது சொல்வார்
பெரியோர்கள் பிறப்பைச் சொன்னால்
பின்னாலே எங்கள்பேரு சொல்வேன்

அசலவசுவாமி சொன்னபோது
அரிகோபால ரேது சொல்வார்
நாங்களிருப்பது அய்யோத்தியாபுரி
திசதரராசன் எங்களையா
கோசலை கைகேசி சிமித்திரரசி

கொடியிடை மூபேரை மாலையிட்டார்
கோசலைபிராட்டி பெற்றபிள்ளை
கோபாலராமன் என்பேர்தான்

கைகேசி பிராட்டி பெற்றபிள்ளை
கடுகபரதன் சத்துருக்கன்

சிமித்திரைபிராட்டி பெற்றபிள்ளை
தீரன்யிளைய பெருமாள் தான்
ஆகநாங்கள் நாலுபேர்கள்
அண்ணன்தம்பி மார்களென்றார்
திருமால் பெருமாள் சொன்னபோது

சிறந்தஅசலவ சுவாமிசொல்வார்
நாங்களிப்போதிருப்பது வனவாசம்
எங்களையாபேர் தெரியவில்லை
தாயார்பேர் சீதாலெச்சுமியாள்
தன்னுடைபேர் அசலவசுவாமி

என்னுடைய அருமைத்தம்பி
யிவர்தான் குசலவசுவாமி

### இராமர் பாலர்களிடம் தந்தை பெயர் அறிந்து வாருங்கள் எனல்

தம்பியால்வந்த சதிகேடென்று
தரணியளந்தோன் சிரித்துக்கொண்டார்
தகப்பனில்லாப்பெட்டி மக்களே
தந்தைபேர்கேட்டு வாருங்கடா

### பாலர்கள் சீதையிடம் நடந்த வரலாறு கூறல்

சுவாமிநாயகர் சொன்னபோது
சானகிபால ரிருபேரும்
கோபங்கொண்டு அசலவனும்
கூறுவார(ா)ந்தம்பியிடம்
என்னுடதம்பி குசலவனே
யேற்றசமரிலிவன் தோற்றதினால்
கைகேசி பிராட்டிபெற்றபிள்ளை
கடுகபரதன் சத்துருக்கனுண்டு
சிமித்திரா பிராட்டிபெற்றபிள்ளை
தீரன்யிளையபெருமாளாம்
ஆகையால் நாங்கள் நாலுபேரும்
அண்ணன்தம்பி மார்களென்றார்
நம்முடைய தயாரிடமதிலே
நடந்தசெய்தி சொல்லவேணும்
என்றுசொல்லியந்த பாலகர்கள்
யேகிநடந்தாரே தாயாரிடம்
தாயாரிடந்தனிலே வந்து
சமரில் நடந்த விபரஞ்சொன்னார்
தகப்பனில்லாப் பெட்டிமக்களே

தகப்பன்பேர்கேட்டு வாருமென்றார்
ஆனாதினாலென் தாயே
அய்யாபேரைச் சொல்லுமென்றார்

### சீதை பாலர்களிடம் முன் வரலாறு கூறல்

பாலரிருபேரும் சொன்னபோது
பத்தினிசீதையு மேதுசொல்வாள்
அவர்தானே உங்களையா
அச்சுதர்பற்தாவ்வை யிளந்தேன்
உங்கள் அய்யாவை கொல்வதற்கோ
உங்களைப் போருக்கு அனுப்பிவைத்தேன்
மயங்கி பெருமூச்சிவிட்டு

வாணுதல் சீதை கீளவிழுந்தாள்
என்றைக்கு நான்காணப் போறேன்
என்னுடைய மன்னவரை
யிராவணசங்காரஞ் செய்தவரை
யின்று கொன்றாயோ என்மகனே

அங்கே நீங்கள் போனதுவும்
அடுத்துப் போர் செய்ததுவும்
நான் அறியாமல் யிருந்தேனே
அச்சுதரை கொன்றாயோ மகனே
தகப்பனென்றும் பாராமல்

தாரணியில் கொன்றீரோ
சமர்களத்தில் கொன்றுவிட்டு
நீ தங்க முடிதரிக்கலாமோ
யிளைய பெருமாளும் ராகவரும்
எழுபது வெள்ள வானரமும்

யிறந்தாரோ உந்தன்கையாலே
யினந்தெரியாத பாலர்களே
ஒரு நாளுந்தோராத
உலகளந்தோர் ராமபாணம்
உன்முன்னே தோற்றதினால்

உலகளந்தோன் பட்டாரோ
கைகேசி சாபமது
கடரநாளாச்சுதென்று

---

12663. சண்டாள மதர் நாயகம் பிள்ளை என்னும் கதைப்-பாடலிலும் வேலாயுதம்பிள்ளை என்னும் பையன் தன் தாயிடம் வந்து 'தந்தை பேரைச் சொல்லு' என்று கேட்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

12667 பற்தா — கணவன்

12693. கடர — கழிய

நானுங்களி கூர்ந்திருந்தேன்
நமக்குயிப்படி வந்ததடா

வரும் விதியை அறியாமல்
மகனே வரந்தந்துவிட்டேன்
மாயோனை நானிளந்தேன்
மகாவிஷ்ட்டுணுவை யென்றுகாண்பேன்
பரதனு மிறந்தாரோ

பாரலெச்சுமண ரிறந்தாரோ
படைத்தலைவ ரளிந்தாரோ
பாலன்அனுமனி றந்தானோ
மாமியார் மூபேரும்
மகனே அசலவனே

பச்சைமாலுந் தம்பிமாரும்
படைகளையும் எழுப்பாவிட்டால்
பாலகனே அசலவனே
பாரமலையிலே மடிந்திடுவேன்
தாயார்படுகிற துயரங்கண்டு

## பாலன் இராமர் பாளையத்தை எழுப்பல்

தார்வேந்தன் அசலவனும்
தந்தை என்று நானறியாமல்
சதிகேடானது செய்துவிட்டேன்
முன்னமே தந்தைபேர் சொன்னயானால்
மோசம்வாராதென் னையாவுக்கு

அரச்சணத்திலே நானுஞ்சென்று
அய்யாவையெழுப்பி வாறேனம்மா
ஒன்றுக்கும்நீ அஞ்சவேண்டாம்
ஒன்னுதல் தாயே லெச்சுமியே
அஞ்சவேண்டாம் பதறவேண்டாம்

அய்யோத்திராமரை எழுப்பிவாறேன்
கார்வணர்ராமரை நானெழுப்பி
கண்முன்னேகூட்டி வாறேனம்மா
மாயோனை எழுப்பிவருமளவும்
மனக்கவலையற்று நீயிருப்பாய்

குளந்தைபாலகன்சொன்னபோது
கேபாலர்தேவியு மேதுசொல்வாள்
என்னசெய்வேன் யேதுசெய்வேன்
யிக்கொடுமை யுண்டேயினக்கு
யேணிவைத்தென்னை யேறச் சொல்லி

யேணியைக்கீனே வலித்துவிட்டாய்

---

12731. வலித்து—இழுத்து

ஆனாலும் அம்மா என்தாயே
அவசரப்படாதே எழுப்பிவாறேன்
சூடாமணிமாலை கையிலிருக்க
துருசப்படவேண்டாந்தாயாரே

சூடாமணிமாலைதனையவிள்த்து
சுவாமியுட பாலையத்தை எழுப்பவென்று
வலது கையாலே யிருகண்ணைப் பொத்தி
யிடதுகையாலே மாலைதானெடுக்க
தேவாதி தேவர்குரவைபாட

சூடாமணிமாலை களத்தி யெடுத்தார்
அந்தரத்தேவர் துந்துமிபாட
அச்சுதபாலையம் எழுந்திருக்க
எழுபதுவெள்ளம் வானரமும்
யேத்தசத்துருக்கரும் உயிர்தேற

வானோர்கள் பாற்த்திருக்க
தெய்வப்புரவி மேலேறிக்கொண்டார்
தேரின் மேல் சாரதி தானோட
தெய்வமடவார் குரவைப்பாட
அண்டபகிரண்டங்கிடுகிடென்ன

அலைகதிரோன் ஒளிமறைய
தெய்வலோகப்பெண்கள் நடம்புரிய
பூமாரிபொன்மாரி பொளிய
பூலோக நாதர்தேரேறிவாறார்
சங்கீதமேளதாள முளங்க

சானகியைத்தேடி மாயன்வாறார்
எழுபதுவெள்ள வானரமும்
யேகப்பெருமாளைச் சூள்ந்துவர
தம்பிமாரும் சேனைகளும்
சுவாமிபெருமாள் சேற்த்துக்கொண்டார்

உதயகிரிபறுபதமுங் குமடுவிட்டு
உலகளந்தோன் தேரேறிவாறார்
காடுவனங்களுஞ் சோலைவிட்டு
கல்லாறு புல்லாறுமிட்டு
வால்மீகர்முனி மண்டபத்தில்

மன்னர்யாபேரும் வந்துசேற்ந்தார்
குதிரையைவிட்டுக் கீளிறங்கி
கோகுலையிடத்தில்வந்து அசலவனும்
என்னுடதாயே லெச்சுமியே
எங்களையாவை யெழுப்பிவந்தேன்

12748. சாரதி—தேரோட்டி
12768. கோகுலம்—குயில்

ஆயிரமணிமுடித்தேரதிலே
அவருடைய படைகளெல்லாம்
சேனைப்படையோடே வந்திருக்கிறுர்
தெண்டனிட்டுக் கூட்டியே வருவோம்

## சீதை இராமரை வணங்கல்

குளந்தைஅசலவர் சொன்னபோது

கோகுலாளந்த லெச்சுமிதேவி
வாணுதல்சீதையும் பிள்ளையுமாய்
மண்டபமிட்டு வெளியேவந்தார்
தேரைமூன்று நேரஞ்சுத்திக்கொண்டு
தெண்டனிட்டா ரொருமுகமாய்

தேவாதிதேவர் சிந்துதான்படிக்க
தெய்வமடவார் குரவையிட
அந்தரத்தேவர் சங்கீதம்பாட
அலைகடலில் சங்குமுளங்க
தம்பூருவீணை தான் முளங்க

சாமண்டலத்தாரை தான்முளங்க
அன்றவரைக் கண்டகமகிள்ந்து
ஆயிளைசீதையுஞ் சந்தோசமாய்
பதினலு வருசமட்டும்
பச்சைமால் எப்போவருவாரென்று

அழுதகண்ணுஞ் சிந்தையுமாய்
அச்சுதரே நானிருந்தேன்
அன்று வாடினகமலமுகம்
இன்று வாட்டந்தீற்ந்ததுவே
உங்களுடன் போருக்கு வந்ததுதான்

உலகளந்தோனே நானறியேன்
அறியாமல் நானடியாள்
அளகு சூடாமணி மாலைதன்னை
குளந்தை அசலவன் கைக்கொடுத்து
கொடும்யுத்தங்களைச் செயிப்பாயென்று

குளந்தைகளையனுப்பிவிட்டு
கொடும்பாவி நானிருந்தேன்
வரும்விதியை அறியேன்
மாயவரே பொறுத்தருள்வீர்
சரணமிட்டுச் சானகியாள்

---

12781. சிந்து — யாப்புவகை
12786. சாமண்டலத்தாரை — இசைக்கருவி
12793. கமல முகம் — தாமரைமுகம்
12794. வாட்டம் — சோர்வு

சாமி நாதரைத்தொழுதுசொல்வாள்
வில்முறிக்கச் சொன்னதொரு
வீரமுடைய பரசூரன்
அஞ்சிபதறியே பரசூரன்
அடைக்காலங்காரும் என்றதினுல்

பரசூரனென்ற பேர்மாத்தி
பரசுராமனென்று பேர்கொடுத்தீர்
அன்றுஅவர்களைக்காத்தது போல்
யின்றுஎங்களைக்காருமையா
சிறியோர்கள் செய்தகுற்றம்

சிந்தைதனில் சற்றும் எண்ணுமல்
பெரியோர்கள் பொறுக்கவேணும்
பிள்ளையடியாள் செய்தகுற்றம்
பூலோக நாதா மாயவரே
பொறுத்தருள வேணும் புண்ணியோரே

பிள்ளைகள் தான் செய்தகுற்றம்
பிராணநாத பொறுத்தருளும்
சீதை(யு)ம் பிள்ளைகளும்
சென்றடி தொழுதுநிற்கையிலே

## இராமர் சீதையை பழித்துரைத்தல்

கார்வணராமர் மனதிரங்கி

கன்னிசீதயைப் பாற்த்துரைப்பார்
என்னுடபெண்ணே லெச்சுமியே
யிரண்டுபிள்ளையுந்தனக்கு
உலகம்ஆளப் பிறந்தவந்தான்
உத்தஎன்மகன் அசலவனதான்

அளகுநல்லகுசலவன்தான்
ஆருடையபிள்ளையிது
கானவனத்திலே வந்ததினுல்
கற்ப்பளிந்துபோனுய் லெச்சுமியே
மாயன்பெருமாழும் சென்னபோது

## சீதை மனம் வருந்தல்

மறுகியழுதாளே மான்போலே
அம்புபட்டதொருமான்போல
அலறியழுதாளே லெச்சுமியாள்
என்தலையில்விதிவசமோ
ஈசனிட்டகட்டளையோ

மாயன்வாயில்யிந்தச் சொல்க்கேள்க்க
வகுத்தாரோ முன்னுள் பிரமதேவன்

---

12818. அடியாள்—மனைவி

பத்திறகாளி சொல்கேட்டு
பச்சைமால் வசைசொல்லாச்சே
வல்லபத்திறகாளியெங்கே போனாள்

மாலவற்குச் செய்திசொல்வதெப்போ
பள்ளிகொண்டோன் தேவி லெச்சுமியாள்
பத்திறகாளியைத் தானினைத்தாள்

## பத்திரகாளி இராமருக்கு பாலர்கள் பற்றிய விபரம் கூறல்

பாரவனத்திலே யிருந்ததொரு
பத்திறகாளியுந் தானறிந்தாள்

ஓட்டமும் பெருநடையுமாக
ஓடிவந்தாளே பத்திறகாளி
பத்திறகாளிவந்து நின்று
பச்சைமாலையடிதொழுதாள்
தொழுதுநின்றமாகாளியை

சுவாமிநாயக ரேது சொல்வார்
நம்முடையதேவி லெச்சுமிக்கு
ரண்டுபிள்ளைகள்தானேது
ஒண்ணுதலே தங்க என்னோடே
ஒன்றும் ஒளியாமல் சொல்லவேணும்

மாயன் பெருமாழுங்கேட்டபோது
வடபத்திறகாளி யேது சொல்வாள்
தேசம்ஆளப் பிறந்தவன்தான்
செல்லக்குளந்தை அசலவனும்
அன்னஊஞ்சால் தொட்டிலிலே

ஆடிவரும் வேளையிலே
கெங்கையிலே நீர்கோர
கிஷ்ணுவுன்தேவி போகையிலே
அந்நேரம் போகையிலே
அங்கே ஒரு புன்குரங்கு

தன்னுடைய பிள்ளைதனை
தன்மார்பதிலே யிட்டுக்கொண்டு
கொப்புவிட்டு கொப்பு தாவுவதை
கொடியிடைசீதை கண்ணில் கண்டு
சீதலெச்சுமியாள் திரும்பிவந்து

செல்வப்பாலனையெடுத்துப்போனாள்
வால்மீகர்முனியும் நானுமாக

---

12844. வசை—இழிமொழி
12859. தங்கை>தங்க (பே.வ.மா)

மாலைகாலையுந்தான்வருவோம்
யிப்படியாக யிருக்கையிலே
யேதுசெய்தாரந்த மாமுனியும்

தெற்பப்புல்லைத் தான்பறித்து
சிறந்ததொட்டிலில் தாராட்டிவிட்டார்
அதுவுமொரு பாலனுக
அருவுருவாகித்தான்வளர்ந்தான்
தம்பிக்குயிவன் துணையாக

சானகிதேவியை வளக்கச் சொன்னேம்
என்றுரைத்தாளந்த பத்திறகாளி

## இராமர் சீதையை அக்கினி மூழ்கி வரச் சொல்லல்

யேதுசொல்லுவார் ரெகுராமர்
யெப்படித்தானிருந்தாலும்
என்மனசுக்கு யேற்காதேன்றுர்

வேள்வியதுதான் வளர்த்து
வேள்வியது மெழுகவேணும்
சிறிராமரப்பொழுது
சிந்தைமெய்க்க தானுரைத்தார்
சிறிராமர் சொன்னவுடன்

## சீதையும் பாலர்களும் அக்கினி மூழ்கல்

சீதாதேவி யேது சொல்வாள்
அசலவனையிடுப்பில் வைத்து
அந்தயிளையோனைக் கைப்பிடித்து
மூபேரும் அக்கினியில்
முன்னடந்த வேள்வியிலே

வேள்வியிலே தானிறங்கி
மிக்க அக்கினிமெழுகிவர

## அக்கினியில் பாலன் ஒருவன் எரிந்துபடல்

அக்கினியில் மெழுகிவர
அந்தகுசலவனெரிந்து போனுன்
லெச்சுமியும் நல்லஅசலவனும்

நன்றுயக்கினி மெழுகிவந்தார்
அக்கினியில் தான்மெழுகி
அயயோத்தியாபுரி போகவென்று
சிறிராமர் சொன்னவுடன்

## பாலன் இராமரிடம் எரிந்தவனை எழுப்ப வேண்டல்

தீரன் அசலவனேது சொல்வான்

என்னுடதம்பி குசலவனை
யிப்போ எழுப்ப வேணுமென்றுன்

அசலவசுவாமியுஞ் சொன்னபோது
அரிகோபாலரேது சொல்வார்

## இராமர் மறுத்துரைத்தல்

அக்கினிதன்னில் கரிந்தவனை

அவனையும் யிப்போ எழுப்பினுக்கால்
அசலவனே என்மகனே
அய்யோத்தியாபுரி போனேமானால்
தேவாதி தேவர்கள் நகைப்பார்கள்
தெய்வேந்திரன் சிரிப்பான்

அன்பத்தாறு தேசராசாக்கள்
அவனியிலுள்ளோர் சிரிப்பாரே
அய்யோத்தியாபுரி சனங்களெல்லாம்
ஆகமான முனிவரெல்லாம்
யிப்படியாக சிரிக்கையிலே

எந்தன் மகனே யிதுகுறைவு
அரிகோபாலர் சொன்னபோது

## பாலன் மீண்டும் இராமரிடம் வேண்டல்

அருமைமகனுமேது சொல்வார்
——— வ் அரி ராம நாதா
——————— நான் சொல்லுகிறேன்

——————— தம்பிமார் மூபேருண்டு
—————— தாயார் மூபேருண்டு
———————த்துணையாய் குசலவனும்
———————சமுடனிப்போ யெழுப்பவேணும்

## இராமர் எரிந்தவனை எழுப்பல்

——————உரைத்தனைக் கேட்டு

———————பாலர் சந்தோசமாய்
குசலகனைத் தானெழுப்பி
அசலகனுட முன்னேவிட்டார்
குசலகனைக் கண்டவுடன்
அசலகனுமேது சொல்வான்

என்னுடைய தம்பி குசலவனே
யிப்போபுரவி யேறிடுவோம்

## யாவரும் அயோத்திக்கு வ்ரல்

யிப்படியாக யிருக்கையிலே
யேதுசொல்லுவார்கோபாலர்
மன்னனிளையோனும் சத்ருக்கனும்
மாயவனார் சீதாலெச்சுமியும்
ஆயிரமணி முடித்தேரதிலே

அச்சுதனுரும்யிருந்து கொண்டார்
குசலவனும் நல்ல அசலவனும்
குதித்தேறினார்புரவியிலே

பட்டாளங்கள் முன்னடக்க
பட்டத்துதேர் பின்னடக்க
வானரர்கள் பின்னடக்க
மந்திரிமார் சூள்ந்துவர
காடுவனஞ் செடிகடந்து

காண்டவனங் கழுந்தான்கடந்து

### பாலனுக்கு முடி சூட்டல்

அய்யோத்தியாபுரி நகரில்வந்து
அன்புடனந்த அசலவற்க்கு
தங்கமுடியது தான்சூட்டி
தரணியளந்த பெருமாழும்
— — — — — — — அய்யோத்திப்பட்டணத்தை
— — — — — — — நீ யென்று சொல்ல
— — — — — — — பெருமாள் நந்தக்கோபாலர்
— — — — — — — செய்தாரன்னேரம்

### இராமர் கயிலாசத்தில் வீற்றிருத்தல்

— — — — — — — சேடஞ்யிருந்ததொரு

— — — — — — — னிளைய பெருமானை
— — — — — — — நீ போவாயென்று
— — — — — — — வளி அனுப்பிவைத்தார்
என்பெருமாளரி கோபாலர்
யேத்த பரதனைத்தானழைத்து

பரதாள் வானையிப் போது
பச்சைமால்வாளாயிதமாக்கிக் கொண்டார்
சத்துருக்கனைதானழைத்து
சங்குசக்கரமாக்கிக் கொண்டார்
தரணியளந்த பெருமாழும்

தாரணிவிசளம் பாற்த்துக் கொண்டார்
சீதாலெச்சுமியைக் கூட்டிக்கொண்டு
செண்கண் நெடுமால் போய் சேற்ந்தார்
அய்யோத்தி மாநகரைவிட்டு
அளகுகயிலாசவாள்பதியில் வந்திருந்தார்

---

கலைூயச ஞூ புரட்டாதி மாசம் ரு உ எழுதியயேடு வாள்க.
சரஸ்பதி முன்னிற்க. வேலுண்டு வினையில்லை.
நீடுளி வாள்க. யேடு முற்றுப்பெற்றது.
சுபம்.

□ □ □

## பதிப்பாசிரியரின் பிறநூல்கள்

### நாட்டுப்புறக் கதைப்பாடல் (பதிப்பு)

1. குருசாமி கதை
2. தம்பிமார்கதை
3. வன்னியடி மறவன் கதை
4. கட்டபொம்மு கும்மிப்பாடல்
5. ஞானசவுந்தரி அம்மானை
6. கோவலன் கர்ண்ணகை கதை
7. உடையார் கதை
8. உலகுடைய பெருமாள் கதை
9. பத்திரகாளியம்மன் கதை
10. கன்னடியன் போர்

### நாட்டுப்புறப்பாடல் (தொகுப்பு)

நாட்டுப்புறச்சிறுவர் பாடல்கள்

### இலக்கணம், மொழியியல்

1. The Language of Sangam—
   Literature and Tolkāppiyam
   (PH.D. Thesis)
2. சங்ககால எழுத்தியல்

